உ

கடவுள் துணை.

# நைடதம் மூலமும்

## உரையும்.

அதிவீரராமபாண்டியர் செய்த

நைடதமூலத்திற்கு

மதுரை - புதுவை - சென்னை

இம்மூச்சங்கங்களிலும் தமிழ்த்தலைமைப்புலமை

நடாத்திய-களத்தூர்

## வேதகிரிமுதலியாரால்

பதவுரையும், கருத்துரையும்செய்து

பலவிலக்கணமேற்கோளுடன்பதிப்பித்த

பிரதிக்கிணங்க

சண்முகவிலாச அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

ஆறுகாடு-

முனியப்பமுதலியாரால்

நிறைவேறியது.

இஃது,

வீரணந்தோட்டம்-

கோவிந்தநாயகரால் அச்சடுக்கிப்

பிரசுரஞ்செய்யலாயிற்று.

பரீதாவி ௵ — ஆவணிமீ

# படல அகராதி.



ஆக படலம்-௨௰௮ செய்யுள்-௲௱௭௰௧.





உ

கடவுள்துணை.

# நைடதமூலமும்உரையும்.



(பாயிரம்.)

## விநாயகர்வணக்கம்.



* (அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

தழைவிரிகடுக்கைமாலைத்தனிமுதற்சடையிற்சூடுங்.........*
குழவிவெண்டிங்களிற்றகோட்டதுகுறையென்றெண்ணிப் *
புழைநெடுங்கரத்தாற்பற்றிப்பொற்புறவிணைத்துநோக்கு...*
மழைமதக்களிற்றின்செய்யமலரடிசென்னிவைப்பாம்..... *

(இதனதுபதப்பொருள்.)

தழை-செழித்த,விரி-மலர்ந்த,கடுக்கை-கொன்றைமலர்களாலாகிய,மாலை-மாலையையுடைய,தனி-ஒப்பில்லாத, முதல்-பரமசிவன், சடையில்-சடையினிடத்தில், சூடும்-தரிக்கப்பட்டிருக்கிற, குழவி-இளமையாகிய, வெள்-வெள்ளிய, திங்கள்-சந்திரனை, இற்ற-ஒடித்த, கோட்டது-(தன்)கொம்பினது, குறையென்று- சேஷமென்று,எண்ணி-நினைத்து,புழை-துளைபொருந்திய, நெடு-நீண்ட,கரத்தால்-துதிக்கையினால், பற்றி-பிடித்து, பொற்பு-அழகானது, உற-பொருந்த,இணைத்து-(அதிற்)பொருத்தி,நோக்கும்-பார்க்கின்ற,மழை-மழையைப்போலும், மதம்-மதத்தையுடைய, களிற்றின் - யானைமுகவிநாயகமூர்த்தியினது, செய்யமலர் - செந்தாமரைமலர்போலும், அடி-திருவடிகளை,சென்னி-சிரசின்மேல், வைப்பாம்-(யாம்) அணிந்துகொள்ளுவாம், என்றவாறு.

தழைவிரிகடுக்கை-என்றது, தழைகள்விரிந்த கடுக்கை-எனினும் பொருந்தும்.தழைதலாகியகாரணத்தால்-தழை-என்றாயிற்று மாணிக்கவாசகர் திருவாய்மலர்ந்தருளிய (குவலயாநந்தசூத்திரம்)

---

* யாப்பருங்கலம், கழிநெடிலடியேகசடறக்கிளப்பி- னறுசீர்முதலாவையிரண்டுறு-வருவனபிறவும் வகுத்தனர்கொளலே.

வழிபடுதெய்வவணக்கஞ் செய்து - மங்கலமொழிமுதல்வழுவாது
னாக்கி- லெடுத்துக்கொண்ட விலக்கணவிலக்கிய - மிடுக்கணின்றி
யினிதுமுடியுமே. இவ்விலக்கணத்தால் கடவுள்வணக்கங்கூறினார்.
யாம்-என்னும் எழுவாய் எஞ்சிநின்றது. வைப்பாம்-என்றது-பய
னிலை. அடி-என்றது-செயப்படுபொருள். தழை-விரி-என்கிற-பெய
ரெச்சத்தொகைக ளடுக்கிக் கொன்றைமலரென்கிற வினைமுதல்
பெயர்கொண்டனவாகும்.

மலரடிசென்னிவைப்பாம்-என்றது-தன்மைப்பன்மைவினைமு
ற்றாகத் தம்மைப்புகழ்ந்துகூறியதற்குஇலக்கணமெங்ஙனமெனின்
* முனைபுனைசேவகன்முனிந்தார்ப்பதுபோற் கடறக்கற்ற கல்வி
யாற்றலாற்-றன்னைப்புகழ்த்தகுமெனச்சாற்றினர், என்றதனாலறிக.
இற்றகோடு-என்றது-விநாயகர்தம்மாலொடிக்கப்பட்டகோடென்
றருத்தமாம், இதற்கிலக்கியமெங்ஙனமெனின்-கந்தபுராணம், கெ
ஜமுகனுற்பத்திபடலம்(௨௱௪௰௯-ம் பாடல்)(௨௱௪௰௭-ம் பாடல்)

நின்றவன்றன்னைநோக்கிநெடியபல்படைகளேவிச்....... *
சென்றிலன்றன்னைக்கொல்லாச்சியனருள்வரத்தின்சீரா.....*
வின்றினிச்செய்வதென்னென்றிறைவரையுன்னியெந்தை...*
தன்றிருக்கோட்டிலொன்றுதடக்கையின்முறித்துக்கொண்டான்

தடக்கையிலேந்துங்கோட்டைத்தந்தியாமவுணன்மீது... *
விடுத்தலுமனையன்மார்படைவெய்தெனக்கீண்டுபோகி......*
யுடற்படிமிசையேவீழ்த்தியொல்லையிலோடித்தெண்ணீர்க் *
கடற்படிந்தமலன்மைந்தன்கரத்தில்வந்திருந்ததன்றே..... *

இச்செய்யுட்களில்கெஜமுகனைக்கொல்லக்கோட்டை ஒடித்தாரென்
றது-புராணசித்தாந்தம், இக்கருத்தறியாதார்பாரதமெழுதக்கோ
ட்டை ஒடித்தாரென்று உரைவரைந்திருக்கின்றார். அவர்இந்நூலறி
யார்போலும், குழவி-என்றதும், குழவு-என்றதும், ஒருபொருட்கி
ளவி, † சூத்திரம், மழவுங்குழவுமிளமைப்பொருள. பொற்பு-என்ற
து, அழகு. பொலிவு-இவைஒருபொருட்கிளவியாம். † சூத்திரம்,
பொற்பேபொலிவு.(என்றதனாலறிக)[பிறையைக்கொம்பின்துறை
யென்றுமயங்கினமையால்மயக்கவலங்காரம்.] (கருத்துரை)சிவன்
முடியிலிருந்த பிறையை ஒடித்தகொம்புக் கிணைபார்க்கும் விநாய
கனைவணங்குவோமென்பதாம். (௧)

* மாணிக்கவாசகர் குவலயாநந்தம். † தொல்காப்பியம்.





# சிறப்புப்பாயிரம்.

நிலவுபொழிதனிக்கவிகை நிடதர்கோன்புகழ்ச்சரித நெடு
நீர்வைப்பிற் - புலவர்களி யமுதொழுகு புதுமொழிகூட்டு
ணைதமிழாற் புனைதல்செய்தான் - வலனுயர்த்தவண்ணலஞ்
சேல் வான்றொடுபொற்கோட்டிமய வரையிற்றீட்டி - யலர்
தலைமாநிலப்புரக்கு மதிவீரராமனிக லரசரேறே........*

(இ-ள்) இகல்-பகைத்த, அரசர்-மன்னராகிய(யானைகளுக்கு)— ஏறு-ஆண்சிங்கம்போன்றவனாகிய, வலன்-வெற்றியினால், உயர்த்த-உயர்த்தப்பட்ட, அண்ணல்-பெருமைபொருந்திய, அம்-அழகிய, சேல்-மீனக்கொடியை, வான்-ஆகாயத்தை, தொடு-அளாவிய, பொன்-பொன்னாகிய, கோடு-சிகரத்தையுடைய, இமயவரையில்-இமயமலையினிடத்தில், தீட்டி-(தனக்குரியவெல்லைக்கல்லாக)வெழுதி, அலர்-பரந்த, தலை-இடத்தையும், மா-பெருமையுமுடைய, நிலம்-பூமியை, புரக்கும்-காக்கின்ற, அதிவீரராமன் - அதிவீரராமபாண்டியராஜனானவன், நிலவு-சந்திரிகையை, பொழி-பொழிகின்ற, தனி - ஒப்பற்ற, கவிகை-(முத்துக்)குடையினையுடைய, நிடதர்கோன்-நளமஹாராஜனது, புகழ்-புகழ்ச்சிபொருந்திய, சரிதம்-சரித்திரமாகிய, களி-களிப்பைத்தருகிற, அமுது-அமிர்தத்தை, நெடுநீர்-கடலாற்சூழப்பட்ட, வைப்பில்-பூமியிலுள்ள, புலவர்-புலவரானவர்கள், கூட்டுணை-கொள்ளைகொள்ளும்படியாக, ஒழுகு-(அவ்வமிர்தம்)பெருகுகின்ற, புதுமொழி- * புதியகாவியத்தை, தமிழால்-தமிழ்மொழியினாலே—புனைதல்செய்தான், அலங்கரித்துப்பாடினான்—(எ-று.) (குவலயாநந்தம்) நேயமுடனேநிருமிக்கும்பொருளாயவனைத்து மடக்கிக்காட்டுதல-பாயிரமென்றுபகரப்படுமே. எனவும், ஒருநூன் முகத்திலுரைத்திடும்பாயிரஞ், சிறப்பெனநலமேலார் செப்பினர்தாமே. எனவும், கூறியவாறுசிறப்புப்பாயிரங்கூறினர். [இது ஏகதேசவுருவகவணி] (கருத்து) அதிவீரராமபாண்டியராஜனானவன் நளமஹாராஜனதுசரித்திரத்தைத் தமிழினாற்பாடினனென்பதாம். (உ)

சிறப்புப்பாயிரம்- முற்றிற்று.

---

* தண்டியலங்காரம், அறமுதனான்கினுங்குறைபாடுடையது காப்பியமென்றுகருதப்படுமே.



# நாட்டுப்படலம்.



## * கலித்துறை.

கருவிமாமழைகலைமகளுருவெனவிளங்கி.......... *
யிருவிசும்பிடைப்படர்ந்துசென்றினமணிகொழிக்கும்
பரவைவெண்டிரைமேய்ந்துயர்பனிவரையுயிர்த்த... *
வுருவவோடரித்தடங்கணாளுருக்கொடுமீண்ட...... *

(இ-ள்) கருவி- உலகத்திற்குத்துணைக்காரணமாகிய—மா- பெருமைபொருந்திய—மழை- மேகங்களானவை—கலைமகள்-சரஸ்வதியினது—உருவென-வடிவம்போல—விளங்கி(வெண்மையாக) விளங்கி—இரு-பெரிய—விசும்பிடை- ஆகாயத்தினிடத்தே—படர்ந்து-பரந்து—சென்று-போய்—இனம்-இனமாகிய—மணி- இரத்தினங்களை—கொழிக்கும்-கொழிகின்ற—பரவை-கடலினது—வெள்-வெள்ளிய-திரை-அலைகளையுடைய(நீரை)—மேய்ந்து- குடித்து—உயர்-உயர்ந்த—பனிவரை-மலையரசனால்-உயிர்த்த- புதல்வியாகத்தரப்பட்ட—உருவ-(காதுகளுக்கு)நேராக—ஓடு- ஓடுகின்ற—தடம்-விசாலமாகிய—கணாள்-கண்களையுடைய(பார்வதியினது)—உரு-கருநிறத்தை—கொடு-பெற்று—மீண்ட-திரும்பின. எ-று. இதுமுதல்- ௨-பாட்டு மழைச்சிறப்பு .[இது உபமானம்- உபமேயம்-விரிந்துநிற்கையால்- விரியுவமையணி] (கருத்து)மேகங்களானவை சரஸ்வதிவடிவம்போலத்தோன்றிக் கடற்சலத்தையுண்டு பார்வதிவடிவம்போலத்திரும்பினவென்பதாம். (௧)

அன்னங்கண்படுதண்பணைநிடதநாடளிக்கு......... *
மன்னர்மன்னவன்மண்டமர்கடந்தவொள்வேலின்... *
மின்னியாங்கவன்முரசெனவிண்ணிடையதிர்ந்து... *
பொன்னங்குன்றின்மே லவன்கொடை போன்மெனப்
பொழிந்த................................*

(இ-ள்) அன்னம்-அன்னங்களானவை—கண்படு- தூங்குகின்ற—தண்-குளிர்ச்சிபொருந்திய—பணை- கழனிகளையுடைய - நிடதநாடு-நிடததேயத்தை—அளிக்கும்-காக்கின்ற—மன்னர்-அரசர்களுக்கு—மன்னவன்-அரசனாகிய (நளனது) மண்டு- நெருங்கிய—அமர்-போரை—கடந்த-முடித்த—ஒள்-ஒள்ளிய—வேலின்-வேல்போல—மின்னி-மின்னுதல்செய்து—அவன்-அவனது—முரசெ

---

* யாப்பருங்கலம், நெடிலடிநான்காய் நிகழ்வதுகலித்துறை.

ன-முரசம்போல — விண்ணிடை-ஆகாயத்தினிடத்து — அதிர்ந்து-சத்தித்து — பொன்-பொன்னாகிய — அம்-அழகிய — குன்றின்மேல் இமயமலையின்மேல் — அவன் - அவனது — கொடை-ஈகையை — போன்மென-ஒக்குமென்று சொல்லும்படியாக -- பொழிந்த-(அம்மேகங்கள்) நீரைச்சொரிந்தன — (எ-று) ஆங்கு-அசை. [இது உவமானங்கூறுதலால்-உவமையணி] (கருத்து) அந்தமேகங்களானவை தளனது வேலைப்போலமின்னி அவன்பேரிகைபோலச் சத்தித்து அவன்கொடையைப்போலநீரைச்சொரிந்தனவென்பதாம். (௨)

விலகிவில்லுமிழ்விரிகதிர்மணிபலவரன்றிப்......... *
பொலன்முகட்டுயர்பொன்னெடுங்குன்றின்வீழருவி *
குலவுவெண்டிரைக்குரைகடலுடுத்தபார்மடந்தை... *
யலர்முலைத்தலைத்துயல்வருமாரமொத்துளதால்......*

(இ-ள்) உயர்-மலைகளிலுயர்ந்த — நெடு-நெடிய — பொற்குன்றின்-இமயமலையின்மேல் — பொலன்-அழகிய — முகட்டு- சிகரத்திலிருந்து — விலகி-இடைவிட்டு — வில்-ஒளியை — உமிழ்-வீசுகின்ற — விரி-விரிந்த — கதிர்-கிரணங்களையுடைய — பல-பலவகைப்பட்ட — மணி-முத்துக்களையும் — வரன்றி-வாரிக்கொண்டு — வீழ்-வீழ்கின்ற — அருவி-வெள்ளமானது-குலவு-வளைவாகிய- வெள்-வெள்ளிய — திரை-அலைகளையுடைய — குரை-ஒலிக்கின்ற — கடல்-கடலாகிய(வாடையை) — உடுத்த - மருங்கிற்சூழக்கொண்டிருக்கிற — பார்மடந்தை-பூமிதேவியினுடைய — அலர்-அடிபரந்த — முலைத்தலை- அம்மலையாகியமுலையினிடத்து — துயல்வரும்-புரளுகின்ற — ஆரம்-முத்துமாலையை — ஒத்துளது-ஒத்திருக்கின்றது. — (எ-று) [இது உறுப்புறுப்பிக்கலவையணி] (கருத்து) மலைவெள்ளமானது பூமிதேவியினது முலையின்மீ தணிந்த முத்துமாலையை யொத்திருக்கின்றதென்பதாம். இதுமுதல்-௩-பாட லாற்றுச்சிறப்பு. (௩)

வேழவெண்மருப்பெறிந்துவெண்ணித்திலம்வரன்றிக் *
காழகிற்றுணிசந்தொடுகையரிக்கொண்டு............ *
கோழரைச்செழுங்குங்குமத்தடஞ்சினைசாடி.........*
யாழ்திரைக்கடலகடுகீண்டொழுகியதன்றே......... *

(இ-ள்) வேழம்- யானைகளுடைய-வெள்- வெள்ளிய — மருப்பு கொம்புகளை — எறிந்து-வீசிக்கொண்டும் — வெள்-வெள்ளிய — நித்திலம்-முத்துக்களை — வரன்றி-வாரிக்கொண்டும் — காழ்- வைரம்பொருந்திய — அகில்-அகின்மரங்களையுடைய — துணி- துண்டங்களை — சந்தொடு-சந்தனமரங்களோடு — கையரிக்கொண்டு- சேர்த்

துக்கொண்டும்—கோழ்-வழுவழுப்பாகிய—அளை-அளையையுடைய—செழு—செழிய—குங்குமம்-குங்குமமரங்களின்—தடம் விசாலமாகிய—சினை-கிளைகளை—சாடி-முறித்துக்கொண்டும்—ஆழ்-ஆழ்ந்த—திரை-அலைகளையுடைய—கடல்-கடலினது—அகடு வயிற்றை—கீண்டு-கிழித்து—ஒழுகியது-(அவ்வெள்ளம்) சென்றது.—(எ-று) அன்று-ஏ-அசை. [தண்டியலங்காரம்-குளகம்பலபாட்டொருவினைகொள்ளும்-என்றதனாலிதுகுளகவணி] (கருத்து) அந்தவெள்ளமானது யானைத்தந்தத்தின்முத்துக்களையும் அகிற்றருவையுஞ் சந்தனத்தருவையுங் குங்குமத்தருவையுமுறித்துச் சமுத்திரத்துட்சென்றதென்பதாம். (௪)

கங்கையென்றுலகேத்தியகடவுண்மாநதிவெண்...... *
சங்குசூலுளைந்தலறியதடம்பணைதவழ்ந்து......... *
கொங்குயிர்த்தபூந்தடத்துலாய்க்குளம்பலநிரப்பி... *
யங்கண்மாநிலத்தமுதெனப்பரந்ததையன்றே.. ... *

(இ-ள்) கங்கையென்று-கங்காநதியென்று—உலகு-உயர்ந்தோரால்—ஏத்திய-துதிசெயப்பட்ட—கடவுள்-தெய்வத்தன்மைபொருந்திய—மா-பெரிய—நதி-நதியானது—வெள்-வெள்ளிய—சங்கு-சங்குகளானவை—சூல்-சூலினாலே-உளைந்து-வருந்தி—அலறிய-இரையும்படியாக—தடம்-விசாலமாகிய—பணை-கழனிகளிலே—தவழ்ந்து-ஊர்ந்து—கொங்கு-வாசனையை—உயிர்த்த-வீசுகின்ற—பூ-மலர்களையுடைய—தடத்து-தடாகங்களில்—உலாய்-திரிந்து—பல-பலவகைப்பட்ட—குளம்-குளங்களையும்—நிரப்பி-நிறைத்து—அங்கண்-அழகியவிடத்தையுடைய—மா-பெரிய—நிலத்து-பூமிக்கு—அமுதென-அமிர்தமென்றுசொல்லும்படியாக—பரந்தது-பரவிற்று.—(எ-று) ஐ-சாரியை. அன்று-ஏ-அசைகள்—[இதுஉவமையணி] (கருத்து) நதியானது கழனிகளையுந்தடாகங்களையுங் குளங்களையுநிரப்பிப் பூமிக்கு அமிர்தமாகப் பரவியதென்பதாம். (௫)

ஒழுகுதீம்புனல்சிறைசெயுமோதையுமுழுநர்...... *
குழுவின்கம்மையுமுழத்தியர்குரவையினார்ப்புங் ... *
கழனிவாழ்செனவான்முளைவித்துநர்கலிப்பு........*
மழைமுழக்கொடுமாறுகொண்டொலித்தனமாதோ *

(இ-ள்) ஒழுகு-பெருகியோடுகின்ற—தீ-மதுரம்பொருந்திய—புனல்-நீரை—சிறைசெயும்-கரைகோலித்தடுத்தற்கணுண்டாகின்ற—ஓதையும்-ஓசையும்—உழுநர்-(ஏ)ருழுகின்றவருடைய—குழுவின்-கூட்டத்தினது—கம்மையும்-ஓசையும்—உழத்தியர்-கடைசி

பாது—குரவையின்-குரவைக்கூத்தினது—ஆர்ப்பும்-ஓசையும்—கழனி-வயல்களானவை—வாழ்கென-வாழ்கவென்று—வால்-வெள்ளிய—முளை-நெல்லுமுளைகளை—வித்துநர்-விதைக்கின்றவருடைய—கலிப்பும்-ஓசையும்—மழை-மேகத்தினது—முழக்கொடு-ஓசையுடனே—மாறுகொண்டு-பகைமைகொண்டு—ஒலித்தன-முழங்கின—(எ-று) மா—ஓ—அசைகள் [இதுஉவமையணி] (கருத்து) அணைகட்டுதலாலுண்டாமோசையும் ஏருழுகின்றவரோசையுங் கடைசியர் குரவைக்கூத்தோசையு நெல்விதைக்கின்றவரோசையு மழைமுழக்கத்தோடு மாறுகொண்டன என்பதாம். இதுமுதல்-இ பாடல் வயற்சிறப்பு. (கூ)

வள்ளவாய்ச்செழுங்கமலத்தின்வண்டுபாண்மிழற்று *
மள்ளலங்கருஞ்சேற்றிடையாமைகண்படுக்கும்......*
பள்ளநீர்ச்செழும்பணைதொறும்பணிலமுத்துயிர்க்குங்
கள்ளுலாமலர்ப்பொதும்பரிற்களிமயிலகவும்... ... *

(இ-ள்) வண்டு-வண்டுகளானவை—வள்ளம்-கிண்ணம்போன்ற-வாய்-வாயையுடைய—செழு-செழிய—கமலத்தில்-தாமரைமலர்களிலே—பாண்-இசைகளை—மிழற்றும்-பாடிக்கொண்டிருக்கும்—ஆமை-கூர்மங்களானவை—அள்ளல்-குழம்பாகிய—கரு-கரிய—சேற்றிடை-சேற்றின்கண்—கண்படுக்கும்-தூங்கிக்கொண்டிருக்கும்—பணிலம்-சங்குகளானவை—பள்ளம்-ஆழமாகிய—நீர்-நீரையுடைய—செழு-செழிய—பணைதொறும்-கழனிகளிலெல்லாம்—முத்து-முத்துக்களை—உயிர்க்கும்-சொரியும்—களி-களிப்பையுடைய—மயில்-மயில்களானவை—கள்-தேனானது—உலாம்-பெருகுகின்ற—மலர்-மலர்களையுடைய—பொதும்பரில்-சோலைகளிலே—அகவும்-ஆடிக்கொண்டிருக்கும்—அ-சாரியை—(எ-று) (கருத்து) வண்டுகள் தாமரையிற்பாடும்-ஆமைகள்சேற்றிலேநித்திரைசெய்யும்-சங்குகள் கழனிகளில் முத்துக்களைச்சொரியும் மயில்கள் சோலைகளிலாடும் என்பதாம். (பணிலம் சலஞ்சலம்) (எ)

பண்ணைவாய்த்தவழ் பணிலங்களுயிர்த்தவெண்முத்துங்
கண்ணுடைக்கரும்பீன்றவெண்முத்தமுங்கமழுந்... *
தண்ணந்தாமரைசொரிந்தவெண்முத்தமுந்தயங்கி...*
வெண்ணிலாக்கதிர்விரித்தலிற்குமுதம்வாய்விள்ளும் *

(இ-ள்) பண்ணைவாய்-கழனிகளிடத்து—தவழ்-தவழ்கின்ற—பணிலங்கள்-சங்குகளால்—உயிர்த்த-தரப்பட்ட—வெள்-வெள்ளிய—முத்தும்-முத்துக்களும்—கண்-கணுக்களை—உடை-உடைய—கரும்பு-கரும்புகளால்—ஈன்ற-தரப்பட்ட—வெள்-வெள்ளிய—மு

த்தரும்-முத்துக்களும்—கமழும்-பரிமளிக்கின்ற—தண்-குளிர்ச்சிபொருந்திய—அம-அழகிய—தாமரை- தாமரைமலர்களால்—சொரிந்த-தரப்பட்ட—வெள்-வெள்ளிய—முத்தமும்- முத்துக்களும்—தயங்கி-விளங்கி—வெள்-வெள்ளிய—நிலா-சந்திரனது—கதிர்-கிரணங்களை—விரித்தலின்-பரப்புதலினாலே—குமுதம்- அல்லிமலர்களானவை—வாய்விள்ளும் (சந்திரோதயமில்லாதகாலத்திலும்)மலரும்—(எ-று)[இதுகாட்சியணி] (கருத்து)சங்கின்முத்துக்களும்-கரும்பின்முத்துக்களும், தாமரைமுத்துக்களும்- கிரணங்களைவிரித்தலால் அல்லிமலர்கள் மலரும்-என்பதாம். (௮)

விழுந்தவஞ்சிறைவண்டினமிதிப்பமெல்லரும்பு...... *
கிழிந்துவார்தருதேறலுங்கிளர்சினைப்பலவின்......... *
பழங்கனிந்துவீழ்தேறலும்பழனங்கடோறும்..... *
வழிந்துபாய்தலின்வானுறவளர்வனசெந்நெல்..... *

(இ-ள்) விழுந்த-(மேல்)விழுந்த—அம்-அழகிய—சிறை-சிறகுகளையுடைய—வண்டு வண்டுகளின்—இனம்-கூட்டங்களானவை—மிதிப்ப-துகைக்க—மெல்- மெல்லிய—அரும்பு- அரும்புகளானவை—கிழிந்து-கிழிய—வார்தரு-(அவைகளிலிருந்து)ஒழுகுகின்ற—தேறலும்-தேனும்—கிளர்- விளங்குகின்ற—சினை - கிளைகளையுடைய—பலவின்-பலாமரங்களின்—பழம்-பழங்களானவை—கனிந்து-நைய—வீழ்-(அவைகளிலிருந்து)விழுகின்ற—தேறலும்-தேனும்—வழிந்து-பெருக்கெடுத்து—பழனங்கடோறும்- கழனிகளிலெல்லாம்—பாய்தலின் - பாய்தலினாலே—வான்- ஆகாயத்தை—உற-தொடும்படி—செந்நெல்- செந்நெற்பயிர்களானவை—வளர்வன-வளரும்.—(எ-று) [இதுதொடர்பநவிற்சியணி] (கருத்து) மலர்களின்தேனும்-பலாப்பழங்களின்தேனும்- கழனிகளிற்பாய்தலிற் செந்நெல்விளைவனவென்பதாம். (௯)

கூனிரும்பினிற்குறைத்தரிசும்மையிற்கொடுபோய் .. *
மேனிவந்துயர்வரையெனப்போர்பலவேய்ந்து......... *
நீனிறக்கரும்பகட்டினாற்றெழித்துவைநீத்த......... *
தூநிறத்தநெற்பண்டியிற்பற்பலர்தொகுப்பார்...... *

(இ-ள்) கூனிரும்பினில்-அரிவாளினால்—குறைத்து-அறுத்து—அரி-(அவ்வறுக்கப்பட்ட)அரிகளை—சும்மையில-குவைகளாக்கி—கொடுபோய்-கொண்டுபோய்—மேல்-மேல்—நிவந்துயர்- ஓங்கிய—வரையென-மலைகள்போலத்தோன்ற—பல-பலவாகிய-போர்—

போர்களை—வேய்ந்து-போட்டு—நீனிறம்- நீலநிறம்பொருந்திய-கரு-பெரிய--பகட்டினால் - கடாக்களினாலே—மெதழித்து- துவைப்பித்து—வை-வைக்கோலை—நீத்த-கழித்த—தூ-பரிசுத்தமாகிய-நிறந்த-காந்தியையுடைய—நெல்-நெற்களை— பண்டியில்-பண்டிகளாற் கொண்டுபோய்)பற்பலர்-பலபல சாதியார்களும்--தொகுப்பார்-(களஞ்சியங்களிலே)நிறைப்பார்கள்—(எ-று.)(கருத்து)நெற்களையறுத்துக் கடாக்களால்மிதிப்பித்து வைக்கோலைத்தள்ளி, அந்நெற்களைப்பண்டியிற்கொண்டுபோவார்கள் என்பதாம். (௰)

(அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.)

குரும்பைமென்முலையாராடக்கூந்தலினறவந்தோய்ந்த
விரும்புனலாறுபாயவெறிதிரைசுருட்டுந்தெண்ணீர்க்.*
கருங்கடற்புலவுநீங்கிநறுமணங்கமழுமென்றால் . ...*
முருந்துறழ்மூரலார்தம்மிகுதியைமொழியலாமோ....*

(இ-ள்.)குரும்பை-தென்னம்பிஞ்சுபோன்ற—மென்-மெல்லிய--முலையார்-முலைகளையுடையமாதர்—ஆட-முழுக—கூந்தலில்-(அவர்)தலைமயிரிலுள்ள—நறவம்-சாந்தத்தோடு—தோய்ந்த-கலந்த—இரு-பெரிய—புனல்-நீரானது—ஆறு-ஆற்றினாலே (போய்)பாய-விழ—எறி-வீசுகின்ற-திரை-அலைகளை--சுருட்டும்-மடக்கும்—தெள்-தெளிவுபொருந்திய—நீர்-நீரையுடைய--கரு-கரிய—கடல்-கடலானது—புலவு-புலானாற்றத்தை—நீங்கி-நீங்கி—நறுமணம்-நல்லமணமானது—கமழுமென்றால்-மணக்குமென்றால்—முருந்து-மயிலிறகினடியை--உறழ்-ஒத்த—மூரலார்-தந்தபந்தங்களையுடைய-அவர்களது—மிகுதியை-பெருக்கத்தை-மொழியலாமோ-(நான்)சொல்லலாமோ—(எ-று)தம்-சாரியை.ஓஎதிர்மறை[அந்நாட்டுமகளிரது செல்வமிகுதியைச் சொல்லுதலால் வீறுகோளணியாம்.](கருத்து)மாதர்களாடியநீரினாலே கடலானதுபுலால்நாற்றநீங்கிமணம்வீசுமானால் அம்மாதர்பெருக்கத்தைச்சொல்லலாமோ வென்பதாம். (௰௧)

பூமலிதடங்கடோறும்புனல்குடைமகளிரீட்டங்......*
காமருகழனிதோறுங்கடைசியர்குரவையீட்டந்.......*
தேமலர்ச்சோலைதோறுஞ்செழுங்குயிற்றொழுதியீட்டங்
கோமறுகிடங்கடோறுங்குணிலபொருமுரணீட்டம்.*

(இ-ள்.)பூ-மலர்களாலே—மலி-நிறைந்த— தடங்கடோறும்-குளங்களிலெல்லாம்—புனல்குடை-நீர்விளையாடுகின்ற—மகளிர்-மாதரது—ஈட்டம் கூட்டமும்—காமர்-அழகிய—கழனிதோறும்-வயல்களிலெல்லாம்—குரவை-கைகோத்தாடுதலையுடைய—கடைசி

பர்-உழத்தியரது—ஈட்டம்-கூட்டமும்—தேம்-வாசனைபொருந்தி ய—மலர்-மலர்களையுடைய—சோலைதோறும் சோலைகளிலெல்லாம்—தொழுதி-ஒலித்தலையுடைய—செழு-செழிய—குயில்-குயில்களது—ஈட்டம்-கூட்டமும்—கோ-அரசரது—மறுகு-வீதிகளுடைய—இடங்கடோறும்-இடங்களிலெல்லாம்—குணில்-குறுந்தடியால்—பொரு-அடிக்கப்படுகின்ற—முரசின்-முரசங்களது—ஈட்டம் கூட்டமும்-(இருக்கும்)—(எ-று.) [காமருவென்பதில்-உகரம்-சாரியை-தொழுதி-புள்ளொலி- கோ- சாதியொருமை.](கருத்து)குளங்களெங்கு நீராடுமாதர்கூட்டங்கள் வயல்களெங்கு முழத்தியர்கூட்டங்கள் சோலைகளெங்குங் குயில்கூட்டங்கள் இராஜவீதிகளெங்கும்பேரிகைக்கூட்டங்கள் என்பதாம். (௰௨)

கறுவொடுமொன்றோடொன்றுகாரணமின்றிச்சீறி...*
பொறியுடைக்குறும்பூந்தம்மிற்போர்செயப்பொருத்து
மோதை, செறிமயிர்த்தகர்கடம்மிற்றீயெழத்தாக்கநோ
க்கி, யறைகழல்வீரரார்க்குமமலையையவிக்குமன்றே...*

(இ-ள்) பொறியுடை-புள்ளிகளையுடைய—குறும்பூழ்-காடைகளானவை—தம்மில-தம்முள்ளே--ஒன்றோடொன்று-ஒன்றுடனொன்று—காரணமின்றி-ஏதுவில்லாமல்—கறுவொடும்- கறுவுதலுடனே— சீறி சீறிக்கொண்டு—போர்-சண்டையை—செய-செய்யும்படியாக—பொருத்தும்(அவற்றைக்) கூட்டுதற்குண்டாகின்ற--ஓதை(சிறுவோசையானது—செறி-நெருங்கிய--மயிர்- மயிர்களையுடைய—தகர்கள்- ஆட்டுக்கடாக்கள்—தம்மில்-தம்முள்ளே—தீ நெருப்பானது—எழ-தோன்ற— தாக்கல்-ஒன்றையொன்றிடித்தலை—நோக்கி-பார்த்து—அறை-ஒலிக்கின்ற—கழல்- வீரக்கழலையுடைய--வீரர்-வீரரானவர்--ஆர்க்கும் - (ஆச்சரியப்பட்)டொலிக்கின்ற--அமலையை-ஓசையை--அவிக்கும்-அடக்கும்--(எ-று)அன்று-ஏ-அசைகள்.(கருத்து)காடைகளைச்சண்டைசெய்விக்குஞ் சிறுவர்கள் சத்தமானது ஆட்டுக்கடாக்களைச்சண்டைசெய்வித்துப்பார்க்கும் வீரர்சத்தத்தையடக்கும் என்பதாம். (௰௩)

மாதர்மென்முல்லையின்றவான்முகையனையமுரல்......*
கோதறுகருணைதீம்பால்கொழுங்கனியிவற்றினோடு...*
மாதுலர்யாவரென்னவதிர்குரன்முரசிற்சாற்றி...... *
வேதியாக்கருத்திப்பின்னர்விருந்தொடுநுகர்வர்மாதோ

(இ-ள்) ஆதுலர்-யாசகர்--யாவரென்ன-யாவரென்று--அதிர்-அதிர்கின்ற--குரல்-ஓசையையுடைய--முரசின்-முரசினாலே--சாற்றி-விளவி(வருவித்து)--மாதர். அழகிய-மெல்- மெல்லிய--முல்லை-மு

ல்லைக்கொடியிறைல்--ஈன்ற-ஈரப்பட்ட---வால்-வெள்ளிய---முளைய னைய-அரும்புகள்போலும்---மூரல்-சோறும்--கோதறு-குற்றமற்ற---கருனை-பொரிக்கறியும்---தீ-இதமிட்டாகிய---பால்-பாலும்---கொழு-செழிய---கனி-பழமும்--இவற்றிறேடும்-ஆகிய பிறவற்றேடுமற்றுமுபனைவுகளையும்---வேதியர்க்கு-உத்தமனை--வருந்தும்(முன்னே)உண்பித்து--பின்னர்-(அகன்)பின்பு--விருந்தோடும் சுற்றத்தார் முதலியோரோடன்றி விருந்தினரோடும்---நுகர்வர் (அந்நாட்டோர் உண்பார்—(எ-று,)மோ-ஓ-அசைகள்.[உம்மையிரண்டு மெச்சம், வேதியர்க்கு உருபுமயக்கம்] கருத்து)யாசகரை வரும்படி முரசறைவித்து முன்பிராமணரை உண்ணச்செய்து பின்விருந்துடனுண்பார் என்பதாம். (௰௪)

முல்லையங்கோதைநல்லார்முகமதிவெயர்வுதோன்ற...*
வல்லிநுண்மருங்குனோவவாலவளைவாய்விட்டார்ப்ப...*
மெல்விரல்காந்தள்சேப்பவெண்டயிர்கடையுமோதை.
கொல்புலிமுழக்கமென்னவயின்றொறுங்குளிறுமாதோ

(இ-ள்)முல்லை-முல்லைமலர்களைச்சூடிய—அம்-அழகிய---கோதை-கூந்தலையுடைய---நல்லார்-இடைச்சியர்---முகமதி-(தமது)முகமாகியசந்திரனிடத்து---வெயர்வு-வெயர்வையானது---தோன்ற-உண்டாகவும்--வல்லி-பூங்கொடிபோலும்---நுண்-நுட்பமாகிய—மருங்குல்-இடையானது---நோவ-வருந்தவும்--வால்-வெள்ளிய—வளை-சங்கவளையல்களானவை—வாய்விட்டு-ஒன்றோடொன்று தாக்குண்டு—ஆர்ப்ப-ஒலிக்கவும்---மெல்-மெல்லிய---விரல் விரல்கள்--காந்தள்-காந்தண்மலர்போல--- சேப்ப-சிவக்கவும்---வெள்-வெள்ளிய---தயிர்-தயிரை--கடையும்-- கடைதலினாலுண்டாகின்ற--ஓதை-ஓசையானது--கொல்-கொல்லுகின்ற--புலி-புலியினது---முழக்கமென்ன-உறுமுதல்போல--வயின்றொறும்(அவர்)வீடுதோறும்--குளிறும்-ஒலிக்கும்- (எ-று)மாது ஓ-அசைகள்[இதுசேர்வையணியாம்](கருத்து)இடைச்சியர்தயிர்கடையுஞ் சத்தமானது கொல்லும் புலிமுழக்கம்போல வீடுகளெங்குஞ் சத்திக்கு மென்பதாம். (௰௫)

பூங்கரும்புடைத்ததீஞ்சாறடுபுகைபுயலென்றெண்ணி*
மாங்குயிற்குருகியாவுமயிலொடுந்தொடர்ந்துமன்று
தாங்கிசைவண்டுந்தேனுந்தும்பியுந்திவிரும்பாடத்
தேங்கடற்சோலைதோறுஞ்சிறைவிரித்தாடுமாதோ...*

(இ-ள்.)உடைத்த-(ஆலையிற்)சிதைத்த---பூ-அழகிய--கரும்பு-கரும்புகளையுடைய--தீ-இனிப்பாகிய--சாறு-சாற்றை-அடு-காய்ச்

சுமிடத்தெழுகின்ற--புகை - புகையை--புயலென்று - மேகமென்று--எண்ணி-நினைத்து--மா-மாமரங்களிலுள்ள---குயில்-குயில்களுடைய--தொகுதியாவும்-கூட்டங்களெல்லாம்--வாய்விடாதொழிந்த-கூவாதொழிந்தனவாக---மஞ்ஞை- மயில்களானவை---தூங்கிசை-நாட்டியராகத்தை--வண்டும்-கருவண்டுகளும்---தேனும்-தேன்வண்டுகளும்--சுரும்பொடு- பொறிவண்டுகளுடனே--ஞிமிறும்-பொன்வண்டுகளும்--பாட-பாடுதல்செய்ய--தேன்-தேனானது--கமழ்-மணக்கின்ற--சோலைதோறும்-சோலைகளிலெல்லாம்--சிறை-கலாபத்தை--விரித்து - விரித்துக்கொண்டு---ஆடும் - கூத்தாடும்—(எ-று.)மாது-ஓ-அசைகள். [புகையைமேகமென்றுமயங்குதலால் மயக்கவணியாம்](கருத்து) கரும்பஞ்சாற்றைக்காய்ச்சுகையிலெழும்புகையை மேகமென்று குயில்கள் கூவாதடங்கின. வண்டுகள் பாட மயில்கள் நடனமாடின என்பதாம். (௰௩)

அரக்கெறிகுமுதச்செவ்வாயலர்முலையந்நலார்தந்....*
திருக்கிளர்கமலம்பூத்த சேயரிக்கண்ணும்வாவி......*
யுருக்கிளர்குவளைப்போதும்வேற்றுமையுணராதுற்ற*
வரிச்சிறைத்தும்பியோடு வண்டினமருளுமாதோ....*

(இ-ள்) அரக்கு-சிவப்புநிறத்தை--எறி-வீசுகின்ற-- குமுதம்-அல்லிமலர்போலும்--செவ்-செய்ய--வாய்-வாயையும்--அலர்-அடிபரந்த--முலை-முலைகளையுமுடைய--அந்நலார்-அந்நாட்டுமாதருடைய--திரு-அழகினால்--கிளர்-விளங்குகின்ற--கமலம்-தாமரைப்பூவாகிய(முகங்களினிடத்து--பூத்த-மலர்ந்த-சேய்-செய்ய--அரி-இரேகைகளையுடைய--கண்ணும்--கண்களுக்கும்-கமலம்--தாமரைமலர்களிடத்து-உரு-அழகினால்--கிளர்-விளங்குகின்ற--குவளைப்போதும்-நீலோற்பலமலர்களுக்கும்--வாவி- குளத்தின்கண்--வேற்றுமை-பேதத்தை--உணராது- அறியமாட்டாமல்--உற்ற (தேனுண்ண)வடைந்த-வரி-கீற்றுக்களையும்--சிறை-சிறைகளையுமுடைய-தும்பியோடு-தும்பிகளுடன்--வண்டு-வண்டுகளின்--இனம்- கூட்டம்--மருளும்-மயங்கும்—(எ-று.)மாது-ஓ-அசைகள் [இதுபொதுமையணி.](கருத்து)அந்நாட்டுப்பெண்கள் கண்களிவையென்றுங்குவளைமலரிவையென்றும்அறியாதுவண்டினங்கள்மயங்குமென்பதாம்

அல்லியங்கோதைமாதரன்பொடுவளர்த்தமுல்லை.....*
மெல்லரும்பீன்றதென்னவிழாவடர்முழவினோடு.....*
மல்லுயர்திணிதோண்மைந்தர்மங்கையர்வதுவையாற்று
ம்புல்லியமுழக்கமார்க்கும்பரவையோடிகலுமாதோ*

(இ-ள்.) அல்லி- அகவிதழ்களாலாகிய--அம்-அழகிய--கோதை மாலையையுடைய--மாதர்-மகளிரானவர்-- அன்பொடு- அன்புடனே--வளர்த்த-(தம்மால்)வளர்க்கப்பட்ட---முல்லை-முல்லைக்கொடியானது--மெல்-மெல்லிய- அரும்பு-அரும்புகளை--ஈன்றதென்று-ஈந்ததென்றுநினைத்து--விழா- (அதற்குத்) திருவிழாவை--அயர்-செய்யுமிடத்துண்டாகின்ற--முழவினோடு வாத்தியவொலியோடு--மல்-மற்போரில்--உயர்-உயர்ந்த--திணி-வலிமைபொருந்திய--தோள்-தோள்களையுடைய--மைந்தர்-காளையரானவர்---மங்கையர்-மங்கைப்பருவப்பெண்களை---வதுவையாற்றும்- விவாகஞ்செய்தற்குண்டாகின்ற--பல்லியம்-பலவகைவாத்தியங்களது---முழக்கம் ஓசையானது--ஆர்க்கும்-ஒலிக்கின்ற---பரவையோடு-கடலொலியோடு--இகலும்-பகைக்கும்--(எ-று)மாது-ஓ-அசைகள்.[இதுதொடர்புநவிற்சியணி](கருத்து)முல்லைமலர்ந்ததென்று திருவிழா நடத்துகின்ற வாத்தியவோசையும் விவாகநடத்துகின்ற வாத்தியவோசையும் கடலோசையோடு மாறுபடுமென்பதாம். (௰அ)

அவிரிழைசுமக்கலாற்றாதந்நலார்பரிந்துநீத்த... ....*
திவளொளிமணியுமுத்துஞ்சிந்தியமுன்றிறோறுங் .. *
குவிமுலைக்கயவாய்ச்செங்கட்குடம்புரைசெருத்தன்மேதி
கவைபடிபெயர்ப்பமாழ்கிக்காறளர்ந்தொதுங்குமன்றே.

(இ-ள்) அந்நலார் - அத்தேயத்துமாதரால்—சுமக்கலாற்றாது-சுமக்கமாட்டாமல்— பரிந்து-வருந்தி..நீத்த-களைந்தெறியப்பட்ட—அவிர்-ஒளிசெய்கின்ற— இழை-ஆபரணங்களில் —திவள்- அசையாநின்ற— ஒளி-ஒளியையுடைய —மணியும்- பலவிதமணிகளும்--முத்தும்-முத்துக்களும்— சிந்திய- இறைந்துகிடக்கின்ற— முன்றிறோறும்-வீட்டுமுன்னிடந்தோறும்— குவி-குவிந்த— முலை- முலைகளையும்—கயம்-பெரியதாகிய— வாய்-வாயையும்—செம்-செய்ய—கண்-கண்களையும்—குடம்புரை-குடம்போலும்— செருத்தல்-மடியையுமுடைய—மேதி-எருமைகளானவை— கவை-பிளப்பையுடைய—அடி-அடிகளை —பெயர்ப்ப- எடுத்துவைக்க--மாழ்கி-வருந்தி—கால்-கால்களானவை—தளர்ந்து-சோர்ந்து—ஒதுங்கும்-பக்கங்களிலேவிலகும்—(எ-று)அன்று-ஏ-அசைகள்.[செல்வமிகுதியைச்சொல்லுதலால் வீறுகோளணியாம்.(கருத்து) பெண்கள்களைந்தெறிந்த ஆபரணங்களின் நவமணிகளின்மேல் எருமைகள்பிளவடிவையாமல் விலகிப்போமென்பதாம். (௰௯)

பொரியரைத்தேமாநெற்றிப்பூங்கனியிழிந்ததேனும்.*
விரிதலையரம்பையீன்ற மென்பழ முகுத்ததேனு....*

முருகவிழ்சுளைவாய்விண்டமுட்புறக்கனியின்றேனுங்.*
குருகுபாய்தடமுமியாறுங் குறைவறப்பெருகுமன்றே.

(இ-ள்) பொரி-பொருக்குகளையும்—அரை-அரையையுமுடைய—தேமா-தேமாவினது--பூ-அழகிய--கனி-பழங்களானவை--நெற்றி-முதிர--இழிந்த-(அவைகளிலிருந்) தொழுகிய--தேனும்-மதுவும்—விரி-விரிந்த--தலை-தலையையுடைய--அரம்பை-வாழைகளால்-ஈன்ற-தரப்பட்ட—மெல்-மெல்லிய--பழன்-பழங்களால்—உகுத்த-சொரியப்பட்ட—தேனும்-மதுவும்--விண்ட-வெடித்த—முட்புறக்கனியின்-பலாப்பழங்களினுடைய--முருகு-பரிமளமானது--அவிழ்-விரிகின்ற--சுளைவாய்-சுளைவாயிலிருந்தொழுகிய—தேனும்-மதுவும்—குருகு-பறவைகளானவை---பாய்-பாய்கின்ற—தடமும்-ஏரிகளிலும்—யாறும்-நதிகளிலும்--குறைவற-குறைவுதீர--பெருகும்-பெருகிப்பாயும்—(எ-று.)[முக்கனிகளின் சாற்றிற்கும் ஏரிநதிகளுக்குஞ் சம்பந்தமில்லாமையினாலே சம்பந்தத்தைக் கற்பித்தலினாலே தொடர்புயர்வு நவிற்சியணியாம்.](கருத்து) மாங்கனித்தேனும்,வாழைக்கனித்தேனும், பலாக்கனித்தேனும்,ஏரிகளிலும் நதிகளிலும்பெருகும் என்பதாம். (௨௰)

அருமறைக்கிழவருள்ளத்தவாக்கெடவன்பினல்கும்...*
பெருநிதிக்குப்பையோடுபெய்புனல்பெருகியோடி...*
வரிவளையலறியீன்றமணியிளநிலவுகாலுந் .. .........*
திருவநீள்கழனிதோறுஞ்செந்நெலைவளர்க்குமாதோ..*

(இ-ள்) அரு- அரிய—மறைக்கிழவர்-வேதத்திற்குரியபார்ப்பாருடைய—உள்ளத்து-மனத்திலுள்ள—அவா(பொருளாசையானது) கெட--அழிய-அன்பின்-பத்தியினாலே—நல்கும்-கொடுக்கப்படுகின்ற—பெரு-பெரிய—நிதி-பொருள்களது—குப்பையோடு-குவியல்களோடு—பெய் விதிப்படி வார்க்கப்படுகின்ற—புனல்-நீரானது—பெருகி-பெருக்கெடுத்து— ஓடி-விரைந்துபோய்--வரி-இரேகைகளையுடைய— வளை-சங்குகளால்—அலறி- கூவி—ஈன்ற-தரப்பட்ட—மணி- முத்துக்களானவை—இள- இளமைபொருந்திய-நிலவு-சந்திரிகையை—காலும்-வீசுகின்ற— திரு- அழகிய— நீள்-நீண்டிருக்கின்ற—கழனிதோறும்-கழனிகளிலெல்லாம்---செந்நெலை-செந்நெற்பயிரை—வளர்க்கும்-வளர்க்கும்— (எ-று) அகரம்சாரியை-மாது-ஓ-அசைகள்.[இதுஉறுப்புறுப்பிற்கலவையணி.] (கருத்து)பார்ப்பாருக்குப் பொருட்குவியலைத்தத்தம் பண்ணுநீரானது செந்நெலைவளர்க்கும் என்பதாம். (௨௧)

நிலவுவெண்முத்தும்பொன்னுநீனிறமணியுஞ்சாந்துந்,
தலையயக்குற்றவாற்றுற்றண்மதிதவழுங்கோட்டு.....*

மலைவளம்பெரிதென்கோயான்வால்வளைபரந்துமேயு*
மலைவளம்பெரிதென்கோயான்யாதெனைவரைவன்மாதோ

(இ-ள்) நிலவு-சந்திரிகையையுடைய — வெள்-வெள்ளிய — முத்தம்-முத்துக்களும — பொலனும்-கனகங்களும் — நீலநிறம்-நீலநிறத்தையுடைய — மணியும்-மணிகளும் — சாந்தும்-சந்தனக்கட்டைகளும் — தலைமயக்குற்றவாற்றால் - கலந்துகிடக்கையால — கண்-தவணிய — மஞ்சு-சந்திரனும்-அவரும்-உராய்ந்துசெல்லப்படுகின்ற — கோட்டு-சிகரத்தையுடைய — மலை-மலையினது — வளம் - வளத்தை-யான்-நான் — பெரிதென்கோ - அதிகமென்றுசொல்லுவேனோ — வால்-வெண்மைபொருந்திய --- வளை - சங்குகளானவை — பரந்து-பரவி — மேயும்-மேய்கின்ற — அலை - அலைகளையுடைய கடலினது — வளம்-வளத்தை — யான்-நான் — பெரிதென்கோ- அதிகமென்றுசொல்லுவேனோ — யாதெனை-இவற்றுள்ளே — எதை-(அதிகமென்று) அறைகுவல் — யான்-சொல்லுவேன் — (எ-று) [இது ஐயவணியாம்] (கருத்து) மலைவளத்தைப்பெரிதென்று சொல்லுவேனோ கடல்வளத்தைப்பெரிதென்றுசொல்லுவேனோ, என்றார் நூலாசிரியார். (உஉ)

உளங்கனிந்தாயரூதும்வேயிசைசெவியினோர்ந்து, துள
ங்குவெள்ளருவிகுன்றிற்றோகைகள்டுஞ்சுந்தெண்ணீர்
வளங்கெழுமருதவேலிவண்டுதாலாட்டநெய்த... ....*
லிளங்களிகுமரியன்னமின்றுயில்கூருமாதோ.. ...*

(இ-ள்) ஆயர்-முல்லைநிலத்துள்ள — இடையரால்-உளங்கனிந்து — மனமகிழ்ந்து-ஊதும் — ஊதப்படுகின்ற-வேய் — புள்ளாங்குழல்களுடைய — இசை-இராகத்தை -- செவியின் - காதுகளினாலே — ஓர்ந்து-கேட்டு — துளங்கு-அசைகின்ற --- வெள்-வெள்ளிய — அருவி-வெள்ளங்களையுடைய — குன்றில்-குறிஞ்சிநிலத்தில் — தோகை-மயில்களானவை — கண்டுஞ்சும்-தூங்கும் — தெள்-தெள்ளிய --- நீர்-நீரினது-வளம் --- வளமானது-கெழுபொருந்திய — வேலி- வேலியையுடைய — மருதம்-மருதநிலத்தில — வண்டு-வண்டுகளானவை -- தாலாட்ட-தாலாட்டிசையைப்பாட — நெய்தல் - நெய்தநிலத்தில் — இள-இளமைபொருந்திய — களி-களிப்பையுடைய — குமரியன்னம்-பெட்டையன்னங்களானவை — இன்-இனிய — துயில்கூரும்- நித்திரைமிகும் — (எ-று.) (கருத்து) இடையர் புள்ளாங்குழலோசைகேட்டுமலையிலமயில்கள்நித்திரைசெய்யும்மருதநிலத்தில் வண்டுகள்தாலாட்டிசைபாடநெய்தநிலத்திலன்னங்கள்நித்திரைசெய்யுமென்பதாம்

கொடியனையகளிர்தங்கள்குழைபயறுண்மருங்கேவாளா*
பய்கொலைபுரிவமாதர்படைநெடுங்குவளைக்கண்ணே..*

யடிமிசைமுறையிட்டென்றுமரற்றுவசிலம்பேசூழ்ந்து
கடிமதுநுகர்வவன்னோர்கருங்குழற்காமர்வண்டே...*

(இ-ள்.)மகளிர்-மாதருடைய—குழையும் - வாடுகின்ற—நுண்-நுண்ணிய—மருங்கே-இடைகளே—கொடியன-கொடுமையுள்ளனவாம்—இங்கேமருங்கே - கொடியனவென்பதற்கு—மருங்கே-இடைகளே—கொடியன-கொடிபோல்வன—என்பது-கருத்தாகக்கொள்க-(அன்னோர்)அவருடைய—மாதர்- அழகிய—படை-வாளும்—குவளை-நீலோற்பலமும்போல—நெடு-நெடிய—கண்ணே-கண்களே—வாளா-வீணாக--படு- இறந்துபடுகின்ற--கொலை-கொலைத்தொழிலை—புரிவ-செய்வனவாம்—இங்கே-கண்ணேவாளாபடுகொலைபுரிவவென்பதற்கு—கண்ணே-கண்களே--வாளா-காரணமில்லாமல்—படு-வருத்துகின்ற—கொலை-வருத்தத்தை--புரிவ-செய்வன - என்பது-கருத்தாகக்கொள்க—சிலம்பே-நூபுரங்களே-(அன்னோர்)அவருடைய—அடிமிசை-அடிகளின்மேல்விழுந்து— முறையிட்டு-தங்குறைகளைமுறையிட்டு—என்றும் - எந்நாளிலும்—அரற்றுவ-புலம்புவனவாம்—இங்கேசிலம்பேயடிமிசைமுறையிட்டென்றுமரற்றுவவென்பதற்கு—சிலம்பே-சிலம்புகளே— அடிமிசை-அடிகளின்மேல்—முறை-முறையாக—இட்டு - தரிக்கப்பட்டு—என்றும் எக்காலமும்—அரற்றுவ-ஒலிப்பன—என்பது-கருத்தாகக்கொள்க—அன்னோர்-அவருடைய—கரு-கரிய—குழல்-கூந்தலிலுள்ள—காமர்-அழகிய—வண்டே-வண்டுகளே—சூழ்ந்து-சூழ்ந்து—கடி-(வேதத்திருமேல)விலக்கப்பட்ட—மது-கள்ளை— நுகர்வ-குடிப்பனவாம்-இங்கேவண்டேசூழ்ந்துகடிமதுநுகர்வவென்பதற்கு-வண்டே-வண்டுகளே--சூழ்ந்து-மொய்த்து—கடி-பரிமளம்பொருந்திய—மது-(பூந்)தேனை—நுகர்வ-குடிப்பன— என்பது-கருத்தாகக்கொள்க - [தம்-சாரியை-கள்-பகுதிப்பொருள்விகுதி] [இதுகொடுமைமுதலானவற்றை மனிதர்களினொழித்துஇடைமுதலானவற்றிற்காட்டலால் ஒழித்துக்காட்டணியாய்.] (௨௬)

கடல்படுமமுதமல்லற்கான்படுமமுதுமோங்குந்...*
தடவரையமுதுமொன்றித்தலைமயக்குற்றவாற்று ...*
ளுடைநிலையமுதமொன்றேயுடையவிண்ணாடுகொல்லோ
நிடதநாடதற்குநேராநிகழ்த்தலாந்தகைமைத்தம்மா*

(இ-ள்) கடல்-கடலினிடத்து—படும்-உண்டாகிய--அமுதம்(உப்புமுதலாகிய)வமுதமும்—மல்லல்-வளம்பொருந்திய--கான் -காட்டினிடத்து--படும்-உண்டாகியஅமுதம்(பால்முதலாகிய)வமுதமும்--ஓங்கும்-உயர்ந்த—தடம்-பெரிய--வரை-மலையினிடத்து- ப

டும்)உண்டாகிய—அமுதும்-(தேன்முதலாகிய)வமுதமும்—ஒன்றி-பொருந்தி—தலைமயக்குற்ற-கலந்துகிடக்கிற-ஆற்றால்· காரணத்தால்—உடை-(கரையை)யடக்கின்ற—திரை-அலைகளையுடைய--(கடலினிடத்து)படும்--உண்டாகிய-ஒன்றமுதமே---ஓரமிர்தத்தையே-உடைய(தன்னிடத்தி)லுடைய--விண்ணுளோர்-தெய்வநாடோ-நிடதநாடதற்கு-நிடததேயத்திற்கு—நேரா-ஒப்பாக- நிகழ்த்தலாம்-சொல்லலாம்-தகைமைத்து-குணத்தையுடையது--(எ-று)[கொல்-அசை-ஓ-எதிர்மறை][இதுவேற்றுமையணி] (கருத்து) கடலில் மலையில்காட்டில்படுதிரவியம்பொருந்தியிருப்பதால் இந்நாட்டைப்பொன்னாட்டுக்கொப்பாகச்சொல்லலாம் என்பதாம். (௨௫)

நலனுறுகுமரியார்க்குநண்ணியவிருந்தோடுண்டும் *
பலகலைகேள்வியாய்ந்தும்பகற்பொழுதினிதுநீங்கு... *
மலர்முலையந்நலார்தமலத்தகமலர்த்தாணீவிப், புலவிக
டீர்த்துஞ்சேர்ந்துநள்ளிருட்பொழுதும்போமால்... *

(இ-ள்) நலன்-நற்குணங்களை—உறு-பொருந்திய—குமரியார்க்கும்-ஆடவரொல்லாருக்கும்—நண்ணிய-(தம்மிடத்துவந்த)விருந்தோடு—விருந்தினரோடு- உண்டும்-உண்ணலாலும்—பல- பலவாகிய—கலை-கலைகளை—கேள்வி-கேள்வியினாலே—ஆய்ந்தும்-ஆராய்தலாலும்—பகற்பொழுது- பகற்காலமானது—இனிது- இனியதாக—நீங்கு-கழியும்—அலர்-அடிபரந்த— முலை- முலைகளையுடைய—அந்நலார்-அழகியமங்கையருடைய—அலத்தகம்-செம்பஞ்சூட்டிய—மலர்-தாமரைமலர்போலும்—தாள்-அடிகளை—நீவி-தடவி—புலவிகள்-ஊடல்களை—தீர்த்தும்-நீக்குதலாலும்—சேர்ந்தும்-(அவரைச்)சேர்தலாலும்—நள்ளிருட்பொழுதும்-நடுவிராக்காலமும்(இனிது)இனியதாக—போம்-கழியும் —(எ-று) [தம்-சாரியை-ஆல்-அசை.](கருத்து) வாலியர்களுக்குப்பகற்பொழுதானது விருந்துண்ணுதலாலும் கல்விப்பயிற்சியினாலும் நீங்கும் இராப்பொழுதானதுபெண்கள்பிணக்கைநீக்குதலாலும் அவர்களைச்சேர்தலாலும் நீங்கும் என்பதாம். (௨௬)

கொல்லுலைவேற்கணல்லார்கொழுநரோடூடிநீத்த... *
வில்லுமிழ்கலன்களியாவுமிளிர்சுடரொளிக்குமாற்று...*
செல்வியும்பகலுந்தோன்றுநிலைமையவருலகமெய்க்கு *
மல்லன்மாவிந்தமென்னுமவளநகர்கூறலுற்றாம்......*

(இ-ள்) கொல்-கொல்லனது—உலை-உலையிலேகாய்ச்சப்பட்ட--வேல்-வேல்போலும்—கண்-கண்களையுடைய—நல்லார்- மாதரால் -கொழுநரோடு-கணவரோடு—ஊடி-பிணங்கி— நீத்த-களைந்தெ

றியப்பட்ட—வில்-காந்தியை—உமிழ்-வீசுகின்ற—கலன்களியாவும்-ஆபரணங்களெல்லாம்—மிளிர்-விளங்குகின்ற—சுடர்-கிரணங்களை—எறிக்கும்-வீசும்—ஆற்றல்-காரணத்தால்—எல்லியும்-இரா(விது)வென்றும்—பகலும்-பக(லிது)வென்றும்—தோன்றாது-அறியமாட்டாமல்—இமையவர்-தேவரது—உலகம்-உலகத்தை—ஒக்கும்-ஒத்திருக்கின்ற—மல்லல்-செல்வத்தையுடைய—மாவிந்தமென்னும்-மாவிந்தமென்றுசொல்லப்பட்ட—நகர்-பட்டணத்தினது—வளம்-சிறப்பை—கூறலுற்றாம்-(யாம்)சொல்லத்தொடங்கினோம்—, எ-று)[இதுகலவையணி](கருத்து) மாதர்கள் சுழற்றியெறிந்தஆபரணப்பிரகாசத்தினால் தெய்வலோகத்துக்கொப்பாகுமாவிந்தநகரவளப்பத்தைச்சொல்லுவாமென்றாரென்பதாம்.(௨௭)

நாட்டுப்படலமுற்றிற்று.

# நகரப்படலம்.



அஃதாவது-நகரத்திலுள்ளசிறப்பைச்சொல்லுதலாம்.

(கலிநிலைத்துறை.)

குடவளைக்குலம்வயிறுளைந்தினமணிகொழிக்கு...... *
மடுவிலவானகருருவுகாட்டியதுபோன்மதில்சூழ்... *
கடிகொண்மாநகரந்நிழல்கதுவிடாதகன்ற......... *
புடைகொணீர்நகருடுத்தலைபொங்குபேரகழி..... *

(இ-ள்) மதில்-மதிலை—சூழ்-சூழ்ந்த—கடி-காவலை—கொள்-கொண்டிருக்கிற—மா-பெருமைபொருந்திய—நகர்-(முன்சொல்லப்பட்ட)நகரமானது—குடம்-குடம்போலும்—வளை-சங்குகளின்—குலம்-கூட்டமானவை—வயிறுளைந்து-வயிறுநொந்து—இனம்-ஒரினமாகிய—மணி-முத்துக்களை—கொழிக்கும்-சொரிதற்கிடமாகிய—மடுவில்-ஒருதடாகத்துள்—வானகர்-அமராவதிபட்டணத்தினுல்—காட்டியது-காட்டப்பட்டதாகிய—உருவு-நிழலை—போன்ம்-போலும்—நகர்-அந்நகரத்தினுல்—உடுத்து-உடுக்கப்பட்டு—அலை-அலைகளால்—பொங்கு-விளங்குகின்ற—பேர்-பெரிய—அகழி-அகழியானது—அந்நிழல்-அந்நிழலினுல்—கதுவிடாது-பற்றப்படாமல்—அகன்ற-நீங்கிய—புடை-சுற்றுப்பக்கத்தை—கொள்-(தனக்கிடமாகக்)கொண்ட—நீர்-நீலா(போன்ம்)

போலும்.(எ-று) வயிறளைந்தீன்மணிஎனப்பாடமோதலும்பொருந்தும்-போலும் என்னுஞ்செய்யுமென்னும்,வாய்பாட்டுமுற்றுவினைஈற்றயலுகரங்கெட்டுலகரமெய்னகரமெய்யாகத்திரிந்தது,தொல்காப்பியம்வினையியல்(௩௧)அவற்றுள்-செய்யுமென்னும் பெயரெஞ்சுகிளவிக்கு-மெய்யொடுங்கெடுமேயீற்றுமிசையுகரம்,மவ்விடனறிதலென்மனார்புலவர் இதனாலறிக[இது தற்குறிப்பணி](கருத்து)மாவித்தநகரமானது ஒரு தடாகத்துள்ளே தோன்றியதேவநகரைப்போலுமிருந்தது,அம்மாவிந்நகரத்தினகழியானது அத்தடாகத்திற்றோன்றியதேவநகரைச்சூழ்ந்தசலத்தைப்போலுமிருந்தது,எப்படியெனில், கண்ணாடியுள்ளேமுகந்தோன்றியவிடத்தில் கண்ணாடிவடிவந்தோன்றாது,அம்முகந்தோன்றாவிடத்தில் அக்கண்ணாடிவடிவந்தோன்றும். இதுபோலவே தடாகத்துள்ளேதேவநகரந் தோன்றியவிடத்தில் சலந்தோன்றாது, அத்தேவநகரந்தோன்றாவிடத்தில் சலந்தோன்றும், ஆகையாலேதேவநகரத்தின்பிரதிபிம்பத்தையேமாவித்தநகரமாகவும், பிரதிபிம்பத்தைச்சூழ்ந்தசலத்தையேமாவித்தநகரத்தினகழியாகவுங்கொள்க என்பதாம். (௧)

கண்ணகன்றபேரகழியினுழக்கியகரிக................ *
டண்ணந்தாமரைத்தாளெனத்தடக்கையாற்பிலத்தி...*
னண்ணுஞ்சேடனையெடுத்ததன்சுடிகையினாறி... ...*
யுண்ணிவந்தொளிர்மணியினாலுற்கையென்றெறியும் .*

(இ-ள்)கண்ணகன்ற-இடம்பரந்த—பேர்-பெரிய—அகழியின்-அகழியினிடத்து—உழக்கிய-கலக்கிய—கரிகள்-யானைகள்—தண்-தண்ணிய—அம்-அழகிய—தாமரை-தாமரையினுடைய—தாளை-நாளமென்றுநினைத்து—தடம்-பெரிய—கையால்-துதிக்கையினாலே—பிலத்தில்-பாதாளத்திலே—நண்ணும்-வாசஞ்செய்கின்ற-சேடனை—சேடனென்னும்-பாம்பை—எடுத்து-மேலெடுத்து—அதன்-அப்பாம்பினது—சுடிகையில்- உச்சியினிடத்து—உள்(அத)னுள்ளிருந்து—நிவந்து-மேலெழும்பி—நாறி - காணப்பட்டு—ஒளிர்-விளங்குகின்ற—மணியினால்- இரத்தினத்தினாலே— உற்கையென்று-கொள்ளியென்றஞ்சி—எறியும்-அதனைவீசும்—(எ-று).[இது மயக்கவணி](கருத்து) அகழியிற்கலக்கிய யானைகள் தாமரைத்தண்டென் றாதிசேடனையெடுத்து அதன்முடியின் மணியொளியால் கொள்ளிக்கட்டையென் றெறியும என்பதாம்.இது அகழிச்சிறப்பு.

ஒற்றைபாழியந்தேரவனுயர்மதில்கடக்கப்..........*
பெற்றிலாமையிற்பிறங்குபொற்கதவங்கடிறக்கு......*
மற்றநாக்குவனந்தலாரியல்புறவணியக்..... ......*
கற்றைவெண்மதிசாளரத்தாடியிற்காட்டும்... ... ...*

(இ-ள்) ஒற்றையாழி - ஒருருளையையுடைய — அம் - அழகிய — தேரவன் - தேரையுடைய (சூரியனானவன்) — உயர் - தன்வழியின் — மேலுயர்ந்த - மதில் - மதிலை — கடக்க - தாண்டுதற்கு — பெற்றிலாமையின் - வல்லமைபெற்றிலாமையால் — பிறங்கு - விளங்குகின்ற — பொன் - பொன்மயமாகிய -- கதவங்கள் - (அம்மதில்வழிக்) கதவுகளை — திறக்கும் - திறக்கும் — ஆற்றம் - சமயத்தை — நோக்குவன் - பார்த்துக்கொண்டிருப்பான் — அந்நலார் - அழகியமகளிரானவர் — இயல்புறத்திருத்தமுண்டாக -- அணிய - (திலதமுதலானவற்றைத்) தரித்துக்கொள்ள — கற்றை - கிரணகற்றையையுடைய — வெள் - வெள்ளிய — மதி - சந்திரனானவன் — சாளரத்து - (அம்மதில்மேற்) பலகணியின்புறத்திருந்து — ஆடியின் - நிலைக்கண்ணாடிபோல - காட்டும் - (அவருக்குத்) தன்னைக்காட்டுவான் — (எ-று) [நிலைக்கண்ணாடி நிலையாக முன்வைக்கப்படுவது] இது தொடர்புநவிற்சியணி] (கருத்து) சூரியனானவன் மாவிந்தநகர மதிலைக்கடக்கமாட்டாமல் கதவுகளைத்திறக்குஞ்சமயம் பார்த்திருப்பான் - சந்திரனானவன் பெண்கள் திலதமுதலிய பணிகளணிந்துகொள்ளத் தன்னை நிலைக்கண்ணாடிபோலக் காட்டுவான் என்பதாம். இது மதிலின்சிறப்பு. (௩)

மறுவிகந்தவெண்மதியெனவயங்கியபித்தி..........*
செறியுமாடங்கள் வெண்கதிர்பரப்பிய செவ்வி... ...*
நறவுயிர்த்தபைந்துணர்மலிகற்பகநாட்டை... ......*
வெறுவிதாமெனவெண்ணகைபுரிவனபோலும்... ...*

(இ-ள்) மறு - களங்கத்தினின்றும் — இகந்த - நீங்கிய — வெள் - வெள்ளிய — மதியென - சந்திரன்போல — வயங்கிய - விளங்கிய — பித்தி - பளிங்குச்சுவர்களால் — செறியும் - நெருங்கிய — மாடங்கள் - மாளிகைகளானவை — வெள் - வெள்ளிய — கதிர் - கிரணங்களை — பரப்பிய - விரித்திட்ட — செவ்வி - அழகினாலே — நறவு - தேனை — உயிர்த்த - தருகின்ற — பை - பசிய — துணர் - பூங்கொத்துக்களால் — மலி - நிறைந்த — கற்பகம் - கற்பகத்தருக்களையுடைய — நாட்டை - சுவர்க்கத்தைக்குறித்து — வெறுவிதாமென - வறுமையுடையதென்று — வெள் - வெள்ளிய — நகை - சிரிப்பை — புரிவன - செய்வன — போலும் - ஒக்கும் — (எ-று) [இது பொருட்டற்குறிப்பு] (கருத்து) மாடங்களானவை கிரணங்களைவிரித்திட்ட வழகினாலே பொன்னகரத்தைப்பார்த்துப்புன்னகைபுரிவனபோலுமிருக்கின்றன என்பதாம். இது முதல் (௩௪) பாடல்களுள் வீடுமுதலியவற்றின் சிறப்பு. (௪)

வடிகொள்வெண்சுதைதீற்றியமாடநீள்கழுத்திற்.....*
படியமைம்முகில்கதிர்விடுபானிலாக்குழவி... ......*

முடியின்மீதுறத்தவழ்கலான்முழுமெயும்வெள்ளைப் *
பொடியணிந்தருள்கறைமிடற்றண்ணலைப்பொருவும்.

(இ-ள்) வடிகொள்-வடித்துக்கொள்ளப்பட்ட — வெள்-வெள்ளிய — சுதை-சுண்ணச்சாந்தை — தீற்றிய-பூசிய — மாடம்-மாளிகையானது — நீள்-நீட்சிபொருந்திய — கழுத்தில்-(அதன்) கண்டத்தின்கண் — மை-கரிய — முகில்-மேகமானது — படிய-படிந்திருக்க — கதிர்-கிரணங்களை — விரி-வீசுகின்ற — பால்-வெண்மைபொருந்திய — நிலாக்கொழுவி பிறையானது — முடியின்மீது-(அதன்)-முடியின்மேலே — உற-பொருந்த — தவழ்கலால்-ஊர்தலால் — முழுமெயும்-திருமேனிமுழுதினும் — வெள்ளைப்பொடி-விபூதியை — அணிந்தருள்-பூசியருளிய — கறை-(நஞ்சக்)கறைபொருந்திய — மிடற்று-கண்டத்தையுடைய — அண்ணலை-பரமசிவனை — பொருவும்-ஒத்திருக்கும் — (எ-று) [இது உவமையணி] (கருத்து) மாளிகையானது வடிவத்தின்சுண்ணச்சாந்தும்கழுத்திற்கரியமேகமும்முடியிலிளம்பிறையும் பொருந்தியிருத்தலாற் பரமசிவனுக்கொப்பாகுமென்பதாம். (ரு)

மழைக்கண்மங்கையர்பயிறரமரகதமணியி..... ... *
னிழைத்தசெய்குன்றின்பைங்கதிர்பொன்னிலத்தெய்தக்
குழைத்தவைந்தருநீழலிற்குலவுமானினங்க......... *
டழைத்தபுல்லெனவிரைவொடுதனித்தனிகறிக்கும்... *

(இ-ள்) மழை-குளிர்ச்சிபொருந்திய — கண்-கண்களையுடைய — மங்கையர்-மகளிரானவர் — பயிற-(ஏறி) விளையாடுதற்கு — மரகதமணியின்-மரகதமணிகளாலே — இழைத்த-பதிக்கப்பட்ட — செய்குன்றின்-விளையாட்டுமலைகளுடைய — பை-பசிய — கதிர்-கிரணங்களானவை — பொன்னிலத்து-தேவலோகத்தின்கண் — எய்த-அடைய — குழைத்த-தளிர்த்த — ஐந்தரு-பஞ்சதருக்களது — நீழலில்-நிழலினிடத்தில் — குலவும்-குலவுகின்ற — ஆன்-பசுக்களுடைய — இனங்கள்-கூட்டங்களானவை — தழைத்த-செழித்த — புல்லென-புற்களென்று நினைத்து — விரைவொடு-சீக்கிரத்தில் — தனித்தனி-ஒவ்வொன்றாக — கறிக்கும்-(அக்கிரணங்களைக்)கௌவும் எ-று. [மரகதத்தினொளியைப் புல்லென்றுமயங்கினதால மயக்கவணியாம்] (கருத்து) செய்குன்றிலிழைத்தமரகதக்கிரணங்களைத் தெய்வப்பசுக்கள்புற்களென்றுகடிக்கும் என்பதாம். (சு)

புதுமணத்தமென்மகளிர்சாளரத்திடைப்பொருந்து *
மதியையின்னுயிர்ப்பாங்கியர்மறைந்தனர்நோக்குங் *
கதிர்கொள்வாண்முகமென்றுதங்காதலர்ப்புலவும் *
பதுமமென்கரநீக்கிநீள்படைவிழிபுதைப்பார்...... *

(இ-ள்)புது-புதிய—மணத்த-விவாகத்தையுடைய—மெல்-மெ
ல்லிய—மகளிர்-மங்கையரானவர்—சாளரத்திடை- (மேல்வீட்டி
ன்)பலகணியின்புறத்து—பொருந்து-சேர்ந்த—மதியை- சந்திர
னை —இன்-இனிய—உயிர்-உயிர்போலச்சிறந்த—பாங்கியர்- தோ
ழியரானவர்—மறைந்தனர்-மறைந்தவராகி—நோக்கும் - பார்க்கி
ன்ற—கதிர்- கிரணத்தை—கொள்- கொண்ட—வாள் - ஒளியையு
டைய—முகமென்று-முகமென்றுநினைத்து—தம்-தம்முடைய—
காதலர்-நாயகரை - புல்லும்-தழுவிக்கொண்டிருக்கின்ற—பதும
ம்-தாமரைமலர்போலும்—மெல- மெல்லிய—கரம்-கைகளை—நீ
க்கி-(அவரிலிருந்து)நீக்கி—நீள்-நீண்ட—படை-வாள்போலும்—
விழி-கண்களை—புதைப்பார்-மூடிக்கொள்வார். (எ-று.)[மதியை
ப்பாங்கியர்முகமென்றுமயங்குதலால்மயக்கவணியாம்] (கருத்து)
புதிதாகவிவாகஞ்செய்துகொண்டபெண்கள் பலகணியின்புறத்து
த்தோன்றியசந்திரனை மறைந்துபார்க்குந்தோழியர் முகமென்றெ
ண்ணிநாயகரைத்தழுவியகைகளால்கண்களைமூடிக்கொள்வார்கள்
என்பதாம். (௭)

வள்ளவாய்மலர்முகத்தியர்வதியுமேனிலையிற்......... *
கள்ளருமலர்நாற்றியசுருங்கையிற்கதிர்க............ *
ளுள்ளுறப்புகுந்துவாமதியுடலுரிஞ்சுதலாற்....... *
பிள்ளைவெண்மதியாதனன்றெனப்பெரிதுவக்கும் .... *

(இ-ள்)உவா-பர்வகாலத்திலேதோன்றுகின்ற—வெள்-வெள்ளிய
—மதி-சந்திரனானவன்—வள்ளவாய்மலர்-தாமரைமலர்போலும்—
முகத்தியர்-முகத்தையுடையமாதரானவர்—வதியும்- வாசஞ்செய்
கின்ற—மேனிலையில்-மேல்வீட்டில்—கள்-தேனானது—அரு-நீங்
காத—மலர்-மலர்களை—நாற்றிய-தொங்கக்கட்டிய—சுருங்கையி
ல்-நுழைவாயிலிலே—கதிர்கள்-கிரணங்களானவை—உள்-உள்ளே
—உற-பாய—புகுந்து-நுழைந்து—மதி-(யாவராலும்) மதிக்கப்
படுகிற—உடல்-(தன்பெரிய)வுடம்பு—உரிஞ்சுதலால்-தேய்தலினா
லே—பிள்ளையாதல்-குழந்தையாதலே—நன்றென- (தனக்கு) ந
ல்லதென்றுநினைத்து—பெரிது-மிகவும்—உவக்கும்- (அப்பருவத்
தை)விரும்புவான்.எ-று[இதுவேண்டாவணி](கருத்து)பூரணசந்தி
ரனானவன்மேன்மாடச்சாளரவாயிலில்நுழைந்து உடலானதுதேய்
தலினாலேஇளம்பிறைப்பருவமேநன்றென்றுமகிழுவான்என்பதாம்.

உருவின்மைந்தரில்வனிலவேட்குடைகுநரில்லை ... *
பொருளிலார்களிற்றனதனைப்பொருவிலாரில்லை...... *
தெருளின்மாக்களிற்சேடனிற்றுழ்குநரில்லை......... *
மருளிலார்களிலைந்தருநிகர்க்கிலாரில்லை................ *

(இ-ள்) உருவு-அழகு—இல்-(தம்மிடத்)தில்லாத—மைந்தரில்-காளையருள்—வேனில்- வசந்தகாலத்தையுடைய—வேட்கு-மன்மதனுக்கு—உடைகுநர்-தோற்பவர்--இல்லை-இலர்—பொருள்-செல்வப்பொருள்—இலார்களில்- (தம்மிடத்தில்லாதவருள்--தனதனை-குபேரனை—பொருவிலார்-ஒவ்வாதவர்—இல்லை-இலர்-தெருள்-கல்வியறிவுஇல்-(தம்மிடத்தில்லாதமாக்களில்)மனிதருள்—சேடனில்-ஆதிசேஷனில்—தாழ்குநர்-குறைபவர்—இல்லை- இலர்—அருள்-கையானது இலார்களில-(தம்மிடத்) தில்லாதவருள்-ஐந்தரு-பஞ்சதருக்களுககு—நிகர்க்கலார்-ஒப்பாகாதவர்—இல்லை-இலர்--(எ-று) (கருத்து)அழகிலாரில் மன்மதனிற் குறைந்தவரில்லை. வறியரில் குபேரனிற்குறைந்தவரில்லை, மூடரில்ஆதிசேடனிற்குறைந்தவரில்லை, கொடாதவரில்பஞ்சதருக்களிற் குறைந்தவரில்லை என்பதாம். (கூ)

பளிக்குமேனிலத்தன்பர்பாற்பயில்வுறுகலவி..... ... *
திளைத்துமார்பிடைத்துயில்பவர்முகத்தில்வெண்டிங்கள்
கிளைத்ததண்கதிர்பரப்புதல்கிளர்ந்தசாளரத்தி.........*
ளொளித்துவாண்முகச்செவ்வியைக்கவர்வதொத்துளதால்.

(இ-ள்) வெள்-வெள்ளிய—திங்கள்-சந்திரனானது—பளிக்கு-பளிங்கினாலாகிய—மேனிலத்து-மேல்வீட்டினுள்—அன்பர்பால்நாயகரிடத்தில்-பயில்வுறு—நாள்தோறும்-பழகிய—கலவி-புணர்ச்சியை—திளைத்து-அனுபவித்து—மார்பிடை-அவர்மார்பினிடத்தே—துயில்பவர்-தூங்குகிறமகளிரது—முகத்தில்-முகத்தினிடத்தே—கிளைத்த-தழைத்த—தண்-தண்ணிய—கதிர்-கிரணங்களை—பரப்புதல்-விரித்தலினாலே—கிளர்ந்த- விளங்குகின்ற—சாளரத்தின்-பலகணியின்புறத்து--ஒளித்து-மறைந்துநின்று—வாள்-ஒளிபொருந்திய—முகம்-(அவர்)முகத்திலுள்ள—செவ்வியை-அழகை—கவர்வது-திருடுவதை—ஒத்துளது- ஒத்திருக்கும்— [எ-று] [இது பொருட்டற்குறிப்பணி][கருத்து]மேன்மாளிகையிற்கணவருடன் புணர்ந்துஅவர்மார்பின்மேல்தூங்குகிறபெண்களின்முகத்தில்சந்திரன்கிரணங்களைவிரித்தல் அப்பெண்கள்முகத்தழகைத்திருடுவதை ஒத்திருக்கும்என்பதாம். ய

கணங்கொண்மாமணிகுயிற்றியொண் கதிர்செய்மேனி
லையிற்,சுணங்குபூத்தணிபருமிதத்துணைமுலைமகளிர் *
மணங்கொடாமரைமுகமும்வெண்மதியமுமதியா... *
தணங்கராமதிமருண்டுபார்த்தையுறவெய்தும்...... *

(இ-ள்) கணம்-கூட்டத்தை—கொள்-கொண்ட—மா-பெரிய—மணி-மணிகளானவை—குயிற்றி-பதிக்கப்பட்டு—ஒள்-ஒள்ளிய—

கதிர்-கிரணங்களை—செய்-செய்கின்ற—மேனிலையில்- மேல்வீட்டில்—சுணக்கு-தேமலால்—பூத்து-படர்ந்து—அணி-அலங்கரிக்கப்பட்ட—பருமிதம்-பருத்தவளவதான—துணை- இரண்டாகிய—முலை-முலைகளையுடைய—மகளிர்-மாதரது—மணம்- வாசனையை—கொள்-கொண்ட—தாமரை-தாமரைமலர்போலும்—முகமும்-முகத்தையும்—வெள்,வெள்ளிய—மதியமும்,சந்திரனையும்—அறியாது,அறியமாட்டாமல்—அணங்கு,தெய்வத்தன்மைபொருந்திய—அரா,இராகுவானது—மதிமருண்டு,புத்திமயங்கி—பார்த்து,நோக்கி—ஐயுறவு,[இவற்றுள்முகம்யாதோ சந்திரன்யாதோவென்கிற] சந்தேகத்தை—எய்தும்,அடையும்—[எ-று.] [இதுசந்தேகவணி] [கருத்து] இராகுஎன்னும்பாம்பானது மேலவீட்டில்உலாவும்பெண்கள்முகமென்றும்சந்திரன்என்றும்அறியாதசந்தேகம்அடையும் என்பதாம்.மாளிகைசந்திரமண்டலத்தை அளாவியதென்றறிக.௰௪.

மேனிவந்தொளிர்மாடத்தின்விழுத்தகநிரைத்த...... *
பானிலாமணித்தசும்பினிற்றண்கதிர்பரப்பக்........ *
கானறும்புனனிறைதலுங்கதிரவன்றடந்தேர்......... *
மானினங்குடித்தயர்வுயிர்த்தும்பரின்வாவும்........ *

(இ-ள்.) மேல்,ஆகாயத்தில்—நிவந்து,உயர்ந்து—ஒளிர்,விளங்குகின்ற—மாடத்தின்,மேல்வீட்டில்—விழுத்தக,சிறப்புப்பொருந்த—நிரைத்த,வரிசையாகவைக்கப்பட்ட—பால், வெண்மைபொருந்திய—நிலாமணி,சந்திரகாந்தத்தாலாகிய—தசும்பினில், குடங்களிலே—தண்,தண்ணிய—கதிர்,கிரணங்களை—பரப்ப,(சந்திரன்)விரிக்க—கால், கக்கப்பட்ட—நறு, நல்ல—புனல், நீரானது—நிறைதலும், [அவற்றுள்ளே] நிறைதலும்—கதிரவன், சூரியனது—தடம், விசாலமாகிய—தேர்,தேரினுடைய—மான்,குதிரைகளின்—இனம்-கூட்டமானது—குடித்து,[அந்நீரைக்]குடித்து—அயர்வுயிர்த்து-இளைப்பாற்றிக்கொண்டு—உம்பரில்,ஆகாயத்திலே—வாவும், தாவும்—எ-று. [இதுமேனிலைக்குஞ்சூரியமண்டலத்துக்குஞ் சம்பந்தங்கற்பித்தலால்தொடர்புநவிற்சியணி] [கருத்து] மேல்வீட்டில்வைக்கப்பட்டசந்திரகாந்தக் கற்குடங்களிலேசந்திரனாற்கக்கப்பட்டசலத்தைச் சூரியன்குதிரைகள்குடித்திளைப்பாறிநடக்கும் என்பதாம். மாளிகைசூரியமண்டலத்தையும்அளாவியதென்றறிக. ௰௫.

முருகுயிர்த்தவொள்ளகிற்புகைமுகிலொடுமுறழக்... *
குருமணிச்சுடர்வெயில்விரிமாடநீள்கொடிகள் ....... *
பரிதிவானவனடவுதேர்ப்பரியினைப்புடைத்தவ்...... *
வருணனிற்றெழில்புரிந்தவன்கரஞ்சிறிதாற்றும்......*

(இ-ள்) மருகு-பரிமளத்தை—உயிர்த்த-தருகின்ற—ஒள்-ஒள்ளிய—அகில-அகிற்கட்டைகளது—புகை-புகையானது—முகிலொடும்-மேகத்தோடும்—உறழ்-ஒத்துத்தோன்றுகின்ற—அ-அந்த—குரு-நிறமுள்ள—மணி-மணிகளது—சுடர்-கிரணமானது—வெயில்-வெயிலைப்போல—விரி-விரிகின்ற—மாடம்-மாளிகையிற்கட்டிய—நீள்-நீட்சிபொருந்திய—கொடிகள்-கொடிகளானவை—பரிதிவானவன்-சூரியனாகியதேவனது— நடவு-நடத்தலையுடைய—தேர்-தேரிற்பூட்டிய—பரியினை-குதிரைகளை—புடைத்து - அடித்து—அவ்வருணனில்-அவ்வருணனைப்போல, தொழில்-நடத்துகைத்தொழிலை, புரிந்து-செய்து, அவன்-அவ்வருணனது, கரம்- கைவருத்தத்தையும், சிறிது-சற்றே, ஆற்றும்-தீர்க்கும், (எ-று.) [இதுகலவையணி] (கருத்து) மேல்வீட்டிற்கட்டிய கொடிகளானவை சூரியன்தேரிற்பூட்டிய குதிரைகளையடித்துச்சாரதிதொழிலைநடத்தி அருணன்கைவருத்தத்தைத்தீர்க்கும் என்பதாம். (௰௩)

வரிவளைக்குலக்குவையினன்மணிகளான்மணிக......
டெரிதருங்கரவலவனின்வயின்வயிற்றிரண்ட.........
விரிகருப்புரவெண்மணற்குன்றினாலொலியாற்.....
பொருவிலாவணமறிதிரைக்கடலினைப்பொருவும்...

(இ-ள்) வரி-இரேகைகளையுடைய, வளைக்குலம்- சங்குச்சாதிகளின், குவையினால்-இராசிகளாலும், மணிகளால்-இரத்தினங்களினாலும், மணிகள்-இரத்தினங்களை, தெரிதரும்- எண்ணுகின்ற, கரம் - கைகளாகிய, அலவனால்-நண்டுகளாலும், வயின்வயின்-இடந்தோறும், திரண்ட-குவிந்த-விரி-விரிந்த—கருப்புரம்-கர்ப்பூரங்களாகிய--வெள்-வெள்ளிய—மணல் மணல்களுடைய—குன்றினால்- குவியல்களாலும்—ஒலியால்-ஓசையினாலும்—பொரு- ஒன்றையொன்றொத்திருக்கின்ற--இல்-மாடவரிசைகளையுடைய--ஆவணம்-கடைத்தெருவானது--மறி-மடங்குகின்ற—திரை- அலைகளையுடைய—கடலினை- சமுத்திரத்தை—பொருவும்-ஒக்கும்—(எ-று.)[இதுஉவமையணி](கருத்து)கடைத்தெருவானதுகடலினையொப்பாகும்என்பதாம். வளையென்றது- கடலிலேசங்கென்றும்- கடைவீதியிலே-வளையலென்றும்-மணிகடெரிதரும் கரவலவனென்றதற்கு- கடலிலே-முத்தையொப்பாகும் வடிவுதெரிகின்ற கைகளையுடையநண்டென்றும் கடைத்தெருவிலே கரங்களிலே மணிகளைவைத்துக் குற்றங்குணங்களை அறிகிறவல்லவனென்றும் சிலேடையாகினும்பொருந்தும். (௰௪)

திங்கள்வெண்மதிநிலத்துவாமடிச்செழுங்கதிர்க.....
டங்கவிழ்ப்புனற்பெருகலொடுதலைப்பெய்துவிசும்பிற்

கங்கையாழ்கடற்றலைமகன்களிப்பறக்களித்துப்......
பொங்குகற்புநூலுரைத்தவைபுகரறவிளக்கும்......

(இ-ள்) விசும்பில்-ஆகாயத்திலுள்ள—கங்கை-கங்கையானவள்—வெள்-வெள்ளிய—திங்கண்மணி- சந்திரகாந்தங்கள்பதித்த—நிலத்து-(மேல்வீட்)டிடத்தே—உவா-பர்வத்திலுண்டாகிற—மதி-சந்திரனுடைய—செழு-செழிய—கதிர்கள்-கிரணங்கள்—தங்க- தங்க—வீழ்- (அதிலிருந்து) வீழ்கின்ற—புனல்-நீரினது—பெருக்கொடு-வெள்ளத்தோடு—தலைப்பெய்து-கலந்து—ஆழ்-ஆழ்ந்த—கடற்றலைமகன்-கடலாகிய(தன்)கணவனானவன்—களிப்பற - அப்போது களிக்க—களித்து-(தானுங்)களித்து—பொங்கு- விளங்குகின்ற—கற்புநூல்-கற்பிலக்கணநூலிலுரைத்தவை-சொல்லப்பட்ட விதிகளை—புகரற-குற்றமற—விளக்கும்-விளக்குவாள்—(எ-று) [இது நற்பொருட்காட்சியணி](கருத்து) ஆகாயகங்கையானவள்சந்திரகாந்தக்கற்கள்பதித்த மேல்வீட்டில் சந்திரகிரணங்களால்வீழ்கின்ற வெள்ளத்தோடுகலந்து கடலாகியகணவன்களிக்கத்தானுங்களித்துத் துணையாகச்சென்றுகற்பிலக்கணவிதிகளைவிளக்குவாள்.எ-ம்.(யரு)

தடங்கொடாமரைத்தளிரியலுறையுமிந்நகர.........
மிடங்கொள்பூதலநகரெலாம்வென்றனமினிவா......
னடங்கவெல்லுதுமென்னவோர்வஞ்சினமறையாப்..
படங்களுற்றியபோன்றனபசியபொற்கொடிகள் ...

(இ-ள்) பசிய-பசுமையுள்ள—பொன்-பொன்மயமாகிய—கொடிகள்-கொடிகளானவை—தடம்-விசாலத்தை—கொள்- கொண்ட—தாமரை- தாமரைப்பூவிலிருக்கின்ற—தளிரியல் - தளிர்போலு மெல்லியவடிவுடையசிதேவியானவள்—உறையும்- வாசஞ்செய்கின்ற—இந்நகரம்- இந்தமாவிந்தநகரமானது—இடம் - இடத்தை—கொள்-கொண்ட—பூதலம்-பூமியிலுள்ள—நகரெலாம் எல்லாநகரங்களையும்—வென்றனம்-வென்றோம்—இனி - இனிமேல்—வான்-தெய்வலோகத்தை—அடங்க- (எமக்குக்)கீழ்ப்பட—வெல்லுதும்-வெல்லுவோம்—என்ன-என்று—ஓர்வஞ்சினம்-ஒருசபதத்தை—அறையா-சொல்லி—நாற்றிய-(எழுதித்)தொங்கவிடப்பட்டனவாகிய—படங்கள்-படங்களை—போன்றன - ஒத்திருக்கின்றன—(எ-று.) (கருத்து) கொடிகளானவை மாவிந்தநகரம் எல்லாநகரங்களையும் வென்றோம் இனித்தேவநகரத்தைவெல்லுவோமென்று படங்களெழுதிக்கட்டியதுபோலுமிருக்கின்றனவென்பதாம். [பொருட்டற்குறிப்பணி.] (யசா)

அகனிலாமணிவட்டநீளரிமதர்மழைக்கண்............
மகளிர்வாண்முகமதிகண்டுநீழ்ம்புனன்மல்கப்........

புகரிறென்மலைநறுங்குறடுரிஞ்சுபூந்தேய்வை......
பகருமின்னுயிர்ப்பால்வினையூட்டினர்பகர்வார்......

(இ-ள்.) நீள்-நீண்ட — அரி-இரேகைகளையும் — மதர்-செருக்கையும் — மழை-குளிர்ச்சியையும்பொருந்திய — கண்-கண்களையுடைய — மகளிர்-மாதரானவர் — வட்டம்-வட்டமாகிய — அகல்-பாத்திர — நிலாமணி சந்திரகாந்தக்கல்லானது — வாள்-காந்தி பொருந்திய — முகமதி-(அவர்) முகமாகிய சந்திரனை — கண்டு-காணலால் — தீ-மதுரமாகிய — புனல்-நீரானது — மல்க-(அதிலே) நிறைய — புகரில்-குற்றமில்லாத — தென்மலை-பொதியமலையிலுண்டாகிய — நறு-மணம்பொருந்திய — குறடு-கட்டைகளை — உரிஞ்சு-(அதிலிட்டுத்)தேய்த்துண்டாக்கப்பட்ட — பூ-அழகிய — தேய்வை-சந்தனத்தை — பகரும்-புகழப்படுகின்ற — இன்-இனிய — உயிர்ப்பால்-சுவாசத்தினாலே - வினை-வாசனையை — ஊட்டினர்-ஏற்றினவராகிபகர்வார்-விற்பார் — (எ-று.)(கருத்து) உத்தமசாதிப்பெண்களானவர்கள் சந்திரகாந்தக்கல்லில் சந்தனத்தை உரைத்துச் சுவாசத்தினால் வாசமூட்டிவிற்பார்கள் என்பதாம்.

* கலிவிருத்தம்.

தீங்கரியகூலமணிநீண்மறுகுதோறு......
மாங்குயிலின்மென்குதலைமாலைபகர்மாதர்.........
தேங்கமழுயிர்ப்பின்வினைசேர்த்தினர்கள்விற்குங் ...
கோங்குமலர்சண்பகமென்கோதையினுங்கொள்வார்

(இ-ள்) தீங்கரிய-ஒதுங்குதற்கிடமில்லாத — மணி-நவமணிகளையுடைய — நீள்-நீட்சிபொருந்திய — கூலமறுகுதோறும்-கடைத்தெருவெல்லாம் — மா-மாமரத்திலுள்ள — குயிலின்-குயிலினுடையதும் - மென்-மென்மைய — குதலை-மழலைச்சொற்களையுடைய — மாலை-மாலைகளை — பகர்-விற்கின்ற — மாதர்-மங்கையரானவர் — தேம்-பரிமளமானது — கமழ்-மணக்கின்ற — உயிர்ப்பின் - சுவாசத்தால் — வினை-வாசனையை — சேர்த்தினர்கள்-சேர்த்தவராய் — விற்கும்-விற்கப்படுகின்ற — கோங்குமலர்-கோங்குமலர்களாலாகிய — (கோதை) மாலையை — மெல் - மெல்லிய — சண்பகம் - சண்பகமலர்களாலாகிய — கோதையினும்-மாலையினுஞ்சிறந்ததாக — கொள்வார்-வாங்குவார் — (எ-று)(கருத்து) உத்தமசாதிப்பெண்கள் சுவாசத்தினால் வாசனையூட்டிவிற்கின்ற கோங்குமலர்மாலைகளைச்சண்பகமலர்மாலைகளைப்பார்க்கிலுஞ்சிறந்ததாகக்கொள்வார்கள் என்பதாம். (௰அ)

ஆடவரோடுபொருமஞ்சொன்மடநல்லார்.........
நீடரியதானின்முகங்கோட்டியெதிர்நிற்ப......

* யாப்பருங்கலம்- அளவடிநான்கின கலிவிருத்தமாம்.

வாடுமிடையாளொனமருண்டிறைவர்பாவைத்........
தாடொழுதுமெய்த்துனிதகைப்பநகைசெய்வார்...

(இ-ள்) ஆடவரோடு-தங்கணவரோடு--ஊடி-பிணங்கி—எழும்-புறப்பட்ட—அஞ்சொல்-அழகியசொல்லுகளையுடைய—மடம்-பேதைமைபொருந்திய—நல்லார்-மாதரானவர்—நீடு-நீட்சிபொருந்திய—ஒளிய-காந்தியையுடைய—தூண்-(ரத்நத்)தூணுக்கு—எதிர்-எதிராக—முகம்-முகத்தை—கோட்டி-வளைத்துக்கொண்டு—இல்-அறைவீட்டுள்—நிற்ப-நிற்க — இறைவர்-தங்கணவரானவர்—பாவை-(அத்தூணிலேதோன்றுகிற)பாவையைநோக்கி---வாடும்-வாடுகின்ற—இடையாளென-இடையையுடைய—அம்மாதென்று-மருண்டு—மயங்கி-தாள்—(அப்பாவை)யின்பாதங்களை-தொழவும்-வணங்கவும்-மெய்-மெய்யாகிய-துனி-அப்பிணக்கானது-தகைப்ப—தடுக்கவும் நகைசெய்வார்(அவர்)சிரிப்பார்—(எ-று)[இதுபாவைகளைமாதரென்றுமயங்குதலால்மயக்கவணி] (கருத்து) மாதர்கள்கணவரோடுபிணங்கித் தூணுக்கெதிராகமுகந்திருப்பஅக்கணவர்கள்தூணிலேதோன்றும்பாவையைநோக்கிமாதர்களென்றுபாதத்தைவணங்கவும்பிணக்குநீங்கவும்அம்மாதர்கள்சிரிப்பார்கள்.எ-ம்.

வண்ணமுலைமாதர்பகர்வறியசெழுஞ்சாந்தங்........
கண்ணொளிகள்பாயநரந்தங்கலந்ததென்றும்.......
வெண்ணகைபரத்தல்கருப்பூரம்விரவிற்றென்......
றெண்ணியுநறுங்கலவையென்றிளைஞர்கொள்வார்...

(இ-ள்)வண்ணம்-அழகிய—முலை-முலைகளையுடைய—மாதர்-மங்கையரால்—பகர்-விற்கப்படுகின்ற—வறிய-கலப்பில்லாத—செழு-செழிய—சாந்தம்-சந்தனத்தில்—கண்ணொளிகள்-(அவர்)கண்களினொளிகள்—பாயல்-பாய்தலினாலே—நரந்தம்-கஸ்தூரியானது—கலந்ததென்றும்-கூட்டப்பட்டதென்றும்—வெள் - வெள்ளிய—நகை பல்லொளிகள்—பரத்தல்-பாய்தலினாலே—கருப்பூரம்-பச்சைக்கர்ப்பூரமானது—விரவிற்றென்றும்- கூட்டப்பட்டதென்றும்—எண்ணி-நினைத்து—நறு-நல்ல—கலவையென்று - கூட்டுசாந்தமென்று—இளைஞர்-ஆடவர்—கொள்வார்-(அதனைவிலைக்கு)வாங்குவார்—(எ-று.) [இதுகண்ணொளியைக்கஸ்தூரிஎன்றும்பல்லொளியைக்கருப்பூரம்என்றும்மயங்கலால்மயக்கவணி](கருத்து) உத்தமசாதிப்பெண்கள் விற்கப்படுஞ் சந்தனத்தை அவர்கள் கண்ணொளிகள்பாய்தலாற் கஸ்தூரிகலந்ததென்றும் பல்லொளிகள்பாய்தலாற் கருப்பூரங்கலந்ததென்றும் வாலிபர்கள் வாங்குவார்கள் என்பதாம்.

பளிக்கறைபுகுந்தனர்கள்பாயொளியின்வாயில்......
வெளிப்படுதலின்றிமருண்மேவிநிழலுறித்............

துளக்கறுமிடத்துவிளை தோய்ந்துவருதென்ற .....*
றிளைத்தலவுவெள்ளிடையின்வாயிறெளிகிற்பார்......*

(இ-ள்) பளிங்கு-பளிங்காகிய—அறை-அறையினுள்ளே—புகுந்தவர்கள்-நுழைந்தவர்கள்—பாய்-பரந்த—ஒளியின் ஒளியினாலே—வாயில்-வாயிலானது—வெளிப்படுதலின்றி-அறியப்படுதலிலாமையால்—மருள்-மயக்கத்தை—மேவி அடைந்து—துளக்கறுமிடத்து-அசைவற்றபொதியமலையிலிருந்து—விளை- (சந்தன) வாசனையில்-தோய்ந்து—படிந்து-வரு—வருகின்ற- தென்றல்—தென்றலானது-நிழல்—குளிர்ச்சியோடு-நாறி—தோன்றி-இளைத்து—அசைந்து-உலவு—சஞ்சரிக்கின்ற-வெள்ளிடையின்—வெளியினாலே-வாயில்--வந்தவாயிலை-தெளிகிற்பார்--அறிந்துகொள்வார்—(எ-று) [இதுசிறப்பணி] (கருத்து) பளிங்கறைபுட்புகுந்தவர்கள் ஒளியால்வாயிலறியாதுமயங்கித்தென்றலால்வாயிலறிந்தார்கள்-என்பதாம்

வில்லுமிழுமாமணிகுயிற்றிமிளிர்மாடத்... ... ......*
தொல்கியதுகிற்கொடிகளும்பருலகெய்தப்... ......*
பல்லவமுயிர்த்துவளர்பந்தருவின்மேவும்...... ......*
வல்லிபடர்கின்றகொழுகொம்பெனவயங்கும் ........*

(இ-ள்) வில்-காந்தியை—உமிழும்-வீசுகிற--மா-பெருமைபொருந்திய—மணி - மணிகளானவை—குயிற்றி - பதிக்கப்பட்டு—மிளிர்-விளங்காநின்ற—மாடத்து- மாளிகைகளின்மேல்—ஒல்கிய-அசைகின்ற—துகிற்கொடிகள்-சீலைக்கொடிகளானவை--உம்பர்-தேவரது—உலகு-உலகத்தை—எய்தி-அடைந்து--பை-பசிய—தருவில்-கற்பகதருவின்மேல்—மேவும்- அடைதற்குரிய-பல்லவம்—தளிர்களை—உயிர்த்து-ஈன்று-வளர்-வளர்கின்ற—வல்லி(கொடிகளானவை)படர்கின்றபடர்தற்குகாரணமாயிருக்கின்ற-கொழுகொம்பெண-கொழுகொம்புகள்போல-வயங்கும்---விளங்கும்(எ-று)[இதுகுறிப்பணி] (கருத்து) மணிமாடத்திற்கட்டிய கொடிகளானவை கற்பகதருவின்கீழ் வளர்கொடி படர்கொழுகொம்பெனவிருக்குமென்பதாம். (௨௨)

திங்களுநல்லார்முகமுஞ்செவ்விதெரிக்கொண்ணு......*
வங்கலுழுமேனியொடுமின்பிரிக்கலாகா... ... ......*
மங்குறவழ்வெண்கொடியும்வாணுதியுமணியால்... ...*
வெங்கதிர்செய்மாடமிசைவேறறியலாகா... ... ......*

(இ-ள்) மணியால்-மாணிக்கங்களால்—வெங்கதிர்- சூரியகிரணத்தை—செய்-செய்கின்ற-மாடமிசை—மாளிகையின்மேலே - திங்களும் சந்திரனும்—நல்லார்-மாதரது —முகமும் -முகமும்—செவ்வி- அழகினுலே—தெரிக்கொண்ணு-வேறுபடுத்தப்படாவாம்-அம் அழகினுலே—கலுழும்-விளங்காநின்ற—மேனி (அவர்) சரீரமும்-

மின்—மின்னற்கொடியும்-பிரிக்கலாகா—பிரிக்கப்படாவாம்-மங்குல்—மேகங்களானவை-தவழ்—மேலேதவழ்கின்ற-வெண்கொடியும்—வெள்ளைக்கொடியும்-வானதியும்—ஆகாயகங்கையும்-வேறு—வேறாக-அறியலாகா—அறியப்படாவாம்(எ-று)[இதுபொதுமையணி](கருத்து)சந்திரனும்பெண்கள்முகமும் மின்னலும்பெண்களுடையமேனியும் வெண்கொடியும்ஆகாயகங்கையும் வடிவினால் வேறுபடுத்தப்படாவாம் என்பதாம். (௨௫)

சந்தநறுமென்புகைதவழ்ந்தநிலமெங்கும்... ... ...*
பந்துபயில்கோதையர்பசும்பொனணியாவு..........*
ஐந்தருவியன்சினையணிந்தனரதன்மேல்...... ......*
வந்துநனியேற்பவர்மகிழ்ந்திடவழங்கும்... ........*

இ-ள்)சந்தம்-சந்தனக்கட்டைகளது—நறு-மணமுள்ள—மெல்-மெல்லிய—புகை-புகையானது-தவழ்ந்த—படிந்த- நிலமெங்கும்—மேல்வீடெங்கும்-பந்து—பந்தாட்டத்தில்-பயில்—பழகுகின்ற-கோதையர்—மாதரானவர்-பசும்பொன்—பசியபொன்னாலாகிய-அணி—ஆபரணங்களையும்-யாவும்—மற்றெல்லாவற்றையும்-ஐந்தரு—பஞ்சதருவினுடைய-வியன்—பெரிய-சினை-கிளைகளில்—அணிந்தனர்-வைத்தார்—அதன்மேல்-அதனாலன்றே—வந்து(தம்மிடத்து)வந்து-ஏற்பவர்—இரப்பவர்கள்-மகிழ்ந்திட—மகிழும்படி-நனி—மிகுதியாக-வழங்கும்—விரும்பப்பட்டவற்றைக்கொடுக்கும்—(எ-று)[இதுகற்பகத்திற்குளதுகுறித்தலமையாஏதுத்தற்குறிப்பணி](கருத்து)மேல்வீட்டிற்பந்துவிளையாடுகின்ற பெண்கள் ஆபரணமுதலியவற்றைக்கழற்றிப்பஞ்சதருக்களில் அணிந்தனர். அதனாலல்லவோ அத்தருக்கள் இரந்தவர்களுக்கு ஈகின்றன என்பதாம்.

(இதுவும் கலிவிருத்தம்.)

வாய்ந்தமின்னைமடந்தயராக்கிவிண்... ... ... ... ...*
போந்திடாமலன்றேமலர்ப்புங்கவன்... ... .........*
சாந்தணிந்ததமனியக்குன்றென.............. ..........*
வேந்துவெம்முலைப்பாரமியற்றினான்...................*

(இ-ள்) மலர்-தாமரைப்பூவிலிருக்கின்ற—புங்கவன்- நான்முகக்கடவுளானவன்—விண்-மேகத்தின்கண்—வாய்ந்த-பொருந்திய—மின்னை-மின்னற்கொடிகளை—மடந்தயராக்கி - மங்கையராக்கி—போந்திடாமலன்றே-(அம்மேகத்தினிடத்தே) போகாதிருத்தற்கன்றே-சாந்து—சந்தனத்தை-அணிந்த—பூசிய-ஏந்து—சுமக்கப்படுகின்ற-வெம்—விருப்பஞ்செய்கின்ற-பாரம்—பாரமாகிய-முலை—முலைகளை-தமனியக்குன்றென—பொன்மலையைப்போல-இயற்றினான்—(அவருக்கு)உண்டாக்கினான்—(எ-று) [இதுபயன்றற்குறிப்பணி(கருத்து)பிரமதேவனானவன் மின்னல்களைப்பெண்களா

கி அம்பின்னல்களாகியபெண்கள் மேகத்திற்செல்லாமலிருக்கப் பொன்மலைகளைப்போல நன்முலைகளைப்படைத்தான் என்பதாம்.

வெங்கதிர்ச்சுடர்மேவியதேர்ப்பரித்....................
தங்குவன்குளம்பிற்றகர்ந்திட்டன.......... ........
தெங்கினொண்பழத்தெள்ளமுதத்திறற்..............
பங்கமெய்துமறுகின்பரப்பெலாம்... .......... ...

(இ-ள்) வெம்-வெவ்விய—கதிர்-கிரணங்களையுடைய—சுடர்-சூரியனானவன்—மேவிய-தங்கிய—தேர்-தேரிற்பூட்டிய--பரி-குதிரைகளுடைய— வல-வலிமை—தங்கு-தங்கிய—குளம்பின் - குளம்புகளாலே—தகர்ந்திட்டன-உடைந்தனவாகிய—தெங்கின்-தென்னைமரங்களுடைய—ஒள்-ஒள்ளிய—பழம்-கனிகளினது—தெள்- தெளிவுபொருந்திய—அமுதத்திறல்-நீரினாலே—மறுகின் - வீதிகளினுடைய—பரப்பெலாம்-விரிவுகளெல்லாம்—பங்கம் - சேறுதலை—எய்தும்-அடையும்—(எ-று.)[தெங்கிற்குச் சூரியமண்டலத்திற்சும் தொடர்புகற்பித்ததால் தொடர்புநவிற்சியணி] (கருத்து) சூரியனது தேரிற்பூட்டிய குதிரைகளுடையவன் காற்குளம்பால் உடைபட்ட தேங்காய்களின் நீரினால்வீதிகள் சேறடையுமென்பதாம். (உ௬)

நிலவுவெண்கதிர்நீண்மணிமாடமேற்.......................
உலவுபாதிமதியைமென்கொம்பனார்.....................
சிலைகொள்வாணுதல்சேர்த்தியவாடவ....................
ருலகமேத்துமுவாமதியென்பரால்.....................

(இ-ள்) நிலவு-நிலவைச்செய்கின்ற—வெண்கதிர்- சந்திரனுடைய—மணி-மணிகளாலாகிய—நீள்-நீண்ட—மாடமேல்-வீட்டின்மேலே-உலவு-விளங்குகின்ற—பாதிமதியை-பாதிச்சந்திரனை—மென்-மெல்லிய—கொம்பனார்-பூங்கொம்புபோல்வார்—சிலை-வில்வடிவத்தை—கொள்-கொண்ட—வாள்-ஒளிபொருந்திய—நுதல்-(தமது) நெற்றியோடு—சேர்த்திய-கூட்ட—ஆடவர்-(அதுகண்ட)நாயகரானவர்--உலகம்-உயர்ந்தோரால்—ஏத்தும்-துதிக்கப்படுகின்ற- உவா மதி-பூரணசந்திரன்—என்பர் - என்றுசொல்லுவார்—(எ-று) [இதுபொருமையணி] (கருத்து)வீட்டின்மேலிடத் துலாவிய பெண்கள்பாதிச்சந்திரனைப்பிடித்துத்தங்களுடைய நெற்றியோடுசேர்க்க அதுகண்டகணவர்கள் பூரணசந்திரனென்றுசொல்லுவார்களென்பதாம். (உ௭)

புலவிநீக்கிப்புணர்முலைமாதர்தந்.......................
திலவுபூந்துகிலாடவர்நீக்கலு..........................
நலம்விளைத்தனர்நாணிவெண்டிங்களின் ..............
கலையைமெல்லக்கலையெனச்சேர்த்துவார்... .....

(இ-ள்) ஆடவர்-கணவரானவர்--புலவி-பிணக்கை--நீக்கி-தீர்த்து--

புணர்-நெருங்கிய—முலை-முலைகளையுடைய—மாதர்-மகளிரது—நிலவு-சந்திரிகைபோல்விளங்குகின்ற—பூ-அழகிய—துகில்-ஆடையை—நீக்கலும்-அவிழ்த்தவளவில்—நாணி-வெட்கப்பட்டு—நலம்-உதவியை—விளைத்தனர்-(அவர்க்கு)உண்டாக்கினவராக—வெள்-வெள்ளிய—திங்களின்-சந்திரனது—கலையை-நிலவை—மெல்-மெல்லிய—அக்கலையென-அவ்வாடையென்றுநினைத்து—சேர்த்துவார்-(அவர்அரையிலெ)சேர்ப்பார்—(எ-று.) [இது-ஆடையைநிலாவென்றுமயங்கலால்மயக்கவணி] (கருத்து)கணவரானவர்கள் தங்கள்மாதர்கள்கலையை அவிழ்த்தமாத்திரத்தில் அம்மாதர்கள் வெட்கித் தங்கள்கலையென்றுசந்திரகலையை அரையிற்சேர்ப்பார்கள் என்பதாம்.

பொருந்துறுதனம்பூஞ்சிலம்பார்ப்பறக்.........
கரந்துதம்முயிர்க்காதலர்பாற்செலவார்..............
திருந்துவாண்முகத்திங்களென்றந்நிலா..............
வருந்தவந்தபுளளார்த்தலர்தூற்றுமால்..............

(இ-ள்) அனம்-அன்னங்களானவை—பொருந்துறுது-(தம்மருகி)லுடையாநிருக்க—பூ-அழகிய—சிலம்பு-சிலம்புகளது—ஆர்ப்பு-ஓசையானது—அற-நீங்கும்படியாக—கரந்து-மறைந்து—தம்முயிர்-தம்முயிர்போலும்—காதலர்பால்-அன்பரிடத்து—செல்வார்-(மெள்ளச்)செல்லுகின்றமங்கையரது—திருந்து-திருத்தமாகிய—வாள்-ஒளிபொருந்திய—முகம்-முகத்தை—திங்களென்று-சந்திரனென்றுநினைத்து—அந்நிலா-அதனதுநிலவை—அருந்த - உண்ண—வந்த-வந்த—புள்-சகோரங்களானவை—ஆர்த்து-ஒலித்து—அலர்தூற்றும்-வெளிப்படுத்து—(எ-று.) [இதுமுகத்தைச்சந்திரனென்றுமயங்கலால்மயக்கவணி] (கருத்து) நாயகமாரிடத்துமறைந்துசெல்கின்றமாதர்கள்முகத்தைச் சந்திரனென்றெண்ணி அச்சந்திரகிரணங்களை உண்ணவந்தசகோரங்களானவைசத்தித்து அவரை வெளிப்படுத்தியலர்தூற்றும்என்பதாம்.

மலயமாதவனுண்டமணிக்குலவக்.....................
குலவுவார்கடனேர்சொலிற்குற்றமே.....................
யலகில்பல்வளஞ்சேர்த்தியவாவண.....................
முலகமுண்டருண்மால்வயிறொக்குமே.....................

(இ-ள்) மலயம்-பொதியமலையிலிருக்கின்ற-மாதவன்-அகஸ்திய முனிவனால்-உண்ட-குடிக்கப்பட்ட-மணி-மணிகளது-குலவு - கூட்டத்தையுடைய-குலவு-விளைவாகிய-வார்-நெடிய-கடல்-கடலை-அலகில்-கணக்கில்லாத-பல்வளம்-பலவளமையாகியவளங்களையும்- சேர்த்திய-(தன்னு)ளடக்கிய-ஆவணம்-கடைக்கு-நேர்-ஒப்பென்று,சொலின்-சொன்னால்-குற்றமே(அச்சொல்லுதல்)குற்றமேயாம்-உலகம்-

உலகத்தை--உண்டருள்- விழுங்கியருளிய—மால்-திருமாலினது—வயிறு-வயிற்றை—ஒக்கும்-(அது)ஒத்திருக்கும்.(ஆதலால்)-(எ-று) [இது செய்யுட்குறியணி] (கருத்து) கடலைக்கடைக்கு ஒப்பென்று சொன்னாற் குற்றமாம் அக்கடை திருமால்வயிற்றை ஒத்திருக்கும் என்பதாம். (௩௰)

நீடுமாவணநித்திலப்பந்தருட் ...................... *
கேடில்கம்பலையாலிசைகேட்கிலார் ...................... *
பாடல்வண்டொடுதானம்பகர்ந்திடக் ............... *
கோடல்செய்வர்நிறைகுறையின்றென ............... *

(இ-ள்.) நீடும்-நீண்டிருக்கின்ற—நித்திலப்பந்தருள்-முத்துப்பந்தல்களிலுள்ள—ஆவணம்-கடைகளிலே—பாடல்-பாடுதலையுடைய—வண்டொடு-வண்டுகளோடு—தானம்-கஸ்தூரியை—பகர்ந்திட-(நிறுத்து)விற்க—கேடில்-(எப்போதும்) நீங்காத—கம்பலையால்-(களகள)வொலியினாலே—இசை-(அப்பாட)லொலியை—கேட்கிலார்-கேட்கின்றிலருமாகி—நிறை-நிறுக்கப்பட்டபொருளிலே—குறை-யாதொருகுறையும்—இன்றென-இல்லையென்றுநினைத்து—கோடல்செய்வார்-விலைக்குக்கொள்ளுவார்—(எ-று.) [இது கஸ்தூரிக்கும் வண்டுக்கும் விசேடந்தோன்றுமையால் பொதுமையணி] (கருத்து) கடைகளிலேவண்டுகளுடனேகஸ்தூரியைநிறுத்துவிற்க நிறைகுறையில்லையென்றுகொள்ளுவார்கள்என்பதாம். (௩௧)

குளிர்பளிக்குநீண்மாடக்கொடிகள்வான் ........... *
வெளிமுகட்டுயர்வெண்மதிதோய்வன .........-.... *
வொளிகொள்வெங்கதிர்வெம்மையொழித்திட ...... *
நளிகொடண்சுதைநக்குவபோன்றவே............ *

(இ-ள்) குளிர்-குளிர்ச்சிபொருந்திய—பளிக்கு-பளிங்காலாகிய—நீள்-நீண்ட—மாடம்-மாளிகைகளிற்கட்டிய—கொடிகள்-கொடிகளானவை—வெளி-ஆகாயவெளியினது—முகட்டு-முகட்டின்கண்—உயர்-உயர்ந்த—வெண்மதி-சந்திரனை—தோய்வன-தடவுவன—ஒளி-சூரியனிலிருந்து—கொள்-(தம்மேற்)கொள்ளப்பட்ட—வெங்கதிர்-உஷ்ணகிரணத்தாலாகிய—வெம்மை-வெப்பத்தை—ஒழித்திட-நீக்கும்படியாக—நளி-பெருமையைய—கொள்-கொண்ட—தண்-குளிர்ச்சிபொருந்திய—சுதை-(அச்சந்திரனிடத்துள்ள)வமுதத்தை—நக்குவ-நாக்கினாலேநக்குவன—போன்றவே- ஒத்திருந்தன—(எ-று.) [இதுபொருட்குறிப்பணி] (கருத்து) சந்திரனை அளாவிய கொடிகளானவை வெங்கதிர்க்காங்கை நீங்கிடத் தின்கதியை நக்குவபோலிருந்தன வென்பதாம். (௩௨)

பத்திமாடமணிக்கொடிபானுவின்..................... *
மெய்த்தழும்பறத்தைவரால்வெங்கதிர்..................*
கைத்தலங்களிற்காளிந்தியைமடி.....................! *
வைத்திருந்துதாலாட்டுதன்மானுமே...................*

(இ-ள்) பத்தி-ஒழுங்காயுள்ள—மாடம்-மாளிகையினது—மணிக்கொடி-நீலக்கொடியானது—பானுவின்-சூரியனது—மெய்-உடம்பிலே—தழும்பற-தழும்புபொருந்த—தைவரல்-தடவுதலால்—வெங்கதிர்-அச்சூரியனுணவன்—காளிந்தியை-காளிந்தியென்பவளை—கைத்தலங்களின்-கைகளினாற்பற்றி—மடி- மடியின்மேல்—வைத்திருந்து-வைத்துக்கொண்டிருந்து—தாலாட்டு - தாலாட்டுகிற—தன்-தன்னை—மானும்-ஒக்கும்.—(எ-று) [இதுபொருட்டற்குறிப்பணி] (கருத்து) நீலக்கொடியானது சூரியனைத்தடவுதல் சூரியன்தன்மகளாகிய காளிந்தியைத் தாலாட்டுதலையொத்திருந்தது-என்பதாம். (௩௩)

யாணர்மேயவிரவியைநண்பகற்.......................... *
கானுந்தோறுங்கனன்றுகனலுமிழ்...... ............ *
கோணைவெம்மணிக்கொம்மையெயிற்புறம்.......... *
வாணனூரழல்சூழெயின்மானுமே.......... ..........*

(இ-ள்) இரவியை-சூரியனை—நண்பகல்-நடுப்பகலிலே—கானுந்தோறும்-பார்க்குந்தோறும்—கனன்று-எரிந்து—கனல்- நெருப்பை—உமிழ்-சொரிகின்ற—புறம்-புறத்தையுடைய—கோணை- அழியாத—வெம்மணி-சூரியகாந்தத்தாலாகிய—யாணர்-தச்சரால்—மேய-விரும்பிச்செய்யப்பட்ட—கொம்மை-வலயமாகிய—எயில்-மதிலானது—வாணன்-வாணாசுரனது— சூழ்-(சோணிதபுரத்தைச்) சூழ்ந்த—ஆரழல் - மிகுந்தநெருப்புமயமாகிய—எயில்- மதிலை—மானும்-ஒத்திருக்கும்.—(எ-று) [இதுஉவமையணி] (கருத்து) சூரியகாந்தக்கற்களாற்செய்த மதிலானது சூரியனைக்கண்டக்கினிகக்கலால் வாணாசூரன் கோட்டையை ஒக்கும் என்பதாம். (௩௪)

உள்ளமொன்றுதங்காதலரோதிய.................. *
கள்ளநேயக்கலவியின்வாய்மையை..................*
வள்ளவாயமுறுண்டுளார்மடக்..................... *
கிள்ளைமெல்லக்கிளத்தலுநாணுவார்............ *

(இ-ள்) உள்ளமொன்று-ஒருமனப்பட்ட—தம்- தம்முடைய—காதலர்-நாயகரால்— ஓதிய-சொல்லப்பட்ட—கள்ளம்-(தம்மிருவருக்குள்ளே)மறைக்கத்தக்க—நேயம் - அன்புபொருந்திய —கலவியி

ன்-புணர்ச்சியினுடைய—வாய்மையை-சொல்லுகளை—வெள்ளவாய்-கிள்ளைத்கிளிடத்தே தங்கிய—அமுது-பாலை—உண்டு-குடித்து—வளர்-வளர்கின்ற—மடம் - இளமைபொருந்திய—கிள்ளை - கிளிகள்—மெல்ல-மெள்ள—கிளத்தலும்- (பிறரறியச்) சொல்லுதலும்—நாணுவார்-(மங்கையர்)வெட்கப்படுவார்.—(எ-று.) (கருத்து) தங்கள்புருஷர்கள்சொல்லிய புணர்ச்சிச்சொற்களைக் கிளிகள்சொல்லக் கேட்டு மாதர்கள் நாணமடைவார்கள் என்பதாம். (௫௫)

வாணிலாமணிமாடத்தொளித்தமைக்.......... *
காணுகென்பவர்மெய்ந்நிழல்கண்ணுறீஇப்...... *
பூணுலாமுலையார்புல்லியின்மையி ........ .... *
னாணிநின்றுநகைமுகங்கோட்டுவார்............ *

(இ-ள்) பூண்- ஆபரணங்கள்—உலாம்- புரளுகின்ற—முலையார்-கொங்கையுடையமகளிரானவர்—வாள்-காந்திபொருந்திய—நிலாமணி-சந்திரகாந்தத்தாலாகிய—மாடத்து வீட்டினுள்ளே—ஒளித்து-மறைந்து—எமை - எங்களை—காணுகென்பவர் - காண்பீராக வென்றகணவரது—மெய்-உடம்பினது—நிழல்-சாயையை—கண்ணுறீஇ-கண்டு—புல்லி-(அச்சாயையைத்) தழுவி—இன்மையின்-கைக்ககப்படாமையினாலே—நாணி-வெட்கப்பட்டு—நின்று- நின்று—நகை-நகையோடுகூடிய—முகம்-முகத்தை—கோட்டுவார்-வளைப்பார்.—(எ-று.)[இதுமயக்கவணி](கருத்து) நிலாமணிமாடத்தொளித்துக்கொண்ட கணவர்களது நிழலைக் கணவனென்றுதழுவிய மாதர்கள் நாணமடைவர்கள் என்பதாம். (௫௬)

சாந்தமூழ்கிவளர்ந்ததடமுலைக்.................. *
காந்துபன்மணிமேகலைக்காழல்கு................ *
லேந்திவிண்ணிலியங்கலரிதெனாப்.................. *
போந்தமங்கையரிந்நகர்ப்பொன்னனார்...... *

(இ-ள்) இந்நகர்-இந்தநகரத்துள்ள—பொன்னனார்-ஸ்ரீதேவிபோல்வார்—சாந்தம்-சந்தனத்துள்—மூழ்கி-முழுகி—வளர்ந்த- பருத்த—தடம்-மலைபோலும்—முலை-முலைகளையுடைய—காந்து- விளங்குகின்ற—பன்மணி-பலமணிகளாகிய—மேகலை- மேகலையின்—காழ்-சரங்களையுடைய—அல்குல்- சகனத்தையும்—ஏந்தி - சுமந்துகொண்டு—விண்ணில்-வானத்திலே—இயங்கல்- உலாவுதல்—அரிதெனா-(எம்மாலே)முடிவதன்றென்றுநினைத்து—போந்த- இறங்கிவந்த—மங்கையர்-தெய்வமகளிரே.—(எ-று.) [இது பொருட்டற்குறிப்பணி] (கருத்து) தனத்தையுஞ் சகனத்தையுஞ் சுமந்துலாவ வரிதெ

ன்று பொன்னகரமாதர்களே இந்நகரமாதர்களாகவந்தார்கள் என்பதாம். (௩௭)

(கலிவிருத்தம்.)

வளமலியிந்நகர்மன்னர்மன்னவன்..................*
றளையவிழ்நறுமலர்த்தண்ணந்தாரினான்.........*
களைகணுயுலகொருமூன்றுங்காத்தரு..........*
ணளனெனப்பெயரியநாமவேலினான்.............*

(இ-ள்) உலகொருமூன்றும்-(தன்னையுச்சரிக்கின்ற)மூன்றுலகத்தாரையும்—களைகணுய்- ஆதாரமாய்—காத்து- (ஆபத்தினின்றுங்) காத்து—அருள்-(விரும்பப்பட்டவற்றைத்) தருகின்ற—நளனெனப்பெயரிய-நளனெனப்பெயர்பெற்ற—வளம் - செல்வத்தினாலே—மலி- நிறைந்த—இந்நகர்- இம்மாவிந்தநகரத்திலுள்ள—மன்னர்மன்னவன்-அரசர்க்கரசனானவன்—தளையவிழ்-கட்டவிழ்ந்த—நறு-நல்ல—மலர்-மலர்களாலாகிய—தண்-குளிர்ச்சிபொருந்திய—தாரினான்-மாலையையுடையவன்—நாமம் - அச்சஞ்செய்கின்ற—வேலினான்-வேற்படையையுடையவன்.—(எ-று.)(கருத்து) இம்மாவிந்தநகரத்தையாளும் அரசர்க்கரசன் மூன்றுலகத்தையுங் காத்தருள்செய்யும் நளன் என்னும்பெயரையுடையவன் என்பதாம். இதுமுதல(௫)பாடல்கள் நளன்சிறப்பு. (௩௮)

ஒன்னலர்மணிமுடியுரிஞ்சுதாளினான்............*
கன்னவில்தோளினன்கமலக்கண்ணினான்.......*
றன்னுயிரெனவுலகிற்றங்கிய..................*
மன்னுயிரனைத்தையும்புரக்குமாட்சியான்......*

(இ-ள்) ஒன்னலர் - பகைவரது—மணி- நவமணிகளையுடைய—முடி-மகுடங்கள்—உரிஞ்சு-தேய்தற்குக்காரணமாகிய—தாளினான்-அடிகளையுடையவன்—கல் - கல்லோடு—நவில்- பழகிய—தோளினன் - புயங்களையுடையவன்—கமலம் - தாமரைமலர்போலும்—கண்ணினான்-நேத்திரங்களையுடையவன்—தன்-தனது—உயிரென- உயிர்போலநினைத்து—உலகில் - உலகத்தினிடத்து—தங்கிய-பொருந்திய—மன் - நிலையுள்ள—உயிரனைத்தையும் - எல்லாவுயிர்களையும்—புரக்கும்-காப்பாற்றுகின்ற—மாட்சியான்- பெருமையையுடையவன்.—(எ-று.) (கருத்து) பகைவர்முடிபடுந் தாட்களையும் கல்லோடுபழகிய தோட்களையும்—தாமரைநிகர் கண்களையுமுடையவன் தன்னுயிரைப்போலு மன்னுயிரைக்காப்பவன் என்பதாம்.

பொருசிலைவேனில்வேளனையபொற்பின.......*
னருவரையாமெனவகன்றமார்பினான்............*

கணைபொருமுடைத்திரைக்கடற்றானையான்.........*
திருகுவெஞ்சினக்களிறனையசீற்றத்தான்...........*

(இ-ள்) பொரு-போர்செய்கின்ற—சிலை-(கருப்பு) வில்லையுடைய—வேனில்-வசந்தகாலத்திற்குரிய—வேளனைய-மன்மதனைப்போலும்—பொற்பினான்-அழகினையுடையவன்—அரு-அரிய—வரையாமென-மலையைப்போலும்—அகன்ற-பரந்த—மார்பினான்-மார்பினையுடையவன்—கணை-கணையோடும்—பொரு-போர்செய்கின்ற—முடை-புலானாற்றம்பொருந்திய—திரை-அலைகளையுடைய—கடல்-கடல்போலும்—தானையான்-சேனைகளையுடையவன்—திருகு-வஞ்சனையும்—வெஞ்சினம்-வெவ்வியகோபத்தையுமுடைய—களிறனைய-களிறுபோலும்—சீற்றத்தான்-கோபத்தையுடையவன்—(எ-று) (கருத்து) மன்மதனை நிகரழகையும் மலையைநிகர்மார்பையுங்கடலைநிகர் சேனைகளையும் யானையைநிகர் கோபத்தையுமுடையவன் என்பதாம். (௪௰)

வெங்கலியிருள்கெடவெண்ணிலாவுமிழ் ...........*
திங்களங்கவிகையான்றிகிரியொன்றினா...............*
லங்கண்மாநிலமுழுதளிக்குமாற்றலான். ..............*
மங்குலினெழுமடங்குதவும்வண்கையான்...............*

(இ-ள்) வெங்கலி-தீயவறுமையாகிய—இருள்-இருளானது—கெட-அழிய—திங்கள்-சந்திரன்போல—அம்-அழகிய—வெள்-வெள்ளிய—நிலா-நிலவை—உமிழ்-வீசுகின்ற—கவிகையான்-குடையையுடையவன்—திகிரியொன்றினால்-ஏகசக்கிரத்தினாலே—அங்கண்-அழகியவிடத்தையுடைய—மா-பெரிய—நிலமுழுதும்-பூமியனைத்தையும்—அளிக்கும்-அரசாளுகின்ற—ஆற்றலான்-வல்லமையையுடையவன்—மங்குலின்-மேகத்தினும்—எழுமடங்கு-எழுபங்கதிகமாக—உதவும்-கொடுக்கின்ற—வள்-வளம்பொருந்திய—கையான்-கையையுடையவன்—(எ-று) (கருத்து) உலகெல்லாமொருகுடையிலாள்பவன் மேகத்தைப்பார்க்கினுமெழுபங்கதிகமாகக்கொடுக்குங்கையையுடையவன் என்பதாம். (௪௧)

அருளினதுறையுணல்லறத்தின்வேலிசொற்...........*
றெருளுறுகல்வியந்தெய்வமாக்கடல்...................*
குலாகடற்புவிபுகழ்குணக்குன்றஞ்சுட.................*
ரொளிதவழலங்கல்வேலரசரேறனான்......................*

(இ-ள்) அருளினது-கருணையினது—உறையுள்-வீடாயுள்ளவன்—நல்லறத்தின்-நல்லதருமமாகிய(பயிரி)னது—வேலி-வேலியாயு

ள்ளவன்—சொல்-நூல்களாலே—தெருளுறு-(பலவகைப்பொருள்களையும்) அறிந்த—கல்வி-கல்விக்கு—தெய்வம்-தெய்வத்தன்மை பொருந்திய—மாக்கடல்-பெரியகடலாயுள்ளவன்—குரை-ஒலிக்கின்ற—கடல்-கடல்போல—புவி-பூமியிலுள்ளோரால்—புகழ்-புகழப்படுகின்ற—குணம்-நற்குணங்களெல்லாஞ்சேர்ந்த—குன்றம்-மலையாயுள்ளவன்—சுடர்-ஒளியையுடைய—எரி-நெருப்பானது—தவழ்-தவழ்கின்ற—அலங்கல்-மாலையைத்தரித்த—வேல்-வேலையுடைய—அரசர்-பகையரசராகிய(யானைகளுக்கு)—ஏறன்-ஆண்சிங்கம்போல்பவன்.—(எ-று)(கருத்து)கிருபைக்குவீடானவன் தருமத்திற்குவேலியானவன் கல்விக்குக்கடலானவன் குணத்திற்குக்குன்றானவன் பகைமன்னர்க்குச் சிங்கமானவன் என்பதாம். (௪௨)

நகரப்படலம்- முற்றிற்று.



# அன்னத்தைக்கண்ணுற்றபடலம்.



அஃதாவது-நளமஹாராஜன் அன்னத்தைக்கண்டதாம்.

(கலிநிலைத்துறை.)

இன்னதன்மையனாகியவேந்தெழிற்றிணிதோண் ...... *
மன்னர்மன்னவன்மாணெழில்வகைநலங்கேட்டுக் ... *
கன்னலஞ்சுவைகனிந்தசொற்றமயந்தியென்னும் ... *
பொன்னங்கொம்பனாண்மயலொடும்வைகலும்புலம்பும்.

(இ-ள்) கன்னல்-சர்க்கரைபோல—அஞ்சுவை-மதுரச்சுவையினாலே—கனிந்த-முதிர்ந்த—சொல்-சொல்லையுடைய—தமயந்தியென்னும்-தமயந்தியென்கிற—பொன்னங்கொம்பனாள்-கற்பகப்பூங்கொம்புபோல்பவள்—இன்ன-இப்படிப்பட்ட—தன்மையாகிய-குணாதிசயங்களையுடையவனாகிய—ஏந்து-(பூமிபாரத்தைத்) தாங்குகின்ற—எழில்-அழகும்—திணி-வலிமையும்பொருந்திய—தோள்-தோள்களையுடைய—மன்னர்-அரசர்களுக்கு—மன்னவன்-அரசனாகிய நளனது—மாண்-குணங்களையும்—எழில்-அழகினது—வகை-வகையையும்—நலம்-செல்வத்தையும்—கேட்டு-(அறிந்தோர்சொல்லக்)கேட்டு—மயலோடும்-மயங்குதலோடும்—வைகலும்-தினந்தோறும்—புலம்பும்-புலம்புவாள்.(எ-று.)* தொல்காப்பியம்-பல்லோர்படர்க்கை முன்னிலைதன்மை-யவ்வயின்மூன்று நிகழுங்காலத்துச்

* தொல்காப்பியம் - வினையியல்-௩௰௬.

செய்புமென்னுங்கிளவியொடுகொள்ளா- இவ்விதியால்புலம்பும்-என்றது புலம்புவாள்- என்றாயிற்று (கருத்து) தமயந்தியானவள் நளனது குணாதிசயங்களைக் கேட்டுமயலுற்றுப்புலம்புவாளென்பதாம், [இதுமுதல்-௯-பாடல்தமயந்திகாமச்செய்கைகூறல். (௧)

தாதளைந்தினவண்டுகண்டுகுழற்றையல்.......... .....*
ஏதமற்றதன்னெழிற்கிணையாமெனவெண்ணி... ...*
யாதரத்தின்வேளாணையிற்பயிலுநெஞ்சதனைத்... ...*
தூதுவிட்டனடோன்றல்பாற்றுறந்தனடுயிலை..... ...*

(இ-ள்) இனம்-கூட்டமாகிய--வண்டு-வண்டுகளானவை--தாது-மலர்ப்பொடியை--அளைந்து-பூசி--கண்படு- தூங்குதற்கிடமான--குழல்-கூந்தலையுடைய--தையல்-தமயந்தியானவள்--ஏதமற்ற- குற்றமற்ற--தன் -தனது--எழிற்கு- அழகுக்கு--இணையாமென- (இவனழகு) தகுதியாமென்று--எண்ணி- நினைத்து--ஆதரத்தின்-ஆசையினாலே--வேள்-மன்மதனது--ஆணையில்- ஆக்கினையிலே--பயிலும் -தங்காநின்ற--நெஞ்சதனை-(தன்)மனத்தை--தூது- தூதாக--தோன்றல்பால்-அரசனிடத்திலே--விட்டனள்-அனுப்பினவளாகி--துயிலை- நித்திரையை--துறந்தனள்-இழந்தனள்--(எ-று)(கருத்து)தமயந்திதன்மனதை நளனிடத்துத் தூதுவிட்டனள் அதனால் நித்திரையைவிட்டனள் என்பதாம். (௨)

மின்னிலங்குவேனளன்பெயர்கேட்டிடும்விழைவாற்..*
பொன்னின்வார்கழல் விதர்ப்பர்கோன் பேரவைபோந்
து, மன்னரியாரினும்வந்தியர்நிடதனேத்தெடுப்ப ...*
வன்னவன்புகழ்கேட்டலும்புளகமுற்றயரும் ........*

(இ-ள்)மின்-மின்னல்போல--இலங்கு-விளங்காநின்ற --வேல்-வேலையுடைய--நளன்-நளமஹாராஜனது-- பெயர்-நாமத்தை--கேட்டிடும்-கேட்கவேண்டுமென்கிற--விழைவால்-ஆசையினாலே--பொன்னின் -பொன்னாலாகிய--வார்-நீட்சிபொருந்திய--கழல்-வீரக்கழலையுடைய--விதரப்பர்கோன் - விதர்ப்பதேசத்தாருடையவரசனது--பேரவை-பெரியசபையினிடத்து--போந்து-(அவனைத்தொழுதற்குச்செல்கின்றவள்போலச்) சென்று--மன்னரியாரினும்- அரசர்பலரினும்--வந்தியர்-புகழ்வோரானவர்--நிடதன் - நிடததேசத்தரசனை--எத்தெடுப்ப-அதிகமாகப்புகழ--அன்னவன்- அப்படிப்புகழ்பெற்றவரசனது---புகழ்- கீர்த்தியைகேட்டலும்-- கேட்டவளவிலே-புளகம்-மெய்ம்மயிர்சிலிர்த்தலை--உற்று- அடைந்து--அயரும்-(தமயந்தி)வாடுவாள்—(எ-று)(கருத்து) தமயந்திதன்பிதாவின் அவையிற்சென்று வந்தியர்நளனைப்புகழக்கேட்டுவருந்துவாளென்

பதாம். * தொல்காப்பியம் வார்தல்போகலொழுகன்மூன்றுநேர்பு நெடுமையுஞ்செய்யும்பொருள். (௩)

(அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.)

அநங்கனையொழியாமண்ணிலாடவற்றெரிந்தொன்றாக். *
கனங்குழையவரான்மன்னர்க்கோரொருகுற்றங்காட்டி
யினஞ்செய்வண்டிமிருந்தண்டார்நளனலாதில்லையென்று,
மனங்களித்துரைப்பக்கேட்டுமம்மர்நோயுழக்குமாதோ *

(இ-ள்) அநங்கனை-மன்மதனை — ஒழியா- ஒழித்து — மண்ணில்- பூமியின்கண் — ஆடவன்-ஒருகாளையை — தெரிந்தொன்று- ஆராய்ந்தெடுங்களென்றுசொல்லி — கனம்- கனம்பொருந்திய — குழையவரால்- காதணியையுடையமகளிரால் — மன்னர்க்கு- மற்றையரசர்களுக்கு — ஓரொருகுற்றம்-ஒவ்வொருகுற்றத்தை — காட்டி- சொல்லித்து — இனஞ்செய்-கூட்டஞ்செய்கின்ற — வண்டு-வண்டுகளானவை — இமிரும்-ஒலிக்கப்பெறுகின்ற — தண்குளிர்ச்சிபொருந்திய-தார்மாலையையுடைய — நளனலாது- நளராஜனல்லாமல் — இல்லையென்று-(ஒருவனு)மில்லையென்று — மனம்- நெஞ்சத்தில் — களித்து-மகிழ்ந்து-உரைப்ப-(அவர்)சொல்ல-கேட்டு-(தான்) கேட்டு — மம்மர்-மயக்கமாகிய--நோய்-நோயிலே — உழக்கும்(தமயந்தி)வருந்துவாள் — (எ-று.) இலக்கணக்கொத்துஒழிபியல-௫-அ-அந்நனிருவிவரு மொழிப்பொருளை-யின்மைபிறிதுமறையினுமொன்றாகும்-இவ்விதியால் அங்கமிலான்அநங்கன்என்றாயிற்று(கருத்து நளனே,அழகுள்ளவனென்று மாதர்சொல்லக்கேட்டுத் தமயந்திவருந்துவாள். என்பதாம். (௪)

பாளைவாய்கமுகிற்றாவிப்படுபழஞ்சிதறிவாளை ... ... *
நாளதாமரையிற்றூஞ்சுந்தண்பணைநிடதநாட்டி,னீள்வ
ளங்கேட்பாள்போலச்சூதர்பானிருபன்சீர்கேட், டாளி
மொய்ம்பினனையெண்ணியணிமுலைநோக்கிச்சோரும் *

(இ-ள்) பாளை-பாளைகளானவை — வாய்-பொருந்திய — கமுகில்-பாக்குமரத்தின்மேலே — தாவி-பாய்ந்து — படு-குலைகளிலுள்ள — பழம்-கனிகளை — சிதறி-உதிர்த்து — வாளை-வாளைமீன்களானவை — நாள-நாளத்தையுடைய — தாமரையில்- தாமரைமலர்களிலே — தூஞ்சும்-தூங்கப்பெறுகின்ற — தண்-தண்ணிய — பணை - கழனிகளையுடைய — நிடதநாட்டின்-நிடததேசத்தினது — நீள்வளம் - பெரியவளத்தை — கேட்பாள்போல்- கேட்பவள்போல — சூதர்பால்- (அங்கிருந்துவந்த)புகழ்வோரிடத்து — நிருபன்-அரசனது — சீர் - கீர்த்தியை — கேட்டு-கேட்டறிந்து — ஆளி - சிங்கம்போலபலனுடைய —

மொய்ம்பு - தோள்களாகிய—இணை- இணைத்தை—எண்ணி- நினைத்து— அணி- ஆபரணங்களையுடைய—முலை- (தன்) முலைகளை—நோக்கி-பார்த்து—சோரும்-(தமயந்தியானவள்)வாடுவாள்— எ-று [இது பிறிதினவிற்சியணி](கருத்து) தமயந்திபுகழாளரிடத்து நிடதநாட்டுவளங்கேட்பவள்போல நளன்கீர்த்தியைக்கேட்டு அவனைச் சேரக்கனதனங்களைப்பார்த்து வருந்துவாள் என்பதாம். (௫)

ஓவியத்துறைகைபோயவொருவனையுருவின்மிக்க... *
காவலனொருவன்மற்றோர்கன்னிநீதீட்டுகென்னத்... *
தாவருமெழிலிற்கோட்டத்தானுமந்நளனுமாக... ...*
மேவரவினிதினோக்கிமெய்ம்மயிர்பொடிக்குமன்றே *

(இ-ள்.)ஓவியம்-சித்திரவித்தையினது—துறை-வழியிலே—கைபோய-வல்லவனாகிய,ஒருவனை-ஒருவனைப்(பார்த்து)—உருவின்-அழகினாலே—மிக்க- (யாவரினும்) மேற்பட்ட—காவலனொருவன்-ஒருஅரசகுமாரனையும்—மற்றோர்-வேறொரு—கன்னி- கன்னிகையும்—நீதீட்டுகென்ன-நீயெழுதுகவென்றுசொல்ல—தாவரும் - வருத்தஞ்சேர்தலில்லாத—எழிலில்-சித்திரசாலையிலே—கோட்ட-(அவ்விருவர்வடிவங்களையுமவ)னெழுத— தானும்- (விரும்பிய) தானும்—அந்நளனுமாக-(விரும்பப்பட்ட)அந்நளராஜனுமாக—மேவர-பொருந்த—இனிதின்-இனிதாக—நோக்கி-பார்த்து—மெய்-உடம்பிலுள்ள—மயிர்-மயிர்களானவை—பொடிக்கும்- சிலிர்க்கப்பெறுவாள்(தமயந்தியானவள்)—(எ-று.)(கருத்து) சித்திரனெழுதிக்கொடுத்த இருபடங்களையுந் தமயந்திபார்த்துப் புளகமடைந்தாள் என்பதாம். (௬)

வள்ளற்றாரகலந்தன்னில்வனமுலைதிளைக்கவெண்ணு......... *
முள்ளத்தாள்கனவிற்காணாதொழிந்தநாளுளதோகங்கு... *
னள்ளிற்கூர்துயிலிற்காணாநற்பொருள்காணுங்கொல்லோ *
மெள்ளத்தான்விதியாற்கூட்டுஞ்செயலினைவிலக்கலாமோ...*

(இ-ள்) வள்ளல்-நளமஹாராஜனது—தார்-மாலையையுடைய—அகலந்தன்னில்- மார்பினிடத்தே—வனம் - சித்திரத்தையுடைய—முலை - முலைகளானவை—திளைக்க- அழுந்தாநிற்க—எண்ணும்-(அவனை)இடைவிடாதுநினைக்கின்ற—உள்ளத்தாள்- மனத்தையுடைய தமயந்தியானவள்—கனவில்-சொப்பனத்திலே—காணாது-காணாதிருக்க—ஒழிந்தநாள்-கழிந்தநாளும்—உளதோ - உண்டோ—(இல்லை)காணா-(முன்)காணப்படாமல—நல்-நல்ல,பொருள்-ஒருபொருளை—கங்குல்-இரவினது—நள்ளில்-நடுவிலே—கூர்-செய்யப்பட்ட—துயிலில்-நித்திரையிலும்—காணுங்கொல்-(ஒருவன்)காண்டாரு -

(வெனின்)விதிடாள்-ஊழ்நிற்றல்—கூட்டிப்-(அதனைக்)கூட்டுகின்ற—செயலினை-(அந்நித்திரையின்)செய்கையை—பெற்றான்-விதா யாடலேனும்--விலக்கலாமோ-(அசம்பவமென்று)விலக்கலாமோ (ஆகாது)—(எ-று.) (கருத்து) தமயந்தி நளனைக் கனவிற் காணா தொழிந்தநாளில்லை கண்ணிற்காணாதபொருள் கனவிற்காணாது காணாதநளனைக்கனவிற்கண்டது விதிகூட்டுஞ்செயல் என்பதாம். (எ)

கட்புலனென்னுந்தூயகதவடைத்திதயமேய......... *
வுட்புலனொடுங்கநோக்கியுறுதுயிலென்னுந்தோழி... *
புட்குலஞ்சுழலும்வைவேலிறையெழிற்பொலிவுகாட்டு*
முட்பொதிபசுந்தாட்செய்யமுளரிபோன்முகத்தினாட்கே.

(இ-ள்) தூய-நீர்த்துளிகளைத்தூவிய—கட்புலனென்னும்-கண்ணிமைகளென்கிற—கதவு-கதவுகளை—அடைத்து-சார்த்திக்கொண்டு—இதயம்-நெஞ்சமாகிய (தன்வீட்டுள்)—மேய-தங்கிய—உட்புலன்-மனமானது—ஒடுங்க-அடங்க—நோக்கி-அச்சமயம்பார்த்து—உறு-அடைந்த—துயிலென்னும்-நித்திரையென்கிற—தோழி-பாங்கியானவள்—புட்குலம்-பறவையினமானது—சுழலும்-வட்டமிடப்பெறுகின்ற—வை-கூர்மைபொருந்திய—வேல்-வேலையுடைய—இறை-நளமகாராஜனாகிய—எழில்-அழகினது—பொலிவு-பெருக்கத்தை—முள்-முள்ளுகளாலே—பொதி-நிறைந்த—பசு-பசிய—தாள்-தண்டையுடைய—செய்யமுளரிபோல்-செந்தாமரைமலர்போலும்—முகத்தினாட்கு-முகத்தையுடையதமயந்திக்கு—காட்டும்-காண்பிப்பாள்.—(எ-று) [இது உருவகவணி] (கருத்து) நித்திரையென்னும் பாங்கியானவள் நளனது அழகைத்தமயந்திக்குக்காட்டுவாள் என்பதாம். (அ)

தாமரைமுகங்கள்வாட்டுந்தண்பனிக்காலந்தன்னிற் *
காமர்வெம்பகனீட்டித்தவண்ணமுங்கணவர்த்தீர்ந்தோ
ரேமுறுவேனிற்காலமிரவுநீட்டித்தவாறுந்......... *
தூமமென்கூந்தற்செவ்வாய்த்துடியிடைதுயரவன்றே.

(இ-ள்) தாமரை-தாமரைமலர்களுடைய—முகங்கள்-முகங்களை—வாட்டும்-வாடச்செய்கின்ற—தண்-தண்ணிய—பனிக்காலம்-பனிக்காலமானது—தன்னில்-தன்னிலே—காமர்-அழகிய—வெம்பகல்-வெவ்வியபகலை—நீட்டித்தவண்ணமும்-நீள்வித்தபடியும்—கணவர்-(தம்முடைய)நாயகரினின்றும—தீர்ந்தோர்-நீங்கினமாதர்—ஏம்-மையலை—உறு-அடைதற்குக்காரணமாகிய—வேனிற்காலம்-வெயிற்காலமானது—(தன்னில்)தன்னிலே—இரவு-இரவை—நீட்டித்தவாறும்-நீள்வித்தபடியும்—தூமம்-புகைபோலும்—மெ

ல்-மெல்லிய—கூந்தல்-கூந்தலையும்—செம்-செய்ய—வாய்-வாயையும்—நுடி-உடுக்கைபோலும்—இடை-இடையையும்உடையதமயந்தியானவள்—துயர-துன்பப்படுதற்கேயாகும்—அன்றோ- இது ஆச்சரியம்.—(எ-று) (கருத்து) பனிக்காலம் பகலைநீட்டித்ததும் வேனிற்காலம்இரவைநீட்டித்ததும்தமயந்திதுயரப்படத்தான் என்பதாம். (கூ)

மணியெழுவனையதோளார்மனவலியகற்றுந்துத்திப் *
பணியரவல்குற்செவ்வாய்ப்பைந்தொடிகுணநூலாக...*
அணியிளர்கீர்த்திமுத்தங்கோத்தனனரசர்சென்னி......*
தணிவறவிளங்கும்பைம்பொற்றாமரைத்தாளினானே *

(இ-ள்) அரசர்-அரசருடைய—சென்னி- தலைகளிலே—தணிவற- ஒழிவில்லாமல்—விளங்கும் - விளங்குகின்ற—பைம்பொற்றாமரை - பசியபொற்றாமரைமலர்களாகிய—தாளினான் - அடிகளையுடைய(நளமஹாராஜனானவன்)—அரவு-பாம்பினது—துத்தி- கரும்புள்ளிகளையுடைய—பணம்-படம்போலும்—அல்குல்- அல்குற்பக்கத்தையும்—செவ்வாய்-செய்யவாயையும்—பைந்தொடி-பச்சைவளையல்களையும்உடைய தமயந்தியினது—மணியெழுவனைய-மணித்தூண்போலும்—தோளார்- தோள்களையுடைய காளையரது—மனவலி- தைரியத்தை—அகற்றும் - நீக்குகின்ற—குணன்-குணமானது—நூலாக-இழையாக—அணி-(தன்னழகிலே)—இளர்-விளங்காநின்ற—கீர்த்தி-கீர்த்திகளாகிய—முத்தம் முத்துக்களை—கோத்தனன்-(அவ்விழையிலே)கோத்தான்.—(எ-று.) [இதுகுணத்தினூலையும் கீர்த்தியின்முத்தையும் ஆரோபித்ததலால் உருவகவணி] (கருத்து) நளமஹாராஜன் தமயந்திகுணமே நூலாகவும், தன்கீர்த்தியேமுத்துக்களாகவும் கோத்துக்கொண்டிருந்தான் என்பதாம் இதுமுதல்-யக-பாடல்-நளனதுகாமங்கூறல். (ய).

வனப்பினில்வென்றவேந்தைவயங்கொளுங்காலமென்றுக் *
கனைத்துவண்டிருங்கூந்தற்கருங்குயிலிலக்கந்தபாத்......*
தனிப்படையாகவேறத்தெள்ளொளித்தரளஞ்சிந்தக்...... *
குனிக்குமென்கரும்பால்மேருவில்லியைவெல்லுங்கோமான்.

(இ-ள்) தரளம்-முத்துக்களானவை—சிந்த- உதிராநிற்க—குனிக்கும்-வளைக்கப்பட்ட—மென்கரும்பால் - மெல்லியகரும்புவில்லினாலே—மேருவில்லியை-மேருவைவில்லாகக்கொண்ட கடவுளையும்—வெல்லும்-வென்ற—கோமான்-(பெருமையையுடைய)மன்மதனானவன்—வயம்-வெற்றியை—கொளும் - கொள்ளுதற்கேற்கின்ற—காலமென்று - கால(மிதுவே)யென்று—வண்டு-வண்டுகளான

வை—கனைத்து-ஒலித்து—இவரும்-ஏறப்பெறுகின்றன—கூந்தல்-கூந்தலையுடையதமயந்தியானவள்—கருதிய-(தன்னாலே) குறிக்கப்பட்ட—இலக்கம்.குறியினின்றும்—தப்பா-தப்பாத—தனி-ஒப்பற்ற—படையாக-ஆயுதமாக—வனப்பினில்-அழகினால்—வென்ற-(தன்னை வென்ற—வேந்தை-நளமஹாராஜனை—வேறற்கு-(அப்படையால்)வெல்லுதற்கு—எண்ணினன்-ஆலோசித்தான்—எ-று.) (கருத்து) மன்மதனானவன் தமயந்தியைப் படையாகக்கொண்டு நளனைவெல்லநினைத்தான் என்பதாம். (௰௧)

அணங்கினுக்கணங்குசெய்யுமணிகிளரஞ்சில்லோதி.........*
குணங்கமழ்குருதிவைவேற்கொற்றவன்செவியுறுமுன் .....*
மணங்கமழ்தென்றற்றேரோன்வாங்குபைங்கழைவிற்பூட்டுங்
குணஞ்செவிப்பட்டதன்றேன்வன்மையார்குணிக்கற்பாலார்

(இ-ள்) அணங்கினுக்கு-தெய்வமகளிருக்கு—அணங்கு-வருத்தத்தை—செய்யும்-செய்கின்ற—அணி-அலங்கரித்தலாலே—கிளர்-விளங்காநின்ற—அம்-அழகிய—சில்-பொன்வட்டத்தகட்டணிபொருந்திய—ஓதி கூந்தலையுடையதமயந்தியினது—குணம்-குணமானது—கமழ்-நாறுகின்ற—குருதி-உதிரத்தையுடைய—வை-கூர்மைபொருந்திய—வேல்-வேலைத்தாங்கிய—கொற்றவன்-நளமஹாராஜனது—செவி-காதிலே—உறுமுன்-அடைவதன்முன்னே—மணம்-மணமானது—கமழ்-மணக்கப்பெற்ற—தென்றல்-தென்றலாகிய—தேரோன்-தேரையுடையமன்மதனால்—வாங்கு-வளைக்கப்பட்ட—பைங்கழைவில்-பசியகருப்புவில்லிலே—பூட்டு-ஏறிடப்பட்ட—குணம்-குணமானது—செவி-(அம்மன்னதன்)காதிலே—பட்டது-அடைந்தது—அன்றேன்-அப்படிப்பட்டமன்மதனது—வன்மை-வல்லமையை—யார்-யாவர்—குணிக்கற்பாலார்-அளவுசெய்யவல்லவர்—(எ-று) (கருத்து) தமயந்திகுணமானது நளன் காதிலவிழுமுன் மன்மதனானவன் விற்பூட்டும்வல்லமையார்சொல்லவல்லார் என்பதாம். (௰௨)

கல்வியின்றுறைகைபோயகாவலன்றன்னையின்னே... *
வெல்குவமென்னநெஞ்சின்விழைவுறுகருப்புவில்லான்*
மல்லலம்புவனமூன்றும்வென்றதன்வாயயில்சீர்த்தி...*
யல்கலிலையென்னுமாழியிறுகுத்துநின்றான்..... ...*

(இ-ள்)கல்வியின்-கல்வியினது—துறை-வழியில்—கைபோய-வல்லவனாகிய—காவலன்றன்னை-அரசனை—இன்னே-இப்போதே—வெல்குவமென்ன-வெல்வேமென்று—நெஞ்சின்-(தன்) மனத்தில்—விழைவுறு-ஆசைகொண்ட—கருப்புவில்லான்-கருப்புவில்லையு

டைய (மன்மதனுடைய)—புவனமூன்றும் - உலகமூன்றையும்—வென்ற-(அதுவரையில்)வென்றுசம்பாதிக்கப்பட்ட—தன்-தனது—மல்லல்-வளம்பொருந்திய—வரம்பில்-அளவில்லாத—கீர்த்தி-கீர்த்தியை—அலகில்-கலங்கலில்லாத,ஐயமென்னும்-சந்தேகமென்கிற—ஆழியின்-கடலுள்—உருத்து- முழுகச்செய்து—நின்றான்-(நிலைத்து)நின்றான்—(எ-று)(கருத்து) நளனைவெல்ல விருப்புற்ற மன்மதனுடைய தன்கீர்த்தியைச் சந்தேகக்கடலிற்சொரிந்து மயங்கிநின்றான் என்பதாம். (௰௩)

தண்ணறுந்துளிக்குங்கூந்தற்றமயந்திமுலையைப்போர்வே
லண்ணறன்புயமுங்கூட்டும்விதிவலிபழகிற்றம்மா.... *
மண்ணமைமுழவுத்தோளான்மனவலிகவசமாக ...*
னொண்மலர்வாளியாலுமுரனறப்பிளந்ததன்றே......*

(இ-ள்) தண்-தண்ணிய—நறு- மலர்த்தேனை—துளிக்கும்-துளிக்கின்ற—கூந்தல்-கூந்தலுள்ள—தமயந்தி- தமயந்தியினுடைய—முலையும்-முலைகளையும்—போர்-போர்க்குரிய—வேல்-வேலேந்தாங்கிய--அண்ணல்-நளமஹாராஜனுடைய--புயமும்-தோள்களையும்--கூட்டும்-சேர்க்கும்—விதி-தெய்வத்தினது—வலி-நீளப்பானது—அழகிற்று-பயனுடைத்தாயிற்று—மண - தானடத்தல்—அமை-அமைந்த—முழவு-மத்தளம்போலும்—தோளான்-தோள்களையுடைய அவ்வரசனது—மனவலி-தைரியமாகிய—கவசம்- கவசமானது—மாரன்-மன்மதனது—ஒள்-மெல்லிய—மலர்வாளியாலும்- பூவம்பினாலும்—உரனற-உறங்கெட—பிளந்தது-கிழிந்தது—(எ-று.) (கருத்து) தமயந்திமுலைகளையும் நளனிருதோள்களையும் சேர்க்கும்விதிவசம் வலுமையுள்ளது நளனது தைரியமாகிய மனக்கவசமானது மன்மதபாணத்தாற்கிழிந்தது என்பதாம். (௰௪)

தேங்கமழ்துளவினானுநான்முகத்தேவுநாளுந்... .. *
தாங்கருங்காமவெம்மை தரிக்கிலராகியன்றே... .. *
வாங்குதண்டிரையிற்றண்ணென்மலர்வயின்வதிந்தார்மன்ன*
னீங்கருநிழலிற்றோன்றுமதனையெய்வாறுநீங்கும்.... *

(இ-ள்) தேம்-தேனானது—கமழ்-மணக்கப்பெற்ற—துளவினானும்- துளசிமாலையையுடைய கடவுளும்—நான்முகத்தேவும்-நான்குமுகங்களையுடைய கடவுளும்—நாளும்-எந்நாளும—தாங்கரு-(யாவராலுந்)தாங்குதற்கரிய—காமவெம்மை-மன்மதனாலுண்டாகிய வெப்பத்தை—தரிக்கிலராகி- பொறுக்கமாட்டாதவராகி—வாங்கு-வளைந்த—தண்டிரையில்-குளிர்ச்சிபொருந்திய பாற்கடலின்கண்ணும்—தண்ணென் - குளிர்ச்சிபொருந்திய—மலர்வயின்- தாம

னைப்பூவின்கண்ணும்--வதிந்தாரன்றே-வாசஞ்செய்கின்றாரன்றோ —மன்னன்-அரசனானவன்—நீங்காரு - நீங்காத—நிழலின் (தனது) அரவை-வடிவமாக—தோன்றும்-தோன்றுநின்ற—மதனை-மன்மதனினின்றும்—எவ்வாறு-எவ்வுபாயத்தினாலே—நீங்குய்-நீங்கமாட்டுவான்—(எ-று.)(கருத்து)பிரமனும்விட்ணுவும் காமக்கனலுக்காற்றாமல் கடலினும் மலரினும்மிருக்கிறார்கள் ஆகையால்நளன்மதனை விட்டெவ்வாறு நீங்குவான் என்பதாம். (மரு)

மானநீராரணஞ்சூழ்ந்தமன்னவனுளத்தினூடு ......*
ஆநலப்பருவமென்னுந்தோழியன்பொழுகநல்ல....*
நானமும்புழுகுங்கொட்டிநகைமணிமுத்தஞ்சூட்டு...*
நீனிறமணிக்கட்கொங்கைக்குடத்தினீந்திப்புக்காள்*

(இ-ள்) மானம்-நாணமாகிய—நீரரணம்- அகழியினாலே—சூழ்ந்த-சூழப்பட்ட---மன்னவன்-அரசனது--உளத்தினூடு-மனத்தினுள்ளே—ஆ-குற்றமற்ற--நலப்பருவமென்னும்-மங்கைப்பருவமென்கின்ற—தோழி பாங்கியினாலே---அன்பொழுக-(அவன்மேல)லன்பு பெருக—நல்கு-கொடுக்கப்பட்ட—நானமும்- கஸ்தூரியையும்--புழுகும்-புழுகையும்—கொட்டி-அப்பி—நகை- காந்திபொருந்திய—மணி-அழகிய—முத்தம்-முத்துவடத்தை—சூட்டு- சூட்டப்பெற்ற—நீனிறமணி-நீலமணிபோலும்—கண்-சூசுகத்தையுடைய—கொங்கை-முலைகளாகிய—குடத்தினால்-குடங்களினாலே— நீந்தி (அவ்வகழியைக)கடந்து—புக்காள்-சென்றாள்—(எ-று)(கருத்து) தமயந்தியானவள் நளனதுமானமென்னு மகழியைக் கொங்கைக் குடங்களாலே நீந்தி அவனுள்ளத்துட்புகுந்தாள்—(எ-று-) (மசா)

சிறையளிதுடைந்துபாடுந்தேமலர்ப்பகழிமாரி.......*
நறைவிரியலங்கன்மார்பிற் றிளைத்தலினையுந்துன்பம்.*
கறைமதிவிளங்குங்கங்குற் காலையுமிணையுமல்லாற்... *
பிறரறியாமலுள்ளத்தடக்கினன்பிறங்கற்றோளான்....*

(இ-ள்) பிறங்கல்-மலைபோலும்—தோளான்- தோள்களையுடைய-நளதானவன்—சிறை-சிறைகளையுடைய—அளி- வண்டுகளானவை—துடைந்து-துளைத்து—பாடும்- பாடப்பெறுகின்ற—தேம்- பரிமளமபொருந்திய—மலர்ப்பகழி- பூவம்புகளது—மாரி-மழையானது—நறை-தேனையுடைய-விரி-மலர்ந்த—அலங்கல்-பூமாலையணிந்த—மார்பில்-மார்பின்கண்ணே—திளைத்தலின்-படிதலினாலே--தையும்-இளைத்தலாலுண்டாகின்ற, துன்பம்-(தனது) துன்பத்தை-கறைமதி-சந்திரனுமேல—விளங்கும்- விளங்காநின்ற—கங்குற்காலையும்-இராக்காலமும்--(கறைமதி)சந்திரன்போல-(விளங்கும், விளங்

காநின்ற, அவனையும்-பாயலும், அல்லால்-அல்லாமல், பிறர்-மற்றொருவரும், அறியாமல்-அறியாதிருக்க, உள்ளத்துள்-(தன்) மனத்திலேயே, அடக்கினன்-மறைத்தான்.— (எ-று) (கருத்து) மன்மதபாணத்தாலுண்டான துன்பத்தை நளமஹாராஜன் பிறரறியாம லடக்கினான் என்பதாம். (௰௭)

தளர்வொடுமெலிந்துவையத்தனிக்குடைநிழற்றும்பைம்பொற் *
கிளரொளிப்பூணான்வீமன்பாவையைக்கேட்டல்செய்யா......... *
னளியெனவுயிரையுண்மையறத்தினைப்பறவிட்டாலு.............. *
மிளிவெனவெண்ணிமானம்பூண்டவரிரப்பர்கொல்லோ......... *

(இ-ள்) வையம் - பூமிக்கு — தனி-ஒப்பற்ற — குடை - குடையினாலே — நிழற்றும்- நிழலைத்தருகின்ற — பைம்பொன் - பசும்பொன்னாலாகிய — கிளர்-விளங்காநின்ற — ஒளி - ஒளியையுடைய — பூணுன்-ஆபரணத்தையுடையவரசன் — தளர்வொடு- (உள்ளத்) தளர்ச்சியோடு — மெலிந்தும்-(உடம்பு) வாடியும் — வீமன்- வீமராசனுடைய — பாவையை-(புதல்வியாகியதமயந்தியை) — அளியென - கருகவென்று — கேட்டல்செய்யான்-(அவனை)யாசித்திலன் — இளிவென-(ஏற்ப) — இகழ்ச்சியென்று (எண்ணி) நினைத்து, மானம்-மானமாகிய, (பூணை) பூண்டவர்-தரித்தவர், உயிரை - பிராணனையும், உண்மை-பின்னுள்ளதாகிய, அறத்தினை-தருமத்தையும், அற-பற்றற, விட்டாலும்-கைவிட்டாலும், இரப்பர்கொல்-இரப்பாரோ-(இரவார்). (எ-று) (கருத்து) மானமுள்ளவர் இரவார்போல நளமஹாராஜன் வீமராஜன்மகளைக்கேளான் என்பதாம். (௰௮)

திறங்கிளர் * வைரத்தோளானெட்டுயிர்ப்பெறியுந்தோறும் *
பிறங்குதல்சிறிதுமின்றி வேறொன்றான்மறைக்கும்பெட்பான்
மறங்கிளர்வேற்கண்மாதினுருவெளிப்படுத்தலாகி............ *
கறங்கினெஞ்சுழலவன்றுட்குளைப்பதுகரக்கமாட்டான் .. *

(இ-ள்) திறம்-காற்றியினாலே — கிளர் - விளங்காநின்ற — வைரம்-வச்சிராயுதம்போலும் — தோளான்- தோள்களையுடைய அரசனானவன் — நெட்டுயிர்ப்பு-பெருமூச்சை — எறியுந்தோறும்- விடும்போதெல்லாம் — பிறங்குதல்- (அவற்றின்காரணமாகியகாமம்) வெளிப்படுதல் — சிறிதும்-சிறிதாயினும் -- இன்றி-இல்லாமல், வேறொன்றால்-வேறொருகாரணத்தால் -- மறைக்கும்-(பிறருக்குஅதனை)மறைப்பான் -- மறம்-வீரத்தன்மையினால் — கிளர்-விளங்காநின்ற -- வேல்-வேல்

---

* நேமிநாதம்(௰௫-ம்-பாடல்)வீரசோழியம்(௰௪-ம்-பாடல்)வைரமுதிர்ச்சி-வைரம்-என்றறிக.

போலும்—கண்-கண்களையுடைய—மாதின்-தமயந்தியினது—உருவெளி-(பிராந்தியால்) வெளியிலேதோன்றுகிறவுருவத்திற்கு—வயத்தனாகி-வசப்பட்டவனாகி—கறங்கின்-காற்றாடிபோல—நெஞ்சு-மனமானது—உழல-சுழல—அன்றூட்டு- அப்பொய்யாகத்தோன்றுகிறதமயந்திக்கு—பெட்பால்-ஆசையால்—உரைப்பது-சொல்வதைமாத்திரம்—கரக்கமாட்டான்- மறைக்கமாட்டான்.—(எ-று.) (கருத்து)பிறரறியாமல்காமத்தைமறைக்கும் நளமஹாராஜன்உருவெளித்தோற்றத் தமயந்தியோடு பேசுவதை மறைக்கமாட்டான் என்பதாம். (௰௧)

பொறிவழியுள்ளம்போக்காப்புரவலன்காமநோயை *
மறைசெயமறையாதாகமம்மரினாணுட்கொள்ளா... *
அறைகழலவனிவேந்தர்நெருங்குபேரவையினீங்கி... *
நறைகமழ்சோலைசெல்வானுளத்தினயத்தல்செய்தான்.

(இ-ள்) பொறி-ஐம்பொறிகளது—வழி - வழியிலே—உள்ளம்-மனத்தை—போக்கா-செலுத்தாத—புரவலன் - அரசனானவன்—காமநோயை-காமவியாதியை—மறைசெய - (வேறுகாரணங்களால்)மறைக்க—மம்மரின்-உன்மத்தத்தினாலே—மறையாதாக-வெளிப்பட—நாண்-நாணத்தை—உட்கொள்ளா - உள்ளேகொண்டு—அறை-ஒலிக்கின்ற—கழல்-வீரக்கழலையுடைய—அவனி- பூமியிலுள்ள—வேந்தர்-அரசர்களானவர்கள்—நெருங்கு-நெருங்கப்பெற்றிருக்கின்ற—பேரவையின்-பெரியசபையினின்றும்—நீங்கி - நீங்கி—நறை-தேனனது—கமழ்-மணக்கப்பெற்ற—சோலை-(தனது)சிங்காரவனத்திற்கு—செல்வான்- போகும்படியாக—உளத்தினில்—மனத்தின்கண்—நயத்தல்செய்தான்-(அவன்)விரும்பினான்—(எ-று)(கருத்து) நளமஹாராஜன் காமத்தைமறைக்க அக்காமம் வெளிப்பட வெட்கங்கொண்டுசபையைவிட்டுநந்தவனத்துக்குப்போகவிரும்பினான் என்பதாம். (௰௨)

கொட்புறவுலவுந்தோறுந்தாத்திடைதூகளின்குப்பை ... *
நுட்பமாரனுக்கனென்னுநுவலருமனத்தின்கூட்டம்... ... *
கட்புலன்கதுவல்செல்லாக்கடுப்பினைக்கற்பான்காலைப்..... *
பெட்புறப்பிடித்தல்போலப்பிறங்குமாக்கொணர்மினென்றான்.

(இ-ள்) கொட்புற-சுழற்சிபொருந்த--உலவுந்தோறும்- சஞ்சரிக்குந்தோறும்--தாத்து-துளம்புகளினின்றும்--அடை- (கால்களை)யடைகின்ற -தூகளின் புழுதியினது--குப்பை-கூட்டமானது—கட்புலன்-கண்ணறிவிற்கு--கதுவல் செல்லா-பற்றுதல்கூடாத-- கடுப்பினை-வேகத்தை--கற்பான்-கற்கும்பொருட்டு--காலை- கால்களை--பெ

ட்புற-ஆவசமிக—பிடித்தல்-பிடித்தலையுடைய—நட்பமார்-நண்மைபொருந்திய—அனுக்களென்னும். அனுக்களென்கிற—நல்லரும்-சொல்லக்கூடாத—மனத்தின்- மனங்களது—கூட்டம்-கூட்டத்தை—போல-ஒத்துத்தோன்றுநிற்க—பிறங்கு-விளங்குகின்ற—மா-குதிரையை—கொணர்மின்-கொண்டுவாருங்கள்—என்றான்- என்றுசொன்னான்(அரசன்)—(எ-று) * மனம் அணுவென்றதற்கு விதி-இன்பமுதலிய பண்புறத்தரு உட்கருவியாம் பொறிமனமாம் துயிர்தோறின்றியமையாது வேண்டலிற்பலவா யணுவாய்நிற்குமெனமனுர்புலவர் (கருத்து) நளன் குதிரையைக்கொண்டுவாவென்றான் என்பதாம். (உக)

பன்னகஞ்சுமந்த வைப்போர்தோளிற்பரிக்குமன்னர்... *
மன்னனைப்பரிப்பல்யானேவருகதிரவிதன்னை...... *
யென்னைநீர்தாங்குமாறென்றேழ்பரியினைநக்கென்ன ...... *
மின்னொளிவிரிக்கும்வெண்பற்கூந்தன்மாமேற்கொண்டானே.

(இ-ள்) பன்னகம்-ஆதிசேஷனாலே—சுமந்த- (ஆயிரந்தலைகளாலே)சுமக்கப்படுகின்ற—வைப்பு-பூமியை—ஓர்தோளினில் - (தன)தொருதோளினாலே—பரிக்கும்- தாங்குகின்ற—மன்னர்மன்னனை -அரசர்க்கரசனை—யானே- நான்தனியாக—பரிப்பல் - சுமக்கவல்லேன்—வரு-வருகின்ற—கதிர்-கிரணங்களையுடைய—இரவிதன்னை -சூரியனை—நீர்-(பலவாகிய)நீங்கள்—தாங்குமாறு- தாங்குஞ்செய்கை—என்னை-எத்தன்மைத்து—என்று-என்றுபழித்து—ஏழ்பரியினை-(அச்சூரியனது தேரினுடைய)ஏழுகுதிரைகளைப்(பார்த்து)—நக்கென்ன-சிரித்தல்போல—வெண்பல்-வெள்ளைப்பற்களது—மின்-விளங்காநின்ற—ஒளி-ஒளியை—விரிக்கும்-பரப்புகின்ற—கூந்தல்-புறமயிரையுடைய—மா-குதிரையின்மேல்—மேற்கொண்டான்-(அரச)னேறினான்—(எ-று)(கருத்து) நளமஹாராஜன் அக்குதிரைமேலேறினான் என்பதாம். (உஉ)

கொய்யுளைப்பரியிற்செல்லுங்குரிசில்வாண்முகத்திற்செவ்விச்
செய்யபங்கயமென்றெண்ணித்தெரிவையர்முகத்துலாய... *
வையரிபரந்தமைக்கணரியினந்தொடர்ந்துவீழ........... *
மையலங்களிற்றுவேந்தர்மலரடிபரவச்சென்றான்........ *

(இ-ள்) கொய்-கொய்யப்பட்ட—உளை- கழுத்துமயிரையுடைய—பரியில்-குதிரையில்—செல்லும்-போகாநின்ற—குரிசில்- அரசனது—வாள்-காந்திபொருந்திய—முகத்தில்- முகத்திலே—செவ்வி-பருவமுள்ள—செய்யபங்கயமென்று-செந்தாமரைப்பூவென்று—

* தருக்கசங்கிரக சூத்திரம்.

எண்ணி- (அதனை) நினைத்து—தெரிவையர்-மங்கையருடைய—முகத்து-முகங்களிலே—உலாய-உலாவுகின்ற—ஐயரி- பஞ்சவரிகள்—பரந்த-பரவப்பெற்ற—மை-அஞ்சனத்தையுடைய—கண்- கண்களாகிய—அளி-வண்டுகளது—இனம்-கூட்டமானது—தொடர்ந்து-சென்று—வீழ-விழாநிற்கவும்—மையலங்களிற்று-மதயானைபோலும்—வேந்தர்-அரசர்களானவர்கள்—மலர்-தாமரைமலர்போலும்—அடி-பாதங்களை—பரவ-துதிசெய்யாநிற்கவும்—சென்றான்-(அரசன்)போயினான்—(எ-று)(கருத்து), நளமகாராஜன் அரசர்கள் வணங்கச்சோலையிற்சென்றான் என்பதாம். (உரு)

சுழிகொள்வாம்பரியிழிந்து துன்னலர்மௌலிதேய்க்கும்... *
கழல்களிற்கழல்கள்சேர்த்தகாட்சிமுன்வெருவித்தோற்ற... *
தழனிறத்தளிருஞ்செய்யதாமரைமலருமல்கி........... *
விழைவுறுவனமென்றெண்ணி விசித்தபொற்கவசம்போன்ற.

(இ-ள்) சுழி-சுழியையுடைய—கொள்-கொண்ட—வாம்-தாவாநின்ற—பரி-குதிரையிலிருந்து—இழிந்து-இறங்கி—துன்னலர்-பகைவரது—மௌலி-மகுடத்தை—தேய்க்கும் - தேய்க்கின்ற—கழல்களில்-அடிகளிலே—சேர்த்த- தொடுக்கப்பட்ட—கழல்கள் - செருப்புகளானவை—காட்சி-காண்கைக்கு—முன்-முன்னே—வெருவி-அஞ்சி—தோற்ற-தோற்றுப்போன—தழல்-தீயினது—நிறம்-நிறத்தையுடைய—தளிரும்-தளிர்களும்—செய்யதாமரைமலரும்- செந்தாமரைமலர்களும்—மல்கி-பெருக்கமடைந்து—விழைவுறு- (அவற்றுலேதமக்குக்காரணமாக)விரும்பப்பட்டவனமென்று—பொழிலென்று-நீ-என்று—எண்ணி- ஆலோசித்து—விசித்த- (அவ்வடிகளாற்) போர்த்துக்கொள்ளப்பட்ட—பொன்- பொன்மயமாகிய—கவசம்-கவசங்களை—போன்ற-ஒத்திருந்தன—(எ-று)(கருத்து) கால்களிலணிந்த செருப்புக்கள் கவசங்களை ஒத்திருந்தன என்பதாம்.(உச)

வயிரியர்பாடற்றீந்தேன்செவிப்புலத்தினிதுமாந்திக் *
கயிரவமனையவாயார்கவரிகாலசைப்பக்காமப்...... *
பயிரெனப்படருமாதர்வெள்ளைடைப்பாகுநல்கச்......*
செயிருறுவனங்காப்பாளர்செறிவளங்காட்டக்கண்டான்.

(இ-ள்) வயிரியர்-பாடகரது—பாடல்- பாடலாகிய—தீந்தேன்-மதுரத்தேனை—செவிப்புலத்து - செவியறிவாகிய(வாயினாலே)—இனிது-இனிதாக—மாந்தி-குடித்து—கயிரவமனைய- செவ்வல்லிமலர்போலும்—வாயார்-வாயையுடையமாதர்கள்—கவரி- சாமரத்தினாலே, கால்-வாயுவை—அசைப்ப- எழுப்பவும்—காமப்பயிரென-மன்மதனதுபயிர்போல—படரும்-உடன்செல்கின்ற, மாதர்-மாத

ரானவர்—வெள்ளடை-வெற்றிலைச்சுருளையும்—பாகும்- பாக்குப்பிளவையும்—நல்க-கொடுக்கவும்—செயிரறு-குற்றமற்ற—வனம்- வனத்தை—காப்பாளர்-காப்பவர்—செறி-நெருங்கிய—வளம்- சோலைவளத்தை—காட்ட-காண்பிக்கக்கண்டான் (அரசன்) பார்த்தான்—(எ-று)(கருத்து) காவலாளர் வனவளப்பத்தைக்காட்ட நளன் கண்டான் என்பதாம். (உரு)

கோங்கிளமுலைகடாங்கிக்கொடியிடைநுடங்கக்கூவு *
மாங்குயிற்கிளவிதன்னால்வருகெனமுகமன்கூறித் *
தேங்கமழ்வனமான்புன்னைப் பூம்பொரிசிதறிச்செவ்வி
தாங்குமென்றளிர்க்கைதன்னாற் கனிதரத்தகவிற்கண்டான்.

(இ-ள்) தேம்-பரிமளமானது—கமழ்-(தன்கண்)மணக்கின்ற—வனமான்-அவ்வனமாகியமங்கையானவள்—கோங்கு- கோங்கரும்புகளாகிய—இளமுலைகள்-இளமைபொருந்தியமுலைகளை—தாங்கி-சுமந்து—கொடி-பூங்கொடியாகிய—இடை-இடையானது—நுடங்க-அசைய—கூவும்-கூவுகின்ற-மா- மாமரத்திலிருக்கின்ற—குயில்-கோகிலத்தினது—கிளவிதன்னால் - இசையினாலே—வருகென-(அரசனே) வாவென்று—முகமன்-இன்சொல்லை—கூறி- சொல்லி—புன்னை-புன்னையினுடைய—பூ-மலர்களாகிய—பொரி- பொரிகளை—சிதறி-இறைத்து—செவ்வி-அழகை—தாங்கு-தாங்கிய—மென்றளிர்-மெல்லியதளிராகிய—கைதன்னால்-கையினாலே—கனி - பழத்தை—தர-(தனக்குக்)கொடுக்க—தகவின்-தகுதியாக—கண்டான்-(அரசன்)பார்த்தான்—(எ-று) (கருத்து) வனமென்னும்பெண் கனிகொடுக்க நளன்கண்டான் என்பதாம். (உசா)

அரும்பிளநகையிற்றோன்றவழிநறுவெயர்விற்றோன்றச்
சுரும்பியிர்முல்லைவீசுந்தென்றலாற்றுவளுந்தோற்றத் *
விரும்பினர்ப்புணர்ந்தமாதர்மெய்யெழில்காட்டக்கண்
டு, பொருந்தலர்வணங்கும்வேலாற்கச்சமுழகிழம்பூத்த

(இ-ள்) அரும்பு - அரும்புகளி (ஞெளி)—இளநகையின்-சிறுநகைபோல—தோன்ற-விளங்கவும்—அழிநறு-சிதறியதேன்(துளிகள்)—வெயர்வின்-வெயர்வுபோல—தோன்ற-தோன்றவும்—வீசும்-எறிகின்ற—தென்றலால்-தென்காற்றால்—துவளும்- அசைகின்ற—தோற்றம்-தோற்றத்தையுடைய—சுரும்பு-வண்டுகள்—இமிர்- ஒலிக்கப்பெற்ற—முல்லை-முல்லைக்கொடியானது—விரும்பினர்- விரும்பிய ஆடவரை—புணர்ந்த-கூடிய—மாதர்- மாதருடைய—மெய்-வடிவங்களது—எழில் - அழகை—காட்ட - காண்பிக்க—கண்டு-(அதனைப்) பார்த்து—பொருந்தலர்-பகைவரானவர்—வணங்கும்-

தொழப்பெறுகின்ற—வேலாற்கு-வேலையுடைய அரசன்கண்—அச்சமும்-அஞ்சுதலும்—மகிழும்-மகிழ்தலும்—பூத்த-உண்டாயின-(எ-று.) (கருத்து) முல்லைக்கொடியானது புணர்ந்தமாதரைப்போலுங்குறிகள்காட்ட நளனுக்கு அச்சமுமகிழும் உண்டாயின. (௨௭)

விரும்பியகணவர்கண்டார்மெய்புளகுற்றவென்ன ...*
வரும்புகண்டகத்தவாகுமாதளைபருவத்தன்றித்... ...*
தரும்புகையிடையிற்றோன்றுங்கனிதமயந்திகொங்கைக்
குரும்பையைநிகர்ப்பப்பொன்னங்குடந்தவமுயல்வபோன்ற

(இ-ள்) விரும்பிய(தம்மால்)விரும்பப்பட்ட—கணவர்-நாயகரை—கண்டார் கண்டமகளிருடைய—புளகுற்ற - மயிர்க்கூச்செறிந்த—மெய்யென்ன-உடம்புகள்போல—அரும்பு- அரும்பிய—கண்டகத்தவாகு-முள்ளுகளையுடையனவாகிய—மாதளை.மாதளைமரங்களில்— பருவத்தன்றி-பழுத்தற்குரிய காலமல்லாதகாலத்திலே—தரும்-(பழுக்கத்)தரப்படுகின்ற—புகை-புகையினது— இடை- நடுவிலே—தோன்றும்-தோன்றுநின்ற—கனி- கனிகளானவை—தமயந்தி-தமயந்தியினுடைய—கொங்கை-முலைகளாகிய—குரும்பையை-குரும்பைகளை—நிகர்ப்ப-ஒப்பவடைய—தவம் தவத்தை—முயல்வ-செய்கின்றனவாகிய—பொன்னங்குடம்- பொற்குடங்களை—போன்ற-ஒத்துத்தோன்றின—(அரசனுக்கு) (எ-று.) (கருத்து)மாதளங்கனிகளானவை தமயந்திமுலைகளை ஒப்புறத்தவம்பண்ணும்பொற்குடங்களை ஒத்திருந்தன என்பதாம். (௨௮)

தண்ணறாக்கொழிக்குஞ்செய்யசண்பகநனைகள்வெயி *
லண்ணல்பாசறைவிளக்கம்போன்றனவவைமேல்வண்டு
நண்ணியதாமம்போன்றுநசையுநர்துயரவேளிட் ...*
டெண்ணரும்பகழிபோன்றுதனித்தனியிருந்தமாதோ

(இ-ள்) தண்-குளிர்ச்சிபொருந்திய—நறா-தேனை—கொழிக்கும்-சொரிகின்ற —செய்ய-சிவப்பாகிய—சண்பகம்- சண்பகத்தினுடைய—நனைகள்-அரும்புகளானவை—வெயில்- வசந்தகாலத்திற்குரிய—அண்ணல்-தலைவனது—பாசறை(சோலையாகிய) படைவீட்டினுள்ளே, வைக்கப்பட்ட—விளக்கம்-தீபங்களை—போன்றன- ஒத்திருந்தன—அவைமேல்-அவ்வரும்புகளின்மேலே—வண்டு(விழுகின்ற)வண்டுகளானவை—நண்ணிய-பொருந்திய—தாமம்-புகையை—போன்றும்-ஒத்தும்—நசையுநர்-காமிகள்—துயர- துன்பமுற—வேள்-மன்மதனால்—இட்டு-சம்பாதிக்கப்பட்ட—எண்ணரு- எண்ணுதற்கரிய—பகழி - பாணங்களை—போன்றும் - ஒத்தும்—தனிதனி-வேறுவேறாக— இருந்த - இருந்தன— (அரசனுக்கு— (எ-று.)

(கருத்து)சண்பகத்தரும்புகளானவைதீபங்களை ஒத்திருந்தன அவ்வரும்புகள்மன்மதபாணங்களை ஒத்திருந்தன என்பதாம். (உகூ)

பூங்கழைக்குமரனேவாற்புலம்புகொண்டினைவார்துன்ப*
மாங்குயிலுரைப்பமுசும்வரியளிமுரல்வவாசத்.. ...*
தேங்கமழ்பொழிலவாய்விட்டுக்கேட்பதுசிவணுங்கூறு
மாங்கதற்கன்றிலோதையதிசயித்தாற்றலபோலும் ...*

(இ-ள்) பூ-அழகிய---கழை-கருப்புவில்லையுடைய—குமரன்-மன்மதனது—ஏவால்-அம்பினாலே— புலம்பு- துன்பத்தை—கொண்டு-அடைந்து—இனைவார்- இளைக்கின்றவரது—துன்பம்-துன்பத்தை - மா-மாவிலுள்ள—குயில்-குயில்கள் —உரைப்ப-சொல்லாநிற்க —வரிமுரல்வ- இசைபாடுவனவாகிய—முசும்- மொய்க்கின்ற—அளி-வண்டுகளுக்கு—வாசம்- இருப்பிடமாகிய—தேம்-தேனினால்—கமழ்-மணக்கின்ற—பொழில்-சோலையானது—வாய்விட்டு-உங்கொடுத்து—கேட்பதுசிவணும்- கேட்பதுபோலுமிருந்தன—கூறும்-சொல்லப்படுகின்ற—ஆங்கு-அவ்விடத்தே--அதற்கு-அச்செய்திக்கு—அன்றில்-அன்றிற்பறவைகளுடைய— ஓதை- ஒலிகளானவை—அதிசயித்து-ஆச்சரியப்பட்டு—அரற்றல்போலும்- கூவுதல்கள்போலுமிருந்தன(அரசனுக்கு)(எ-று) (கருத்து) காமிகள்துன்பத்தைக்குயில்கள்சொல்ல வண்டுகள்பாடுஞ்சோலைகேட்பதுபோலுமிருந்தன அன்றில்கள் சத்தங்கள் அதிசயித்தார்ப்பனபோலுமிருந்தன என்பதாம். (௩௰)

வெண்மதிக்கவிகைவேந்தன்விழாவயர்வனமான் பைந்தாட்,
டண்மலர்க்காந்தளங்கை மறித்தளிதகைதவபோலு ...*
மொண்மலர்பொதுளுந்தேமா தளிர்விரலசைத்துள்ளூறுங்,
கண்ணுகர்வண்டினார்ப்பாற்காமுகரிச்சினவல்போலும்*

(இ-ள்) வெண்மதி-வெள்ளியசந்திரனை—கவிகை- குடையாகவுடைய—வேந்தன்-மன்மதனது— விழா-உற்சவத்தை—அயர்-செய்தற்கிடமாகிய—வனமான்-வனமாகியமங்கையை—காந்தள்-காந்தள்களானவை—பைந்தாள்-பசியகாம்பையுடைய—தண்மலர்- தண்ணியமலர்களாகிய— அங்கை- அழகியகைகளாலே—மறித்து- அச்செய்தியைக்கேளேலென்றுதடுத்து--அளி- கருணையினாலே--தகைவபோலும்-நிறைகின்றனபோலும்—ஒண்மலர்- ஒள்ளியமலர்களாலே—பொதுளும்-நிறைந்திருக்கின்ற—தேமா-தேமாமரங்களானவை—தளிர்-தளிராகிய—விரல்-விரலை—அசைத்து- ஆட்டி—உள்ளூறும்-உள்ளொழுகுகின்ற—கள் - தேனை— நுகர்-உண்கின்ற—வண்டின்-வண்டுகளது—ஆர்ப்பால்-ஒலியினாலே—காமுகர் - காமிக

லை—சினவல்போலும்-(உங்காரஞ்செய்து)கோபிக்கின்றனபோலும் (அரசனுக்கு)(எ-று)(கருத்து) காந்தள்களானவை வனமென்னும் பெண்ணைமலரொன்றுங்கரங்களாலே அக்குயில்கள்சொற்களைக் கேளாதே என்று தடுத்துக் கிருபைநிறைந்தனபோன்று மிருந்தன—மாமரங்களானவை தளிரொளும்விரலையசைத்து வண்டுகளாற்பால்காமுகரை கோவிப்பனபோலுமிருந்தன என்பதாம். (௫௧)

பொன்னிதழ்ச்சண்பகத்திற்புரிமுறுக்கவிழ்த்தூங்கி..*
யின்னறுந்துளியினோடுமகரந்தமிறைப்பவூதித்......*
தென்னிடுங்களிகொள்வண்டுசேர்ந்தமைகாமவெந்நோய்,
துன்னினர்க்கின்னல்காட்டுந்தூமகேதுவினைப்போன்ற*

(இ-ள்) புரி-கட்டினது—முறுக்கு-முறுக்கானது—அவிழ-விரிய—தூங்கி-ஆடி—இன்-இனிதாகிய—நறு-தேனினது—துளியினோடு-துளியுடனே—மகரந்தம்-மகரந்தப்பொடியை—இறைப்ப-உதிர்க்க—ஊதி-(வாயினா)லூதி—தென்னிடும்-இசைபாடுகின்ற—களிகொள்-களிப்பைக்கொண்ட—வண்டு-வண்டுகளானவை—பொன்-பொன்னிறம்பொருந்திய—இதழ்-இதழ்களையுடைய—சண்பகத்தில்-சண்பகப்பூக்களிலே—சேர்ந்தமை-சேர்ந்தமையால்-(அம்மலர்கள்)—காமம்-காமமாகிய—வெந்நோய்-வெப்பநோயை—துன்னினர்க்கு-அடைந்தவர்க்கு—இன்னல்-(பின்வருந்)துன்பத்தை—காட்டும்-காண்பிக்கிற—தூமகேதுவினை-வால்மீனை—போன்ற-ஒத்துத்தோன்றின—(அரசனுக்கு) (எ-று.) (கருத்து-) வண்டுகள்சேர்ந்த சண்பகமலர்களானவை வால்மீனை ஒத்திருந்தன என்பதாம். (௫௨)

குளிர்நறுஞ்சாந்தநாறுங்கூவிளங்கனிமுள்ளேறுண்...*
டொளிர்வனகன்னிகைமாதர்வரிமுலைக்குவமைசான்ற...*
தளையவிழ்பாடலத்தின்கவரிணர்சம்பராரி............*
யுளைவுறவிருவர்மேலுமுளாற்றினப்பகழிபோன்ற ....*

(இ-ள்) முள்-முள்ளினாலே—ஏறுண்டு-கிழிக்கப்பட்ட—ஒளிர்வன-விளங்குகின்றவையாகிய—குளிர்-குளிர்ச்சிபொருந்திய—நறுஞ்சாந்தம்-நல்லசந்தனம்போல—நாறும்-மணக்கின்ற—கூவிளங்கனி-வில்வப்பழங்களானவை—கன்னிகைமாதர்-பரத்தையருடைய-(சாந்தம்)—சந்தனத்தினாலே(நாறும்)(மணக்கின்ற-வரி—நகக்குறிகளையுடைய-முலைக்கு—முலைகளுக்கு-உவமை-ஒப்புவமையில்—சான்ற-சிறந்தன—தளையவிழ்-கட்டவிழ்ந்த—பாடலத்தின்-பாதிரிமரங்களுடைய--கவர்- கவர்த்தரிய- இணர்- பூங்கொத்துக்களானவை—சம்பராரி-மன்மதனானவன்—உளைவுற- வருந்தும்படியா

க, இருவர்மேலும்-நாயகநாயகிகளிருவர்மேலும்,உடற்று- கோபித்தற்கு(வைத்திருக்கப்பட்ட), இனப்பகழிபோன்ற-அம்புக்கூட்டம்போன்றன(அரசனுக்கு)(எ-று)(கருத்து)வில்வப்பழங்களானவை வேசைகள்முலைகளை யொப்பாயிருந்தனபாதிரிமரங்களின்பூங்கொத்துக்களானவை மன்மதன்பாணங்களை யொப்பாயிருந்தன என்பதாம். (௬௩)

பாசிலையிடையிற்பூத்தபைந்துணரகத்திதூய........*
மாசறுநிலவுகாலுமதியினைவிழுங்குநாளிற் ......*
றேசுறுகலைகளியாவுந்தின்றுநின்றுமிழுந்துத்திக் ...*
காசறுசுடிகைச்செங்கட்கருநிறப்பாந்தள்போன்ற...*

(இ-ள்) பாசிலை-பச்சிலைகளையும்—இடையில்-நடுவிலே—பூத்த-மலர்ந்த—பைந்துணர்- குளிர்ச்சிபொருந்தியமலர்களையும்உடைய—அகத்தி-அகத்திமரங்களானவை—தூய- பரிசுத்தமாகிய—மாசறு-குற்றமற்ற—நிலவு-சந்திரிகையை—காலும் - வீசுகின்ற—மதியினை-சந்திரனை,விழுங்குநாளில்-உட்கொள்ளுகிறநாளிலே,தேசுறு-காந்திபொருந்திய—கலைகள்யாவும்- கலைகளையெல்லாந்—தின்றுநின்று-ஒவ்வொருகலையாகத்தின்று—உமிழும்-உமிழ்ந்துகொண்டிருக்கின்ற— துத்தி-படப்புள்ளிகளையும்,காசறு-இரத்தினம்பொருந்திய—சுடிகை-உச்சியையும் —செங்கண்-செய்யகண்களையும்—கருநிறம்-கரியநிறத்தையும்உடைய— பாந்தள்போன்ற பாம்பாகிய இராகுபோன்றன(அரசனுக்கு)—(எ-று)(கருத்து)அகத்திமரங்களானவை கரும்பாம்பிற்கொப்பாயிருந்தன என்பதாம். (௬௪)

(கலிவிருத்தம்.)

விண்புகுவியன்சினைத்தருக்கண்மேவிய...*
தண்கனிப்பொறையினாற்றலைவணங்கின *
தெண்கடற்கலைபுனைசெல்வமாநிலப்......*
பெண்கொடிதாடொழும்பெற்றிபோன்றவே.

(இ-ள்) மேவிய-விரும்பப்பட்ட—தண்-தண்ணிய—கனி-பழங்களது—பொறையினால்-பாரத்தினாலே—தலை - தலைகள்—வணங்கின-வளைந்தவையாகிய—விண்-ஆகாயத்தில்—புகு-நுழைந்த—வியன்-விசாலமாகிய—சினை-கிளைகளையுடைய—தருக்கள்-மரங்களானவை—தெள்-தெள்ளிய—கடல்-கடலாகிய—கலை-ஆடையை,புனை-உடுத்த—செல்வம்- செல்வத்தையுடைய—மா- பெரிய—நிலப்பெண்கொடி-பூமிதேவியினது--தாள்- அடியை—தொழும்-வணங்காநின்ற— பெற்றிபோன்ற - தன்மையையுடையனபோன்ற (அரச

ளுக்கு)— (எ-று) (கருத்து) மரங்களானவை பூமிதேவியினடியை வணங்குகின்றனபோலுமிருந்தன என்பதாம். (௫௫)

அளிமுரலணிமலரசோகம்பூத்தன...... *
தெளிவருகாரணப்பெயரின்செவ்வியால்... *
எளிவருகாமுகர்க்கிரங்கிவேணறுந்...... *
தளிர்மறையழற்கணைதரித்தபோன்றவே... *

(இ-ள்.) பூத்தன - மலர்ந்தனவாகிய— அளி- வண்டுகளானவை— முரல்-ஒலிக்கப்பெற்ற— அணி-அழகுபொருந்திய— மலர் - மலர்களையுடைய— அசோகம்-அசோகமரங்களானவை— தெளிவரு-தெளியவந்த— காரணப்பெயரின் - காரணப்பெயரினது— செவ்வியால்-அழகினாலே— எளி-எளிமையோடு— வரு-(தம்மிடத்தில்) வருகின்ற— காமுகர்க்கு-காமிகளுக்கு— இரங்கி-உள்ளிரங்கி— வேள்-மன்மதனது— அழற்கணை-நெருப்பப்புகளை— நறுந்தளிர் - நல்ல தளிர்களிலே— மறை-மறைத்து— தரித்தபோன்ற- தரித்திருக்கின்றவைபோன்றன (அசைநிலைகள்)— (எ-று) (கருத்து) அசோகமரங்களானவை அக்கினிக்கணைகளைத் தரித்தலபோலுமிருக்கின்றன என்பதாம். (௫௬)

(* அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்)

மணங்கமழ்முடவெண்டாமரைமலரின்வார்நறவமாந்திக்... *
கணங்கொள்வண்டினமுஞ்சுரும்புங் களித்திடைவதிந்ததோற்ற
மணங்கரவனைத்தோனீத்தவரும்பழிசுமந்ததென்ன...... *
நிணங்கமழ்வேலான்கண்டுநெஞ்சுறவிழித்துச்சொல்வான். *

(இ-ள்) நிணம்-பகைவரது கொழுப்பானது— கமழ்- நாறுதற்கிடமாகிய — வேலான்-வேலையுடையவன்— முடம்- முடமாகிய— தாமரை-தாமரையினது— மணங்கமழ்-மணக்கின்ற— வெள்- வெண்மைபொருந்திய— மலரின் -பூவின்— வார்-ஒழுகாநின்ற— நறவம் - தேனை— மாந்தி-குடித்து— கணம்-கூட்டத்தை— கொள்-கொண்ட— வண்டு-கருவண்டுகளின்— இனமும்-சாதிகளும்— சுரும்பும்- தேன்வண்டுகளும்— களித்து-மகிழ்ந்து— இடை-(அதனி)டையில்— வதிந்த -தங்கிய— தோற்றம்-தோற்றத்தை— கண்டு - பார்த்து— அணங்கரவனைத்தோன்-பரமசிவனால்— நீத்த - தள்ளிவிடப்பட்ட— அரும்பழி-நீக்கக்கூடாதபழியை— சுமந்ததென்ன (இம்மலர்) சுமந்ததென்று— நெஞ்சுற - நினைப்புண்டாக, இழித்து-இகழ்ந்து, சொல்வான் கூறுவான், (எ-று.) * கேட்குநர்போலவுங்கிளக்குநர்போலவு மியங்

---

* தொல்காப்பியம் - மூவாறெழுத்தேகழிநெடிற்களவே - யீரா
முத்துயிருதுவுமியல்பெனமொழிப * நன்னூல்.

றூறபோலவு மியற்றுதபோலவு மகிழினைமருங்கினு மறையப்படு
மே இவ்விதியால் தாழையொடுகூறினன் (கருத்து) நளமஹாராஜ
ன்தாழைமலரைப்பார்த்து இகழ்ந்துசொல்வான் என்பதாம்.(௬எ)

நாகிளவரிவண்டுண்டுநறவுகொப்புளிக்குங்கைதாய்...*
பாகுறுகழைவேளெய்யிற்பறிப்பரிதாயுள்ளாவி......*
யேகமெய்தளர்ந்தோர்நெஞ்சமீர்ந்திடுமுள்ளம்பென்றே
வாகைவின்மதனைச்செற்றோன்வனைந்திடாதிகழ்ந்தவாறே.

(இ-ள்) நாகிள-இளமைபொருந்திய,வரி-இசைபாடுகின்ற, வண்டு-வண்டுகளானவை,நறவு-தேனை,உண்டு-குடித்து, கொப்புளிக்கும்-உமிழ்தற்கிடமான,கைதாய்-தாழம்பூவே,பாகு-சாறுடைத்து,உறு-பொருந்திய,கழை-கருப்புவில்லினால், வேள்-மன்மதனானவன், எய்யின்-எய்தால், பறிப்பரிதாய் - பிடுங்கப்படாததாகி, உள் - உள்ளிருந்து,ஆவி-உயிரானது,ஏக-நீங்க,மெய்-உடம்பு, தளர்ந்தோர்-தளர்ந்தவிரகிகளுடைய, நெஞ்சம்-மனத்தை. ஈர்ந்திடும்- அறுக்கின்ற, முள்ளம்பென்றே-முள்ளம்பென்று(உன்கொடுமையைநினைத்தே), வாகை-வெற்றிபொருந்திய,வில்-வில்லையுடைய, மதனை-மன்மதனை, செற்றோன்-வென்றபரமசிவன், வனைந்திடாது-சூடாமல்—இகழ்ந்த-(உன்னை)யிகழ்ந்ததற்கு—ஆறு-காரணமாம்—(எ-று)(கருத்து) தாழம்பூவே நீமுள்ளம்பென்று சிவன் அணியாதிகழ்ந்தானென்று நளன்சொன்னான். (௬அ)

பசியநெட்டிலையதாழைமடலெனும்ஈர்வாள்பற்றி ... *
வசையறுகாமத்தச்சன்மையலாய்வளியினாரு ...... *
மசைவொடுதளர்ந்துகல்வியருந்தழையுகுத்துநிற்கு *
நசையுநர்நெஞ்சத்தாருநடுவுறப்போழுமாதோ ... *

(இ-ள்) பசிய-பசுமைபொருந்திய—நெடு நெடிய—இலைய-இலைகளையுடையனவாகிய— தாழை-தாழம்பூவே—மடலெனும்- (உன்னிதழென்கின்ற— ஈர்வாள்-பல்வாள்—பற்றி-(பிடித்து—வசையறு-பழியற்ற—காமத்தச்சன்-மன்மதனாகியதச்சனானவன்—மையலாம்-மயக்கமாகிய—வளியின்-காற்றினாலே—நாளும்- புலனும்—அசைவொடு-அசைதலுடனே—தளர்ந்து-வாடி—கல்வி- கல்வியறிவாகிய—அருந்தழை - அரியதழையை—உகுத்து-உதிர்த்து—நிற்கும்-நிற்கின்ற—நசையுநர் காமிகளுடைய, நெஞ்சம்-மனமாகிய—தாரு-உலர்ந்தமரத்தை—நடு நடுவிலே—உற-பொருந்த—போழும்-பிளப்பான்.—(எ-று.) (கருத்து) தாழம்பூவே உன்னிதழென்னும்வாளாலே மன்மதனாகிய தச்சன் காமிகளுடைய நெஞ்சமாகியமரத்தையறுப்பான் என்று நளன்சொன்னான்.எ-ட. (௬௯)

விழையுநராவிபோழும்வேனிலானிரதமூறுங் ... ... *
கழைகுழைத்தளிநாணேற்றிக்கணைமலர்தொடுக்கிற்றீந்தேன்
மழையினிற்கரங்கணாளும்வழுவழுத்திழுக்காவண்ணந் .. *
தழைமடற்கைதாய்நின்பொற்றாதுகைத்திமிர்ந்தெய்வானால்.

(இ-ள்) விழையுநர் - விரும்பினவருடைய — ஆவி - உயிரை — போழும் - பிளக்கின்ற — வேனிலான் - மன்மதனுடைய — இரதம் - சாறானது — ஊறும் - ஒழுகுகின்ற — கழை - கருப்புவில்லை — குழைத்து - வளைத்து — அளிநாண் - வண்டுநாரியை — ஏற்றி - பூட்டி — கணைமலர் - பூவம்புகளை — தொடுக்கின் - எய்யும்போது — தீம் - மதுரம்பொருந்திய — தேன் - தேனினது — மழையினில் - மழையிலே — கரங்கள் - (தன்) கைகளானவை — நாளும் - தினந்தோறும் — வழுவழுத்து - நழுவிநழுவி — இழுக்காவண்ணம் - தப்பிப்போகாதபடி — தழை - தழைத்த — மடல் - மடல்களையுடைய — கைதாய் - தாழம்பூவே — நின் - உனது — பொன் - பொன்னிறம்பொருந்திய — தாது - தாதுகளை — கை - அக்கைகளிலே — திமிர்ந்து - பூசிக்கொண்டு — எய்வான் - (அவன் என்மேற்) செலுத்துகிறான் — (எ-று) (கருத்து) தாழம்பூவே, மன்மதன் கரும்புவில்லை வளைத்து அளிநாணேற்றி மலர்க்கணை தொடுக்கில் வழுக்காதிருக்க உன் மகரந்தங்களைத் திமிர்ந்து அக்கணையெய்கிறான் என்று நளன் சொன்னான் என்பதாம். (௪௰)

குனிசிலைவேனிலான்கைக்குருதிதோய்ப்பிறைவாயம்பின் ... *
றனியெழில்கவர்ந்துதோன்றித்தணந்தவர் தமையெஞ்ஞான்
றுந், துனியுறமுருக்குகின்றதொழிலினாலன்றோநின்னை .. *
முனிவுடனுலகில்யாருமுருக்கலென்கின்றாரே ... ... ... *

(இ-ள்) குனிசிலை - வளைக்கப்பட்டவில்லையுடைய — வேனிலான் வசந்தகாலத்திற்குரிய மன்மதனது — கை - கையிலிருக்கின்ற — குருதி - உதிரத்திலே — தோய் - முழுகிய — பிறைவாயம்பின் - பிறைவாயம்பினது — தனி - ஒப்பற்ற — எழில் - அழகை — கவர்ந்து - வெளவி, தோன்றி - விளங்கி — தணந்தவர்தமை - பிரிந்தவரை — எஞ்ஞான்றும் - எந்நாளிலும் — துனியுற - துன்பத்தையடைய — முருக்குகின்ற - கொல்கின்ற — தொழிலினாலன்றே - செய்கையினாலன்றே — நின்னை - (முருக்கம்பூவே) — உன்னை - முனிவுடன் - வெறுப்புடனே — உலகில் - உலகின்கண்ணே — யாரும் - எவரும் — முருக்கலென்கின்றார் - முருக்கலென்று சொல்லுகின்றார் — (எ-று.) (கருத்து) முருக்கம்பூவே, கொல்லுகிறதொழிலாலல்லவோ உன்னை முருக்கலர் என்கிறார்களென்றான் நளமகாராஜன் என்பதாம். (௪௧)

(கலிவிருத்தம்.)

எனவிவையெடுத் துரைத் தின்னதன்மைய...... *
பனிமலர்க்காவினிற் பயிலுமாங்குயில்...... ... *
குனிசிலைமாரனைக் கூவக்கேட்டலு............... *
மனநிலைதளர்வுற மதிமயங்கினான்.............. *

(இ-ள்) என-என்று—இவை-இவைகளை—எடுத்து-எடுத்து—உரைத்து-சொல்லி—இன்னதன்மைய-இப்படிப்பட்டதன்மையையுடைய—பனி-குளிர்ச்சிபொருந்திய—மலர்-மலர்களையுடைய—காவினில்-சோலையில்—பயிலும்-பழகியிருக்கின்ற—மா-மாவிலுள்ள—குயில்-குயில்களானவை—குனி-வளைக்கப்பட்ட—சிலை-வில்லையுடைய—மாரனை-மன்மதனை—கூவ-அழைக்க—கேட்டலும்-கேட்டவளவிலே—மனநிலை-தைரியமானது—தளர்வுற-சோர—மதிமயங்கினான்-(அரசன்)அறிவுகலங்கினான்.—(எ-று.) (கருத்து) குயில்களானவை மன்மதனை அழைக்க நளன் மதிமயங்கினான் என்பதாம். (௪௨)

வெங்கதிர்தென்றலிற் குளிர்ந்தும்வீழ்நறுந் ... *
தங்கியமலர்நறுந்தளிக்குண் மூழ்கியும்..... ... *
பொங்குபூங்கைதைவெண்டாதுபூசியுந்... ... *
திங்களிற்றோன்றலான் மகிழ்சிறந்திலான்... ... *

(இ-ள்) வெங்கதிர்-சூரியகிரணமானது—தென்றலின்-தென்றற்காற்றால்—குளிர்ந்தும்-சீதளித்தும்—மலர்-மலர்களிலே—தங்கிய-பொருந்திய—நறு-தேனினுடைய—வீழ்-விழுகின்ற—நறுந்தளிக்குள்-நல்லதுளிகளுள்—மூழ்கியும்-படிந்தும்—பொங்கு-எழும்புகின்ற—பூ-அழகிய—கைதை-தாழைமலரது—வெண்டாது-வெள்ளைப்பொடியை—பூசியும்-திமிர்ந்தும்—திங்களின்-சந்திரகிரணம்போல—தோன்றலால்-காணப்படலால்--மகிழ்சிறந்திலான்-(அரசன்)களிகூர்ந்திலன்.--(எ-று.)(கருத்து) நளமஹாராஜன் வெயிலானது நிலவைப்போலத்தோற்றலால் மகிழ்ச்சி அடைந்திலன் என்பதாம். (௪௩)

அலையொலிமுழவெழவளியின்*கம்பலை...... *
குலவியசுருதியாக்குயில்கள்பாண்செய.........*
நிலவுபூந்தண்டலையரங்கினீடிய............. *
கலவமாமயில்களித்தாடக்கண்டனன்...........*

(இ-ள்) அலையொலி-அலையினொலியாகிய—முழவு-மத்தளவோசையானது—எழ-உண்டாகவும்—அளியின்-வண்டுகளது—கம்பலை-ஒலியானது—குலவிய-கொண்டாடப்பட்ட—சுருதியா-சுருதி

யாகவும்—குயில்கள்-குயில்களாகிய(பாடகர்)--பண்செய-இசை பாடவும்—நிலவு-விளங்குகின்ற—பூந்தண்டலை-பூஞ்சோலையாகிய—அரங்கில்-சபையில்—நீடிய-நீண்ட--கலவம்-கலாபத்தையுடைய—மாமயில்-பெரியமயில்களாகிய(மகளிர்)—களித்து-மகிழ்ந்து—ஆட-கூத்தாட—கண்டனன்-(அரசன்)பார்த்தான்—(எ-று.) (கருத்து)மயில்களாடநளன்கண்டான் என்பதாம். (௪௪)

நஞ்சுமிழ்வேலினான் † சீர்த்திநாடொறு.........*
மஞ்சொலார்பயிற்றலாலந்தண்காவினின்......*
மஞ்சரியிடையிடைவதிந்தபூவையும்...........*
பைஞ்சிறைக்கிள்ளையும்பாடக்கேட்டனன்......*

(இ-ள்) நஞ்சு-நஞ்சத்தை—உமிழ்-கக்குகின்ற—வேலினான்-வேலையுடைய நளராஜனானவன்—சீர்த்தி-(தன்) கீர்த்தியை—நாடொறும்-தினந்தோறும்—அஞ்சொலார்-அழகியசொற்களையுடைய மகளிரானவர்—பயிற்றலால்-கற்பித்தலாலே—அம்-அழகிய—தண்-தண்ணிய—காவினில்-சோலையிலே—மஞ்சரி-பூங்கொத்துக்களின்—இடையிடை-நடுவேநடுவே—வதிந்த-தங்கிய—பூவையும்-நாகணவாய்ப்பறவைகளும்--பைஞ்சிறை-பசியசிறைகளையுடைய--கிள்ளையும்-கிளிகளும்--பாட-படிக்க--கேட்டனன்-(அரசன்) கேட்டான்—(எ-று) (கருத்து) நளமஹாராஜன் தன்கீர்த்தியைப் பூவைகளும் கிளிகளும்பாடக் கேட்டான் என்பதாம். (௪௫)

தேங்கமழ்மலர்நறுவருந்திச்சீர்கெழு........ *
தூங்கிசையளிமுரல்சுண்ணமாடிமென்....... *
பூங்கொடிமடந்தையராடப்போர்வள....... *
மாங்குயிலுரைசெயவசந்தனெய்தினான்.........*

(இ-ள்) தேங்கமழ்-பரிமளிக்கின்ற--மலர்-மலர்களது--நறு-தேனை--அருந்தி-உண்டு-சீர்கெழு-சிறப்புப்பொருந்திய--தூங்கிசை-நாட்டியராகத்தை—அளி-வண்டுகள்--முரல்-பாட--சுண்ணம்-பரிமளப்பொடியை--ஆடி-பூசிக்கொண்டு--மென்பூங்கொடி-மெல்லியபூங்கொடிகளாகிய--மடந்தையர்-மகளிர்--ஆட-கூத்தாட--போர்வளம்-போர்க்குரியவளத்தை--மா-மாவிலுள்ள--குயில்-குயிலாகிய(மந்திரி)--உரைசெய-சொல்ல--வசந்தன்-தென்றலாகிய (பகைவன்)--எய்தினான்-வந்தான்--(எ-று.)(கருத்து)சோலையில்தென்றற்காற்றுவந்தது என்பதாம். (௪௬)

மிடைந்திருவிசும்புறையமரர்வெற்பினுற்...... *
கடைந்துதன்வளமெலாங்கவர்வராமெனக் ... *

* தொல்காப்பியம்-(கம்பலைசும்மை) † சீர்த்திமிகுபுகழ்.

குடைந்துவண்டிமிர்பொழிலிடையடைந்தொள் கட *
லடைந்தனவாவியையன்னனோக்கினன்...... *

(இ-ள்) இருவிசும்பு-பெரியவிண்ணுலகத்தில்--மிடைந்து - நெருங்கி--உறை-வாசஞ்செய்கின்ற -அமரர்-தேவரானவர்-- வெற்பினுல்-மந்தரகிரியினால்--கடைந்து- (இன்னும்வந்து) கடைந்து--தம்வளமெலாம்-தஞ்செல்வத்தையெல்லாம்--கவர்வராமெனு - வெளவுவாரோவென்றெண்ணி--குடைந்து-கிண்டி--வண்டு- வண்டுகளானவை--இமிர்-ஒலிக்கப்பெறுகின்ற--பொழில்-வனத்தினது--இடையில்- நடுவிலே--அடைந்து - அடைந்ததாகிய--ஒள் - (அலைகளைக் கொண்ட)--கடலன-பாற்கடல்போல்கின்ற--வாவியை-தடாகத்தை --அன்னல்-அரசன்--நோக்கினன்-பார்த்தான். (எ-று.) (கருத்து) நளராஜன் தடாகத்தைக்கண்டான் என்பதாம். (௪௭)

தூவியஞ்சிறையனந்துயிலுநாண்மலர்......... *
வாவியுட்டாமரைவளையந்தோன்றவ............ *
பூவலர்கற்பகப்பொதும்பர்நாட்டுறை......... *
கோவிளங்களிற்றினக்கோடுபோன்றவே...... *

(இ-ள்) தூவி- இறகையும்--அஞ்சிறை - அழகியசிறையையுமுடைய--அனம்-அன்னங்களானவை--துயிலும்- தூங்குதற்கிடமாகிய--நாள்-அன்றுபூத்த- மலர்-மலர்களையுடைய--வாவியுள்-தடாகத்திலுள்ளே--தோன்றுவ-தோன்றுகின்றவையாகிய--தாமரை-தாமரைகளுடைய--வளையம்- தளிர்ச்சுருள்களானவை--பூ-அழகிய--அலர்-மலர்களையுடைய--கற்பகப்பொதும்பர்-கற்பகச்சோலையையுடைய--நாட்டு-நாட்டின்கண்--உறை- வாசஞ்செய்கின்ற--கோ - அரசனாகிய இந்திரனுடைய--இளங்களிற்று - (அதிலுள்ளிருக்கிற) இளமைபொருந்திய யானைகளது--இனம் - இனத்தினுடைய -- வெண்கோடுபோன்ற-வெள்ளைக்கொம்புகள்போன்றிருந்தன--(எ-று) (கருத்து) தடாகத்துள்ளேதோன்றிய தாமரைவளையங்களானவை தேவலோகத்தின்யானைகள்கொம்புகளை ஒத்திருந்தன என்பதாம். (௪௮)

எந்தலோடவ்வழியிருந்தவெண்ணறுங் ......... *
கூந்தன்மாநிழறடத்திடைக்குலாவுவ............. *
காந்தளங்கரத்தரமகளிர்காமுறும்............ *
வேந்தனற்புரவியின்வெள்ளம்போன்றவே......*

(இ-ள்) எந்தலோடு-அரசனோடு--அவ்வழி- அவ்விடத்தே---இருந்த-அடைந்த--எண்ணறும் - எண்ணில்லாத--கூந்தல்-மயிர்நெருங்கிய--மா-குதிரைகளுடைய--தடத்திடை- தடாகத்தின்கண்--குலா

வுவ-தோன்றுவனவாகிய--நிழல்-சாயைகளானவை--காந்தள்- காந்தள்மலர்போலும்--அம்-அழகிய--காத்து - கைகளையுடைய--அரமகளிர்-தெய்வமங்கையரால்--காமுறும்-இச்சிக்கப்படுகின்ற--வேந்தன்-இந்திரனுடைய--நல்-நல்ல--புரவியின்- குதிரைகளுடைய--வெள்ளம்போன்ற-(அதிலுள்ள)கூட்டம்போன்றன--(எ-று.) (கருத்து) தடாகத்திற்றோன்றிய குதிரைகளின்சாயலானவை இந்திரன் குதிரைகளை ஒத்திருந்தன. (௪௯)

வரிச்சிறைத்தும்பிகளுழுநல்வள்ளவாய்........ *
விரித்தவெண்டாமரைவிளங்கித்தோன்றுவ .. *
தரித்திடுகளங்கமெய்தயங்கத்தண்மையுந் ... *
திருக்கிளர்நிலவுமிழ்திங்கள்போன்றவே......... *

(இ-ள்) விளங்கி-பிரகாசித்து--தோன்றுவ - (தடாகத்திலே) காணப்படுகின்றவையாகிய--வரிச்சிறை-கீற்றுக்கள்பொருந்திய சிறைகளையுடைய--தும்பிகள் - வண்டுகளால்--உழு-கிண்டப்படுகின்ற, நல்-நல்ல--வள்ளவாய்-கிண்ணம்போலும்வாயை--விரித்த- திறந்திருக்கிற--வெண்டாமரை - வெண்டாமரைமலர்களானவை-- தரித்திடு-தாங்கப்பட்ட--களங்கம்- களங்கங்களானவை--மெய் - வடிவங்களிலே--தயங்க-தோன்ற--தண்மையும்- குளிர்ச்சியாயிருக்கிற--திரு அழகினாலே--கிளர்-விளங்காநின்ற--நிலவு-சந்திரிகையை--உமிழ்-கக்குகின்ற--திங்கள்போன்ற-(அதிலுள்ள) சந்திரர்கள்போன்றிருந்தன.--(எ-று)(கருத்து)தடாகத்துத்தோன்றிய வெண்டாமரைமலர்களானவை சந்திரர்களை ஒத்திருந்தன என்பதாம். (௫௰)

சேயிதழ்க்குவளைமென்னனைகடெண்டிரைத்......... *
தூயநற்றடத்திடைத்தோன்றுகின்றன................ *
மேயவர்கண்கவர்வனப்பின்மிக்கவாய்ப்............. *
பாயொளிசிறந்தசெய்பவளம்போன்றவே... ..... *

(இ-ள்) தெண்டிரை-தெளிவுள்ளவலைகளையுடைய--தூய- பரிசுத்தம்பொருந்திய--நற்றடத்திடை-நல்லதடாகத்தினுள்ளே--தோன்றுகின்றன-காணப்படுகின்றவையாகிய--சேயிதழ்-சிவப்பிதழ்களையுடைய--குவளை-உற்பலங்களுடைய--மெல்-மெல்லிய--நனைகள்-அரும்புகளானவை--மேயவர்-அடைந்தவருடைய--கண்-பார்வையை--கவர்-வெளவுகின்ற--வனப்பில்-அழகில்--மிக்கவாய்-மிகுந்தனவாகி--பாயொளி-விரிந்தவொளியால்--சிறந்த- விசேஷித்த--செம்பவளம்போன்ற-(அதிலுள்ள)செம்பவளங்கள்போன்றன.--எ-று.(கருத்து) தடாகத்துத்தோன்றிய செங்குவளை அரும்புகளானவை பவளத்தை ஒத்திருந்தன என்பதாம். (௫௧)

வெண்ணிறத்தாமரைமலரும்வேரியந்.........*
தண்கருங்குவளையுந்தடத்துட்டோன்றுவ.........*
மெண்ணிருகலைமதிநிலவினீட்டமு.........*
முண்ணிலவியவிடத்தொளியுப்போன்றவே.........*

(இ-ள்) தடத்துள் தடாகத்தினுள்ளே—தோன்றுவ-தோன்றுகின்றவையாகிய—வெண்ணிறம்-வெள்ளைநிறம்பொருந்திய—தாமரைமலரும்-தாமரைப்பூக்களும்—வேரி-தேனையுடைய—தண்-தண்ணிய—கருங்குவளையும்-நீலோற்பலமலர்களும் உள்-(அதனு)ள்ளே—நிலவிய-விளங்குகின்ற—எண்ணிருகலை-பதினாறுகலைகளையுமுடைய—மதி-சந்திரனது—நிலவினீட்டமும்-ஒளிச்செறிவும்—விடத்து-ஆலகாலத்தினதுஒளியி(னீட்ட)மும்—ஒளிச்செறிவும்-போன்ற-ஒத்திருந்தன—(எ-று)(கருத்து) தடாகத்துத்தோன்றிய வெண்டாமரைமலர்களும் நீலோற்பலமலர்களும்சந்திரனொளிகளையும் விஷத்தொளிகளையும் ஒத்திருந்தன. (௫௨)

குடவளையினமணிகொழிக்குந்தண்புனற்.........*
றடமெறியலைகளினலையுஞ்சைவலம்.........*
படர்தருமழற்சிகைபரப்புஞ்செந்நிற.........*
வடவையின்புகையெனவயங்கித்தோன்றின.........*

(இ-ள்) குடம்-குடம்போலும்—வளை-சங்குகளானவை—இனம்-இனமாகிய—மணி-முத்துக்களை—கொழிக்கும்-சொரிதற்கிடமாகிய—தண்புனல்-தண்ணீரையுடைய—தடம்-தடாகத்திலே—எறி-வீசப்படுகிற—அலைகளின்-அலைகளினுமேலே—அலையும்-அலைகின்ற—சைவலம்-கொடிப்பாசிகளானவை—படர்தரும்-வளர்கின்ற—அழல் சூடுள்ள—சிகை-சுவாலைகளை—பரப்பும்-பரப்புகின்ற—செந்நிறம்-சிவப்புநிறமாகிய—வடவையின்-(அதிலுள்ள) வடவாமுகாக்கினியினது—புகையென-தூமம்போல—வயங்கி விளங்கி—தோன்றின-காணப்பட்டன—(எ-று)(கருத்து) தடாகத்திலிருக்குங்கொடிப்பாசிகளானவை வடவாமுகாக்கினியின் புகைகளைப் போலக்காணப்பட்டன என்பதாம். (௫௩)

குருமணியிமைக்குநீள்கூலமேயவான்.........*
மருநிழலலையிடையலைவுதண்கதிர்.........*
ஈருமணிப்பொலங்குவட்டணிமைநாகமால்.........*
வரைசிறையடிக்கொளுமாட்சிபோன்றவே.........*

(இ-ள்) அலையிடை-அலைகளாலே—அலைவ-அலைகின்றவையாகிய—குரு-நிறம்பொருந்திய—மணி-மணிகளால்—இமைக்கும்-வி

வளருகின்ற--நீர்-நீளம்பொருந்திய—கூலம்-கரையின்கண்—மேய-தங்கிய—வான்தரு-பெரியமரங்களுடைய—நிழல்-நிழல்களானவை--சிறை-சிறைகளை—அடிக்கொளும்-அடித்துக்கொள்ளுகின்ற—மாட்சி-அழகையும்—தண்-சீதளத்தையும்—கதிர் - கிரணங்களையும்—அருமணி-அரியமணிகளையும்—பொலன்-பொன்னையும்--குவட்டு—சிகரத்தையுமுடைய-அணி— அழகிய- மைநாகம்-.மைநாகங்களாகிய—மால்வரை-பெரியமலைகள்—போன்ற-ஒத்திருந்தன—(எ-று)(கருத்து) தடாகத்துத்தோன்றிய தருக்களின் நிழல்களானவை மைநாகபர்வதங்களை ஒத்திருந்தன என்பதாம். (௫௪)

தொலைவறுபல்வளமினையதொக்கவவ்......... ... ...*
வலைதவழ்வாவியிற்பயிலுமாய்பெடை.......... ......*
கலவியின்குறிப்புரைகாட்டப்பின்றொடர்............*
பொலனிறவன்னத்தின்பொற்புநோக்கினான்........*

(இ-ள்)தொலைவறு-ஒழியாத—இனைய-இத்தன்மையனவாகிய—பல்வளம்-பலவிதவளங்களாலும்—தொக்க-நிறைந்த—அலை-அலைகளானவை—தவழ்-தவழப்பெற்ற—அவ்வாவியில் - அத்தடாகத்தில்—பயிலும்-வாசஞ்செய்கின்ற—ஆய்-ஆராய்ந்துகொள்ளப்பட்ட—பெடை-பெட்டையானது--கலவியின்-புணர்ச்சியினது—குறிப்பு-குறிப்பை—உரை-சொல்லுகளாலே—காட்ட - காண்பிக்க—பின்-(அதன்)பின்னே—தொடர்-தொடர்கிற—பொலன்-பொன்வடிவாகிய—நிறம்-ஒளியுள்ள--அன்னத்தின்-அன்னத்தினது---பொற்பு-அழகை--நோக்கினான்-(அரசன்)பார்த்தான்—(எ-று) [பொன்னைமன்னமென்றதால்பொன்னுலகத்தன்மைமெனவிளங்கிற்று)(கருத்து)நளராஜன் அன்னத்தைக்கண்டான் என்பதாம். (௫௫)

தண்ணறுந்தாமரையணையிற்றங்கிய... ..... ....... ...*
வண்ணலோதிமந்துனியகற்றிப்பேடையை... .......*
விண்ணவிறச்சிறகாற்றழீஇவிருப்பொடு..............*
முண்மகிழ்கூர்தரவுவந்துபுல்லிற்றே..................*

(இ-ள்) தண் - தண்ணிய--நறு-நறிய-தாமரை--தாமரைப்பூவாகிய--அணையில்- சயனத்தின்கண்ணே--தங்கிய - வாசஞ்செய்கின்ற--அண்ணலோதிமம்-அவ்வரசவன்னமானது--துனி - ஊடலை--அகற்றி நீக்கி--பேடையை-பெட்டையை---விண்- பொன்னுலகத்தினுள்ள-திறம்-ஒளிபொருந்திய--சிறகால்-சிறகளினாலே--தழீஇ-தழுவி--விருப்பொடும்-ஆசையுடனே--உள்-(அத)னுள்ளத்தே--மகிழ் மகிழ்ச்சியானது-கூர்தர--மிகும்படி-உவந்து--(தானு) மகிழ்ந்து--புல்லிற்று - புணர்ந்தது-- (எ-று) (கருத்து) அரசவன்னமா

ம்—தோல்-தோலையுடைய—அடி-அடிகளானவை—துடிப்ப-நடுங்க—துன்பமுற்று-துயரமடைந்து—சிறையடித்து-சிறகளாலடித்து—ஏலாமையின்-போகமாட்டாமையால்—எய்ப்பொடு-இளைப்புடனே—மைப்புயலனைய-(கொடையாற்) கரியமேகம்போலும்—கைம்மலரில்-(அவன்கையாகிய)மலரில்—கொத்திற்று-கொத்தியது—(எ-று) (கருத்து) அன்னமானது வருத்தமுற்று நளன் கையைக் கொத்திற்று என்பதாம். (ருசு)

இரைத்தயர்புள்ளினுக்கிரங்கிப்புட்குலம்..... *
விரித்தெழுசிறைவளிவீசமெல்லிதழ்த்........ *
திருந்துதாமரையலைதல்சேர்தடம் ....... ... *
வருத்தலையென்றுகைம்மறித்தல்போன்றதே...*

(இ-ள்) புட்குலம்-பறவைக்கூட்டமானது—விரித்து பரப்பி-எழு-எழுப்புகையில்— சிறை சிறைகள்—வளி-காற்றை—வீச-எறிதலால்—மெல்-மெல்லிய—இதழ்-இதழ்களையுடைய—திருந்து-அழகுபொருந்திய—தாமரை-தாமரைமலர்களானவை—அலைதல்-அசைதலானது—சேர்-சேர்விடமாகிய—தடம்-தடாகமானது—இரைத்து - கூவி—அயர் - வருந்துகின்ற—புள்ளினுக்கு-அவ்வன்னத்திற்கு—இரங்கி- இரக்கமுற்று—வருத்தலையென்று- அ(ன்னத்தை)வருத்தாதேயென்று—கை- (தன்) கைகளினாலே—மறித்தலைபோன்றது-தடுத்தல்போன்றது—(எ-று.)(கருத்து) பறவைகளெழுதலால் தாமரைகளசைதலானது நளன்வருத்தாதேயென்று தடுத்தலைபோன்றிருந்தது என்பதாம். (சாய)

வள்ளவாய்த்தாமரைவதிந்தபோதரு.............. *
புள்ளெலாந்தனித்தனிபுலம்பல்வாவியி.......... *
னுள்ளுறுவறுமைகண்டொதுங்குபூமக... ... *
டெள்ளரிச்சிலம்புகள்சிலம்பல்போன்றவே... *

(இ-ள்) வள்ளம்- கிண்ணம்போலும்—வாய்- வாயையுடைய—தாமரை-தாமரைமலர்களில்—வதிந்து-வாசஞ்செய்திருந்து--போதரு-அப்போதுபோகின்ற—புள்ளெலாம்- பறவைகளனைத்தும்—தனித்தனி-வேறுவேறாக—புலம்பல்-புலம்புதலானது—வாவியினுள்-தடாகத்தினுள்ளே—உறு-நேரிட்ட- வறுமை(அரசவன்ன)மில்லாமையை—கண்டு-பார்த்து—ஒதுங்கு - விலகுகின்ற—பூமகள்-திருமாதினுடைய—தெள்-தெள்ளப்பட்ட—அரி - பருக்கைக்கல்லுகளையுடைய—சிலம்புகள்- பாதச்சிலம்புகளானவை—சிலம்பல் போன்றது-ஒலித்தல்போன்றது.—(எ-று)(கருத்து) பறவைப்புல

ம்பலானது தடாகத்தைவிட் டிலக்குமிநீங்கும் பாதச்சிலம்பொலி போலிருந்தது என்பதாம். (௯௧)

இன்னபொன்னிறவனங்கண்டிலேனெனு...... *
மன்னர்மன்னவன்மதிவதனநோக்கியே...... *
யன்னவன்கரமலரமர்ந்தவோதிம................ *
நன்னயம்மொழிசிலநவிறலுற்றதே........... *

(இ-ள்) இன்ன-இப்படிப்பட்ட—பொன்-பொன்மயமாகிய—திறம்-ஒளிபொருந்திய—அனம்-அன்னத்தை—கண்டிலேனெனும்-(இதுவரையிற்) பார்த்திலேனெனவியக்கின்ற—மன்னர்மன்னவன்-அரசர்க்கரசனது—மதி-சந்திரன்போலும் (விளக்கம்பொருந்திய)—வதனம்-முகத்தை—நோக்கி-பார்த்து—அன்னவன்-அப்படிப்பட்டவனது—கரம்-கையாகிய—மலர்-தாமரைப்பூவின்கண், அமர்ந்த-தங்கிய—ஓதிமம்-அன்னமானது—நல்-நல்ல—நயம்-நீதிநூலைப்பற்றிய—சிலமொழி-சிலசொல்லுகளை—நவிறலுற்றது-சொலலத்தொடங்கிற்று—(எ-று) (கருத்து) நளன்கையிலிருந்த வன்னமானது அவன்முகத்தைப்பார்த்துச் சிலநீதி சொல்லத்தொடங்கிற்று என்பதாம். (௯௨)

சிறையொளிர்பொன்னிறைசெல்வநல்குமோ... *
வறைகடல்பனியினினிறைவதாங்கொலோ... *
கறைகெழுவேலினாய்கருத்தினுள்ளுற......... *
நிறைதருவிழைவினைநீத்தல்வேண்டுமால்...... *

(இ-ள்) கறைகெழு-உதிரம்படிந்துள்ள—வேலினாய்-வேலையுடைய நளராஜனே—சிறை-(என்) சிறைகளிலே—ஒளிர்-விளங்காநின்ற—பொன்-பொன்னானது—நிறைசெல்வம்-குறைவில்லாத செல்வத்தை—நல்குமோ-(உனக்குத்)தருமோ—அறை-ஒலிக்கின்ற—கடல்-(பெரியகடலானது)-பனியினின்-(அற்பமாகிய) பனியினாலே—நிறைவதாங்கொலோ-நிறையுமோ—கருத்தினுள்-(உன்) மனத்தினிள்ளே—உற-பொருந்த—நிறைதரு-நிறைந்த—விழைவினை-அப்பொன்னாசையை—நீத்தல்வேண்டும்-(நீ) ஒழிக்கவேண்டும் (எ-று.) (கருத்து) நளமஹாராஜனே என்பொன்னிறகானது செல்வந்தருமோ கடலானதுபனியால்நிறையுமோ நீஉன்னாசையைநீக்கவேண்டுமென் றன்னங்கூறியது என்பதாம். (௯௩)

கோறல்செய்தாலுபிர்க்கொலையொன்றேயலாற் *
றேறினர்ப்பிழைத்தவன்பழியுஞ்சேருமாற்... *
றுறுபாய்கவுண்மதத்தறுகண்யானையாய்....... *
மாறுகொள்பகைஞர்க்குமிதுமனங்கொளார்... *

(இ-ள்) தாறு-முட்கோல்கள்—பாய் - பாயப்பெறுகின்ற—கவுள்-கதுப்பையும்—மதம்- மதத்தையும்—தறுகண் - கோபக்கண்களையும் உடைய—யானையாய் - யானைபோல்பவனே—கோறல்செய்தாய்- (உன்னை விசுவாசித்திருந்த என்னை நீ) கொல்லவேயானால்—உயிர்க்கொலையொன்றேயலாஃ - உயிரைக்கொல்லுதற் பாதகமொன்றேயல்லாமலும்—தேறினர் - நம்பினவர்க்கு—பிழைத்த - தீங்குசெய்த—வன்பழியும் - கொடியபாதகமும்—சேரும் - (உன்னை)யடையும்—மாறுகொள் - மாறுபாடுகொண்ட—பகைஞர்க்கும் - விரோதிகளுக்கும்—இது - இவ்விசுவாசகாதகஞ்செய்தலை—மனங்கொளார் - நினையார்—(எ-று) (கருத்து) நளமஹாராஜனே என்னைக்கொன்றால் உயிர்க்கொலை அல்லாமலும் நம்பினவர்க்குத் தீமைசெய்த பழியு முன்னையடையுமென் றன்னங்கூறியது என்பதாம். (௬௪)

செருக்களத்தேற்றவர்ச்செகுத்தலன்றியுன் ... *
னருட்கிடனுமெனையடர்த்தனீதியோ...... ... *
முருக்கிதழ்மடந்தையர்முலைதிளைத்திடுங்... ... *
குருக்கிளர்மணிபுனைகுவவுத்தோளினாய்... ... *

(இ-ள்) முருக்கு-முருக்கம்பூப்போலும்—இதழ் - உதடுகளையுடைய—மடந்தையர்-மாதருடைய—முலை-முலைகளானவை—திளைத்திடும்-அழுந்தப்பெறும்—குரு-நிறத்தினாலே—கிளர்- விளங்காநின்ற—மணி-இரத்தினாபரணத்தால்—புனை- அலங்கரிக்கப்பட்ட—குவவு திரட்சியையுடைய—தோளினாய்- தோள்களையுடையவனே—செருக்களத்து-போர்க்களத்தில—ஏற்றவர்-(உன்னோடே) எதிர்த்தவரை—செகுத்தலன்றி-கொல்லுதல்(நீதியா)மன்றி, உன் - உனது— அருட்கு-கருணைக்கு—இடனும்-பாத்திரமாகிய—எனை- (ஒருபுல்லியபறவையாகிய)என்னை—அடர்த்தல்-கொல்லுதல்—நீதியோ-நீதியாமோ—(எ-று.)(கருத்து) அரசனே போரிலெதிர்த்தவரைக் கொல்லுதல் நீதி உம்மையடுத்த வென்னைக் கொல்லுதல் நீதியோ என்று அன்னம்சொல்லிற்று என்பதாம். (௬௫)

கல்வியினகன்றிடுகருணைவேந்துளத்............ *
தொல்கலுங்கருணையுமுவப்புந்தோன்றிட...... *
வல்கவின்மொழிசிலவறைந்துபின்னரும்........ *
பல்பலதுயர்மொழிபகரலுற்றதே.............. *

(இ-ள்) கல்வியின் - கல்வியறிவுபோல—அகன்றிடு - பெருக்கத்தையடைந்திருக்கின்ற—கருணை-அருளையுடைய—வேந்து- நளராஜனது— உளத்து - உள்ளத்தின்கண்— ஒல்கலும் - நாணமும்—கருணையும்-அருளும்—உவப்பும்-மகிழ்ச்சியும்—தோன்றிட - ஏக்கா

லத்திருவுண்டாக—அலசலில்-(பொருளாற்) குறைவில்லாத—சில மொழி-சிலசொற்களை—அறைந்து-சொல்லி—பின்னரும்-(அக்ன்)பின்பும்—பல்பல-பலபலவாகிய—துயர்மொழி-(அரசனுக்குத்)துன்பத்தையுண்டாக்குகின்றசொற்களை—பகரலுற்றது-(அன்னம்)சொல்லத்தொடங்கிற்று—(எ-று) (கருத்து) அன்னமானது நளனுள்ளத்து நாணமுங் கருணையு மகிழ்ச்சியுந்தோன்றிடச் சில மொழிகூறிப் பலதுயர்மொழிகூறத் தொடங்கிற்று என்பதாம்.

பெருகியமூப்பினிற்றளர்ந்துபேதுறு...... *
மிருமுதுகுரவருமென்செய்கிற்பரோ... ..... *
கருவுயிர்த்தயர்வுறுகாதற்பெடையுள்...........*
ளுருகுமேயென்னநெட்டுயிர்ப்புவீங்கிற்றே... *

(இ-ள்) பெருகிய-நிறைந்த—மூப்பினில்-முதுமையால்—தளர்ந்து-மெலிந்து—பேதுறும்-மதிமயக்கங்கொண்டிருக்கின்ற—இருமுதுகுரவரும்-(என்னுடைய) தாயுந்தகப்பனும்—என்செய்கிற்பரோ-(இனி)யாதுசெய்வரோ—கரு-கருப்பத்தை—உயிர்த்து-ஈன்று—அயர்வுறு-சோர்வடைந்திருக்கின்ற—காதல்-(என்மே)லன்புடைய—பெடை-மனைவியானவள்—உள்ளுருகுமே-மனமுருகுவாளே—என்ன-என்று—நெட்டுயிர்ப்புவீங்கிற்று-பெருமூச்சுவிட்டது—(எ-று) (கருத்து) அரசனே என்தாயுந் தகப்பனு மென் செய்வார்களோ என்மனைவி மனமுருகுவாளே என்று அன்னம் சொல்லிற்று என்பதாம். (௬௭)

அன்னைமூப்பழிதரவார்கொலாற்றுவார்.......*
மன்னனென்னைப்பிடித்தலும்வெருவிவாவியிற்......*
றன்னியாங்கிருந்தபுள்சொற்றபோழ்தினி......*
வின்னலங்கடலுளாழ்ந்திறக்குமேகொலாம்... *

(இ-ள்) அன்னை-(என்னுடைய)தாயானவள்—மூப்பு-முதுமையிருலே—அழிதரவு-வருந்துதலை—ஆர்-எவர்—ஆற்றுவார்-நீக்குவார்—மன்னன்-இவ்வரசனானவன்—பிடித்தலும்-என்னைப்பிடித்தவளவிலே—வாவியி-தடாகத்திலிருந்து—வெருவி-அஞ்சிப்போய்—ஆங்கு-அவ்விடத்தே—துன்னி-நெருங்கி—இருந்த-தங்கிய—புள்-பறவைகள்—சொற்றபோழ்தினில்-(இச்செய்தியைச்) சொன்னபோது—இன்னல்-துன்பமாகிய—கடலுள்-சமுத்திரத்தினுள்—ஆழ்ந்து-அமிழ்ந்து—இறக்குமே-(அவள்)இறந்துபோவாளே.—(எ-று.) (கருத்து) அரசன் என்னைப்பிடித்துக்கொண்டானென்று பறவைகள்சொன்னவாயில் என்தாய் இறக்குமென் றன்னஞ்சொல்லியது என்பதாம். (௬௮)

புல்லுவிட்டஞ்சிறைநெகிழினும்பொரு...... *
தல்லல்கூர்பெடையவர்யாங்குற்றதெனிற்...... *
சொல்லரும்புட்குலங்களுமழுந்துன்பமாய்ந்... *
தெல்லையிறுயரொடுமிறக்குமேகொலாம்...... *

(இ-ள்) புல்லுவிட்டு-தழுவுதலைவிட்டு — அஞ்சிறை-(என்)னழகியசிறைகளானவை — நெகிழினும்-விலகினாலும் — பொருது - மனம்பொருமல் — அல்லல்கூர்-துன்பமிகுகின்ற — பெடை-(என்)மனைவியானவர் — அவர்-என்கணையர் — யாங்கு-எவ்விடத்தே — உற்றதெனின் - வந்தாரென்றுவினாவில் — சொல்லரு - அதற்கு (உத்தரம்) சொல்லமாட்டாத — புட்குலம் - பறவைக்கூட்டமானது — கலுழும்-அழாநிற்கும் — துன்பம்-அத்துன்பத்தினாலே — ஆய்ந்து - (என் செய்தியை) ஆலோசித்தறிந்து — எல்லையில் - அளவில்லாத — துயரொடும்-துன்பத்துடனே — இறக்குமே- (அவள்) இறந்துபோவாளே — (எ-று.) [கொல்-ஆம்-அசைகள்] (கருத்து) என்மனைவியானவள் என்செய்தியைக்கேட்டிறந்துபோவாளென்றன்னஞ்சொல்லியதுஎன்பதாம். (௬௯)

அனிச்சமென்மலரினுநொய்யவாய்சிறைத்... *
தனிப்பெடையமைக்குமென்றளிர்க்கையாலயன்
றுனிப்படுபிரிவெனுஞ்சுடுசொலென்றலை...... *
நினைத்துமுன்னெவ்வணநிலவக்கோட்டினான் .. *

(இ-ள்) அனிச்சமென் - அனிச்சமென்னப்பட்ட — மலரினும்-பூவினும் — நொய்ய-மெல்லிய — ஆய்-தேடத்தக்க — சிறை-சிறகுகளையுடைய — தனி-ஒப்பற்ற — பெடை-(என்)மனைவியை — அமைக்கும்-உண்டாக்குவதாகிய — மென்றளிர்- மெல்லியதளிர்போலும் — கையால்-கையினாலே — அயன்-நான்முகக்கடவுள் — துனிப்படு-துன்பம்விளைதற்குக்காரணமாகிய — பிரிவெனும் - பிரிவென்கிற — சுடு-சுடாநின்ற — சொல்-சொல்லை — நினைத்து-கருதி — முன்-முன்னே — என்-எனது — தலை-தலையில் — எவ்வணம்- எவ்விதமாக — நிலவ-விளங்க — கோட்டினான்-எழுதினான் — (எ-று) (கருத்து) பிரமனெப்படிக்கு என்தலையிலெழுதினான் என்பதாம். (௭௰)

வீழுமெற்படுத்தவிக்கொடுஞ் சொன்மென்னிறத்
தாழ்சிறைமடப்பெடைசெவியிற்சார்தலு...... *
மாழ்துயர்க்கடலிடையாழ்ந்தியானிலாப்...... *
பாழ்படுதிசையெலாமருண்டுபார்க்குமே...... *

(இ-ள்) வீழும்-(தன்னால்)இச்சிக்கப்பட்ட — என்-என்னை — படுத்த-பிடித்த — இக்கொடுஞ்சொல்- இக்கொடுமையையுணர்த்துகிற

சொல்லானது—செவியில்-(தன்)காதில்—சார்தலும்-சேர்ந்தவளவிலே—மெல்-மெல்லிய—திறம்-ஒளிபொருந்திய--தாழ்-நீண்ட—சிறை-சிறைகளையும், நடம்-பேசமையையுமுடைய, பெடை-(என்) மனைவியானவள், ஆழ்-ஆழம்பொருந்திய—துயர்க்கடலினுட-துன்பமாகியகடலுள்ளே--ஆழ்ந்து-முழுகி--யான்-நான்--இலா-இல்லாமையால்--பாழ்படு பாழடைந்த--திசையெலாம்-திக்குகளனைத்தையும்—மருண்டு-மயங்கி--பார்க்குமே-பார்ப்பாளே--(எ-று) (கருத்து) என்மனைவியானவள் துன்பக்கடலுளேமூழ்கி நானில்லாமையால் பாழடைந்ததிக்கனைத்தையும் மயங்கிப்பார்ப்பாளென்றன்னஞ்சொல்லியது என்பதாம். (எக)

பிரிவெனுமழல்சுடப்பெடையிறக்குமே....-- *
பரிவினிற்பெற்றவெம்பார்ப்பெலாமயர்ந்..... *
திரைபெருக்குடம்பையுளரற்றியெய்திய..... *
பரிவினிற்சாமெனப்பதைத்துச்சோர்ந்ததே...*

(இ-ள்) பிரிவெனும்-பிரிவென்கின்ற—அழல்-நெருப்பானது-சுட-(தன்னைச்) சுட—பெடை-(என்)மனைவியானவள்--இறக்குமே-இறந்துபோவாளே—அரிதினில்-அரியதவத்தினாலே—பெற்ற-ஈன்ற—எம்-எம்முடைய—பார்ப்பெலாம்-குஞ்சுகளெல்லாம்--அயர்ந்து-தளர்ந்து—இரை-இரையை—பெரு-பெருமல—குடம்பையுள்-கூண்டினுள்ளே—அரற்றி-கூவி—எய்திய-தமக்குநேரிட்ட—பரிவினில்-துன்பத்தினாலே—சாம்-இறந்துபோம்-என என்று—பதைத்து-துடித்து—சோர்ந்தது-(அன்னம்) மூர்ச்சித்தது—(எ-று.) (கருத்து) பெண்சாதி பிள்ளைகள் இறக்குமென்றன்னம் மூர்ச்சித்தது என்பதாம். (எஉ)

அளிக்கொருகடலனதனைக்கண்டுகண்...... *
டுளித்திடுதண்புனற்றுவலைவீழ்தலிற்............ *
றளிர்த்தமெல்சிறையனந்தளர்வுநீங்கியுட்...... *
களித்ததுகாவலன்கருணைநோக்கியே....... *

(இ-ள்) அளிக்கு-அருளுக்கு—ஒருகடலனான்-ஒருகடல்போல்பவன்—அதனை-அம்மூர்ச்சையடைந்தமையை—கண்டு பார்த்து—கண்-பார்த்தகண்களால்—துளித்திடும்-(அவனாலே) சொரியப்படுகின்ற—தண்-குளிர்ச்சிபொருந்திய—புனல்-நீரினுடைய—துவலை-மழையானது—வீழ்தலின்-(தன்மேல்)வீழ்தலினாலே—தளிர்த்த-உணர்வடைந்த—மெல்-மெல்லிய—சிறை-சிறைகளையுடைய—அனம்-அன்னமானது—தளர்வுநீங்கி-ஆயாசத்தினீங்கி--காவலன்-அரசனது, கருணை-அருளின்-(பெருக்கத்தை), நோக்கி-பார்த்து—

உள்-(தன்)னுள்ளே—களித்தது-மகிழ்ந்தது—(எ-று.)(கருத்து) அன்னமானது அரசன்கிருபையைக்கண்டகமகிழ்ந்தது. (௭௫)

ஆகுலத்துடன்மடவனத்தைநோக்கினேன்...... *
சேகுறுபொன்னிறச்சிறைகணோக்குறு......... *
மோகமேபிடித்தனன்முழுதுநோக்கினன்...... *
போகுதியெனவிடைவிடுத்தனன்............ *

(இ-ள்) இறை-நளராஜனானவன்—ஆகுலத்துடன்-துன்பத்துடனே—மடம்-இளமைபொருந்திய—அனத்தை-அவ்வன்னத்தை—நோக்கி-பார்த்து—உன்-உனது—சேகுறு-மாற்றுயர்ந்த—பொன்-பொன்மயமாகிய—நிறம்-ஒளிபொருந்திய—சிறகர்-சிறைகளை—நோக்குறும்-பார்க்கவேண்டுமென்கிற—மோகமே-ஆசையினாலேயே—பிடித்தனன்-(உன்னைப்)பிடித்தேன்—முழுதும்-முழுமையும்—நோக்கினன்-பார்த்தேன்—போகுதி-(நீ)போகத்தக்கவிடத்திற்கு—எனா-போவென்று—விடுத்தனன்-(அதனை)விட்டான்—(எ-று.) (கருத்து) அரசன்-அன்னத்தைவிட்டான். (௭௬)

அன்னத்தைக்கண்ணுற்றபடலம் - முற்றும்.

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

# அன்னத்தைத்தூதுவிட்டபடலம்.



(அஃதாவது-நளமஹாராஜன் அன்னத்தைத்தூதுவிட்டதாகும்.)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிறைவடங்கிடந்துகணங்குபூத்தொளிருப்பேரிளவனமுலை
திளைப்ப, நறவுகொப்பளிக்குந்தெரியல்சூழ்மார்பனண்மல
ர்பொருவுமென்கரத்திற், றறவுகொண்டெழுந்தபொலஞ்சி
றையன்னந்தொல்வினைதொடரறுத்தின்ப,நிறைகடற்றிளைக்
குமவரின்புற்றுநீடிளாவாவிபுக்கதுவே.................. *

(இ-ள்) நறவு-தேனை—கொப்புளிக்கும்-கக்குகின்ற—தெரியல்-பூமாலையினால்—சூழ்-சூழப்பட்ட—மார்பன்-மார்பையுடைய நளமஹாராஜனானவன்—பிறைவடம்-சந்திரஹாரமானது—கிடந்து-தங்கியும்—கணங்கு-தேமலானது—பூத்து-படர்ந்தும்—ஒளிரும்-விளங்கப்பெற்றுள்ள—பேரிளவனம்-பெருமையுமிளமையுமடைகும்பொருந்திய,முலை-(தமயந்தியினுடைய)முலைகளை—திளைப்ப-அனுபவிக்கும்படியாக—நாண்மலர்பொருவும்-அன்றுபூத்ததாம

ரமலர்போலும்—மென்காத்தின்-மெல்லிய(அவன்)கையினின்று ம்—துறவுகொண்டு- துறத்தல்கொண்டு—(தொல்வினை)-முன்னை ச்செயலது—(தொடர்)-சம்பந்தத்தை—(அறுத்து)-ஒழித்து—எழுந்த-புறப்பட்ட—பொலன்-பொன்மயமாகிய—சிறை-சிறைக ளையுடைய—அன்னம்-அன்னமானது—(துறவுகொண்டு)-துறவறத்தைக்கொண்டு—தொல்வினை-பழவினையாகிய—தொடர்-சங்கிலியை—அறுத்து-கட்டறுத்து, இன்பநிறைகடல்-பேரின்பக்கடலில்—திளைக்குமவரின்-முழுகியோர்போல—இன்பற்று இன்பத்தினுலேமிகுந்து—நீள-நீள்கின்ற—திரை-அலைகளையுடைய—வாவி-தடாகத்தின்கண்—புக்கது-சென்றது—(எ-று)(கருத்து) அன்னமானது தடாகத்தினிடத்துச்சென்றது, எ-ம். (க)

பொன்னிறத்தூவிப்பவளவாய்ச்செங்காற் பொற்புறுபசியசூட்டரச, வன்னமெய்புதறிச்சிறைபுளர்ந்தயல்சூழனக்குழாத்திடைவதிதரலும், கன்னவிறிரடோளிறைகரதழுந்துஞ்சிறையினைக்காண்டலும்வெருவி, முன்னையதன்றென்றிருந்தபுட்குலங்கண்முளரியந்தடத்தகன்றனவே................ *

(இ-ள்.) பொன்-பொன்வடிவமாகிய—நிறம்-காந்திபொருந்திய—தூவி-இறகையும்—பவளம்-பவளம்போலும்—வாய்-வாயையும்—செம்-சிவப்புநிறம்பொருந்திய—கால்-அடிகளையும்—பொற்பு உறு-அழகான்மிகுந்த—பசிய-பசுமைபொருந்திய-சூட்டு-உச்சிக்கொண்டையையுமுடைய—அரசவன்னம்-அரசவன்னமானது—மெய்-(தன்)உடம்பை—உதறி-(சிலிர்த்)துதறி—சிறை-சிறைகளை—உளர்ந்து-(மூக்கினுலே) கீறிக்கொண்டு—அயல்-பக்கத்தில்—சூழ்-(தன்னைக்கண்டுவந்து) சூழ்ந்த—அனம்-அன்னங்களது—குழாத்து-கூட்டத்தினது—இடை-நடுவில்—வதிதரலும்-தங்கியவளவில்—இருந்த-(அங்)கிருந்த—புட்குலங்கள்-அப்பறவைக்கூட்டங்களானவை—கல்-மலைபோல—நவில்-செய்யப்பட்ட—திரள்-குவிந்த—தோள்-தோள்களையுடைய—இறை-அரசனது—கரத்து-கையிலுல்—அழுந்தும்-அழுந்திய—சிறையினை-(அதன்)சிறகளை—காண்டலும்-பார்த்தவளவில்—முன்னையது-அரசனுற்பிடிக்கப்பட்டவரசவன்னம்—அன்று-அன்றென்று நினைத்து—வெருவி-அஞ்சி—முளரி-தாமரையையுடைய—அம்-தடத்து-தடாகத்தினின்றும்—அகன்றன-நீங்கிப்போயின—(எ-று) (கருத்து) தடாகத்திலிருந்தவன்னங்களானவை இவ்வன்னமுன்னையதல்லவென்று நீங்கிப்போயின, எ-ம். (உ)

புன்னைமிரியமதுக்குடம்விரிந்தாற்பேரவும்மெல் மலர்நறும்

பொகுட்டி, யுள்ளுறையன்னங்கொலைத்தொழில்சிறிதுமுரு
ற்றிலனிறையெனத்தேறிக், கள்ளவிழ்கமல மலரெனவகன்ற
கரத்தினின்மீட்டும்வந்தெய்தி, யள்ளிலைநெடுவேலண்ணறனு
ளத்தி னதிசயமிகவிளைத்துரைக்கும்.................... *

(இ-ள்) புள்-பறவைகளது—இனம்- கூட்டமானது—இரிய-அஞ்சியோட—(அதன்பின்)மதுக்குடம்-தேன்குடமானது—விரிந்தால்-வாய்மலர்ந்ததாயின்—போலுமென்- ஒக்குமெனப்படுகின்ற—மலர்-தாமரைப்பூவினது—நறும்- பரிமளம்பொருந்திய--பொகுட்டியுள்-கொட்டையின்கண்ணே—உறை- தங்கிய—அன்னம்-அவ்வன்னமானது—கொலை கொலையாகிய—தொழில்- தொழிலில்— சிறிதும்-சிறிதையாயினும்---இறை-அரசனானவன்—உருற்றிலனென் - (என்னிடத்தே)செய்திலனென்று—தேறி- தெளிந்து—கள்-தேனையுடைய—அவிழ்-மலர்ந்த—கமலமலரென - தாமரைப்பூவென்று(மயங்கியதுபோல)—அகன்ற-(முன்னேதா னீங்கப்பெற்ற—கரத்தினில்-கையின்கண்ணே—மீட்டும்-திரும்பியும்—வந்து-வந்து—எய்தி-அடைந்து—அள்-கூர்மைபொருந்திய—இலை-இலைபோலும்—நெடு-நெடிய—வேல்-வேலையுடைய—அண்ணல் - அவ்வரசனது—உளத்தில்-மனத்தின்கண்ணே—அதிசயம் - ஆச்சரியத்தை—மிக-மிகுதியாக—விளைத்து-உண்டாக்கி—உரைக்கும்- சொல்லும்—(எ-று) (கருத்து) அன்னமானது திரும்பவும் நளன்கையில் வந்ததிசயம்விளைவித்துச்சொல்லும், எ-ம். (கூ)

அளியினமுரன்று துளிநறவருந்து மைங்கணைக் கிழவநன்
னெறிக, டெளிவருநூலோர் * வேட்டமன்னவர்தஞ் செய்
தொழிலென்பரொற்படுத்து, மெளிவருமென்ற னுயர்வினை
நோக்கி விடுத்தலினிரங்குநீர்த்தரங்க, நளிர்கடலுடுத்த புடவி
யிற்றருமநாட்டியதுனதுபேரளியே... ......................*

(இ-ள்) அளியினம்-வண்டினமானது—முரன்று-ஒலித்து—துளி-துளிக்கின்ற—நறு-தேனை —அருந்தும் - உண்ணப்பெறுகின்ற—ஐங்கணை-பஞ்சபாணத்திற்கு—கிழவ - உரியமன்மதனே—நன்னெறிகள்- நல்லவழிகளை—தெளிவரு - ஐயந்திரிபின்றியுணர்ந்த—நூலோர்-தருமநூலையுடையோராகிய---மன்னவர்- அரசரும்--வேட்டம்-வேட்டையை - தம்- தமக்கு—செய்- செய்தற்குரிய—தொழில்-தொழிலாகும்—என்பர்- என்றுசொல்லுவார்— (அப்படியிருக்க) இரங்கு- ஒலிக்கின்ற—நீர்- குணம்பொருந்திய—தரங்கம்- அ

---

* இலக்கணக்கொத்து-வினையியல்-கூ.

லைகளையுடைய—நளிர்-குளிர்ச்சிபொருந்திய—கடல்-கடலை—உடுத்த-மருங்கிற்கொண்ட—புடவியில்-பூமியின்கண்—எற்படுத்தும் (நீ) என்னைப்பிடித்தும்— எளிவரும்-எளிமைக்கிடைத்த— என் - எனது—அயர்வினை-வருத்தத்தை—நோக்கி - பார்த்து—விடுத்தலின்-விடுதலால்—தருமம்-இந்தத்தருமத்தை—நாட்டியது-(உன்னிடத்தே) நிறுத்தியது—உனது-உனது—பேர்-பெரிய—அளியே - கருணையே (இரக்கமே) யல்லவோ—எ-று. * இலக்கணக்கொத்து - முதனிலையன்றியுந் தொழிற்பெயர்மொழிகுவர்-இவ்விதியால் வேட்டம் என்றது-முதனிலையில்லாததொழிற்பெயர். (கருத்து) அன்னமாகவேட்புகழ்ந்துசொல்லிற்று, எ-ம். (சு)

வருந்தமுன்புகன்ற கொடியவென்மொழியின் வரும்பிழைய
னைத்தையுமின்னே, திருந்தலர்க்கடந்தோய்மகிழுமாசெய்து
தீர்க்குவன்றினஞ்செய்வோன்வெய்தா, விரிந்ததன்கதிரினலை
கடலுடுத்த மேதினியிடத்தபைங்கூழ்கள், கரிந்தனதளிர்ப்ப
வெள்ளிவீழன்னகணமழைபொழிவதுகடுப்ப........ *

(இ-ள்) திருந்தலர்-பகைவரை—கடந்தோய்-வென்றவனே—முன்-நான்பிடிபட்டிருந்தபோது—வருந்த-(நீ)வருந்தும்படி—புகன்ற-சொல்லப்பட்ட—என் - எனது—கொடிய - கொடிதாகிய—மொழியின்-சொல்லினால்—வரு-வந்த—பிழையனைத்தையும்- குற்றமுழுதையும்—மகிழுமா- (வருந்தியநீ) மகிழும்படியாக—செய்து-(ஒருபெரியவுபகாரத்தைச்)செய்து—அலை - அலைகளையுடைய—கடல்-கடலை—உடுத்த-மருங்கிற்கொண்ட—மேதினியிடத்த- பூமியிலுள்ளனவாகிய—பைங்கூழ்கள்- பயிர்களானவை—(வருந்த) வருந்தும்படி—தினஞ்செய்வோன்-சூரியனானவன்—வெய்தா-கொடிதாக—விரிந்த-விரிக்கப்பட்ட—தன்-தனது—கதிரின்-கிரணத்தினால்—(வரு)வந்த—பிழையனைத்தையும் - குற்றமுழுதையும்—கரிந்தன-வாடியஅப்பயிர்கள்—தளிர்ப்ப-செழிக்கும்படியாக—வெள்ளிவீழன்ன-வெள்ளிவிழுதுகள்போலும்—கணம்- துளிகளையுடைய—மழை-மழையை—பொழிவதுகடுப்ப - பொழிதலைப்போல—தீர்க்குவன்-(நான்) தீர்ப்பேன்—இன்னே - இப்போது— எ-று [கருத்து] அரசனே நான்செய்தகுற்றத்தை நீர்மகிழும்படி தீர்ப்பேனென் றன்னஞ்சொல்லியது, எ-ம். (ரு)

மல்லலம்புவனம் பொதுவறப்புரக்குமன்னவர் மன்னநின்ற
னக்கோர், புல்லியபறவையியற்றுகைம்மாறொன் றில்லெனும்
புணர்ப்பறிந்தாலும், மொல்லையிற்கைம்மாறியற்றுவேனென்று
மருத்திடன் னுளத்தினனாகி, யல்லலுற்றழுந்தவிருமாலத

னையடிகள்கேட் * டருடியென்றறையும்.............. ..*

(இ-ள்)மல்லல்-வளம்பொருந்திய—புவனம்-பூமியை.-பொது-பொதுமையினின்றும்—அற - நீங்க—புரக்கும்-காக்கின்ற—மன்னவர்மன்ன-ராஜாதிராஜனே—நின்றனக்கு-உனக்கு---ஓர்புல்லியபறவை-ஒருசிறியபறவையால்—இயற்று- செய்யத்தகும்—கைம்மாறொன்று-ஓரெதிர்நன்றி—இலதெனும். இல்லையென்கின்ற—புணர்ப்பு-நியாயத்தை—அறிந்தாலும்-(யா)னறிந்திருந்தும்---ஒல்லையில்-விரைவிலே—கைம்மாறு - ஓரெதிர்நன்றியை—இயற்றுவென்னும்-செய்யென்றேவுகின்ற—அருத்தி-ஆசையானது—என்- என்னுடைய—உளத்தினதாகி- மனத்திலுள்ளதாகி—அல்லலுற்று-துன்பமிகுந்து—அழுந்த-(அதில்)அழுந்தும்படியாக—ஈரும்- அறுக்கின்றது—அடிகள்-சுவாமீ—அதனை- அந்நன்றின்ற—கேட்டருடியென்று-கேட்டருளென்று---அறையும்-(அன்னம்)சொல்லும் எ-று.
[கருத்து]சக்கிரவர்த்தியே என்வார்த்தையைக்கேட்டருளுமென்று சொல்லிற்று,எ-ம். (௬)

பொன்னினிற்செய்த வள்ளவாயமுதம் பூவையைக்கிள்ளையை
யருத்திக், கன்னலினமிழ்தினிற் கனிந்தமென்சொற்கள் பயிற்றி
யுங்கேட்டுளங் களிப்பார், மன்னவர்மன்ன நின்னுளத் தேறு
மடமொழி யாயினுமீதோ, ரன்னமென்சொல்லென் றதிசய
ஞ்சிறப்ப வகமலர்ந்தினிதுகேட்டருள்வாய்............... *

(இ-ள்) பொன்னினில்-கனகத்தினாலே—செய்த-செய்யப்பட்ட—வள்ளவாய்-கிண்ணத்திலுள்ள---அமுதம் - அமிர்தத்தை---பூவையை-நாகணவாய்ப்புள்ளையும்---கிள்ளையை-கிளியையும்---அருத்தி-ஊடிப்பித்து---கன்னலின்-சர்க்கரையிலும்--அமிழ்தின் - அமிர்தத்திலும்--கனிந்த-மதுரமுதிர்ந்த--மென்-மெல்லிய--சொற்கள்-சொற்களை--பயிற்றியும்-கற்பித்தும்--கேட்டு-(அவைபேசக்)கேட்டு---உளங்களிப்பார்-உலகத்தார்மனமகிழுவார் (ஆகையால்)--மன்னவர்மன்ன-ராஜாதிராஜனே--ஈது- இச்சொல்லானது--- நின்னுளத்து-உனதுமனத்தில்--ஏறு-ஏறமாட்டாத--மடம்- அறியாமையோடுகூடிய--மொழியாயினும்-சொல்லாயினும்--ஓரன்னம்- ஓரன்னத்தினது--மென்-மெல்லிய--சொல்லென்று - மொழியென்று--அதிசயம்-ஆச்சரியமானது--சிறப்ப-சிறந்துதோன்ற--அகமலர்ந்து - மனமகிழ்ந்து--இனிது - இனிதாக--கேட்டருள்வாய்-(நீ)கேட்டருளு—

---

* தொன்னூல்விளக்கம்- ஏவலொருமைக் கியலுமாய்திமே
இவ்விதியால்-அருள்-தி-அருடி-என்றாயிற்று.

(எ-று) (கருத்து) அன்னம் நன்சொல்லைவிரும்பிக்கேட்க வேண்டு மென்று சொல்லியது என்பதாம். (௭)

குடவளை யினங்கள் வயிறுளைந்தீன்ற குருமணிகருவெனவுயி
ர்த்து, மடல்முறுக்கவிழும் கமலமென்பொகுட்டில் வரிச்
சிறைக்குருகடை கிடக்குந், தடநிறைவாளைபகட்டினமுகளு
ந்தண்பணைவிதர்ப்பநாடுடையோன், விடுசுடர்பரப்பி விளங்
குபொற்கழலான் வீமனென்றுளனொருவேந்தன்..........*

(இ-ள்) குடம்-குடம்போலும்--வளையினங்கள் - சங்கினங்களா ல்--வயிறு-(தம்)வயிறு--உளைந்து-நொந்து--ஈன்ற-தரப்பட்ட--கு ரு-நிறம்பொருந்திய--மணி-முத்துக்களை--கருவென - முட்டைக ளென்று--உயிர்த்து-மயங்கி---மடல்- இதழ்களது---முறுக்கவிழு ம்-கட்டவிழ்க்க--கமலம்-தாமரைப்பூவினது---மென-மெல்லிய-- பொகுட்டில்-கொட்டையின்கண்ணே--வரி-நீட்சிபொருந்திய --சி றை-சிறைகளையுடைய---குருகு-நாரைகளானவை---அடைகிடக்கு ம்-அடைகாக்கப்பெறுகின்ற--தடம்-தடாகத்தையும் --நிறை பரு த்த--வாளை ஆண்வாளைகளானவை--பகட்டு- எருமைக்கடாக்களு டைய--இனம்-இனத்தின்மேல்--உகளும் - குதிக்கப்பெறுகின்ற-- தண்-தண்ணிய--பணை-கழனிகளையும்உடைய--விதர்ப்பநாடு-விதர் ப்பதேசத்தை--உடையோன்-உடையவனும்--விடு-வீசப்படுகின்ற --சுடர்-கிரணங்களை--பரப்பி-விரித்து---விளங்கு-விளங்காநின்ற-- பொன்-பொன்னாலாகிய--கழலான்-வீரக்கழலையுடையவனும்ஆகிய ---ஒருவேந்தன்-ஓரரசனானவன்---வீமனென்று-வீமனென்றுசொ ல்லப்பட்டு--உளன்-இருக்கின்றான்---(எ-று) (கருத்து) விதர்ப்ப தேசத்தையாளும் வீமராஜனென்னுமோர் ராசனிருக்கிறானென்ற து என்பதாம். (௮)

அருந்தவத்தமன முனியருள்வரத்தா லாயிழை யரம்பையர்த
ம்மின், முருந்திளமுறுவ னாகமங்கையரின் முகிழ்முலைப் பு
விமடந்தையரின், வருந்தியுமுவமை கூறுதற்கரிதா வனப்
பொருவடிவெடுத்தனைய, கருந்தடநெடுங்கட் கதிர்முலைத்து
வர்வாய்க் கன்னியையரிதினிற் பயந்தான்...............*

(இ-ள்) அரு-அரிய---தவம்- தவத்தையுடைய---தமனமுனி - த மனமுனிவனின்றும்--அருள்-அருளாற்பெறப்பட்ட--வரத்தால்-வ ரத்தினாலே--ஆய்-ஆராய்ந்தெடுக்கப்பட்ட--இழை- ஆபரணங்களை யுடைய--அரம்பையர்தம்மின்-தெய்வமங்கையருள்ளும்--முருந்து -மயிலிறகினடிபோலும்--இளமுறுவல்- சிறியபற்களையுடைய-- நாகமங்கையரின்-நாகலோகமங்கையருள்ளும்--முகிழ்- தாமரை

அரும்புபோலும்--முலை-முலைகளையுடைய---புவிட்டத்தையரின்-பூ
லோகத்துமங்கையருள்ளும்--வருந்தியும்- வருத்தமுற்றும்--கூறுத
ற்கு-சொல்லுதற்கு---உவமை-உபமானம்--அரிதா-இல்லாததாக---
வனப்பு-அழகானது---ஒருவடிவு-ஒரு(மங்கை)வடிவத்தை--எடுத்த
னைய-எடுத்தாற்போலும்--கரு-கரிய--தடம்-விசாலம்பொருந்திய
--நெடு-நெடிய--கண்-கண்களையும்--கதிர்- காந்திபொருந்திய--மு
லை-முலைகளையும்-- துவர்-பவளம்போலும்---வாய்-வாயையுமுடைய
--கன்னியை-ஒருபெண்ணை--அரிதினில்- அரியசெயலால்--பயந்தா
ன்-(அவ்வீமராஜன்)பெற்றான்-எ-று. (கருத்து) தமனமுனிவரத்தா
ல்வீமராஜன் ஒருபெண்ணைப்பெற்றான் என்பதாம். (௯)

களைகடிந்தொதுங்குங் கடைசியர்நெடுங்கண்காவிமென்மல
ரெனக்கருதி, விளரிவண்டினங்க*ளலமருங்கழனி விதர்ப்
பர்கோன்றலத்தினிற்றோன்றி, மூளரியந்தவிசி லினிதுவீற்றி
ருக்கு முகிழ்முலைமதர்விழித்திருவே, தளிர்நலங்கவற்றுமல
த்தகமலர்த்தாட்டமயந்தியெனும்பெயர்தரித்தாள்... ... *

(இ-ள்) மூளரி தாமரைப்பூவாகிய--அம்-அழகிய--தவிசில்- ஆச
னத்திலே--இனிது-அழகாக--வீற்றிருக்கும்-எழுந்தருளியிருக்கின்ற
---முகிழ்-தாமரையரும்புபோலும்- -முலை-முலைகளையும்-- மதர்-ம
தர்த்த--விழி-கண்களையுமுடைய--திருவே-ஸ்ரீதேவியே--களை (பயி
ர்க்களையை--கடிந்து-பிடுங்கி-ஒதுங்கும்--நடக்கின்ற- கடைசியர்--
உழத்தியருடைய-நெடுங்கண்-நெடியகண்களை,காவி-நீலோற்பலங்
களுடைய--மென்மலரென-மெல்லியமலர்களென்று--கருதி- நினை
த்து--விளரி-விளரிராகத்தைப்பாடுகின்ற,வண்டு-வண்டுகளுடைய,
இனங்கள்-இனங்களானவை,அலமரும்-சுழலுகின்ற--கழனி-கழனி
களையுடைய--விதர்ப்பர்-விதர்ப்பதேசத்தாருக்கு--கோன்-அரசனா
கியவீமனது--தலத்தினில்-தலத்திலே, தோன்றி-பிறந்து-தளிர்ந
லம்-தளிர்களின்சிறந்ததை--கவற்றும்-வருத்துகின்ற---அலத்தகம்-
செம்பஞ்சுக் குழம்பையுடைய- மலர்-செந்தாமரை மலர்கள்போ
லும், தாள்-பாதங்களையுடைய--தமயந்தியெனும்-தமயந்தியென்கி
ன்ற,பெயர்-பெயரை--தரித்தாள்-தரித்திருக்கின்றாள்---(எ-று) (க
ருத்து) இலக்குமியே தமயந்தியென்னும்பெயரைத் தரித்திருக்கி
ன்றாள் என்பதாம். (௰)

நீனிறமுகிலோ பசியசைவலமோ நெடுந்திரை கொழித்தமெ
ன்னறலோ, பானலங்கொண்டபணிமொழித்துவர்வாய்ப்பை
தொடிகரியமென்கூந்த, றேனினமுரன்றுழலைதந்துதாது

* தொல்காப்பியம்-அலமரறெருமரலாயிரண்டுஞ்சுழற்சி.

ஞ்சினைமலர்த்தொடையொடும்வேய்ந்து,நானமும்புழுகுங்க
மழ்தர நீவிநள்ளிருள் குடியிருந்ததுவே......................*

(இ-ள்) பால்-பாலினது--நலம்-இனிமையை--கொண்ட-(தன்னிடத்தே)கொண்ட--பணி-வணக்கம்பொருந்திய-மொழி-சொல்லையும்--துவர்-பவளம்போலும்--வாய்-வாயையும் உடைய---பைந்தொடி-தமயந்தியினது--கரிய-கருமைபொருந்திய--மெல்-மெல்லிய---கூந்தல்-கூந்தலென்று சொல்லப்படுகிறபொருள்--நீனிறம்-நீலநிறம்பொருந்திய,முகிலோ-மேகமோ,பசிய-பசுமைபொருந்திய,சைவலமோ-கொடிப்பாசியோ,நெடுந்திரை-நெடியகடலலைகளாலே--கொழித்த-கொழிக்கப்பட்ட,தெள்ளறலோ-தெள்ளியகருமணலோ தேன்-வண்டுகளது--இனம்-கூட்டமானது---முரன்று-ஒலித்து---துவைந்து-நெருங்கி,தாது-மகரந்தத்தில்,ஆடும்-விளையாடப்பெறுகின்ற---சினைமலர்-கோட்டுப்பூக்களாலாகிய--தொடையொடும்-மாலையையும்,வேய்ந்து-சூடப்பெற்று, நானமும்-கஸ்தூரியையும், புழுகும்-புழுகையும்,கமழ்தர-பரிமளிக்க--நீவி-தடவப்பெற்று, நள்ளிருள்-பாதியிரவினிருளானது, குடியிருந்தது--குடியிருக்கப்பெற்றுளது(அப்பொருள்,எ-று (கருத்து) அன்னந்தமயந்திகூந்தற்சிறப்பைச்சொல்லியது. (யக)

கண்கவர்வனப்பிற்சிந்துரந்தீட்டிக்கவின்செய்பொன்னிறத்த
தாய்ச்சிறந்த, தண்பிறைக்கொழுந்தொன்றுளதெனிற்றிலத
த்தையல்வாணுதலினை நிகர்க்குந், தெண்கடலமிழ்திற்கனிந்த
வந்தீஞ்சொற்சேயிழைமுகத்தொளிர்புருவம், வெண்கதிர்க்கு
டையிவிரதியுமதனும்வைத்தகைவில்லினைபொருவும்........*

(இ-ள்) கண்-கண்களின்பார்வையை--கவர்-தன்னிடத்தேயிழுத்துக்கொள்ளுகின்ற--வனப்பின்-அழகையுடைய--சிந்துரம்-சிந்தூரதிலகத்தை--தீட்டி-எழுதப்பெற்று--கவின்செய்-அழகைச்செய்கின்ற, பொன்னிறத்ததாய்-பொன்னிறத்தையுடையதாகி--சிறந்த-உயர்ந்த---தண்-குளிர்ச்சிபொருந்திய--பிறைக்கொழுந்தொன்று-ஓரிளம்பிறையானது--உளதெனின்-உளதாயின்--தையல்-தமயந்தியினது-திலதம்--சிந்தூரதிலகத்தையுடைய---வாள்-ஒளிபொருந்திய---நுதலினை-நெற்றியை---நிகர்க்கும்-(அது) ஒக்கும்--தெள்-தெள்ளிய---கடல்-பாற்கடலினது---அமிழ்தின்-அமிர்தம்போல்--கனிந்த-முதிர்ந்த--அம்-அழகிய---தீம்-மதுரம்பொருந்திய---சொல்-சொற்களையும்உடைய----சேயிழை-தமயந்தியினது---முகத்து-முகத்திடத்தே--ஒளிர்-விளங்காநின்ற--புருவம்-இரண்டு

புருவங்களும்--இரதியும்--இரதிதேவியாலும்--மதனும்-மன்மதனு ஞுடைய--வெண்கதிர்-சந்திரனாகிய--குடையில்- குடையின்கண்ணே-- வைக்கப்பட்ட--கையில்வீணை--(அவர்கை) வில்லிரண்டை யும்--பொருவும்-ஒத்திருக்கும்---எ.று.[கருத்து] நெற்றிச்சிறப்பும் புருவங்களின் சிறப்புஞ்சொல்லியது,எ-ம். (௰௨)

குமிழ்மிசைமறிந்துகுழையெதிர்நடந்துகொலைத்தொழிலின் *
மறலியைப்பற்றி, யமிழ்தினின்விளர்த்துணைஞ்சிலிற்கருகி
யையரிசிதறிமைதோய்ந்து, கமலமென்மலரைவனம்புகுத்தி
யவேற்கண்ணிணைமான் மருளொக்கநீ,தமதெனக்கவர்ந்துகொ
ண்டவோமடமான்றடங்கணின்செயல்கவர்ந்தனவோ...... *

(இ-ள்) குமிழ்- மிகுழம்பூவினது--மிசை- மேற்பக்கத்தில்--மறி ந்து - மீண்டு--குழை - குழையெனப்படுகின்றகாதணிக்கு--எதிர்-முன்பாக--நடந்து-சென்று--கொலை - கொல்லுதலாகிய---தொழி ல்-தொழிலை--மறலியை-யமனுக்கு--பைபிற்றி-கற்பித்து--அமிழ்தி னில்- அமுர்தத்திலும்--விளர்த்து சுற்றிடம்விளர்த்து, உள்-நடுவில்-நஞ்சிலில - விஷத்திலும்---கருகி - கறுத்து---ஐயரி - அழகியரே கைகள்--சிதறி-சிதறப்பெற்று--மை- அஞ்சனத்திலே - தோய்ந்து-மூழ்கி--கமலமென் தாமரையெனப்படுகிற--மலரை - பூவை--வன ம்-காட்டிலே--நீரிலே- புகுத்திய--அடைவித்த - வேல்--வேல்போ லும்--கண்ணிணை-(தமயந்தியின்)கண்களிரண்டும்,மான் - மானின துமருள்-மருட்சிபொருந்திய,நோக்கம்- பார்வையை,தமதென-த ம்முடையதென்று--கவர்ந்துகொண்டவோ - வெளவிக்கொண்டன வோ,மடமான்-தமயந்தியினுடைய,தடம்-விசாலம்பொருந்திய--க ணின்-கண்களினது,செயல் - செய்கையை---கவர்ந்தனவோ-(அம் மான்)--கண்கள்-வெளவிக்கொண்டனவோ---(எ-று) * தடுமாறு ருபுகடாஞ்சிலவுளவே இவ்விதியால் மறலிக்கு- என்றது மறலியை எனஉருபுமயங்கிற்று (கருத்து) கண்களின் சிறப்புச்சொல்லியது என்பதாம். (௰௩)

வேனில்வேள்வனப்புநோக்குதற் கமைத்த விளங்குகண்ணாடி யோவொவிரும், பானலங்கண்வாடட்டியகிடந்த சாணையின் படிவமோகப்பாலது, கான்வழிந்தொழுகுஞ்சண்பகமலரைக் கடிந்துமென்குமிழிணைத்தூரந்துள், ளூனையுமுருக்குமொழு கும்பொற்கொடிமூக்குவமைபாமூனாகருமாறறிதே ....... *

(இ-ள்) ஒழுகு-நேர்மைபொருந்திய--பொன் - பொன்மயமாகி ய--கொடி- பூங்கொடிபோல்பவளது--கபோலம் - கதுப்பென்று

சொல்லப்படுகின்றபொருள்களானவை—வேனில் - வசந்தகாலத்தி
ற்குரிய—வேள்-மன்மதனுடைய—வனப்பு-அழகை—நோக்குதற்
கு-பார்த்ததற்காக—அமைந்த-(நான்முகனால்) உண்டாக்கப்பட்ட
—விளங்கு-விளங்காநின்ற—கண்ணாடியோ-கண்ணாடிகளோ—ஒளி
ரும்-விளங்காநின்ற—பானலம்- கருங்குவளைமலர்போலும்—கண்—
கண்களாகிய—வாள்-(அவளுடைய) வாள்களை—தீட்டிய-தீட்டுதற்
பொருட்டு—கிடந்த-தங்கிய—சாணையின்- சாணைக்கல்லினுடைய
படிவமோ-வடிவங்களோ—கான்-வாசனையானது—வழிந்து-பெரு
கப்பெற்ற—ஒழுகு-நீண்ட—சண்பகமலரை- சண்பகப்பூவைக்கடி
ந்து கோபித்து—மென்குமிழினை - மெல்லியகுமிழம்பூவை தூற்
று—தூற்றி-(உள்-கண்டோர்)களுள்ளத்தையும், உணர்வையும்-உடம்பை
யும்—உருக்கும் உருக்காநின்ற, மூக்கு-(அவளது மூக்குக்கு—உவ
மை-உபமானத்தை—யாம்-நாம்—உரைக்குமாறு - சொல்லும்வழி
—அரிது-இல்லை—(எ-று.) கபோலங்களின்சிறப்புமூக்கின்சிறப்பு
ஞ்சொல்லியது என்பதாம். (௰௪)

வள்ளைவார்காதுநோக்கினருள்ளமகிழ்ந்தினிதாடுபொன்னூசல்
கள்ளவிழாம்பற்செய்யவாய்ப்பவளக்கடிகைவாணகையொளிர்தரளந்
தெள்ளிதிற்கோத்துப்பவள வள்ளத்திற்சேர்த்தியதாகுமஞ்செறி
சொல்கிள்ளையங்கிளவிகுயின்மொழியலதியாதெனக்கிளக்கலாவது
[வே.

(இ-ள்) வள்ளை-வள்ளையிலைபோன்ற—வார்-நீட்சிபொருந்திய—
காது-(அவள்)காதுகளானவை—நோக்கினர்-பார்த்தவருடைய—
உள்ளம்-உள்ளங்களானவை—மகிழ்ந்து-களித்து—இனிது-இனி
தாக—ஆடு-ஆடப்பெறுகின்ற—பொன்னூசல் - பொன்னூஞ்சல்க
ளாகும்—கள் - தேனையுடைய—அவிழ் - மலர்ந்த—ஆம்பல்- அல்
லிமலர்போலும்—செய்ய-சிவப்புநிறம்பொருந்திய—வாய்-(அவள்)
உதடானது—பவளக்கடிகை-பவளத்துண்டாகும்—வாள் - காந்தி
பொருந்திய—நகை-(அவள்) வாயைச்சேர்ந்த-பல்வரிசையானது
—ஒளிர்-விளங்குகின்ற—தரளம்-முத்துக்களை—பவளவள்ளத்தில்-
பவளக்கிண்ணத்திலுள்ளே—தெள்ளிதின்-தெளிவுடையதாக—கோ
த்து-கோத்தல்செய்து—சேர்த்தியதாகும்-சேர்க்கப்பட்டகோவை
யாகும்—அஞ்செறி-அழகாநிறைந்த—சொல்-(அவள்) சொல்லு
க்கு—கிள்ளை-கிளியினது—கிளவி-சொல்லும்—குயில் - குயிலின
து—மொழி-சொல்லும்—அலது-(உபமானங்க) ளல்லாமல்—யா
தென-(வேறே)யாதென்று—கிளக்கல்-சொல்லுதல்—ஆவது-ஆகு
ம்—(எ-று)(கருத்து)செவிவாய்பல்சொல்இவற்றின்சிறப்புச்சொல்
லியது என்பதாம் (௰௫)

ஒழுகொளிவிரிந்த கதிர்மணிவண்ண னுந்தியந்தாமரையுறை
யோன், முழுமதிக்கலையு ணிறைந்தபேரழகைமொண்டுகொ
ண்டரியபரந்தகன்ற, மழைமதர்நெடுங்கட் டமயந்திவதனம்
வகுத்தனன்கரத்தினாலெடுத்த, புழைவழித் * தோன்றும்வி
சும்பினையன்றோ களங்கமென்றின்னமும்புகல்வார்.........*

(இ-ள்) ஒழுகு-நீள்கின்ற—ஒளி-காந்தியையும்—விரிந்த-பரந்த—கதிர்-கிரணங்களையும்—மணி-நீலமணிபோலும்—வண்ணன்-நிறத்தையுடைய திருமாலது—உந்தி-நாபியிலுண்டாகிய—தாமரை-தாமரைப்பூவில்—உறைவோன்-வாசஞ்செய்கிறநான்முகக்கடவுள்—முழுமதிக்கலையுள்-பதினாறுகலைகளாலுநிறைந்தசந்திரனிடத்தே—நிறைந்த-நிரம்பிய, பேரழகை உயர்வாகியசாரத்தை—மொண்டுகொண்டு-(கையினாலே)மொண்டுகொண்டு—அரி-இரேகைகள்—பரந்து-படரப்பெற்று—அகன்ற-விசாலித்த—மழை-குளிர்ச்சிபொருந்திய—மதர்-களித்திருக்கின்ற—நெடு-நெடிய—கண்-கண்களையுடைய—தமயந்தி-தமயந்தியினது—வதனம்-முகத்தை—வகுத்தனன்-படைத்தான்—கரத்தினால்-கையினால்—எடுத்த-எடுக்கப்பெற்ற—புழைவழி-துவாரத்தின்வழியிலே—தோன்றும்-காணப்படுகிற—விசும்பினையன்றோ-(நீலநிறமுள்ள) ஆகாயத்தையன்றோ—களங்கமென்று-களங்கமென்று—இன்னமும்-இப்போதும்—புகல்வார்-சொல்லுவார் (உலகத்தார்)—(எ-று) * அறுதொகையறைகுவரறிவுடையார்பலர்-படுதொகையொடுதொகை யேழென்பார்சிலர்-இவ்விதியால் தோன்றப்படுவிசும்பெனப் படுதொகைவிரிக்க-(கருத்து) தமயந்தியினது முகத்தின் சிறப்புச் சொல்லியது என்பதாய். (௰௬)

செய்புனமமுதப் பசுங்கரும்பேய்ப்பத் திரண்டழகொழுகு
மென்றடந்தோள், பெய்வளை முன்கைக் கிணையயன் வகுத்த
பொருள்களிற் பேசுவதெவனோ, வெய்யவன்கதிர்க ளலர்த்து
செங்கமல மெல்லடிக்குடைந்தன வென்றாற், கையிணைமல
ருக் கிணையெனவுரைத்தல் கழிமடனலதுவேறிலையே.. ... *

(இ-ள்) மெல்-மெல்லிய—தடம்-பெரிய—தோள்-தமயந்தியினுடையதோள்களானவை—செய்புனம்-கழனியிலிருக்கிற—அமுதம்-அமிர்தத்தையுடைய—பசுங்கரும்பேய்ப்ப-பசியகரும்புபோல—திரண்டு-திரட்சிபொருந்தி—அழகொழுகும்-அழகுபெருகப்பெற்றிருக்கும்—பெய்வளை-இடப்பட்டவளையல்களையுடைய—முன்கைக்கு-(அவள்)முன்னங்கைகளுக்கு—இணை-உபமானம்—அ

* இலக்கணக்கொத்து-வினையியல்-௰௫-௫.

டன்-நான்முகக்கடவுளால்—வகுத்த - படைக்கப்பட்ட—பொருள்களில்-பொருள்களுள்ளே—பேசுவது-சொல்லத்தகுவது—எவன்-யாது—வெய்யவன்-சூரியனுடைய—கதிர்கள்-கிரணங்களால்—அலர்தரு-மலர்த்தப்படுகின்ற—செங்கமலம்-செந்தாமரை மலர்களானவை—மெல்லடிக்கு-மெல்லியவடிகளுக்கு—உடைந்தனவென்றும்-தோற்றனவென்று சொன்னால்—இணை-இரண்டாகும்—கை-கைகளாகிய—மலருக்கு-மலர்களுக்கு—இணையென - உபமானமென்று—உரைத்தல்-சொல்லுதற்குக்காரணம்—கழி- மிகுந்த—மடமையது-அறியாமையல்லாமல்—வேறு- மற்றொருகாரணம்—இலை-இல்லை—(எ-று)(கருத்து) தோள்கள் முன்னங்கைகள் கைகள் இவற்றின்சிறப்புச்சொல்லியது என்பதாம். (யஎ)

இழையிடைபுகாது மார்பிடங்கொண்ட வேரிளவனமுலைவள்
ளைக், குழைபொருங்கண்ணி யெழிற்கடற்பிறந்தகுமிழியோ
வதனிடைநீந்த, விழைவுறுமதனும் பருவமுமமைத்து விள
ங்குபொற் குடங்கொலோ வதனிற், றழைசிறைத்தேமிப் புட்
கொலோகமல முகைகொலோவென்கொல்சாற்றுவதே... *

(இ-ள்) இழை-நூலும்—இடை-நடுவிலே—புகாது-நுழையாதிருக்கும்படி—மார்பு-மார்பை—இடம்-(தமக்) கிடமாக—கொண்ட-கவர்ந்த—ஏரிளவனம்-அழகும்—இளமையும்-சந்தனக்கோலமும்பொருந்திய—முலை-முலைகளென்றுசொல்லப்படுகிற பொருள்களானவை—வள்ளை-வள்ளைப்போதுங்காதுகளைச்சூழ்ந்த—குழை-குழைகளோடு—பொரும் - போர்செய்கின்ற—கண்ணி - கண்களையுடையவளது—எழில்-அழகாகிய—கடல்-கடலின்கண்ணே—பிறந்த-உண்டாகிய—குமிழியோ - குமிழிகளோ, அதனிடை-அக்கடலின்கண்ணே—நீந்த-நீந்துதற்கு—விழைவுறு-ஆசைகொண்ட—மதனும்-மன்மதனும்—பருவமும்-மங்கைப்பருவத்தினும்—அமைத்து-உண்டாக்கப்பட்டு—விளங்கு- விளங்காநின்ற—பொற்குடங்கொல்-பொற்குடங்களோ—அதனில்- அக்கடலிலிருக்கின்ற—தழை-தழைந்த—சிறை-சிறகுகளையுடைய—தேமிப்புட்கொல்-சக்கரவாகப்பறவைகளோ—(அதனில்) அக்கடலிலேதோன்றிய—கமலமுகைகொல்-தாமரையரும்புகளோ—என் - (இவற்றுள்ளே)யாது—சாற்றுவது-(என்னாற்)சொல்லப்படுவது—(எ-று) (கருத்து) முலைகளின்சிறப்புச்சொல்லியது என்பதாம். (யஅ)

மால்புரி முலைமென் கமலநாண் முகையில் வண்டுவீழ் மாலை
யோபசும்பொற், சேலைமீதணிந்த மேகலைமணியி னொருசு
டர்செவ்வனின்றதுவோ, நூலினுநுடங்கு மருங்கிலு * தத

ங்க னுண்ணிதிற்சலாகைசேர்த்தியதோ, வாலிளந்தளிரினழகு
வீற்றிருந்த வவ்வயிறணிமயிரொழுங்கே.................. *

(இ-ள்) ஆல்-ஆலினது—இளந்தளிரின் - சிறுதளிரினது—அழகு-அழகானது—வீற்றிருந்த-கொலுவிருக்கப்பெற்ற—அவ்வயிறு-அந்தமயந்திவயிற்றை—அணி-அலங்கரித்துக்கொண்டிருக்கின்ற—மயிரொழுங்கு- மயிரொழுங்கென்றுசொல்லப்படுகிறபொருளானது—மால்-ஆசையை— புரி-செய்கின்ற—முலை- முலைகளாகிய—நாள்-மலரும்—பருவத்தையுடைய—மெல்-மெல்லிய—கமலம் - தாமரையினுடைய —முகையில்-அரும்புகளின் — வீழ்-(வந்து)விழுகிற— வண்டு-வண்டுகளது—மாலையோ- வரிசையோ—பசும்பொன்-பசியபொன்மயமாகிய—சேலைமீது - புடவையின்மேல்—அணிந்த-தரிக்கப்பட்டிருக்கிற—மேகலை- மேகலாபரணத்தினது—மணியின்-நீலமணியினது—செவ்வன்-நேராக— நின்றது - மேலெழுந்துநின்றதாகிய—ஒருவடமோ--ஒருகயிறோ--நூலினும் இளைமயினுமதிகமாக— நுடங்கும்-அசைகின்ற—மருங்கு-இடையானது— இறு-ஒடியாதிருக்க—அநங்கன்-மன்மதனால்— நுண்ணிதின்-நுண்ணிதாக—சேர்த்தியது-சேர்க்கப்பட்டதாகிய—சலாகையோ-இரும்புக்கம்பியோ—(எ-று.) * வடமொழித்திரிபினி லவ்லென் மொழிகளி லந்சாரியையு மகரமுமுன்வரும் - இவ்விதியால் அங்கமிலான் அநங்கன் என்றாயிற்று (கருத்து) வயிற்றுமயிரொழுங்கின் சிறப்புச்சொல்லியது என்பதாம். (௫௧)

படைப்புழிவேதன் கமலமென்மலரைப் பழிக்குமென் கரத்
தினானடுவைப், பிடித்தவுழ்விரல்க ளழுந்தியவரையோ பெட்
புறுமங்கையம்பருவ, மடித்தலுஞ்சேர்த்தியே றுதற்கமைத்த
படிகொலோ வவ்வயிறணிந்த, மடிப்புறுவரையினழகினுக்கு
வமை மற்றுநாமுரைக்குமாறெவனோ.................... *

(இ-ள்) அவ்வயிறு- அந்தமயந்தியின்வயிற்றினால்—அணிந்த-தரிக்கப்பட்டிருக்கிற—மடிப்பு-மடிப்புக்களென்று சொல்லப்படுகிற பொருள்களானவை—படைப்புழி- (அவளைப்) படைத்தபோது—வேதன்-நான்முகக்கடவுளானவன்—கமலமென்- தாமரையையொப்பயிகிற— மலரை-பூவை—பழிக்கும்-நிந்திக்கின்ற—மென்-மெல்லிய—கரத்தினால்-கையினாலே—நடுவை-இடையை— பிடித்தலும்-பிடித்தவளவிலே— விரல்கள்-(அவன்கை)விரல்களானவை—அழுந்திய - அழுந்துகலாலுண்டாகிய—வரையோ - மடிப்புக்களோ—பெட்புறு-விரும்பப்படுகின்ற—மங்கையம்பருவம் - மங்கைப்பரு

* குவலயாநந்தம் - அணியியல் - சூத்திரம்.

வமாகிய(பெண்)—அடிந்தலப்-அடித்தலங்களை—சேர்த்தி - ஊன்
றி—ஏறுதற்கு-ஏறுதற்காக—அமைத்த-(அவளாலே) உண்டாக்கப்
பட்ட—படிகொல்-சோபானங்களை—வரையின் - அம்மடிப்புக்க
ளது—உறு-மிகுந்த-- அழகினுக்கு-சௌந்தரியத்துக்கு--உவமை-
உபமானம்--நாம்-நாம்—உரைக்குமாறு-சொல்லுமாறு—எவண்-
யாது—(எ-று) (கருத்து) வயிற்றுமடிப்புக்களின் சிறப்புச்சொல்
லியது என்பதாம். (௨௰)

சுணங்குபூத்தொருகாழ் மணிவடங்கிடந்த துணையிள வனமு
லைசுமந்து, வணங்கிநாடோறுந் தேய்ந்தன்றோ பெருகும் வ
னப்பெனுங் கடலுளாழ்ந்ததுவோ, கணங்கொள்வண்டார்க்
குங் கணைமதன்கண்ணே றெய்தலுங் கழிந்ததோவன்றி, யண
ங்கரவல்குற்றேர்மிசைவதியு மநங்கனேயிடையறிந்திலமால்.

(இ-ள்) இடை-(அத்தமயந்தியினது) இடையென்றுசொல்லப்ப
கின்றபொருளானது—சுணங்கு-தேமல்—பூத்து - படரப்பெற்று
—ஒருகாழ்-ஒரளவாகியசரங்களையுடைய—மணிவடம்- ரத்நஹார
ம்—கிடந்த-கிடக்கப்பெற்ற—துணை - இரண்டாகிய—இளவனம்-
இளமையுஞ் சந்தனக்கோலமும்பொருந்திய—முலை- முலைகளை—
சுமந்து-சுமத்தலால்—வணங்கி-வளைந்து-- நாடோறும்-தினந்தோ
றும்—தேய்ந்ததோ - (சிறிதுசிறிதாகத்) தேய்ந்துபோயிற்றோ—
பெருகும்-பொங்குகின்ற—வனப்பெனும்- அழகென்கிற—கடலு
ள்-கடலுள்ளே—ஆழ்ந்ததுவோ - முழுகிப்போயிற்றோ--கணம்-
கூட்டத்தை--கொள்-கொண்ட--வண்டு - வண்டுகளானவை-- ஆர்க்
கும்-ஒலிக்கப்பெறுகின்ற--கணை - பூவம்பையுடைய--மதன் - மன்
மதனது--கண்ணேறு-பார்வைக்குற்றமானது--எய்தலும் - அடை
ந்தமாத்திரத்திலே--கழிந்ததோ - இறந்துபோயிற்றோ--அன்றி-
அல்லாமல்--அணங்கு- அழகாகிய--அரவு - பாம்பின்படம்போலு
ம்--அல்குல் - அல்குலாகிய--தேர்மிசை - தேரின்மேலே--வதியும்-
இருக்கின்ற--அநங்கனே-அங்கமில்லாதமன்மதனே--அறிந்திலம்-
(யாம்)அறிந்திலேம்—(எ-று)(கருத்து) இடையின்சிறப்புச்சொல்
லியது என்பதாம். (௨௧)

வெங்கதிர்க் * கடவுள்கொடிஞ்சியந்தேர்க்கு வியப்புறவாழி
யொன்றமைத்த, பங்கமிறெழிலின்பயிற்சியாலநங்கன் பைங்
கிளிக் கூந்தன்மான்றேர்க்குச், செங்கரம்வருந்த மலரயன்வ
குத்த திகிரியோ செய்யபொற்றட்டோ, வங்கரவல்குலதனை
ளவுரைக்கிருடவரவாவினதளவே...................... *

(இ-ள்) அங்கு-அவ்வரையிடத்தைச்சேர்ந்த--அரவு-பாம்பின்ப

பூங்கழைகுழைக்கும் வேனிற்வேள்பகழி பொதிந்தபொன்று
ணம்பெறந்தொரிப்ப - வாங்கவன்வெற்றி குறித்திடவிரிஞ்சனா
லமைத்தகாகளம்பெரீஇயாற்றத் - தேங்கமழ்வாவி நீரிடைக்கு
ளித்துச்சினைவரால்மறைந்திடவரையிற் - றூங்குதேன்பெ
ய்தபச்சிளங்கழையைத்தோழமைகொண்டனகணைக்கால்... *

(இ-ள்) கணைக்கால்-(தமயந்தியினுடைய)கணைக்கால்களானவை—பூங்கழை-அழகியகருப்புவில்லை--குழைக்கும்-வளைக்கின்ற- வேனில்-வசந்தகாலத்திற்குரிய—வேள்-மன்மதனது— பகழி- பூவம்புகளால்---பொதிந்த-நிறைந்த—பொன்-பொன்மயமாகிய— தூணம்-அம்புக்கூடானது—புறந்தொரிப்ப-(தோற்றுப்)புறங்கொடுக்கவும்—ஆங்கு-அந்தக்காலத்தில்—அயன்-அம்மன்மதனது—வெற்றி-வெற்றியை—குறித்திட-குறிக்கும்படியாக--விரிஞ்சன்-நான்முகனால்--அமைத்த- படைக்கப்பட்ட-- காகளம்-காளமானது---பெரீஇயாற்ற- அஞ்சியொலிக்கவும்—தேங்கமழ்-தேம்மணக்கப்பெற்றிருக்கின்ற-வாவி—தடாகத்திலுள்ள- நீரிடை — நீரின்கண்ணே - குளித்து—மூழ்கி சினை—சூலையுடைய - வரால்--வராலானது-மறைந்திட—ஒளித்துக்கொள்ளவும்- (செய்து)—வரையில்-மலையின்கண்ணே—தூங்கு-தங்கிய—தேன்-தேனை—பெய்த-வார்த்து வளர்க்கப்பட்ட—பச்சிளங்கழையை பசுமையும்இளமையும்பொருந்திய மூங்கிலோடு—தோழமை - நட்பை---கொண்டன-கொண்டிருந்தன---எ-று)(கருத்து)கணைக்கால்களின் சிறப்புச்சொல்லியதுஎன்பதாம்.

முருகவிழ்செய்யகமலமுண்ணெகிழ்ந்துமுகமலர்ந்துறுகணீ
ர்சிந்தி- யொருபசுந்தாளின்வனத்திநின்றரிதினுஞற்றியதவத்
தினாலன்றோ- விரிமலரசோகின்றளிர்நலங்கவற்றிமென்சிறை
யனமெனமிழற்றும்- பரிபுரமணிந்துபஞ்சியூட்டியபொற்ப
தத்திலைச்சிறிதுபோன்றனவே........................*

(இ-ள்) முருகு-பரிமளமானது--அவிழ்-விரியப்பெற்றிருக்கின்ற—செய்யகமலம்-செந்தாமரைமலர்களானவை— உண்ணெகிழ்ந்து-மனமுருகி—உட்கட்டுவிட்டு-முகமலர்ந்து--முகக்கிளர்ச்சிகொண்டு-துளிவிருந்து--உறு-மிகுந்த—கணீர்-ஆனந்தக்கண்ணீரை---தேனாகியநீரை-சிந்தி—பொழிந்து-ஒருபசுந்தாளின்--பசியஒருகாலினாலே—ஒருநாளத்தினாலே - வனத்தில்---காட்டிலே — நீரிலே-நின்று - நின்று — அரிதின்-அரிதாக—உஞற்றிய-செய்த— தவத்தினாலன்றோ-யோகத்தினாலன்றோ—விரி-விரிந்த—மலர்-மலர்களையும்— அசோகின்-அசோகத்தினது--தளிர்நலம்-தளிர்களுயர்ந்ததையும்—கவற்றி-துன்பப்படுத்தி—மென்சிறை- மெல்லியசிறகனை

யுடைய—அனமென-அன்னம்போல—யிழற்றும்-ஒலிக்கின்ற-பரிபுரம்-சிலம்பை—அணிந்து-தரித்து—பஞ்சி-செம்பஞ்சை—ஊட்டிய-அப்பப்பெற்ற—பொன்-பொன்னிறம்பொருந்திய—பதத்திணை-அடிகளை—சிறிதுபோன்றன-ஒப்பவளவில்லத்தன—(எ-று) (கருத்து) பாதங்களின்சிறப்புச்சொல்லியது என்பதாம். (உரு)

இத்தகைவனப்பின்மடவாறன்னை யெவ்வுழிக்கண்டனையென்
னிற்-பைத்தபாம்பல்குலரம்பையர்வதியும்பதி துறந்திம்பரிற்
போந்து-மொய்த்தபூம்பொய்கைகாணியதேயமுழுவதுங்கு
றுகினனவற்றுட்-கைத்தலமடர்ந்தநெல்லியங்கனியிற்கண்டனை
ன்விதர்ப்பர்கோனகரில்..............................*

(இ-ள்) இத்தகை-இப்படிப்பட்ட—வனப்பின்-அழகினையுடைய—மடவாறன்னை-மங்கையை—எவ்வுழி-எவ்விடத்தே—கண்டனையென்னின்-பார்த்தாயென்றுவினவினால்—பைத்தபாம்பு-படம்விரித்தபாம்புபோலும்—அல்குல்-அல்குலையுடைய—அரம்பையர்-தெய்வமாதர்—வதியும்-தங்கும்—பதி-நகரத்தை—துறந்து-விட்டுநீக்கி—இம்பரில்-இவ்வுலகத்தில்—போந்து-வந்து—மொய்த்த-நெருங்கிய—பூ-மலர்களையுடைய—பொய்கை-தடாகங்களை—காணிய-பார்க்கும்படியாக—தேயமுழுவதும்-தேயங்களனைத்தையும்—குறுகினன்-அடைந்தேனாகி—அவற்றுள்-அத்தேயங்களுள்ளே—கைத்தலம்-உள்ளங்கையில்—அடர்ந்த-தங்கிய—நெல்லியங்கனியின்-நெல்லிப்பழத்தைப்போல—விதர்ப்பர்கோன்-வீமராஜனது—நகரில்-பட்டணத்தில்—கண்டனன்(அவளைப்)பார்த்தேன்—(எ-று) (கருத்து) இவ்வழகுள்ளதமயந்தியைவீமராஜன்பட்டினத்திற்கண்டேனென்றன்னஞ்சொல்லியது என்பதாம். (உசா)

காண்டலுமவட்குநிகராமகளிர் தம்மிலுங்கண்டிலேன்கதித்
துப்பூண்டயங்கிளையவனமுலைதிளைக்கும்புயமுடையிளைஞ
ன்*யாமொன்றுந் - தேண்டினமும்மையுலகிலுங்காணேன்
திருந்தலர்க்கசனியேயன்ன - வாண்டகாய்நின்னைக்காண்டலு
நினைந்தேனவ்வளைத்தோளணங்கினையே..................*

(இ-ள்) திருந்தலர்க்கு-பகைவருக்கு—அசனியேயன்ன - இடியுஞ்சிங்கமும்போலும்—ஆண்டகாய் - ஆண்மையுடையவனே—காண்டலும்-கண்டவளவிலே—அவட்கு-அவளுக்கு—நிகர் - நிகர்வாளா—அரமகளிர்தம்மிலும்-தெய்வமங்கையருள்ளும்—கண்டிலேன்-பார்த்திலேன்—கதித்து-பருத்து—பூண்-ஆபரணங்களால்—தயங்கு-விளங்காநின்ற—இளைய-இளமைபொருந்திய—வனம்-சந்தனக்கோலத்தையுடைய—முலை-முலைகளை—திளைக்கும் - தழுவுதற்

குத்தகுதிபுள்ள—புயம்-தோள்களை—உடை-உடைய—இளைஞன்-காளை—யாரொன்று- எவனென்று—தேண்டினன் - தேடினேன்—மும்மையுலகினிம்-மூன்றுலகங்களிலும்--காணேன்-கண்டிலேன்--நின்னை-உன்னை—காண்டலும்-பார்த்தவளவிலே—வ-அந்த-வளை-வளையல்களையும்--தோள்-தோள்களையுமுடைய—அணங்கினை-கன்னியை—நினைந்தேன்-நினைத்தேன்—(எ-று) * யாஅரென்னும்வினாவின்கிளவி-யத்திணைமருங்கின் முப்பாற்குமுரித்தே (கருகூரு) இவருக்குநாயகன் மூன்றுலகினுங்காணேன் உனைக்கண்டவளைநினைந்தேன் என்பதாம். (௨௭)

கேழ்கிளர்தரள வடமிளமுலையிற் கிடப்பினன்றோசிறப்பெ
ய்து-மாழையொண்கண்ணிமார்பிடங்கொண்டுவளரிளவனமு
லைநினது - பாழியந்தடந்தோட்குவட்டினைநெருங்கப்புல்லி
னன்றோபயன்பயக்கு - மாழியாய்நினக்குவனப்பவளிலையேலல
லர்ந்தபாடலநிகராமால்.................*

(இ-ள்) ஆழியாய்-சக்கரவர்த்தியே—கேழ்- நிறத்தினாலே—கிளர்-விளங்காநின்ற—தரளவடம்- முத்துமாலையானது—இளமுலையில்-இளமைபொருந்தியமுலையின்கண்ணே---கிடப்பினன்றோ-கிடந்தாலன்றோ—சிறப்பெய்தும்-விளங்கும்---மாழை-மாவடுப்போலும்—ஒண்-ஒளிபொருந்திய—கண்ணி-கண்களையுடையவளது—மார்பு-மார்பை— இடங்கொண்டு-இடமாகக்கொண்டு—வளர் - வளர்கின்ற—இளவனமுலை-இளமையுஞ்சந்தனக்கோலமும் பொருந்திய முலைகளானவை—நினது- உன்னுடைய—பாழியந்தடந்தோள்-வலிமையும்விசாலமும்பொருந்திய தோள்களாகிய—குவட்டினை-மலைகளை—நெருங்க-அழுந்த—புல்லினன்றோ-சேர்ந்தாலன்றோ—பயன்பயக்கும்-விளங்கும்--நினக்கு-உனக்கு---அழகு-அழகானது அவள்-அத்தமயந்தி--இலளேல்-இல்லளாயின்--அலர்ந்த - மலர்ந்த—பாடலம்-பாதிரிப்பூவிற்கு—நிகராம்-ஒப்பாகும்—(எ-று) [பாதிரிபூத்துங்காயாது] (கருத்து) சக்கிரவர்த்தியே தமயந்திமுலைகளானவை உன்னுடையதோளைச்சேர்ந்தாற்பயனடையும்அவளில்லாவிடில்உனக்கழகுபயன்படாது என்பதாம். (௨௮)

கரும்புயன்மறைக்கு மதிக்கதிர்வேட்டல் கைரவமலர் † பெ
ருததுபோ- லரும்பிளமுறுவ லிளமுலைப்போகமையநீயெய்
துதற் கரிதால்- விரும்பினராகி யமரருமிருந்தார்விண்ணவரி
டத்தவ ளார்வம்- புரிந்திடாதனது பேரொழிலவட னுளத்தி
டைப்பொறிப்பல்காணுதியால்.....................*

* தொல்காப்பியம்-வினையியல்-௰௯-சூ.

(இ-ள்) ஐய-அரசனே—அமரரும்-தேவர்களும் — விரும்பினராகியிருந்தார்-(அத்தமயந்தியை விரும்பியிருந்தார்--கைரவமலர்-அல்லிமலரானது—கருப்புயல்-கரியமேகத்தினாலே—மறைக்கும்-மறைக்கப்பட்டிருக்கின்ற—மதி-சந்திரனது—கதிர் - கிரணத்தை—வேட்டல்- அநுபவித்தலை—பெறாது - பெறமாட்டாது—அது போல்-அம்மலர்போல—அரும்பிளமுறுவல்-அரும்புகின்ற புன்சிரிப்பையுடையவளாகிய—(அத்தேவரால் விரும்பப்பட்டிருக்கின்ற தமயந்தியினது)இளமுலை-இளமுலையினது—போகம் - அநுபவமானது— நீ-நீ—எய்துதற்கு-அடைதற்கு—அரிது- அரிதாயிருக்கும்—விண்ணவரிடத்து-அத்தேவரிடத்தே—அவள்-அம்மங்கையானவள்—ஆர்வம்-ஆசையை—புரிந்திடாது - செய்யாதிருக்கும்படியாக—உனது-நினது—பேரெழில்- ஒப்புயர்வில்லாதவழகை—அவள்-அவளது —உளத்திடை-மனத்தின்கண்ணே— பொறிப்பல்-(யான்) எழுதிவைப்பேன்— காணுதி-(நீ என்வல்லமையைப்)பார் (எ-று) † எதிர்மறையெச்சத்தியலும்விகுதி-யாமலாதாமையாவெனவாமே.(கருத்து) உன்னழகைதமயந்தி உள்ளத்தெழுதுவேனென் றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௨௧)

செய்தொழில்பயனுலுரைப்பரோயன்றித் * தெளிகுநருரை
யினுலுரையார், ரையமுற்றுடன்பா டெய்துவான்முன்னர
றைந்தனனென்னமடவன்னம், பெய்தசொல்லமுத முள்ளெ
லாம்பரந்து பெருகிமேல்வழிதல்போ னகையாக், கையினற்
பசும்பொற் சிறகர்தைவந்து காதல்கூர்மொழிசிலபுகன்றான்.

(இ-ள்) ஐய-அரசனே—தெளிகுநர்-விவேகிகள்— செய்தொழில்-(தம்மாற்)செய்யப்படுமுபகாரத்தை—பயனுல்-(அதன்) காரியத்தினாலே--உரைப்பரோயன்றி-சொல்லுவரேயல்லாமல் -உரையினுல்-வாக்கினால்—உரையார்-சொல்லார்—முற்று- முழுதும்—உடன்பாடு-(உன்)சம்மதியை—எய்துவான்-அடையும்பொருட்டாகவே—முன்னர்-முன்னுக--அறைந்தனனென்ன- சொல்லினனென்றுசொல்லியதாக—மடவன்னம்-இளமைபொருந்திய அன்னத்தினாலே—பெய்த-பெய்யப்பட்ட—சொல்லமுதம்-சொல்லாகிய அமிர்தமானது—உள்ளெலாம்-உள்ளிடமெல்லாம்—பரந்து - பரவி—பெருகி-பெருக்கெடுத்து—மேல்-மேலே—வழிதல்போல்- (வாய்வழியால்)வெளிப்படுதல்போலும்—நகையா- நகைசெய்து—கையினல்-கரத்தினாலே—பசும்பொன்-பசியபொன்வடிவமாகிய—சிறகர்- சிறகுகளை—தைவந்து-தடவி—காதல்கூர்மொழிசில- ஆசைமிகுசில மொழிகளை—புகன்றான்-(அரசன்)சொன்னான்—(எ-று.) * தொ

† இலக்கணத்திரட்டு- * தொன்னூல்விளக்கம்.

* இலக்கணத்திரட்டு - பொதுவியற்படலம்.

ழிற்பெயர்க்கிடையிற் றோன்றுமேநகரம். (கருத்து) அரசன் அன்னத்தைத்தடவிக்கொடுத்து ஆசையொடுசிலவார்த்தைசொல்லுவான்

பொலன்சிறைப்பவளக் கடிகைவாயனநின் பொற்பினுக்குவமைவேறின்று, நலங்கெழுகுணனு முரைப்பதற்கரிதுநல்லெழில்பகருமுன்னூலோ, ரிலங்கெழிலளவுகுணமெனவுரைப்பரிதற்குமேற்கோளென நின்னைத், துலங்குறக்கண்டேன் விரகநோய்தீர்க்கு மருந்துநின்சொல்லின்வேறுளதோ........ ✱

(இ-ள்) பொலன்-பொன்வடிவாகிய—சிறை - சிறைகளையும்—பவளக்கடிகை-பவளத்துண்டுபோலும்—வாய்- வாயையும் உடைய—அனம்-அன்னமே—நின்-உனது—பொற்பினுக்கு-அழகுக்கு—உவமைவேறு-வேறுவமை—இன்று- இல்லை—நலங்கெழு - நன்மைபொருந்திய —குணனும்-உன்குணமும்—உரைப்பதற்கு-சொல்லுதற்கு—அரிது-அரிதாகும்—நல்லெழில்- நல்லவழகினிலக்கணத்தை—பகரும்-சொல்லுகின்ற—முன்னூலோர்-பழையநூலோர்—இலங்கு-(ஒருபொருளிலே)விளங்காநின்ற—எழிலளவு-அழகினளவாகவே—குணமெனை-குணமும்(அதிலிருக்கு)மென்று—உரைப்பர்-சொல்லுவார்—இதற்கு - இந்தச்சித்தாந்தத்திற்கு—மேற்கோளென-உதாரணமாக—துலங்குற-விளங்காநிற்க—நின்னை-உன்னை—கண்டேன்-(நான்)பார்த்தேன்—விரகம்-விரகத்தாலாகிய—நோய்-காமவியாதியை—தீர்க்கும்-நீக்குகின்ற—மருந்து- ஒளஷதம்—நின்சொல்லின்-உனதுசொல்லின்—வேறு - வேறாக—உளதோ- (எனக்கு)இருக்கின்றதோ—(எ-று) (கருத்து) அன்னமே என்விரகநோய்க்கு மருந்து உன்சொல்லேயல்லாது வேறுண்டோ என்றான் நளன், எ-ம். (௩௧)

வெண்ணகைத்துவர்வா யணங்கெழிற் பலரும்விளம்பினர்நின் மொழியவளென், கண்ணெதிர்ப்பட்டாள்போலுமெய்த்✱துணையாற் கருத்தினுற்கண்டலேகாண்ட, னண்ணரிதாற் றோன்றும் பொருளுநுண்ணியதே னுடுதற்கரியலாமுகத்தின், பண்ணியநோக்க நோக்குநர்க்கழகு பயப்பதையன்றிவேறுளதோ✱

(இ-ள்) வெண்ணகை-வெள்ளியபற்களையும்—துவர்வாய்- பவளம்போலும்வாயையுமுடைய—அணங்கு-தமயந்தியினது—எழில்-அழகை—பலரும் - (விதர்ப்பதேசத்திலிருந்துவந்த) பலரும்—விளம்பினர்-(எனக்குச்)சொன்னார்கள்(ஆயினும்)—நின்மொழி-உன்சொற்களாலே—அவள்-அம்மங்கை—என்-எனது—கண்ணெதிர்ப்பட்டாள்போலும்-கண்முன்பார்க்கப்பட்டவள்போலின்றாள்—மெய்-மெய்மையாக—துணையால்- நட்பாளனாலும்—கருத்தினால்-

(தன்)மனத்திறனும்--காண்டலே-யாவுங்காணலே— காண்டல்-காட்சியாகும்—முன்-எதிரிடத்தே—நண்ணி- பொருந்தி—தோன்றும்-தோன்றுகின்ற—பொருளும்-பொருளையும்—நுண்ணியதெல்-நுட்பமானதாயிருக்கின்—நாடுதற்கரியலா - காணுதற்குச்சான்றாகாத—முகத்தில்-முகத்திடத்தே—பண்ணிய-உண்டாக்கப்பட்ட—நோக்கம்-கண்ணானது—நோக்குநர்க்கு-(அப்படித்தனைவாறுலுங் கருத்திறனுங் காண்கிறவறிவுடையோர்க்கு—அழகு- அழகை—பரப்பதையன்றி-(அம்முகத்துக்குச்)செய்வதல்லாமல்—வேறு- மற்றொருபயனைச்(செய்தற்கு)—உளதோ- இருக்கின்றதோ—(எ-று) * உயர்திணையீறுபோலஃறிணைவருதலு மஃறிணையீறுபோலுயர்திணைவருதலு மருகல்விதியென வறைந்தனரான்றோர்-இவ்விதியால்-துணை-வேந்து-அரசு-அமைச்சு-உயர்திணை-அஃறிணை யீறுபோலாயின (கருத்து) அன்னமே உன்சொல்லானது தமயந்தி என்முன் வந்தாற்போலுமிருக்கின்றது என்றுரைனான் என்பதாம். (௬உ)

முருந்திளமுறுவ லழகுரைத்தெவரு மூட்டியகாமவெந்தீயிற்
சொரிந்திடுநெய்யிற்றுணையெலாமுரைத்திசொல்லுமவ்வழலி
டைப்பெய்து, கரிந்தபைந்தளிரின் வாடுமெற்குறித்துக்கன
ன்றுகூற்றுறுதிசையமர்ந்து, வருஞ்சிறுதென்றல் மலயவெ
வ்விடங்கால் வாளராவுயிர்ப்பெனலாமால்.................*

(இ-ள்) முருந்து-மயிலிறகினடிபோலும்—இளமுறுவல் - சிறியபற்களையுடையவளது—அழகு-அழகை—உரைத்து - (எனக்குச்)சொலி— எவரும்- (விதர்ப்பதேசத்திலிருந்துவந்த) பலராலும்—மூட்டிய-(அச்சொற்களாகியவிறகிலே)மூட்டப்பட்ட--காமம்-காமமாகிய—வெந்தீயில்- வெப்பம்பொருந்திய நெருப்பிலே—சொரிந்திடு-சொரியப்பட்ட—நெய்யின்- நெய்யாக—துணையெலாம்-(அவ)ளழகையெல்லாம்—உரைத்தி-சொல்லினை--சொல்லும் சொல்லப்பட்ட—அவ்வழலிடை-அக்காமநெருப்பில்—பெய்து- இடப்பட்டு—கரிந்த-கருகின—பைந்தளிரின் - பசிந்தளிராக—வாடும்-வாடுகின்ற—எற்குறித்து-என்னைக்குறித்து—கனன்று-சுட்டுக்கொண்டு — கூற்று-யமனானவன்—உறு-வாசஞ்செய்யப்பெற்ற-- திசை-தென்திசையில்—அமர்ந்து-பொருந்தி—வரும் - வருகின்ற—சிறு தென்றல்-இளந்தென்றலை—மலயம் - பொதியமலையிலுள்ள—வாள்-ஒளிபொருந்திய—அரா-பாம்புகளது—வெவ்விடம் - கொடிய நஞ்சத்தை—கால் - பொழிகின்ற—உயிர்ப்பெனலாம் - ஊதுகாற்றென்று சொல்லலாம்—(எ-று)(கருத்து) தென்றற்காற்றைப் பாம்புகளினது உயிர்ப்பென்றுசொல்லலாம் என்பதாம். (௬௬)

---

* இலக்கணத்திரட்டு- பொதுவியற்படலம்-எ-ரூ.

வெண்கதிர்பரப்பித்துணைத்தவரிதய மெழுகெனவுருக்குமிவெ
ண்டிங்கள், கண்கவர்வனப்பினணங்கினைத்தினைத்து காயுமெ
ன்னுளத்தினைச்சுடற்றத், தண்கதிர்பெறுமெவன்றழற்றுவெங்க
திர்களனித்தனிக்கவர்வதற்கன்றோ, வொண்சுடரிரவியிடத்தி
னிற்றிங்க டோறுமினிதுறவுசெய்குவதே.................... *

(இ-ள்) வெண்கதிர்-வெள்ளியகிரணங்களை—பரப்பி-விரித்து—துணைத்தவர்-பிரிந்தவரது—இதயம்-மனத்தை—மெழுகென-(தீயிற்பட்ட)மெழுகென்னும்படி—உருக்கும்-உருக்காநின்ற—வெண்டிங்கள்-சந்திரனானது—ஒண்சுடர்-ஒள்ளியகிரணங்களையுடைய—இரவியிடத்தினில்-சூரியனிடத்தே—திங்கடோறும்-மாதந்தோறும்—இனிது-இனிதாக—உறவு-நட்பை—செய்குவது-செய்துவருகிறது—கண்-கண்களை—கவர்-கவர்கின்ற—வனப்பின்-அழகையுடைய—அணங்கினை-அந்தத்தமயந்தியை—தினைத்து-எண்ணி—காயும்-துன்பப்படுகின்ற—என்னுளத்தினை-எனதுமனத்தை—சுடற்ற-சுடுதற்கு—தண்கதிர்-சீதளகிரணங்கள்—பெறுமெவன்று-(வல்லமை)பெறாவனவல்லவென்று—அழற்று-சுடுகின்ற—வெங்கதிர்கள்-உஷ்ணகிரணங்களை—தனித்தனி-ஒவ்வொன்றாக—கவர்வதற்கன்றோ-வெளவுதற்கன்றோ—(எ-று.) (கருத்து) சந்திரன் என்னைச்சுடுதற்கோ மாதந்தோறுஞ் சூரியனிடத்தில் உறவுசெய்கின்றானென்றானன், எ-ம். (௧௪)

காதலங்கடலின்கரைபெறற்கயனாற் காரணமின்றியேகாட்டப்
போதரும்புணையதாதியென்னுள்ளம்புலம்புகொண்டினைவது
தவிர்ப்பான், றூதுநீபோய்முன்னுரைத்தவாமுடித்தறேமறு
புகழ்நினக்கென்று, வாதரம்பெருகநன்மொழிபுகன்றவ்வன
த்தினைமடந்தைபால்விடுத்தான்........................ *

(இ-ள்) காதல்-ஆசையாகிய—கடலின்-கடலினது—கரை-கரையை—பெறற்கு-(நான்)பெறுதற்கு—காரணமின்றி-ஏதுவில்லாமல்—காட்ட-(அதனைக்)காண்பிக்க—அயனால்-விதியினால்—போதரும்-வந்த—புணையதாதி-தெப்பமாகு—என்னுள்ளம்-எனமனமானது—புலம்புகொண்டு-துன்பத்தைக்கொண்டு—இனைவது-வருந்துதலை—தவிர்ப்பான்-தீர்க்கும்படியாக—நீ-நீ—தூது-தூதாக—போய்-சென்று—முன்-முன்னே—உரைத்தவா-(உன்னாற்)சொல்லப்பட்டவாறு—முடித்தல்-நிறைவேற்றல்—தேமறு-குற்றமற்ற—புகழ்-கீர்த்தியாகும்—நினக்கென்று-உனக்கென்று—ஆதரம்-அன்பானது—பெருக-வளர—நன்மொழி-முகமன்சொற்களை—புகன்று-சொல்லி—அவ்வனத்தினை-அவ்வன்னத்தை, மடந்தைபால்-தமயந்தியிடத்து,

விடுத்தான்-அனுப்பினான்—(எ-று)(கருத்து)நளமஹாராஜன்அன்னத்தைத் தமயந்தியிடத்துத்தூதுவிட்டான்.,எ-ம். (௯௫)

போதருநெறியி னன்மைகள் பயக்க * பொருந்துறு கிளை
யொடும்புல்லி, யாதரம்பெருகு மளியனைமறவே லாயிழையரு
ண்முகம் பெற்றுத், தீதறவிரைவில் வருதியென் றுரைத்துத்
திங்களி னருஞ்சுதைதீற்று, தாதவிழ்தாம மாடமேற் றானுந்
தனியுமா யிருந்துட றளர்ந்தான்.........................., *

(இ-ள்) போதரும்-போகின்ற--நெறியில்-வழியில்--நன்மைகள்-சுபங்களானவை—பயக்க-(உனக்கு) உண்டாகுக—பொருந்துறு-பொருந்திய--கிளையொடு-(உன்)சுற்றத்துடனே--புல்லி- கூடி--ஆதரம்-ஆசையானது--பெருகும் வளரப்பெற்றிருக்கின்ற--அளியனை-எளியேனை--மறவேல்-மறவாதே--ஆயிழை- தமயந்தியினது--அருண்முகம்- அருளோடுகூடியவாக்கை—பெற்று-அடைந்து—தீதற-குற்றமற--விரைவில்-சீக்கிரத்தில்—வருதியென்று-வாவென்று--உரைத்து-சொல்லி--திங்களின்-சந்திரன்போலும்--அருஞ்சுதை-அரியசுண்ணச்சாந்தை-- தீற்று-தீற்றப்பெற்றுள்ள--தாது-பொடியையுடைய--அவிழ்-மலர்ந்த--தாமம்-பூமாலைகள்பொருந்திய—மாடமேல்-மேல்வீட்டிலே--தானும்-தானும்--தனியுமாய் - ஒருவருமில்லாமையுமாகி--இருந்து-இருந்து--உடல்-உடம்பு--தளர்ந்தான் - தளரப்பெற்றிருந்தான்—(எ-று)(கருத்து)நளன்அன்னத்தைத்தூது போய்வாவென்றுசொல்லி யனுப்பித் தனித்திருந்து உடல்வருந்தினான் என்பதாம். (௯௬)

ஈங்கிவன்மாழாந்தன்னமென்சொல்லாலின்னுயிர்தாங்கின னி
ருப்பத், தீங்கருப்பனுக்கு மாங்குயிற்கிளவி செவ்விகண்களி
ப்புறநோக்கி, யாங்கணுற்றிற்றைப் பகலைநற்பகல தாக்குவ
லென்மனம்வலியாப், பூங்கவிநிறைநீர்ப் பொற்குடமெதிரப்
போயதுபொலஞ்சிறையன்னம்......................... *

(இ-ள்) ஈங்கு-இவ்விடத்தே--இவன்- இவ்வரசன்--மாழாந்து-அறிவுகலங்கி--அன்னம்- அன்னத்தினது--மென்சொல்லால்- மெல்லியசொல்லால்--இன்னுயிர்-இனிதாகியவுயிரை--தாங்கினன் - தாங்கினவனாகி--இருப்ப- இருக்க--தீங்கருப்பு - மதுரமாகியகன்னலை—அனுக்கும்-கெடுக்கின்ற--மாங்குயில்- மாங்குயிலிசைபோலும்--கிளவி-சொல்லையுடையவளது--செவ்வி-அழகை--ஆங்கண்- அவளிருக்கின்றவிடத்தை--உற்று-அடைந்து--கண்களிப்புற - (என்) கண்கள்களிகூர--நோக்கி-பார்த்து--இற்றைப்பகலை- இத்தினத்தை--நற்பகல்

---

* அகத்தியம்-வியங்கோள்விகுதி-முன்வலியியல்பாகும்.

நாட்குவலென-நல்லதினமாக்குகவென்று--மனம்கலிய - மனத்தி லெண்ணி---பூங்கனி-அழகிய பழமும்---நிறைநீர் - நிறைந்த நீரையு டைய--பொற்குடம்-பொற்குடமும்--எதிர - தனக்கெதிர்ப்பட— பொலஞ்சிறை-பொற்சிறைகளையுடைய--அன்னம்-அன்னமானது --போயது-போயிற்று—(எ-று) (கருத்து) அன்னமானது நற்சகு னங்காணச்சென்றது என்பதாம். (௬௭)

கட்புலன்கதுவாதுயர்ந்துபின்னெவருங்காண்வரவெள்ளிடை
ப்பறந்து, புட்செறிவாவிபுகாதகல்விசும்பிற்பொன்னுரைத்
தாலெனப்போகி, நுட்பமாய்குநர்க்கதிசயப் பயப்பநொ
டிவரைப்புகுந்த தவ்வன்னம், வட்கிவெண்மதியுஞ் சவிகெட
வொளிருமாடமார்குண்டினபுரமே......................... *

(இ-ள்) அவ்வன்னம்-அவ்வன்னமானது—கண்- கட்பொறிகளு க்கு—புலன்-விஷயமாக—கதுவாது-பற்றப்படாமல்—உயர்ந்து- மேலெழும்பி—பின்-(அதன்)பின்பு—எவரும்- யாவரும்—காண்வ ர-(தன்னைக்)காண—வெள்ளிடை-ஆகாயத்தில்--பறந்து-பறந்து--- புள்-பறவைகளானவை—செறி-நெருங்கப்பெற்ற--வாவி - தடாக ங்களிலே—புகாது-செல்லாமல்—அகல்விசும்பின்- விரிவுள்ளவாகா யமாகிய—(வுரைகல்)லில்-பொன்(தன்சிறைகளின்) பொன்னை—உ ரைத்தாலென-உரைத்ததுபோல--போகி-சென்று—நுட்பம்- கால நுட்பத்தில்—ஆய்குநர்க்கும்- ஆராய்கின்றவருக்கும்—அதிசயப்ப யப்ப-ஆச்சரியமுண்டாக—நொடிவரை- நொடியளவில்—வெண் மதியம்-வெள்ளைச்சந்திரனானது—வட்கி-நாணி—சவிகெட - அழ குகெட—ஒளிரும்- விளங்காநின்ற—மாடம் - மாளிகைகளால்— ஆர் - நிறைந்த—குண்டினபுரம் - குண்டினபுரத்திலே—புகுந்தது -சென்றது—(எ-று) (கருத்து) அன்னமானது குண்டினபுரத்திற் சென்றது என்பதாம். (௬௮)

* (கலிவிருத்தம்)

* மன்னுமாநகர்மேயவளனெலா............. *
மன்னங்கண்ணுற்றதிசயித்தேகலு............. *
முன்னங்கண்டதுமுசுவண்டார்த்தெழப்...... *
பொன்னந்தாதவிழ்பூந்துணர்ச்சோலையே......*

(இ-ள்) அன்னம்-அன்னமானது---மன்னும்-நிலைபெற்ற—மா- பெருமைபொருந்திய—நகர்-குண்டினபுரத்தில்—மேய-தங்கிய-- வளனெலாம்-சிறப்புக்களையெல்லாம்—கண்ணுற்று- பார்த்து—அ திசயித்து - ஆச்சரியப்பட்டு--ஏகலும்- போமளவிலே—முன்னம்-

* இலக்கணத்திரட்டு மிகனிலைகழிவலசையொழியிசையாக்கமன்.

(தன்)னெதிரோ—முசு-மொய்க்கின்ற--வண்டு- வண்டுகளானவை--ஆர்த்து - ஒலிசெய்து--எழ-எழும்பாநிற்க--பொன்- பொன்னிறம் பொருந்திய--தாது-பொடியுடனே--அவிழ்-விரிகின்ற--பூ- மலர்கள் பொருந்திய--துணர்-கொத்துக்களையுடைய--சோலை- (தமயந்தியினது) வனத்தை--கண்டது - பார்த்தது—(எ-று) * பத்தெழுத்தென்பநேரடிக்களவே; யொத்தநாலெழுத் தொற்றலங் கடையே (கருத்து) அன்னமானது குண்டினபுரத்தைப் பார்த்துப் போம்போது தமயந்திவனத்தைக்கண்டது என்பதாம். (௫௯)

சோலைவாயிற்சுடருநிலாமணி........... *
யாலவாலத்தவிர்மதியாற்புனல்........... *
காலவாய்ந்தகதிர்மணிமுல்லையின்.......... *
கோலநாண்மலர்கொய்வதற்கெய்தினாள். *

(இ-ள்) சோலைவாயில்-அச்சோலையின்கண்ணே--ஆலவாலத்து-பாத்திகளில்--சுடரும்-விளங்குகின்ற--நிலாமணி-சந்திரகாந்தங்கள்—அவிர்-விளங்காநின்ற—மதியால்-சந்திரகிரணத்தினாலே--புனல்-நீரை—கால-கக்க--வாய்ந்த(அதனால்)நிலைபெற்ற--முல்லையின்- முல்லைக்கொடிகளுடைய--கதிர்-கிரணத்தையுடைய--மணி - முத்துப்போலும்--கோலம்-அழகிய--நாள்-அன்றுபூத்த--மலர்-மலர்களை--கொய்வதற்கு-பறிப்பதற்கு--எய்தினாள்-(தமயந்தி) வந்தாள். எ-று. (கருத்து)தமயந்திமலர்கொய்தற்குச்சோலைக்குவந்தாள்என்பதாம்.

மீதுலாயவெண்டாரகைநாப்பணிற்...... *
சீதவொண்கதிர்த்திங்கள்கண்டாலென... *
மாதர்நோக்கின்மடந்தையர்நாப்பணிற் *
காதல்கூர்தமயந்தியைக்கண்டதே........*

(இ-ள்) மீது-ஆகாயத்திலே--உலாய-திரிகின்ற--வெண்டாரகை-உடுக்களது--நாப்பணில்-நடுவில்--சீதம்- குளிர்ச்சிபொருந்திய—ஒள்-ஒள்ளிய--கதிர்-கிரணங்களையுடைய--திங்கள்- சந்திரனை—கண்டாலென - கண்டதுபோல--மாதர் - அழகிய--நோக்கின்-பார்வையையுடைய--மடந்தையர்-மாதரது--நாப்பணில்- நடுவில்— காதல்கூர்- விரும்பப்படுகிறதமயந்தியை--தமயந்தியென்பவளை - கண்டது(அவ்வன்னமானது)பார்த்தது—(எ-று.) (கருத்து) அன்னந்தமயந்தியைக்கண்டது, எ-ம். (௬௧)

கண்ணுங்கையுமுகமுங்கமலமா............... *
நண்ணுஞ்சண்பகநாண்மலர்மேனியா......... *

---

* தொல்காப்பியம்-செய்யுளியல்-௫௭-ரூ.

வண்ணல்வேளைவழிபடற்காற்றிய.............. *
வன்னமாலையொவென்றுமருண்டதே......... *

(இ-ள்) கண்ணும்-கண்களும்—கையும்-கைகளும்—முகமும்-வதனமும்—கமலமா-தாமரைமலர்களாகவும்—மேனி-வடிவமானது நன்றும்-பொருந்திய—நாள்-அன்றுபூத்த—சண்பகம்-சண்பகத்திறுடைய—மலரா-மலர்களாகவுங்காணலால்—அண்ணல்-தலைவனாகிய—வேளை-மன்மதனை—வழிபடற்கு-பூசித்தற்பொருட்டு—ஆற்றிய-செய்யப்பட்ட—வண்ணம்-அழகிய—மாலையென்று-தொடையென்று—மருண்டது-மயங்கிற்று(அன்னம்)—(எ-று) (கருத்து)அன்னமானது தமயந்தியைமாலையென்றுமயங்கியது,எ-ம். (சஉ)

வழிந்துதெள்ளமுதூறவளர்ந்துமா...... ..... *
சொழிந்தத்திங்களையூர்வளைந்தாலெனச்......... *
செழுந்தண்கோதைதிருமுகமுள்ளுறச்... ...... *
சுழன்றுதாழ்ந்ததூய்ச்சிறையன்னமே...... *

(இ-ள்) தூ-பரிசுத்தமாகிய—சிறை-சிறைகளையுடைய—அன்னம்-அன்னமானது—வழிந்து-பெருக்கெடுத்து—தெள்ளமுது-தெள்ளியவமிர்தமானது—ஊற-சுரக்க—வளர்ந்து-நிறைந்து—மாசு-குற்றத்தின்—ஒழிந்த-நீங்கிய—திங்களை-சந்திரனை—ஊர்-பரிவேடமானது—வளைந்தாலென-சூழ்ந்ததுபோல—கோதை-தமயந்தியினது—செழுந்தண்-செழுமையுங்குளிர்ச்சியும்பொருந்திய—திரு-அழகிய—முகம்-முகமானது—உள்-நடுவில்—உற-பொருந்த—சுழன்று-சுற்றிவந்து—தாழ்ந்தது-இறங்கிற்று—(எ-று) (கருத்து) அன்னமானது தமயந்தியைச் சுற்றிவந் திறங்கிற்று.எ-ம். (சங)

* தெய்வத்தாமரைப்போதுறைசெல்வியுங்... *
கொவ்வைவாயயிராணியுங்கூறுமிந்.......... *
நவ்விநோக்கிக்கிணையெனநாட்டுத............ *
லெவ்வமென்னவிகழ்ந்துவியந்ததே.... ...... *

(இ-ள்) தெய்வம் - தெய்வத்தன்மைபொருந்திய—தாமரைப்போது-தாமரைப்பூவின்கண்—உறை - வாசஞ்செய்கின்ற—செல்வியும்-இலக்குமிதேவியும்—கொவ்வை-கோவைப்பழம்போலும்—வாய்-வாயையுடைய—அயிராணியும்-இந்திராணியும்—கூறும்- சொல்லப்பட்ட—இந்நவ்விநோக்கிக்கு- மான்கண்போலுங்கண்களையுடைய இவளுக்கு—இணையென- உபமானமாவொன்று—நாட்டுதல்-நிறுத்துதல்—எவ்வமென்ன-குற்றமென்று—இகழ்ந்து- (அவ்விருவரையு)மிகழ்ந்து—வியந்தது-(இவளழகைக்குறித்து) ஆச்சரியப்பட்டது(அன்னம்)—(எ-று)(கருத்து) அன்னமானது இலக்குமியை

யும் இந்திராணியையயிகழ்ந்து தமயந்தியைப் புகழ்ந்தது என்பதாம். * [தெய்வம்-அடங்காவழிச்சந்தி] (௪௪)

* (இதுவுங்கலிவிருத்தம்.)

சுலவுற்றெதிர்போகிய தூவியனங் ............... *
குலவுற்றபொலன்சிறையைக்குவியா............. *
நிலனுற்றெறிநீள்சிறைமெல்வளியா............ *
லலைவுற்றமருங்கினளஞ்சினளால்............... *

(இ-ள்) சுலவுற்று-சூழ்ந்து—எதிர் - (தமயந்தி) முன்பு—போகிய-சென்ற—தூவி-இறகுகளையுடைய—அனம்- அன்னமானது—குலவுற்ற - விளைவுபொருந்திய—பொலன் - பொன்மயமாகிய—சிறையை-சிறகுகளை —குவியா-குவித்து—நிலன்-பூமியின்கண்ணே—உற்று-பொருந்தி—எறி-(அப்போது)உதறப்பட்ட—நீள் - விரிந்த—சிறை-(அதன்)சிறகளது—மெல்வளியால் - மெல்லியகாற்றோசையால்—அலைவுற்றமருங்கினள்- அசைவுற்ற விடையையுடைய தமயந்தியானவள்—அஞ்சினள்-அச்சமுற்றாள் —(எ-று)* தொல்காப்பியம்-செய்யுளியல்-௪௧-ஞ- * எழுத்தளவெஞ்சினுஞ் சீர்நிலைதானே குன்றலுமிகுதலு மில்லெனமொழிப-(கருத்து) தமயந்தியானவள் அன்னத்திறகுகளின் காற்றோசையாலச்சமுற்றாள் என்பதாம். (௪௫)

பொறியின்வழிநெஞ்சபுகுத்தியிடா............. *
வறிவின்னறிவாயவரும்பொருளைப்............... *
பிறிதொன்றறநோக்குதல்போற்பிறழு........ *
மறியுண்கணின்மங்கையர்நோக்கினரால்... ... *

(இ-ள்) பொறியின்வழி - ஐம்பொறிகளின்வழியிலே—நெஞ்சு-மனத்தை—புகுத்தியிடார்-செலுத்தாதயோகிகள் —அறிவின் - ஞானக்கண்ணிலே—அறிவாய- அறிவுருவாகிய—அரும்பொருளை-பிரமத்தை —பிறிதொன்று-மற்றொருவிஷயசம்பந்தம்— அற- நீங்க—நோக்குதல்போல்-பார்த்தல்போல்—மங்கையர் - தோழிகளானவர்—(பிறிதொன்று) மற்றொருவிஷயசம்பந்தம்—(அற), நீங்க —பிறழும்-புரளுகின்ற—மறி - மான்கண்போலும்—உண்-மையுண்ட—கணின்-முகக்கண்களாலே—(அறிவாய)அறிவையுடையதாகிய—(அரும்பொருளை) அபூர்வமாகிய அன்னத்தை— நோக்கினர்-பார்த்தல்செய்தார். —(எ-று) (கருத்து) பாங்கிமார்களன்னத்தைப்பார்த்தார்கள். என்பதாம். (௪௬)

அணித்தாயரிதாயவரும்பொருளைப் ·.......... *
பிணிப்பானசைவைத்தமர்பெற்றியர்போ...... *

லணித்தாயவனங்கவர் * வானசையான்......... *
மணிப்பூணசையாதுவதிந்தனளால்........... *

(இ-ள்) அணித்தாய்-நேசத்திலுளிருக்கின்றதாய்—அரிதாய(பெறுதற்) கரிதாகிய—அரும்பொருளை-பிரமத்தை—பிணிப்பான்-கண்டுபிடித்தற்பொருட்டு—நசைவைத்து-(அதனிடத்தே) ஆசைவைத்து—அமர்-அசைவற்றுநிற்கின்ற—பெற்றியர்போல்-மனச்செய்கையையுடைய முனிவர்போல்—அணித் (தாய்) சமீபத்திலுள்ளதாய்—(அரி)தாய-அபூர்வமாகிய—அனம்-அன்னப்பறவையை—கவர்வான்-பிடித்தற்பொருட்டு—நசையால்-(அதன்மேல்வைக்கப்பட்ட) ஆசையினாலே—மணி-நவமணிகளாலாகிய—பூண்-ஆபரணமானது—அசையாது-அசையாதிருக்கும்படி—வதிந்தனள்-(தமயந்தி) தங்கினள்—(எ-று.) (கருத்து) தமயந்தி அன்னத்தைப்பிடிக்கும்படி யசைவற்றிருந்தாள் என்பதாம். * இலக்கணத்திரட்டு-கவர்வான்பான்பாக்குப்பொருட்டாமீறு. (௪௭)

அவிர்பூணொலியாமலடக்கினளாய்........... *
கவர்வான்வரல்கண்டுமகன்றிலதாய்............ *
துவர்வாய்மயிலொட்டிடலாகுமெனு........... *
நவைதீரனமெல்லநடந்ததுவே.............. *

(இ-ள்) அனம்-அன்னமானது—அவிர்-விளங்காநின்ற—பூண்-பூண்களை—ஒலியாமல்-ஒலியாதிருக்க—அடக்கினளாய்-அடக்கினவளாகி—கவர்வான்-(தன்னைப்)பிடிக்கும்படியாக—வரல்-வருதலை—கண்டும்-பார்த்தும்—அகன்றிலதாய்-(தைரியத்தினா) லோடிப்போகாததாகி—துவர்-பவளம்போலும்—வாய்-வாயையுடைய—மயில்-மயில்போல்பவளாலே—தொட்டிடலாகுமெனும்-பிடிக்கக்கூடுமென்கின்ற—நவை-இகழ்ச்சியானது-தீர்-தீர—மெல்லநடந்தது-மெள்ளநடந்தது—(எ-று.) (கருத்து) அன்னமானது தமயந்தி தன்னைப்பிடிக்கும்படி மெள்ளநடந்தது, எ-ம். (௪௮)

புளினத்தடமேவியபோகுமென.............. *
மெளிதிற்றனகைம்மலரெய்துறுமோ......... *
வளம்வைத்தமையென்னெனவொண்ணுதலார் *
நளினக்கையுடைத்துநகைத்தனரால்............ *

(இ-ள்) ஒண்-காந்திபொருந்திய—நுதலார்-நெற்றியையுடைய தோழிகள்—புளினம்-மணற்குன்றுகளையுடைய—தடம்-தடாகத்திலே—மேவிய—வாசஞ்செய்யும்படியாக—போகும்-போகின்ற—அனம்-அன்னமானது—எளிதில்-எளிதிலே—தன்-தன்னுடைய—கை-கைகளாகிய—மலர்-தாமரைமலர்களிலே—எய்துறுமோ—

அடையுமோ—உளம்வைத்தமை-(எம்பிராட்டி அதனிடத்தே) மனம்வைத்தமைக்குக்காரணம்—என்னெனா-யாதென்று—நளினம்-தாமரைமலர்போலும்—கை-(தங்)கைகளை—புடைத்து-தட்டி—நகைத்தனர்-சிரித்தார்—(எ-று) [கருத்து] தமயந்தி அன்னத்தைப்பிடிக்க மனம்வைத்ததைப் பாங்கியர்கண்டு கைதட்டிநகைத்தார்கள், எ-ம். (௪௯)

புனைமேகலையீர்கைபுடைத்துநகைத்............ *
தனமேகவியற்றுதலன்புகொலோ.............*
தனியேகுவ * னின்மினெனத்தகையாத்...... *
துனியோடுரைசெய்துதொடர்ந்தனளே...... *

(இ-ள்) புனை-அலங்கரிக்கப்பட்ட—மேகலையீர் - மேகலாபரணத்தையுடையவரே—கைபுடைத்து-கைதட்டி—நகைத்து-சிரித்து—அனம்-அன்னத்தை—ஏக-ஓடிப்போக—இயற்றுதல்- செய்தற்குக்காரணம்—அன்போ-(என்மேலுள்ள)அன்போ—தனி-தனியாக—ஏகுவன்-(நான்)போவேன்—நின்மினென் - நீங்கள் நில்லுங்களென்று—துனியோடு-கோபத்தோடு—உரைசெய்து-சொல்லி—தகையா-ஆணையிட்டு—தொடர்ந்தனள்-(தமயந்தியானவள்) அதன்பின்போயினாள்.(எ-று.)[கருத்து] தமயந்தியானவள் பாங்கிமாரை நிறுத்திவிட்டுத் தனியே அன்னத்தின்பின்போனாள், எ-ம். * இலக்கணத்திரட்டு-மின்னீறொதிர்மறை யேவற்பன்மையாம். தொன்னூல் விளக்கம்-௱௰௪-சூத்திரத்திலுங்காண்க. (௫௰)

முகிழ்மென்முலைவாணுதன்மொய்குழலார் .. *
நகைசெய்வதுகண்டுளநாணினளா........... *
யகல்கின்றபொலன்சிறையன்னநிழ............ *
லிகவொன்னவொதுங்கினணேரிழையே......... *

(இ-ள்) நேரிழை தகுந்தவணியையுடைய தமயந்தியானவள்—முகிழ்-தாமரையரும்புபோலும்—மென்முலை-மெல்லிய முலைகளையும்—வாணுதல *ஒளிபொருந்திய நெற்றியையும்—மொய்குழலார்-நெருங்கிய கூந்தலையும் உடைய தோழிகள்— நகைசெய்வது-பரிகாசஞ்செய்தலை—கண்டு-பார்த்து—உளம் - மனத்திலே—நாணினளாய்-வெட்கமுற்றவளாகி—அகல்கின்ற-நீங்குகின்ற--பொலன்-பொன்மயமாகிய—சிறை-சிறைகளையுடைய—அன்னம்-அன்னத்தினது—நிழல்-நிழலானது—நிகவொன்ன-(தனக்கு)நிகராமென—ஒதுங்கினள்-நடந்தாள்.—(எ-று)[கருத்து] அன்னந்தன்னிழல்தன்னொடுசெல்லுதல்போல தமயந்தி அன்னத்தின்பின்சென்றாள் என்பதாம். (௫௧)

வடியுண்கணிமாமுலைதாங்கியதா.......................*
* விசிரும்பிடையென்படுமேகலெனப்...........*
பிடிமென்னடைமங்கையர்பேசமறுத்...........*
தடிமென்மலர்பேர்த்தனளாயிழையே.........*

(இ-ள்) வடி-கூர்மைபொருந்திய---உண்-(மை)யுண்ட--கணி-கண்களையுடையவளே---மாமுலை-பெரியமுலைகளை--தாங்கிய-தாங்-சுமத்தலால்---இடுகும்-துவளுகின்ற--இடை-(உன்)னிடையானது--என்படும்-(நடத்தலாலே என்னபாடுபடும்---மகலெனா - போகாதேயென்று---பிடி-பெண்யானைபோல்---மென்னடை- மெல்லியநடையையுடைய---மங்கையர்-தோழிகள்---பேச- சொல்ல---மறுத்து-(அதை)மறுத்து---ஆயிழை - ஆராய்ந்துகொள்ளப்பட்ட வலியையுடையவளாகிய தமயந்தியானவள்---அடி - அடியுருக்கொண்ட---மென்மலர்-மெல்லியதாமரைமலர்களை--பேர்த்தனள்-எடுத்தாள்.---(எ-று)(கருத்து) தோழிமார்தடுக்கத் தமயந்தி யன்னத்தைத்தொடர்ந்தாள் என்பதாம். * தாதுவிளக்கம்- இடுதவிறுதவிதலசுலைதலாம். (௫௨)

செய்ப்பட்டசெழுங்கமலத்திலனம்.............*
கைப்பட்டதுபட்டதெனக்கருதா.............*
மைப்பட்டமலர்ப்பொழின்மாதவிவாய்ப்...*
பொய்ப்பட்டமருங்கினள்புக்கனளே...........*

(இ-ள்) பொய்ப்பட்ட-பொய்கூறுதற்கிடமாகிய--மருங்கினள்-இடையையுடையதமயந்தியானவள்---செய்ப்பட்ட- கழனியிலுண்டாகிய---செழுங்கமலத்தில் - செழியதாமரைப்பூவிலிருக்கின்ற ---அனம்-அன்னமானது---கை-(என்)கையிலே---பட்டது பட்டதென-அகப்பட்டது அகப்பட்டதென்று--கருதா - நினைத்துக்கொண்டு---மைப்பட்ட-மேகத்தையளாவிய---மலர் - மலர்களையுடைய---பொழில்-சோலையிலே---மாதவிவாய்- குருக்கத்தியினிடத்தே---புக்கனள்-சென்றாள்.---(எ-று) (கருத்து) தமயந்தி அன்னமகப்பட்டதென்று குருக்கத்திமரத்தினிடத்தே சென்றாள், எ-ம். (௫௩)

தொடர்ந்தாள்கலுழ்தூமுகம்வேறொழுக......*
நடந்தாயிழையெய்த்தனளென்னநயந்.........*
திடந்தேர்ந்தவளின்புறநன்மொழிகள்..........*
மடந்தாழிளவன்னம்வழங்கியதே...............*

(இ-ள்) மடந்தாழ்-அறியாமைபோகிய---இளவன்னம்- இளமைபொருந்திய அன்னமானது---தொடர்ந்தாள் - (என்பின்னே) தொடர்ந்தவளாகி---கலுழ்- விளங்குகின்ற---தூ- பரிசுத்தமாகிய---முக

ம்-முகத்திலின்றும்---வேர்- வெயரானது---ஒழுக-ஒழுகாநிற்க---நடந்து-நடந்து---ஆயிழை-தமயந்தியானவள்---எய்த்தனளென்ன-இளைத்தாளென்று—நயந்து-விரும்பி---இடம் - தகுதியான(இடத்தை)---தேர்ந்து-அறிந்து---அவள் - அத்தமயந்தியானவள்---இன்பு-இன்பத்தை--உறு - அடைதற்குக்காரணமானவனாகிய---நன்மொழிகள்-நல்லசொற்களை---வழங்கியது- சொல்லிற்று ---(எ-று) [கருத்து] அன்னமானது தமயந்தியின்பமடைய நல்லவார்த்தைகள்சொல்லிற்று என்பதாம். (௫௪)

கோ * டுந்தியகொம்மைமுலைப்பொறையால்... *
வாடும்மிடைமாமயில்வாரலெனத்............... *
தோடுண்குழன்மங்கையரிற்றுணர்மா........ *
வாடுந்தளிரங்கைமறித்தனபார்.................. *

(இ-ள்) துணர்-பூங்கொத்துக்களையுடைய---மா- மாமரங்களானவை--கோடு- யானைக்கொம்புகளை---உந்திய - மேற்படுத்திய---கொம்மை-திரட்சிபொருந்திய---முலை - முலைகளது---பொறையால்-பாரத்தினாலே—வாடும்-வாடுகின்ற---இடை- இடையையுடைய---மாமயில்- பெருமைபொருந்தியமயிலே---வாரலென-(நடந்து) வாராதேயென்று---தோடு-மலரிதழ்களை---உண் - உட்கொண்ட---குழல்-கூந்தலையுடைய---மங்கையரின் - (உன்னுடைய) தோழிகள்போல்---ஆடும்-அசைகின்ற---தளிர்-தளிர்களாகிய---அங்கை- அழகியகைகளாலே—மறித்தன-(உன்னை)விலக்குகின்றன---பார்-(நீஅவற்றைப்பார்)----எ-று. [கருத்து] மாமரங்களானவை தளிர்களாகிய விரல்களாலே வாராதே என்று விலக்குகின்றனபார் என்பதாம். * தாதுவிளக்கம்-உந்தற்ளுத லுயர்ச்சியேறுதலே. [௫௫]

* விண்ணினினியங்கும்மெனமேவரநீ ...... *
மண்ணினடத்தெவ்வணம்வெளவுதியா...... *
லெண்ணினினிதுகண்டவர்யார்நகையார்......... *
பெண்ணின்னமுதேவரல்பேதைமையே...... *

(இ-ள்) பெண்-பெண்களிலே---இன்னமுதே - இனியவமிர்தம்போல்விளங்குகின்றவளே---விண்ணின்- ஆகாயத்திலும்---இயங்கும்-திரிகின்ற----எனை -என்னை----மேவர- அடைதற்கு----நீ- நீ---மண்ணில்-பூமியின்மேல்---நடந்து-நடந்துவந்து---எவ்வணம்- எவ்விதத்திலே--வெளவுதி-பிடிக்கமாட்டுவாய்---எண்ணின்- ஆலோசிக்குமிடத்து--இது - இச்செய்கையை--கண்டவர் - பார்த்தவருள் -- யார்-யாவர்--நகையார்- சிரியார்--வரல் - [மங்கைப்பருவமடைந்தவுனது] வருதல்--பேதைமை - பேதைப்பருவத்தின் செயலாயிருக்கி

ன்றது—(எ-று) * நன்னூல்-உயிரீற்றுப்புணரியல் - வலித்தன்மே லித்தலீட்டல்குறுக்கல்-விரித்தனொருத்தலும்வருஞ்செய்யுள் வேண் டுழியிவ்வியபால் விண்ணின்வியந்நு விரித்தல்விகாரமாம் கருத்து) தமயந்தியே நீ என்னைப்படிக்கவருதலறி வீனமென்றன்னஞ் சொல்லிற்று. (௫௬)

என்றின்மரபோதுமிவட்கிளையப்.............*
பின்னம்மொழிப்பேசுவலென்றா றூ.............*
ரன்னந்தனதன்புறுசுற்றமியாம்...........*
பொன்னின்னகர்யாங்கள்பொருந்திடமே......*

(இ-ள்) என்று-என்றுசொல்லி—இவட்கு- இவளுக்கு—இயைய- பொருந்த—பின்-பின்பு—அம்மொழி- அவ்வாசன்காரியத்தை— பேசுவலென்று- சொல்வேனென்றெண்ணிக்கொண்டு—இன்யாபு- இனிதாகிய (தன்) வரலாற்றை—ஓதும் - சொல்லுகின்றது—யாம்- யாங்கள்—அயன்-நான்முகக்கடவுளால்—ஊர்-செலுத்தப்படுகின் ற—அன்னந்தனது-அன்னவாகனத்தினது—அன்புறு-அன்படைந்த—சுற்றம்-உறவினேம்—யாங்கள்-யாங்கள்—பொருந்து-தங்கப் பெற்ற—இடம்-இடமானது—பொன்னின்னகர் - தேவநகரமாகும்—(எ-று-)[தன்னினத்தைத்தழுவியாமென்றும் யாங்களென்றுங் கூறிற்று](கருத்து) அன்னமானது தன்சாதியையும் இருக்குமிடத் தையுங்கூறிற்று என்பதாம். (௫௭)

மலர்மேலயன்மானதவாவியினுட்...............*
பொலன்மெல்லிதழ் * பூத்தசெழுங்கமல......*
நலனூர்வளையம்பலநாளுமயின்...............*
றுலவாதொளிர்பொன்னிறமுற்றனமால்........*

(இ-ள்) மலர்மேல்-தாமரைப்பூமேலுள்ள—அயன்-நான்முகனது--மானதவாவியினுள்-மானசதடாகத்திலுள்ள—பொலன்- பொன்மயமாகிய, மெல்-மெல்லிய, இதழ்-இதழ்கள்—பூத்த-விரியப்பெற்ற—செழுங்கமலம்-செழியதாமரைமலர்களையும்—நலனூர்-நலம் பொருந்திய—வளையம்- இளவிலைச்சுருள்களையும்—பலநாளும்-பலதினமும்—அயின்று-தின்று—உலவாது- அழியாமல்—ஒளிர்-விளங்குகின்ற—பொன்னிறம் - பொன்னுருவத்தை—உற்றனம்- அடைந்தோம்—(எ-று) * தாதுவிளக்கம், 'தொழிற்பெயர்ப்பகுதிகள்வினைக்குமுதாதாம்(கருத்து) அன்னமானது தன் வடிவுபொன்னிறமுற்றகாரணஞ்சொல்லிற்று என்பதாம். (௫௮)

களிமாமயிலன்னவர்காதலுறு.....................*
மளிதாண்மலரூர்ங்கணைவேளனையா.............*

ளான்மாநகர்நாண்மலர்வாவியினல்..........*
வளநோக்குறமண்ணிடைவந்தனமால்.........*

(இ-ள்) களி-களிப்பையடைகின்ற--மா-பெருமைபொருந்திய--மயிலன்னவர்-மயில்போலுஞ்சாயலுடையவராகியமகளிரால்---காதலுறும்-விரும்பப்படுகின்ற---அளிநாண்-வண்டுகளினொழுங்காகியநாரியையும்---மலரைங்கணை- மலர்களாகியபஞ்சபாணத்தையுமுடைய---வேளனையான்-மன்மதன்போலழகினனாகிய---நளன் - நளமஹாராஜனது---மாநகர்-பெரியபட்டணத்திலேயுள்ள---நாள் - அன்றுபூத்த---மலர்-மலர்களையுடைய---வாவியின்-தடாகத்தினது---நல்வளம்-நல்லவளத்தை---நோக்குற- பார்த்தற்பொருட்டு---மண்ணிடை-பூமியினிடத்துக்கு---வந்தனம்-(யாம்வானுலகத்தைவிட்டு) வந்தோம்---(எ-று) (கருத்து)நளனதுவாவியைப்பார்க்கப்பொன்னுலகத்தைவிட்டு இவ்வுலகிற்கு வந்தோமென்றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௫௧)

விண்ணம்புவிபாதலமேவுகினும்.................*
நண்ணுந்துயரின்றெனநல்வரமுன்...........*
றண்ணங்கமலத்திறைதந்தனன்மைக்............*
கண்ணென்றயில்கொண்டகனங்குழையாய்.....*

(இ-ள்) மை-மையெழுதப்பெற்ற---கண்ணென்று-கண்களென்று---(பெயர்வைத்து)அயில்- (நஞ்சம்பூசப்பெற்ற) வேல்களை---கொண்ட- கொண்டிருக்கிற---கனங்குழையாய்- கனம்பொருந்திய காதணியையுடையவளே---தண்ணங்கமலத்து-குளிர்ச்சிபொருந்தியதாமரைப்பூவிலிருக்கின்ற---இறை-தலைவன்---விண்ணம்புவிபாதலம்-தேவலோகம் பூலோகம் பாதாளலோகம்இவ்வனைத்தையும்---மேவுகினும்-ஒழிவின்றியடைந்தாகிலும்---நண்ணும்-(உன்னை)யடையக்கடவதாகிய---துயர்-(தளர்ச்சித்)துயரமானது---இன்றென-இல்லையென்று---நல்வரம்-நல்லவரத்தை---முன்-முன்பு---தந்தனன்-எனக்குக்கொடுத்தான்---(எ-று) (கருத்து) தமயந்தியேயாங்கள்மூவுலகிற்சென்றாலும் துன்பமில்லையென்று பிரமன்வரங்கொடுத்தான் என்றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௫௨)

கௌவைக்கடல்சூழ்தருகாசினியிற்..........*
றெய்வத்திறமேவியசீர்நளனே...............*
வௌவுற்றிடினன்றியிம்மர்விடர்தா.........*
மெவ்வெப்படிவௌவினுமெய்துவமோ.......*

(இ-ள்) கௌவை-ஒலியையுடைய---கடல்-கடலாலே---சூழ்தரு-சூழப்பட்ட---காசினியில்-பூமியிலே---தெய்வத்திறம் - தேவபோக

த்தை—மேவிய-பொருந்திய—சிரீ-பாக்கியத்தையுடைய—நளன்-நளராஜன்—கௌவுற்றிடிலன்றி-பிடித்தாலன்றி—இம்மானிடர்கரம்-இம்மனிதர்கரம்—எவ்வெப்படி - எந்தெந்தவிதமாக—கௌவினும்-பிடித்தாலும்—எய்துவயோ-அகப்படுவேமோ—(எ-று) (கருத்து) அன்னயானது யாம் நளன்கையி லகப்படுவதன்றி மற்றவர் கையிலகப்படேமென்றது. (௬௧)

ஒளிர்பொன்னுலகத்துறையும்பர்பிரா ........ *
னளியாற்புகலேவலு * மாற்றுகிலேம் ......... *
வளர்பூவுறைவானவனேவலுமிந் ........ ........*
நளனேவலுமேதனிசெய்குவமால்... ........... *

(இ-ள்) ஒளிர்-விளங்குகின்ற—பொன்னுலகத்து-தெய்வலோகத்தின்கண்—உறை-வாசஞ்செய்கின்ற—உம்பர்பிரான்-இந்திரனது—அளியால்-அன்பினாலே—புகல்-சொல்லப்பட்ட—ஏவலும்-ஏவலையும்—ஆற்றுகிலேம்-(யாஞ்) செய்வோம்—வளர்-வளர்கின்ற—பூ-தாமரைப்பூவின்கண்—உறை-இருக்கின்ற—வானவன்-நான்முகக்கடவுளது—ஏவலும் ஏவலையும்—இந்நளன்-இந்தநளனது—ஏவலுமே-ஏவலையுமே—தனி-மிகுதியாகசெய் தவம் (யாஞ்)செய்வோம்.—(எ-று)[இலக்கணத்திரட்டு-பொதுவியற்படலம். எழுத்துச்சொற்பொருடெய்துந்திரிபே-இவ்விதியால்-ஆற்றுகிலேம்-என்றது-சொற்றிரிபு.](கருத்து)பிரமனேவலும் நளனேவலுஞ்செய்வேம் என்றன்னஞ்சொலவிற்று என்பதாம். (௬௨)

துளிதூங்கியவானதிதோய்ந்துநறுங் ............ *
குளிர்தாங்குறுந்துளிமென்சிறையாற் ....... *
களிதூங்கியகாமவிடாயகல ..................... *
நளன்மேனியில்வீசுவநன்குறவே... ........... *

(இ-ள்) துளி-துளித்தலோடு—தூங்கிய-தங்கிய—வானதி-ஆகாயகங்கையிலே—தோய்ந்து-முழுகி—நறுங்குளிர் - நல்லகுளிர்ச்சியானது—தாங்கு-நிலையுறப்பெற்ற—குறுந்துளி - சிறியதுளிகளை—மென்சிறையால்-மெல்லியசிறகளாலே—களி-களிப்பானது—தூங்கிய-தங்கும்படியாகவும்—காமம்-காமத்தாலாகிய—விடாய்-தளர்ச்சியானது—அகல-நீங்கும்படியாகவும்—நளன்-நளனது—மேனியில்-*உடலில்—நன்குற-நன்றாகப்பட—வீசுவம்-(யாம்)வீசுவேம்—(எ-று) (கருத்து) ஆகாயகங்கையிலே முழுகித் துளிகள் பொருந்திய இறகுகளாலே நளனது திருமேனியில்வீசுவேம் என்பதாம். * தருக்கசங்கிரகம் - அது உடல்பொறிவிடயமென மூவகைப்படும். (௬௩)

(கலித்துறை)

தெள்ளாரமுதத்தெளிவொத்தவந்தீஞ்சொனல்லாய்... *
வள்வார்முரசங்கறங்கும்மணிமுன்றில்வேந்தன்...... *
கள்வாயுமிழ்பூங்கணையேந்தியகாமனன்னா........ *
னள்ளார்வணங்குநளனென்னுமோர்நாமவேலான்... *

(இ-ள்) தெள்ளார்-தெளிவுபொருந்திய—அமுதம் - தேவாமிர்தத்தினது—தெளிவொத்த-சாரம்போன்ற—அம்-அழகிய—தீ-தித்திப்பாகிய—சொல்-வாக்கையுடைய—நல்லாய்-தமயந்தியே—வள்வார்-வாரினாலிறுக்கப்பட்ட—முரசம்-முரசவாத்தியமானது—கறங்கும்-ஒலிக்கப்பெற்றிருக்கின்ற—மணி-நவமணிகளையுடைய—முன்றில்-வீட்டின்முன்னிடத்தையும்—நளனென்னும் - நளனென்றுசொல்லப்படுகிற—ஓர்நாமம்-ஒப்பற்றநாமதேயத்தையும்உடைய—வேந்தன்-அரச(னொருவன்;)—கள்-தேனை—வாய்-இதழ்வாயினால்—உமிழ்-கக்குகின்ற—பூங்கணை-மலரம்புகளை—ஏந்திய-தாங்குகின்ற—காமனன்னான்-மன்மதன்போலழகுடையவன்—நள்ளார்-பகைவர்—வணங்கும்-(தன்னை)வணங்குதற்குக்காரணமாயிருக்கின்ற—வேலான்-வேற்படையையுடையவன்.—(எ-று) [கருத்து] தமயந்தியே மன்மதனுக்கொப்பானவன் நளனென்னும் பெயரையுடையவன், எ-ம். (௯௪)

வண்டார்வஞ்செய்துமதுவுண்டுமிழ்மாலைமார்பன்........ *
திண்டோளெழில்கேட்டவரம்பையைச்செம்மன்மார்பந்...*
தண்டாதுபுல்லப்பெறாதாள்பெயர்ச்சார்புநாடி... ..... ...*
யொண்டார்புனையுநளகூபரன்றன்னையுற்றாள்..............*

(இ-ள்) வண்டு-வண்டுகளானவை—ஆர்வஞ்செய்து-விரும்பி—மது-தேனை—உண்டு-குடித்து—உமிழ்-உமிழப்பெறுகிற—மாலை-பூமாலைபொருந்திய—மார்பன் - மார்பையுடையநளனது—திண்டோள்-வலியதோள்களின்—எழில்-அழகை—கேட்டு-(எம்மிடத்தில்) கேட்டு—அரம்பை - அந்தவரம்பையானவள்—அச்செம்மல்-அவ்வரசனது—மார்பம்-மார்பத்தை—தண்டாது- நீங்காமல்—புல்ல-தழுவுதற்கு—பெறாதால்-பெறாதகாரணத்தால், பெயர்-(அவன்)பெயரினது—சார்பு-சம்பந்தத்தை—நாடி - ஆராய்ந்து—ஒண்டார்-ஒள்ளியபொன்னரிமாலையை—புனையும்-சூடிய—நளகூபரன்றன்னை-நளகூபரனை—உற்றாள் - அடைந்தாள்.—(எ-று) (கருத்து) நளனழகை யரம்பைகேட்டு நளனைக்கூடப்பெறாமையால் நளன் பெயர்கொண்ட குபேரன்மகனாகிய நளகூபரனைச்சேர்ந்தாள் (௯௫

ஏகாவிசும்பினளன்பாடலையாங்கள்கூற ............... *
மாகாதிபனிவ்வரிபாடல்வருங்கொலென்று............*
பாகூறவீணையயில்வோன்முகம்பார்த்துரைப்ப* .. *
வாகாவெனலாலவற்கப்பெயர்சேர்த்திருரே........... *

(இ-ள்) யாங்கள்-யாம்—விசும்பின்-பொன்னுலகத்திற்கு—ஏகா-(இவ்வுலகத்திருந்து)போய்—நளன்-நளராஜனது—பாடலை-இசைபாடுதற்சிறப்பை—கூற-சொல்ல—மாகாதிபன்-தேவேந்திரன்—இவ்வரிபாடல்-இப்பாட்டுப்பாடுதல்—வருங்கொலென்று-உனக்குவருமோவென்று—பாகு-பாகின்சுவை (போலுஞ்சுவை)—ஊற-பெருக—வீணையயில்வோன்-வீணைபாடுகிற ஒருகந்தர்வனது—முகம்-முகத்தை—பார்த்து-நோக்கி—உரைப்ப-சொல்ல—ஆகாவெனலால்-(யாம்)ஹாஹாவென்று இகழ்தலால்—அவற்கு-அக்கந்தர்வனுக்கு—அப்பெயர்-அந்தஹாஹா என்கிறபெயரை—சேர்த்திருர்-வைத்தார்—(எ-று) * இலக்கணக்கொத்து-வினையியல்-ய-ஆமறைறூவகையாய் வழங்குவர்புலவர்-இவ்விதியால் ஆகாவெனல்-எதிர்மறைவினையெச்சம். (கருத்து) இந்திரன்முன் னளன்பாடலையாங்கள் சொல்ல இந்திரன் கந்தருவனைப்பார்த் திப்பாடல்பாட வருமோவெனக் கந்தருவனென்னலாகாவெனலால் அவனுக்குஆகாவென்றுபேர்கொடுத்தார்கள் என்பதாம். (௬௬)

உலனூறுசெய்தவுயர்மாமணித்தூண்செய்தோளா...*
னலன்யாமுரைப்பநசைகூரயிராணிகொம்மை......*
முலைமேற்பொடித்தபுளகத்தினைமொய்த்தசெங்கண்.*
மலர்நீரரும்புவதிற்கண்டிலன்வானவேந்தன்......... *

(இ-ள்) உலன்-திரண்டகல்லை—நூறுசெய்த-பொடிசெய்த—உயர்-உயர்வாகிய—மா-பெரிய—மணித்தூண்-வச்சிரத்தூண்கள்போல—செய்-செய்யப்பட்ட—தோளான்-தோள்களையுடையநளராஜனது—நலன்-நற்குணத்தை—யாம்-யாங்கள்—உரைப்ப-சொல்லக் (கேட்டு)—நசைகூர்-(அவன்மே) லாசைமிக்க—அயிராணி-இந்திராணியினுடைய—கொம்மை-இளமைபொருந்திய—முலைமேல்-முலைகளின்மேலே—பொடித்த-உண்டாகிய—புளகத்தினை-மயிர்சிலிர்த்தலை—மொய்த்த-(தன்வடிவத்திலே) நெருங்கிய—செய்-செவ்விய—கண்மலர்-நேத்திராரவிந்தங்களில்—நீர்-ஆனந்தநீரானது—அரும்புவதின்-தோன்றலால்—வானவேந்தன்-தேவேந்திரனாவன்—கண்டிலன்-பார்த்திலன்—(எ-று)(கருத்து) நளன்கீர்த்தியைக்கேட் டிந்திராணிமுலைகள் பூரித்ததை இந்திரனுக் கானந்தக்கண்ணீர்தோன்றலாற் கண்டிலன்.எ-ம். (௬௭)

மதுவுண்டுவண்டுபயிறார்நளன்வாண்முகத்தைப் ... *
பெருவெண்மதியநிகரெய்தப்பெறாமையன்றோ .. *
கருதுங்கமலத்துறைநான்முகன்கைவருந்த ....... *
வருதிங்கடோறும்புதிதாகவகுத்தல்செய்வான் ...... *

(இ-ள்) கருதும்-நினைக்கின்ற—கமலத்து-தாமரைப்பூவின்கண்—உறை-இருக்கின்ற—நான்முகன்- நான்முகக்கடவுள்—வண்டு-வண்டுகளானவை—மது-தேனை—உண்டு - குடித்து—பயில்-வாசஞ்செய்யப்பெற்ற—தார்-மாலையையுடைய—நளன் - நளராஜனது—வாண்முகத்தை - காந்திபொருந்தியவதனத்திற்கு—பெருவெண்மதியம்-கலைநிறைந்தசந்திரன்—நிகர்- ஒப்பை--எய்த - அடைய--பெறாமையன்றோ - பெறாமையாலன்றோ--கை-(தன்)கைகள்—வருந்த-நோவ—வரு-வருகின்ற—திங்கடோறும்-மாதந்தோறும்—புதிதாக-நூதனமாக—வகுத்தல்செய்வான்- உண்டாக்குகிறான்.—(எ-று-)(கருத்து நளன்முகத்துக்குச் சந்திரனுவமையாற் பிரமன் அச்சந்திரனை மாதந்தோறும் புதிதாகப்படைக்கின்றான் என்பதாம். (௩அ)

கோணைக்களிற்றுநளன்வாண்முகங்கூறுகென்று..... *
யாணர்த்திருமாலருள்செய்தலும்யாங்கள்கூற......... *
நாணிக்கமலமயனோடுமுகிழ்ப்பநாடிப்............... *
பூணிற்பொலிந்தமுலைப்பூமகட்புல்லுமன்றே......... *

(இ-ள்) கோண்-மாறுபாடுபொருந்திய—களிற்று-யானைகளையுடைய நளன்-நளராஜனது—வாள்- காந்திபொருந்திய—முகம்-முகச்சிறப்பை—கூறுகென்று- சொல்லக்கடவையென்று—யாணர்-அழகிய—திருமால்-மஹாவிஷ்ணு—அருள்செய்தலும்-சொல்லியவளவிலே—யாங்கள்-யாம—கூற-சொல்ல—நாணி- வெட்கி—கமலம்-நாபிக்கமலமானது—அயனோடு—நான்முகனோடு,முகிழ்ப்ப-குவிய—நாடி-(அத்தருணம்) பார்த்து—பூணின் - ஆபரணத்தினாலே—பொலிந்த-விளங்குகின்ற—முலை - முலைகளையுடைய—பூமகள்-திருமாதை--புல்லும்- (அக்கடவுள்) கூடுவான்—(எ-று) ஐ- சாரியை. கருத்து) விஷ்ணு நளன்முகத்தழகைச்சொல்லென யாங்கள் சொல்லத் தமது நாபிக்கமலம் பிரமனுடன் மூட அதைக்கண்ட விஷ்ணுவானவர் இலக்குமியை அணைந்தார்,எ-ம். (௩௯)

சிறைவண்டுதண்ணெனுமுலைசூழ்ந்துபைந்தேறன்மாந்தி *
யறைகின்றதண்டார்புனையுந்திற * லாடல்வேந்தன்........ *
பொறைதேரினங்கட்புவிமாதினைப்பொங்குசெஞ்சூட்...... *
டிறைவாளரவைநிகரென்னவியம்பலாமே..................... *

(இ-ள்) சிறை-சிறகுகளையுடைய—வண்டு-வண்டுகளானவை—தண்ணென்-குளிர்ச்சிபொருந்திய---முகை-அரும்புகளை---சூழ்ந்து-சுற்றிக்கொண்டு---பைந்தேறல்-பசியதேனை---மாந்தி-குடித்து---அறைகின்ற-ஒலிக்கப்பெற்ற---தண்-குளிர்ச்சிபொருந்திய---தார்-மாலையை--புனையும்-தரித்திருக்கின்ற--திறல்-வலிமையாலுண்டாகிய--ஆடல்-வெற்றிபொருந்திய--வேந்தன்-நளராஜனுடைய, பொறை-குற்றம்பொறுத்தலையும்பூபாரந்தாங்குதலையும்--தெரியின்-ஆராய்ந்தால்- அக்கண்-அழகியவிடத்தையுடைய--புவிமாதினை-பூமிதேவியையும்--பொங்கு-விளங்காநின்ற, செஞ்சூட்டு-சிவப்பாகிய சூட்டையுடைய--வாள்-காந்திபொருந்திய--இறை-(பாம்புகளுக்கெல்லாந்)தலைவனாகிய--அரவை-ஆதிசேஷனையும், நிகரொன்ன-(அவனுக்கு) உபமானங்களாக---இயம்பலாம்-(அறிவுடையோருக்குச்) சொல்லுதல்கூடும்—(எ-று) (கருத்து) நளன் பொறுமையிலே பூமிதேவியையும் ஆதிசேஷனையும் ஒப்பானவன்— * இலக்கணத்திரட்டு-இ-உ-ஐ-ல-ள-ம-மெய்யிறுதொழிற்பெயர் என்பதாம். (௭௰)

புற்றுறுமாவமுறைவாளிப்புயங்கமுன்னைச்........ *
செற்றார்தமாவிநுகர்விக்குஞ்சிலைக்கையாற்குக்...... *
குற்றேவல்செய்யுங்கொடியன்னவர்பானடக்கக்...... *
கற்றரம்பைபயில்வானடை * காட்டுகிற்பேம்......*

(இ-ள்) ஆவமாகும்-தூணியாகிய--புற்று-புற்றினுள்--உறை-இருக்கின்ற--வாளி-அம்புகளாகிய--புயங்கம்-பாம்புகளானவை--உன்னை-உன்னும்படியாக--செற்றார்-பகைவரது--ஆவி-பிராணவாயுவை--நுகர்விக்கும்-உண்பிக்கின்ற--சிலை-வில்லையேந்திய--கையாற்கு-கையையுடையநளனுக்கு--குற்றேவல்-சிறியவேவல்களை--செய்யும்-செய்கின்ற--கொடியன்னவர்பால்-பூங்கொடிபோல்பவரிடத்தே--நடக்க-நடத்தற்கு---கற்று-(யாம்) கற்றுக்கொண்டு-ஆடு-(தெய்வசபையி)லாடுகின்ற--அரம்பை-அரம்பையானவள்--பயில்வான்-கற்கும்படியாக---நடை-அந்நடையை--காட்டுகிற்பேம்-கற்பிப்போம்—(எ-று) * இலக்கணக்கொத்து-ஒழிபியல்-௩௮-ம்-எழுத்துச்சொற்றிரி பிரண்டேயன்றிப் பொருட்டிரிபெய்தும் பொருந்துமென்ப இவ்விதியால், காட்டுகிற்பேன் என்றது-சொற்றிரிபு. (கருத்து) யாங்கள் நளனிடத்தேவல்செய்யும்பெண்களிடத்து நடைபயின்று அரம்பைக்குக்கற்பிப்போம், எ-ம். (௭௧)

அறைபொற்கழற்காலரசன்னகரஞ்சோனலல்லார்......*
மறைசொற்கள்யாவுமறையாமலெமக்குரைப்பார்... *
பொறிமுற்றடக்கிப்புலன்போம் வழிபோக்கல்செய்யா
நெறியிற்பிறர்க்குப்புகலாதெனநெஞ்சிலெண்ணி... *

(இ-ள்) அறை-ஒலிக்கின்ற---பொன்-பொன்னாலாகிய---கழல்-வீரக்கழலை அணிந்த---கால்-பாதத்தையுடைய---அரசன்-நளராஜனது---நகர்-அரண்மனையிலுள்ள---அஞ்சொல்-அழகியசொல்லையுடைய---நல்லார்-மாதரானவர்---பொறிமுற்று-ஐம்பொறிகளையும்---அடக்கி-அடக்கி---புலன்-ஐம்புலன்களிலும்---போம்வழி-செல்லும்வழியில்---போக்கல்செய்யா-(அவற்றைச்)செலுத்தாத---நெறியின்-ஒழுக்கத்தினாலே---பிறர்க்கு-அயலாருக்கு---புகலாதென-சொல்லாதென்று---நெஞ்சில்-மனதிலே---எண்ணி-நினைத்து---மறை மறைக்கத்தக்க---சொற்கள்யாவும்-எல்லாச்சொற்களையும்---மறையாமல்-ஒளிக்காமல்---எமக்கு-எங்களுக்கு---உரைப்பார்-சொல்லுவார்.---(எ-று) (கருத்து) நளன்-அரண்மனைப்பெண்கள்-இரகசியங்களை எங்களிடத்திற் சொல்வார்கள், எ-ம். (௭௨)

திங்கட்கலையின்செழும்பூங்கதிர்செவ்விவாய்ப்பக்... *
கங்குற்கமலமலர்தோய்ந்துகளிப்புறுமற்............ *
பைங்கட்குமுதமுறல்போலுநின்பாலுறுமற்........*
றெங்கற்புயத்தான்பிறமாதரைத்தோய்தன்மாதோ...*

(இ-ள்) திங்கட்கலையின்-சந்திரகலையினது---செழு-செழிய---பூ-அழகிய---கதிர்-அமுதகிரணத்தை---செவ்வி-அழகானது---வாய்ப்ப-பொருந்த---கங்குல்-இரவின்கண்---கமலமலர்-தாமரைமலரானது---தோய்ந்து-சேர்ந்து---களிப்பு-மகிழ்ச்சியை---உறுமல்-அநுபவியாதிருக்க---பைங்கள்-பசியதேனையுடைய---குமுதம்-(அத்தாமரைமலரிற் குறைந்த) அல்லிமலரானது---உறல்போலும்-(அப்படி அம்மகிழ்ச்சியை) அநுபவித்தல்போலும்---நின்-உன்னுடைய---பால்-இடத்து---உறுமல்-பொருந்தாமல்---தொங்கல்-மாலையணிந்த---புயத்தான்-புயத்தையுடையநளராஜன்---பிறமாதரை-வேறுமாதரை---தோய்தல்-சேர்தல்.---(எ-று) மாது-ஓ- இரண்டும் அசைகள். (கருத்து) நளனுன்னையல்லாது பிறமாதரைச்சேருதல் சந்திரனைத் தாமரைசேராது அல்லிசேருதல்போலிருக்கும், எ-ம். (௭௩)

மயிர்வாய்ச்சிறுகட்பிடிமென்னடைவாய்ந்தநல்லாய் *
செயிர்தீர்விதியின்றிறம்யார்கொறெளிந்ததீரா...... *
ரயில்வேனளன்றனழகுன்னெழிலொத்தயாற்றுற்... *
பயினேயஇவின்பநினக்கன்றிப்பயன்படாதால்......*

(இ-ள்) மயிர்வாய்-மயிர்பொருந்திய, சிறுகண்-சிறியகண்களையுடைய, பிடி-பெண்யானைநடைபோலும்---மென்னடை-மெல்லியநடை, வாய்ந்த-பொருந்திய, நல்லாய்-தமயந்தியே, அயில்-கூர்மைபொருந்திய, வேல்-வேலையுடைய, நளன்-நளராஜனது, அழகு-அழகு

ம்,உன் உனது,எழில்-அழகும்,ஒத்த-(சம்மி)லொத்திருக்கின்ற,ஆற் றல்-காரணத்தினால்,பயில்-தங்கிய,நேயம்(ஒப்புடை) பன்பானுண் டாகும்,இன்பம்-இன்பமானது--நினக்கன்றி-உனக்கல்லாமல் (மற் றொருத்திக்கு)--பயன்படாது-கிடைப்பதில்லை—(அழகொத்திருந் தாலும் விதிசங்கற்பம் பிரதிகூலமாயிருந்தாலோவெனின்)செயிர்- குற்றத்தினின்றும்--தீர்-நீங்கிய---விதியின்-விதியினது---திறம்-கரு த்தை--தெளிந்த-அறிந்த,நீரார்-குணத்தையுடையவர், யார்-யெவர். (எ-று)(கருத்து)தமயந்தியே உன்னழகும் நளனழகும் ஒத்திருக் கிறதால் அவனின்பமுனக்கேகிடைக்கும் வேறொருத்திக்குப்பயன் படாது விதிவசமெங்வாறோ என்பதாம்.* சொற்பொருள்விளக்க ம்-இன்பமெய்வுயிர்க்கு மியற்கைப்பொருட்குணம். (எச)

விரைசேர்கமலனறம்போதினில்வீற்றிருக்குந்........*
திருவோடுசெங்கட்டிருமாலினைச்சேர்த்தலானும்.....*
வரைமானைமுக்கட்பெருமானிடம்வைத்தலானும்......*
யிரவோடுதண்ணொண்கதிர்த்திங்களிசைத்தலானும் ...*

(இ-ள்) விரைசேர்-வாசனைபொருந்திய, கமலன்-உந்திக்கமலத்து ற்றபிரமனுடைவன்--நறம்போதினில்-நற்றாமரைமலரில்--வீற்றிருக் கும்,எழுந்தருளியிருக்கும்-திருவோடு--திருமாதோடு-செங்கண்-- செய்யகண்களையுடைய--திருமாலினை-விஷ்ணுவை---சேர்த்தலா னும்-கூட்டினமையாலும்---வரைமானை-பார்வதிதேவியை---முக்க ண்-மூன்றுகண்களையுடைய--பெருமானிடம்-கடவுளிடத்தே--வை த்தலானும்-இருத்தினமையாலும்--இரவோடு- இராத்திரியோடு--த ண்ணொண்-குளிர்ச்சிபொருந்திய--கதிர்-கிரணங்களையுடைய--திங்க ள்-சந்திரனை--இசைத்தலானும்-பொருத்தினமையாலும்---(எ-று.) [விரைசேர்கமல நறம்போதினில்வீற்றிருக்கும்,எனட்பாடமோதி இலக்குமிக்கு அடைமொழியாக்குவாருமுண்டு- அவ்வாறு அடை மொழிகூறில் எழுவாயின்மையாற்பொருந்தாது இச்செய்யுளும்வ ருஞ்செய்யுளுங் குளகம்* தண்டியலங்காரம்குளகம்பலபாட்டொ ருவினைகொள்ளும் [கருத்து] பிரமதேவன்திருமகளையுந்திருமாலை யும் பார்வதியையும் பரமசிவனையும் இரவையுஞ் சந்திரனையும்சேர் த்தமையாலும். (எரு)

குயின்மென்குதலைத்திருவேதினைக்கூடுமின்ப.........*
மயில்கொண்டவொள்வேனளற்காகவமைத்திலானே..*
வியப்பெண்ணியன்றிவ்விதிகூட்டலனென்னுஞ்சீர்த்தி..*
பயனின்றிமாறிப்பழியாகப்பயக்குமன்றே ........ ..*

(இ-ள்) குயில்-குயிலிசைபோலும்--மென்குதலை- மெல்லியமழ

லைச்சொற்களையுடைய--திருவே-தமயந்தியே--நினை-உன்னை---கூடு
ம்-அநுபவித்தலுடையதாகிய--இன்பம்-இன்பத்தை--அயில்கொண்
ட-கூர்மைகொண்ட--ஒள்வேல்-ஒள்ளியவேலையுடைய---நளற்காக-
நளராஜன்பொருட்டு---அமைத்திலானேல்-படைத்திலனாயின்---இ
யைபு-தகுதியை---எண்ணியன்றி-நினைத்தல்லாமல்--விதி-நான்முக
னானவன்---கூட்டலென்னும்-(ஒருவரோடொருவரைச்) சேர்க்கல
ென்கிற---சீர்த்தி-கீர்த்தியானது---பயனின்றி-பயனில்லாமல்--மா
றி-(வேறுபட்டு)--பழியாக-நிந்தையாக--பயக்கும்-(அவனுக்கு)வி
ளையும்---(எ-று.) (கருத்து) தமயந்தியே, உன்னை நளனுக்காகப்ப
டைத்திலனாயின் பிரமனுக்குப் பழிவிளையுமென் றன்னங்கூறிற்று
என்பதாம். (௭௬)

போர்வேளன்றன்புனைதாரகன்மார்புபுல்லு......*
மோரார்மகள்யாரெனயானபறேடுகேட்பச்........*
காரோதிநின்பேர்கழறுற்றனன்போலு*மாங்குத்....*
தேரோலைதன்னுற்றெளிவுற்றிடக்கேட்டிலேன்யான்.*

(இ-ள்) கார்-மேகம்போலும்--ஓதி-கூந்தலையுடையவளே--போ
ர்-போர்செய்தற்குரிய--வேல்-வேலையுடைய--நளன்-நளராஜனது-
புனை-சூடப்பட்ட---தார்-மாலையையுடைய---அகல-பரந்த---மார்பு-
மார்பை--புல்லும்-தழுவத்தகும்--ஏர்-அழகினால்--ஆர்-நிறைந்த--
மகள்-மங்கையானவள்--எவளென்று-யான்--நான்-அபறேடு-நான்
முகனை--கேட்ப-வினவ--நின்-நினது--பேர் நாமதேயத்தை---கழ
றுற்றனன்போலும்-(அவன்) சொன்னான்போலும்---ஆங்கு - அப்
போது--தேர்-(அவனது)தேரினது-ஓலைதன்னுடைய-ஓசையினாலே--
தெளிவுற்றிட-ஐயந்தீர- யான்-நான்--கேட்டிலேன்-(அதைக்) கே
ட்டறிந்திலேன்---(எ-று)* அகத்தியம். எழன்விபத்திமுன்னெய்து
மவன்கணையிதும் † குவலயாநந்தம். விபத்தியென்பது வேற்றுமை
யெனப்படும் [கருத்து] நளனுக்குமனைவியாரென்று பிரமனையான்
கேட்க அவனும்பேர்சொற்றனன்போலுமிருந்தது, தேரோசையா
ற்றெளிவுறக்கேட்டிலன் என்பதாம். (௭௭)

கருந்தாரைவாய்வாள்பொருவுங்கயற்*கண்ணிகேண்மோ*
பொருந்தாதனயான்புகன்றேனவைநீக்கப்பூந்தாள்...*
வருந்தாவொளிக்கட்பிலழ்செய்தனன்மாற்றுவுள்ளம்...*
பரிந்தார்வமுற்றப்புரிவேனெனப்பணிந்தியென்று.....*

(இ-ள்) கருந்தாரைவாய்-கருவிழிபொருந்திய--வாள்-வாளையும்-
கயல்-கெண்டையையும்--பொருவும்-நிகர்க்கின்ற--கண்ணி-கண்க
ளையுடையவளே--கேள்-(நீ)கேளு--யான்-நான் - பொருந்தாதன-

இப்போதைக்குவேண்டாதசொற்களை, புகன்றேன்-சொல்லினேன்; அலைவுறற்க-அலைவுறற்பதாக, பூ-மலர்போல, (மெல்லிய) தாள்-உன்னடிகளானவை, வருந்தா-வருந்தி, ஒதுங்க (என்பின்னே நடந்துவரும்படியாக), பிழைகுற்றத்தை-செய்தனன்-உனக்குச் செய்தேன், மாற-(அது) தீர, உள்ளம்-உள்ளத்தில், பரிந்து-அன்புற்று, ஆர்வம்-(உன்) விருப்பத்தை, முற்ற-நிறைவேற, புரிவேன் செய்வேன், என்-(அவ்விருப்பம்) யாது, பணித்தி-(நீ) சொல்லு, என்று-என்றுசொல்லி.— எ-று [மோமுன்னிலையசை இதுகுளகம்] கருத்து) தமயந்தியே, விருப்பற்றசொற்களைச்சொல்லினேன் அலைவுறற்கட்டும் உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன் நீசொல்லென் றன்னஞ்சொல்லி
* தருக்கசங்கிரகம்-௨௧-௯-உருவங்கவர்வதுகருமணிநுனியதுகண்ணெனப்பெயரியத் தன்பொறியென்ப. (௭௮)

தோளாமணியைநிரைத்தன்னமென் றூயமூரல்...... *
கோளார்மதிவாண்முகத்தாளுட்குறிப்புநாடித் ..... *
தாளாண்மையுள்ளங்குறிப்பிற்றெரிதன்மையோரின் *
வாளாவிருந்ததணிபொற்சிறைவாய்ந்தவன்னம்.. ... *

(இ-ள்) அணி-அழகிய—பொன்-பொன்மயமாகிய—சிறை-சிறைகள்—வாய்ந்த-பொருந்திய—அன்னம்-அன்னமானது—தோளா-துளைக்கப்படாத—மணியை-முத்துக்களை—நிரைத்தனன்-ஒழுங்குபடுத்ததுபோலும்—மெல்-மெல்லிய—தூய-பரிசுத்தமாகிய—மூரல்-பல்லொழுங்கையும்—கோளார்-பெருமைபொருந்திய—மதி-சந்திரன்போலும்—வாள்-காந்திபொருந்திய—முகத்தாள்-முகத்தையுமுடைய தமயந்தியினது—உட்குறிப்பு-உட்கருத்தை, நாடி-ஆராய்ச்சிசெய்துகொண்டு—ஆண்மை-ஆழமாகிய—உள்ளம்-(ஒருவர்) கருத்தை—குறிப்பின்-அறியின்—தாள்-தமது முயற்சியை—தெரி-(அதன்பின்பு) தெரிவிக்கும்—தன்மையோரின்-குணமுடையவர்போல—வாளா-சும்மா—இருந்தது-இருந்தது. (எ-று) (கருத்து) அன்னமானது தமயந்தியுட்கருத்தை அறிந்து பேசாதிருந்தது என்பதாம். (௭௯)

இவ்வாறுசெங்காண்மடவன்னமிருத்தலோடு......... *
மைவாணெடுங்கட்டமயந்திமனத்திலோர்ந்து...... *
செவ்வாய்ப்பழுதுஞ்செழுந்தேறலொளித்தலின்றி ..... *
யெவ்வாகநின்சொற்குயிலுணவுரைக்க * லுற்றாள் *

(இ-ள்) இவ்வாறு-இவ்விதமாக—செங்கால்-செய்யகால்களையுடைய—மடம்-இளமைபொருந்திய—அன்னம்-அன்னமானது—இருத்தலோடும்-இருந்தவளவில—மை-அஞ்சனமெழுதப்பெற்ற

—வாள்-வாள்போலும்—நெடு-நீட்சிபொருந்திய—கண்-கண்களையுடைய—தமயந்தி-தமயந்தியானவள்—மனத்தின்-மனத்தின்கண்—ஓர்ந்து-ஆலோசித்து—செவ்வாம்பல்-செவ்வல்லிப்பூவிலிருந்து—ஊறும்-சுரக்கின்ற—செழுந்தேறல்-செழியதேனானது—துளித்தலின்றி-சிந்துதல்(தன்னிடத்)தில்லாமல்—ஒவ்வாத-நிகராகமாட்டாத—தீஞ்சொல்-(தன்செவ்வாயிலிருந்துவருகிற)மதுரவார்த்தையை—குயில்-கோகிலமானது—நாண-வெட்கமுற—உரைக்கலுற்றாள்-சொல்லத்தொடங்கினாள்—(எ-று)(கருத்து) தமயந்தி குயிலும்நாணச்சொல்லத்தொடங்கினாள் என்பதாம். * தொல்காப்பியம்-எஃகாவெனற்றேமகவேஉவறிசொல். (௮௰)

(கலிவிருத்தம்)

பேதைநீர்மையிற்பெட்புறின்யாங்கணு........*
மேதமெய்துறுமென்பர்சாதமே...............*
யாதலானிற்றொடர்ந்தஞரெய்துறத்............*
தீதிழைத்தனன்யானுன்றிறத்தினே............*

(இ-ள்) பேதைநீர்மையில்-பேதமைக்குணத்தினாலே--யாங்கணும்-எல்லாவிடங்களிலும்--பெட்புறின்-விரும்பினால்--ஏதம்-குற்றமும்(அதனால்விளைவதாகிய)துன்பமும்--எய்துறும்-அடையும்--என்பர்-என்றுசொல்லுவார்(பெரியோர்)--சாதமே-(அது)சத்தியமே, ஆதலால்-ஆகையால்--நின்-உன்னை--தொடர்ந்து-பின்சென்று--அஞர்-துன்பமானது—எய்துற-(என்னை)அடைய—யான்-நான்—உன்றிறத்தின்-உன்னிடத்தே—தீது-குற்றத்தை—இழைத்தனன்-செய்தேன்—(எ-று)(கருத்து) தமயந்தியானவள் அன்னமே உன்னிடத்திற் குற்றஞ்செய்தேனென்றாள் என்பதாம். (௮௧)

பளிங்கிற்றுன்னியபல்பொருண்மற்றதில்...... *
விளங்கித்தோன்றல்போல்யான்செய்தவெம்பிழை
களங்கமற்றவுன்னுள்ளத்திற்கண்டுகொற்...... *
றுளங்கயான்பிழைத்தேனென்றுசொற்றதே... *

(இ-ள்) (களங்கமற்ற) மாசற்ற—பளிங்கில்-கண்ணாடியிடத்து, துன்னிய-கிட்டியிருக்கின்ற—பல்பொருள்-பலபொருளும்—அதில்-அதனுள்—விளங்கித்தோன்றல்போல் - பிரதிபிம்பத்துத்தோன்றுதல்போல்—துன்னிய-(உன்னிடத்துக்)கிட்டியிருக்கின்ற—யான்-நான்—செய்த-(உனக்குச்)செய்த--வெம்பிழை-கொடியபிழையானது—களங்கமற்ற-மாசற்ற—உன்-உனது—உள்ளத்தில் - நெஞ்சுள்—கண்டுகொல் - பிரதிபிம்பத்துத்தோன்றியோ—யான்-நான்—துளங்க-நடுங்கும்படியாக--பிழைத்தேனென்று - (உனக்குச்)

குற்றஞ்செய்தேனென்று—சொற்றது-(நீ) சொல்லியது—(எ-று) (கருத்து) கண்ணாடியானது தன்முன்னுள்ள பொருளைத் தான்காட்டுதல்போல என்குற்றத்தை நீயேற்றுக்கொண் டெடுத்துக்காட்டினுயென் றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (அ௪)

வேண்டல்செய்வலென்றாய்விழைவாலினைக் ... *
காண்டலன்றியென்வேண்டுங்கதிர்மதி......... *
யீண்டுநோக்குநர் * கண்களிப்பெய்துறச்......*
சேண்டயங்குவதன்றியென்செய்யுமால்.........*

(இ-ள்) வேண்டல்-வேண்டப்பட்டதை—செய்வலென்றாய்-செய்வேனென்றுசொன்னாய்—விழைவால்-ஆசையினாலே—(நினை-அழகிய)வுன்னை--கண்களிப்பு- நேத்திராநந்தத்தை--எய்துற-அடைய—காண்டலன்றி-காணுதலல்லாமல்—என்- யாது—வேண்டும்-(எனக்கு)வேண்டும்—கதிர்-கிரணத்தையுடைய—மதி - சந்திரனானவன்—ஈண்டு-இவ்விடத்திருந்து—நோக்குநர் - பார்ப்பவர்—கண்களிப்பு-நேத்திராநந்தத்தை—எய்துற-அடைய—சேண்- ஆகாயத்திலிருந்து—தயங்குவதன்றி-விளங்குவதல்லாமல்—என்-யாதுபயனை—செய்யும்-(அவர்க்குச்)செய்வான்—.எ-று.* தொல்காப்பியம்-இளவியாக்கவியல்-௬௨-ஆ கன்னாந்தோரு முலையும்பிறவும்- பன்மைச்சுட்டியசினை நிலைக்கிளவி-பன்மைகூறுங் கடப்பாடிலவே-தம்வினைக்கியலு மெழுத்தலங்கடையே. (கருத்து) தமயந்தியானவள் அன்னமே யான்விரும்பியதைச் செய்வேனென்றாய் உன்னைக் கண்டதேயல்லாமல் எனக்கென்னவேண்டுமென்றாள் என்பதாம் |(அரு)

(கொச்சகக்கலிப்பா.)

விழையுமனத்தநுமனத்தைவிட்டகல்வதெனினன்றே*
தழையவுரைவருநாவாற்சாற்றலாந்தகைமைத்தா... *
மெழுபுவிவாழ் * கன்னியரிலிருவிசும்பிற்றருவுனறுங்
கொழுநனைநல்குநிரொன்றுகூறுநருமுளர்கொல்லோ *

(இ-ள்) விழையும்-விரும்பபடுகின்ற—மனத்தது- மனத்திலுள்ளதொன்று—மனத்தை- அம்மனத்தை—விட்டகல்வதெனினன்றோ-விட்டுவெளிப்படுவதாயினன்றோ—தழைய-பெருக—உரைதரும்-பேசுகின்ற—நாவால்- நாவினாலே—சாற்றலாந் தகைமைத்தாம் - சொல்லப்படுந்தகுதியுடையதாகும் — எழுபுவி- எழுதீவுகளிலேயும்—வாழ்-வாழ்கின்ற—கன்னியரில் - பெண்களுள்— இருவிசும்பில் - பெரியவானுலகத்துள்ள—தருவின் - கற்பக தருவினது—நறு-பரிமளம்பொருந்திய—கொழுநனை - செழியவரும்பை—நல்குநிரொன்று-(கொணர்ந்து)கொடுமென்று—கூறுநரும்- சொல்வா

ரும்—உளர்கொல்-இருக்கின்றாரோ(அப்படியே)---தருவின்-கற்பகதருப்போலும்—நறு-நற்குணம்பொருந்திய—கொழுநனை- நளராஜனை--நல்குதியென்று- கொணர்ந்துகொடுவென்று--கூறுநரும்-சொல்வாரும--உளர்கொல்-இருக்கின்றாரோ—(எ-று)' * தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-எ-சூ-ரஃகாரத்தும்பகரவிறுதிய- மாரைக்கிளவியுளப்படமூன்று-நேரத்தோன்றும்பலரறிசொல்லே. (கருத்து) தமயந்தியானவள் கொழுநனைத்தாவென்றுசொல்பவருமுண்டாவென்று சிலேடையாகச்சொன்னாள்,எ-ம். (௮௪)

தழைசிறையமடவனமேசாற்றுதியென்றிவ்வாறு........ *
குழைகிழிக்குமதர்நெடுங்கட்கொம்பர்மகிழ்நாணினொடு...*
மொழிவதுகேட்டையுற்றுமுகிழ்நகைவாணுதலுளத்தில்.. *
விழைவுறுநன்மொழிகள்சிலமடவன்னம்விளம்புமால்......*

(இ-ள்) தழை-தழைத்த—சிறைய- சிறைகளையுடைய—மடம்- இளமைபொருந்திய—அனமே - அன்னமே—சாற்றுதியென்று- சொல்லென்று—இவ்வாறு-இவ்விதமாக—குழை- குழையையுடைய(காதை)—கிழிக்கும்-கிழிக்கின்ற—மதர்-மதர்த்த—நெடு-நீட்சிபொருந்திய--கண்-கண்களையுடைய—கொம்பர்-பூங்கொம்புபோல்பவள்—மகிழ்-மகிழ்ச்சியோடும்—நாணினொடும்-வெட்கத்தோடும்—மொழிவது-சொல்வதை—கேட்டு-(தான்) கேட்டு—ஐயுற்று-சந்தேகித்து—முகிழ்-முல்லையரும்புபோலும்—நகை - பற்களையும்—வாள்-காந்திபொருந்திய—நுதல்- நெற்றியையுமுடையவளது—உளத்தில்-உள்ளத்தின்கண்ணே—விழைவுறு- விரும்பப்படும்—நன்மொழிகள்சில - சிலநல்லசொற்களை—மடவன்னம் - இளமைபொருந்தியவன்னமானது—விளம்பும்-அவளுக்குச்சொல்லும்.—(எ-று-)(கருத்து) தமயந்திசொற்களைக்கேட்டன்னஞ்சொல்லியது என்பதாம். (௮௫)

தருவினறுங்கொழுநனையார்தருகவெனவுரைப்பரொனு
மரியமறைப்பொருளதனையான்கேட்கலாகாதோ,தெரி
யவருமறைப்பொருளைச்செவிப்புலத்திலுறநான்காம்*
வருணமுடையவர்கேட்கலாகாதவாறேபோல்...... *

(இ-ள்) தருவின்-கற்பகதருவினது—நறு -பரிமளம்பொருந்திய—கொழுநனை-செழியவரும்பை—யார்-எவர்—தருகவென-கொடுவென்று—உரைப்பரொனும்-சொல்லுவாரென்று சொல்லப்பட்ட—அரிய-அரிதாகிய--மறைப்பொருளதனை-இரகசியப்பொருளை—யான்-நான்—கேட்கலாகாதோ - கேட்கத்தகாதா—தெரியவரு-அறிதற்கரிய—மறைப்பொருளை-வேதப்பொருளை—செவிப்புலத்தி

லி-சுரோத்திரேந்திரியத்திலே—உற- பொருந்த—நான்காம்வருணமுடையவர்-சூத்திரர், கேட்கலாகாதவாறேபோல்- கேட்கத்தகாதவிதம்போல்—(எ-று) [கருத்து] அன்னமானது தமயந்தியே நீ சொன்னஇரகசியப்பொருளையான்கேட்கலாகாதோவென்றுசொல்லிற்று,எ-ட. (௮௬)

மனமுறுமோர்பொருளடைதலரியதோமனத்தாலு *
நினைவரியபொருளினையுநிறையுடையோ * ரடைகுவாற்
புனைமணிமேகலைதாங்கிப்புடையகன்றவகலல்குற் .. *
கனியனையவந்தீஞ்சொற்கற்பகப்பூங்கொம்பன்னாய் *

(இ-ள்) புனை-அலங்கரிக்கப்பட்ட—மணிமேகலை- இரத்தினமேகலையை—தாங்கி சுமந்து—புடையகன்ற - புடைபரந்த—அகல்-பரப்பையும்----அல்குல்-அரைக்கீழிடத்தையும்---கனியனைய - முக்கனிபோலும்---அம் - அழகிய---தீ - மதுரம்பொருந்திய---சொல்-சொல்லையுமுடைய---கற்பகப்பூங்கொம்பன்னாய்-கற்பகத்தின் மலர்க்கொம்புபோல்பவளே---மனம்-மனத்தின்கண்---உறும் - இருக்கின்ற---ஓர்பொருள் -ஒருபொருளை---அடைதல்- பெறுதல்---அரியதோ-(கற்பகவருமையடைதல்போல்)--அரியதோ-(அரியதன்று) அரியதென்றேன்சொல்லக்கூடாதெனின்--நிறையுடையோர்- யோகிகள்---மனத்தாலும்- அம்மனத்தினாலும்---நினைவரிய - நினைத்தற்கெட்டாத---பொருளினையும் - பரப்பிரமத்தையும்---அடைகுவார்-பெறுவார்---(எ-று) (கருத்து) தமயந்தியே நினைத்ததையடைதல் அரிதன்றென்றன்னஞ்சொல்லியது என்பதாம். இலக்கணத்திரட்டு ஒருமைபன்மைக்குறுங்குச்சாரிகை. (௮௭)

பொய்ம்மைமொழிபுகன்றறியேம்புகலமனமெண்ணுகினு *
மெய்ம்மையல * துரையாநாவேதநவில்பயிற்சியாற்.,....*
கொம்மைவருமுலைவாய்மையுடையோரைக்குறித்துரைப்பி*
னெம்மைமுதலெடுத்துரைப்பரீர்ங்கமலத்திறைமுன்னும் *

(இ-ள்) கொம்மை---இளமைபொருந்தி---வரு-வளர்கின்ற---முலை-முலைகளையுடையவளே---பொய்ம்மைமொழி - அசத்தியவார்த்தையை---புகன்றறியேம்-சொல்லியறியேம்--புகல- (ஒருசமயத்திலே)சொல்லுவதற்கு---மனம்-மனமானது---எண்ணுகினும் - நினைத்தாலும்---நா-(எம்முடைய)நாக்களானவை--வேதம்-வேதத்தை--நவில்-ஓதிவருகின்ற---பயிற்சியால்- பழக்கத்தினாலே---மெய்ம்மை (மொழி) யலது-சத்தியவார்த்தையையல்லாமல்--உரையா - சொல்லாவாம்--ஈர்ங்கமலத்து - குளிர்ச்சிபொருந்திய தாமரைப்பூவிலுள்ள---இறைமுன்னும் - நான்முகக்கடவுண்முன்னும்----வாய்மையு

டையோரை-சத்தியத்தையுடையவரை---குறித்து-கருதி---உரைப்பின் பேசின்---எம்மை-எம்மையே---முதல்-முதலில்---எடுத்து- குறித்து---உரைப்பர்-சொல்லுவார்--- (எ-று)(கருத்து) தமயந்தியே பொய்வார்த்தைகள்சொல்லியறியோம் சொல்லநினைக்கில் வேதப்பயிற்சியால் நாக்கள் எழாவாம், எ-ம். * தொல்காப்பியம்- அ-ஆ-வ-என-வரூஉமிறுதி யப்பான்மூன்றேபலவறிசொல்லே. (அஅ)

பாட்டுவரிச்சுரும்புமுரல்பங்கயமெல்லரும்பேய்க்கு...... *
மோட்டிளவெம்முலையெனக்குமுடியாதபொருளுளதோ *
சூட்டரவின்மேற்கிடந்ததொடுகடன்ஞாலத்திடைநீ....... *
வேட்டதுகூறுதிகொணர்வல்விரைவினெனக்கூறியதால்... *

(இ-ள்) வரி-இரேகைகளையுடைய---சுரும்பு-வண்டுகளானவை---பாட்டு-பாட்டை---முரல்-பாடப்பெற்றிருக்கின்ற---பங்கயம் - தாமரையினது---மெல்லரும்பு-மெல்லியவரும்பை--ஏய்க்கும்- நிகர்க்கின்ற---மோட்டிளவெம்-உயர்ச்சியும் இளமையும் விரும்பப்படுங் குணமும்பொருந்திய---முலை-முலைகளையுடையவளே---எனக்கு- என்னால---முடியாத-முடிவுபெறாத---பொருள்-காரியமானது---உளதோ-ஒன்றிருக்கின்றதோ---சூட்டு - உச்சிக்கொண்டையையுடைய---அரவின்மேல்-ஆதிசேஷன்மேல்---கிடந்த - தங்கிய---தொடு-தோண்டப்பட்ட---கடல்-கடலாற்சூழப்பட்ட---ஞாலத்திடை- பூமியின்கண்---வேட்டது-(உன்னால்)விரும்பப்பட்டபொருளை---நீ- நீ, கூறுதி-சொல்லு---விரைவில்-சீக்கிரத்தில்---கொணர்வல்-யான்-(அதனைக்) கொண்டுவருவேன்---என-என்று---கூறியது-(அன்னந்)தமயந்திக்குச்சொல்லியது---[எ-று][கருத்து] தமயந்தியே, நீ இச்சித்ததைச்சொல் விரைவிற்கொண்டுவருவேனென்றன்னஞ்சொல்லிற்று, எ-ம். [அகூ]

மருவுபுரிநரம்பிசைக்குமாடகநல்யாழிசைகேட்............ *
டுருகினளன்பால்வேட்கையுற்றனளென்றறிகில்லா......... *
யரியபசும்பொன்னிறத்தவாய்தூவிமடவனமே............ *
தெருமரலுற்றேன்விழைவுசெப்புமா * றெவனென்றாள்...*

(இ-ள்) அரிய-பெறுதற்கரிய, பசும்பொன்- பசியபொன்னினது---நிறத்த - உருவமுள்ள---ஆய்-தேடத்தக்க---தூவி - இறகுகளையுடைய---மடம்-இளமைபொருந்திய--அனமே - அன்னமே---மருவு-சேர்ந்த---புரி-வலிக்கட்டுக்களையும்---நரம்பு-தந்திகளை - இசைக்கும்-இசைவிக்கின்ற---மாடகம்-முறுக்காணிகளையும் உடைய---நல்யாழ்-நல்லவீணையிசைபோல்கின்ற--இசை- (என் )சொல்லை---கேட்டு-(இவள்)கேட்டு---உருகினள் - மனங்குழைந்தவளாகி---அன்

பால்-ஆசையினாலே--வேட்கையுற்றனனென்று-(அச்சொல்லையே)
கேட்கவேண்டுதலுற்றானென்று(இன்னுஞ்சிலேடையினால்)--உருகு-
உளமுருகநின்ற—இன்-இனிமைபொருந்திய—நளன்பால்-நளனி
டத்தே—வேட்கையுற்றனனென்று-ஆசைமிகுந்தானென்று—அறி
வில்லாய்-அறியாயா—தெருமரலுற்றேன்-மனச்சுழற்சியையடைந்
ததான்—வினவு-அவ்வாசையை—செப்புமாறு-(வெளிப்படை
யாகச்)சொல்லுவிதம்—எவன்-யாது—என்றாள்-என்றுசொல்லினா
ள்.(தமயந்தி)—(எ-று)(கருத்து)அன்னமேயிசைகேட்டுருகி நள
ன்பாலாசையுற்றனனென்றறியாயா என்பதாம்.*நன்னூல்-எவனெ
ன்வினாவினைக் குறிப்பிழியிருபால். (௧௰)

வேட்கைதனதுளத்தடக்கிமெய்ந்நாணான்மறைத்திகலும்...*
வாட்படைபோனெடுங்கண்ணாள்வழங்கியசொற்பொருடேர்ந்து
நாட்கமலவள்ளவாய்நறும்போதிலமர்செய்ய...............*
தாட்பவளக்கடிகைவாய்மடவன்னஞ்சாற்றுமால்..........--*

(இ-ள்) நாள்-அன்றுபூத்த—கமலம்-தாமரையினது—வள்ளம்
ன்னம்போலும்--வாய்-வாயையுடைய--நறும்போதில்-நல்லமல
ல்--அமர்-வாசஞ்செய்கின்ற--செய்ய-சிவப்புநிறம்பொருந்திய—
ாள்-அடிகளையும்--பவளக்கடிகை-பவளத்துண்டம்போலும்--வா
-வாயையும்உடைய--மடம்-இளமைபொருந்திய--அன்னம்-அன்
மானது--இகலும்-போர்செய்தற்குரிய--வாட்படைபோல்- வா
ாயுதம்போலும்--நெடுங்கண்ணாள்-நெடியகண்களையுடையவள்--
வட்கை-(நளன்மேலுண்டாகிய)வாசையை--தனது-தன்னுடைய
உளத்து-மனத்தின்கண்---அடக்கி-வெளிப்படாமல்வைத்து—நா
ல்-வெட்கத்தினால்--மெய்-அவ்வாசைக்கொள்ளப்பட்டபொருளை
மறைத்து-(சிலேடையால்)மறைத்து—வழங்கிய-சொல்லிய—
சாற்பொருள்-வாக்கியார்த்தத்தை--தேர்ந்து-அறிந்து--சாற்றும்-
சால்லும்—(எ-று)(கருத்து)தமயந்தி நளனிடத்திச்சைவைத்து
றைபொருளாகச்சொன்ன சொல்லையறிந் தன்னஞ்சொல்லும் எ
பதாம். (௧௧)

தருவினறுங்கொழுநனையார்தருகென்பாரென்றதுஞ்சீர்...*
மருவுபுரிநரம்பிசைக்குமாடகநல்லியாழிசைகேட்........*
டுருகினளன்பால்வேட்கையுற்றனளென்றுரைத்ததும்யான்.*
கருதினனற்பலகலையுங்கற்றுணர்ந்ததெளிவினால்........*

(இ-ள்) தருவின்-கற்பகதருவினது—நறும்- வாசனைபொருந்தி
—கொழுநனை-செழியவரும்பை,யார்-எவர்—தருகென்பார்-தரு
கவென்றுசொல்லுவார்—என்றதும்-என்றுசொன்னதும்--சீர்மரு

வும்-சிறப்புப்பொருந்தும்—புரி-கட்டுகளையும்—நரம்பு - தந்திக ளை—இசைக்கும்-இசைவிக்கின்ற—மாடகம் - முறுக்காணிகளையு முடைய—நல்-நல்ல—யாழ்-வீணையின்—இசைகேட்டு- இசையை க்கேட்டு*உருகினளன்பால்-உருகினள்---அன்பால்-உருகினளன்பா ல்—வேட்கை-ஆசை—உற்றனளென்று- அடைந்தனளென்று—உ ரைத்ததும்-சொன்னதும்—யான்-நான்—பலகலையும்-பலவகைநூ ல்களையும்—கற்றுணர்ந்த-கற்று (அவற்றின்பொருளை) யறிந்த— தெளிவினால்-தெளிவைக்கொண்டு—கருதினன்-(நளனைக்குறித்துச் சொல்லப்பட்டவையென்று)அறிந்தேன்—(எ-று) (கருத்து)தமய ந்தியே நீசிலேடையாகச்சொன்னதை யானறிந்தேன் என்றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.*சிலேடை. (௧௨)

மறங்கிளருமதர்நெடுங்கட்கன்னியர்*தமனமொன்றிற்......*
செறிந்துமுடன்பிரியுமெனத்தெளிவுடையோர்செப்புதலா*
னறுந்துணரொண்சில்லோதிநயப்புறுநின்குறிப்புரைக....*
ளறிந்துமறியேன்போலவையுறவுற்றிருந்தனன்யான்.......*

(இ-ள்) நறுந்துணர்-நறியமலர்களையும்--ஒண்சில்- ஒள்ளியபொ ன்வட்டத்தகட்டணியணிந்த—ஓதி- கூந்தலையுடையவளே—மறம்- கொலைத்தொழிலால்—கிளரும்-விளங்காநின்ற—மதர்- மதர்த்த— நெடு-நெடிய—கண்-கண்களையுடைய—கன்னியர் - கன்னியர்களி ன்—மனம்-மனங்களானவை—ஒன்றில்- ஒருபொருளில்---செறிந் தும்-அழுந்தியும்—உடன்-விரைவில்—பிரியுமென-(அந்நிலையில்) நீங்குமென்று—தெளிவுடையோர்-அறிவுடையோர்---செப்புதலா ல்-சொல்லுதலினால்—நயப்புறு-விரும்பப்படுகின்ற---நின் - உன் னுடைய—குறிப்புரைகள்-குறிப்புச்சொற்களின்பொருளை — யா ன்-நான்—அறிந்தும்-தெரிந்தும்--அறியேன்போல-அறிந்திலேன் போல--ஐயுறவுற்று-சந்தேகமடைந்து--இருந்தனன்-இருந்தேன்-- (எ-று)(கருத்து)தமயந்தியே,பெண்கள்மனங்கள் விரைவிற்பிரியு மென அறிவுள்ளோர்சொல்லுதலால்உன்குறிப்புச்சொற்களை நானறி ந்தும் அறியாதுபோலச்சந்தேகித்தேனென்றது அன்னம் என்பதா ம்.*தொல்காப்பியம்-தாமெனகிளவிபன்மைக்குறித்தே. (௧௩)

உலகமெலாம்பொதுநீக்கியோராழிதனையுருட்டி.........*
யலகில்புகழ்ப்படாய்போர்த்தவரசர்பிரானிருமுன்னர்...*
மலர்பொதுளுஞ்சில்லோதியையுற்றமடநாரைற்.........*
சிலமொழிசொற்றனளென்னுஞ்செப்புவதுஞ்சீர்மைத்தோ*.

(இ-ள்) உலகமெலாம்-பூமிமுழுதையும்--பொது(பலவரசர்க்கு ம்)பொதுமையினின்றும்—நீக்கி-நீங்குவித்து--ஓராழிதனை ஒரு

க்காத்தை--உருட்டி-செலுத்தி--அலகில்-அளவில்லாத--புகழ்-புகழாகிய--படாம்-ஆடையை--போர்த்த-(அந்தப்பூமியின்மேற்)போர்த்தல்செய்த-அரசர்பிரான்-ராஜாதிராஜனது,திருமுன்னர்-சந்நிதானத்தில், மலர்-மலர்கள், பொதுள்-நெருங்கப்பெற்ற--அம் - அழகிய--சில்-பொன்வட்டத்தகட்டணியணிந்த--ஓதி-கூந்தலையுடையவள்--ஐயற்று-சந்தேகித்து--மடம்-அறியாமையோடுகூடிய - நாணால்-வெட்கத்தினாலே-- சிலமொழி- (உன்னைக்குறித்துச்) சிலசொற்களை--சொற்றனளென்று-சொல்லினளென்று--செப்புவதும்- சொல்லுவதும்--சீர்மைத்தோ- சிறப்புடைத்தாமோ—(எ-று) * இலக்கணக்கொத்து-ஒழிபியல்-௩௪-ரு. வேற்றுமைவழியோடல் வழியன்றிபு மவ்விருவழியுமடங்கும்பொதுவழி-யம்மூன்றுள்ளேயடங்காவழியு,மெனநான்கென்றே யியம்புவர்சந்தி- இவ்விதியால் உலகம்பேடு-தெய்வம் அலிஇவற்றிற்குச் சொற்பொருடிணைபால் தொடுக்கிற்சிறப்புமன்று பொதுவுமன்று அடங்காவழியெனக (கருத்து) தமயந்தியே,நளராஜன்திருக்கொலுவின்முன்னே யான்போய் அரசனே உன்னைக்குறித்துத் தமயந்திவெட்கத்தாற் சிலசொற்கள்சொன்னாள் என்றுசொல்லுவதுசிறப்பாகுமோ,என்றன்னஞ்சொல்லிற்று,எ-ம்.

கந்தடுகிம்புரிக்கோட்டுக்கழைசுளியுங்கடாயானை ..........*
மந்தரத்தாற்பகைக்கடலைமதித்தடையும்வயவேந்தன்...... *
சிந்தையைநின்பாற்பிணிப்பிற்றெள்ளமுதத்திருவேயுன்... *
றந்தைபிறற்களித்திடினென்வாய்மைதவறுகாதோ......... *

(இ-ள்) தெள்ளமுதம் - தெள்ளிய பாற்கடற்பிறந்த—திருவே-திருமாதே—கந்து-கட்டுத்தறியை—அடு-ஒடிக்கின்ற—கிம்புரி பூணையணிந்த—கோட்டு-கொம்புகளையுடைய—கழை - கரும்புகளை—சுளியும்-முறிக்கின்ற—கடாயானை - மதயானையாகிய—மந்தரத்தால்-மந்தரகிரியினாலே—பகை-பகைவரது—கடலை- (சேனையாகிய)பாற்கடலை—மதித்து-கடைந்து—அடையும்-அடையப்பட்ட---வயம்-வெற்றித் (திருவை)யுடைய—வேந்தன் - நளராஜனது— சிந்தையை-மனத்தை—நின்பால்-உன்னிடத்தே--பிணிப்பின்-(யான்) கட்டிவைத்தால்---உன்-உன்னுடைய—தந்தை- தகப்பனானவன்—பிறற்கு-மற்றொருவனுக்கு—அளித்திடின்- (உன்னைக்) கொடுப்பானேயானால்—என்-எனது—வாய்மை-வாய்ச்சொல்லின் றன்மையானது—தவறுகாதோ-வழுவாகாதோ—(எ-று)(கருத்து)தமயந்தியே நளன்மனதையான் உன்னிடத்தில் வசப்படுத்திவைத்தால் உன்பிதா உன்னைப்பிறருக்குக் கொடுத்துவிட்டால் என்சொற்பழுதாமென் றன்னஞ்சொல்லிற்று, எ-ம். (௩௫)

என்னுளத்திலையுறல்போல்யார்க்களிப்பான்றந்தையென. *
வுன்னுளத்துமையமுளதாதலாலிஃதொழிக............... *
பின்னரெவையுரைத்திடினுமுடிப்பலெனப்பேரெழில்கூ... *
ரன்னமடவரலுள்ளமறியுமாறுரைத்ததுவே .......... *

(இ-ள்) பேரெழில்-பெரியவழகினால் — கூர்-மிகுந்த — அன்னம்-அன்னப்பறவையானது — என்னுளத்தில்- எனது*மனத்தில் — ஐயுறல்போல்-சந்தேகமிருத்தல்போல் — தந்தை- தகப்பனானவன் — யார்க்கு-யாருக்கு — அளிப்பானென- கொடுப்பானோவென்று — உன்னுளத்தும்-உனதுமனத்திலும் — ஐயம்-சந்தேகமானது — உளது- இருக்கின்றது — ஆதலால்-ஆகையினாலே — இஃது- இக்காரியம் — ஒழிக-நீங்கக்கடவது — பின்னர்- அதுவன்றி — எவை-எந்தக்காரியங்களை — உரைத்திடினும்- (நீ எனக்குச்) சொன்னாலும் — முடிப்பலென-(யான்)முடிப்பேனென்று — மடவரல்- தமயந்தியினது — உள்ளம்-கருத்தை — அறியுமாறு-உணரும்படியாக — உரைத்தது- சொல்லிற்று — (எ-று) * தருக்கசங்கிரகம்- ௨௭-ம்-௬ - விசும்பேகாலந்திசையோடான்மா-மனமெனுமைந்துநிலைப்பொருளாங்கண்- முன்னையநான்குநிறையுடையவ்வே-இவ்விதியால் மனம்நிலையுள்ளபொருளாம். (கருத்து) தமயந்தியே என்மனதிற் சந்தேகமிருக்கிறது போல உன்மனதிலுஞ் சந்தேகமிருக்கிறது இதுநீங்க வேறுகாரியமிருந்தாற்சொல் முடிப்பேன் என்றன்னஞ்சொல்லிற்று, எ-ம். (௬௬)

கன்னிமனஞ்சூழ்கிடந்தநாளையென்னுங்கடியரண............ *
மன்னமொழியெனும்படைகள்வழங்குதலுமழிந்ததால்... *
முன்னியுளந்தனிற்சிறிதுமுறுவலித்துமுகங்கோட்டி...... *
யின்னமுதமுகுவதுபோல்வெளிப்படையினியம்பினாள்... *

(இ-ள்) கன்னி-தமயந்தியானவள் — மனம்-மனத்தை — சூழ்கிடந்த-சூழ்ந்துகிடந்த — நாளையென்னும்- நாளையென்கின்ற — கடி-காவலாகிய — அரணம்-மதிலானது — அன்னம்- அன்னத்தினது, மொழியெனும்-சொற்களென்கிற — படைகள் - ஆயுதங்கள் — வழங்குதலும்-மேற்சென்றவளவில் — அழிந்ததால் - கெட்டமையால் — சிறிது-சிறிதுபொழுது — உளந்தனில்-(தன்)மனத்திலே — முன்னி- ஆலோசித்து — முறுவலித்து-சிரித்து — முகங்கோட்டி-முகங்கவிழ்த்து — இன்னமுதம்-இனியவமிர்தத்தை — உகுவதுபோல் - சொரிவதுபோல் — வெளிப்படையின்- வெளிப்படையினாலே — இயம்பினாள்-சொல்லுவாள் — (எ-று) (கருத்து) தமயந்தியானவள் வெளிப்படையாகச் சொல்லுவாள் என்பதாம். (௬௭)

விளையுயிர்க்குத்தாமரைக்குவெய்யவனுஞ்சேதாம்பன் ... *
மருவுயிர்க்குநாண்மலர்க்குமாமதியுமல்லாம................ *

றுரைபெறுநற்றலைவர்பிறருளர் * கொல்லோபொலன்சிறைய
வரசமடவனமெனையுமன்னளாயெண்ணுதியால்.......... *

(இ-ள்) பொலன்-பொன்மயமாகிய—சிறைய - சிறகுகளையுடைய—மடம்-இளமைபொருந்திய—அரசவனம் - அரசவன்னமே—விரை-வாசனையை—உயிர்க்கும்-வீசுகின்ற—தாமரைக்கு-தாமரைப்பூவிற்கு—வெய்யவனும்-சூரியனும்—சேதாம்பல்- செவ்வல்லியினது—மரு - வாசனையை—உயிர்க்கும் - வீசுகின்ற—நாள்- பருவமுள்ள—மலர்க்கு-பூவிற்கு—மாமதியும்-பெரியசந்திரனும்—அல்லாமல்-அன்றி—பிறர்-அன்னியர்களாகிய—உரைபெறு- புகழ்பெற்ற—நற்றலைவர்-நல்லநாயகர்—உளர்கொல்லோ- இருக்கின்றாரோவில்லை—எனையும் என்னையும்—அன்னளாய்- அப்படிப்பட்டவளாய்—எண்ணுதி-நளனன்றி நாயகனில்லையென்றெண்ணக்கடவாய் (எ-று) (கருத்து) அன்னமே தாமரைக்குச் சூரியனும் அல்லிக்குச் சந்திரனும் அன்றி வேறுநாயகனில்லாதுபோல எனக்குநளனையன்றி நாயகனில்லையென் றெண்ணக்கடவாய் என்றாள் என்பதாம். * தொல்காப்பியம்-கொல்லையடம், (௧௮)

ஐயமுறேனளன்மார்பிலணியலணிதவனன்றி........ *
மையல்புரிவேள்வரினுமன்றலந்தார்சூட்டுவேனோ...... *
நெய்யொழுகுவேற்றாதைபிறற்களிப்பநேர்குவனேல் *
வெய்யதழற்புகுந்தாவிவிட்டுனுரைநிறுத்துவனால்... *

(இ-ள்) ஐயமுறேல்-(அன்னமேநீ) சந்தேகப்படாதே —நளன்-நளராஜனது—மார்பில்-மார்பின்கண்—அணியல் - மாலையை—அணிதவனன்றி-சூட்டுவனல்லாமல்—மையல்புரி- மயக்கத்தைச்செய்கின்ற—வேள்-மன்மதனானவன்—வரினும்- வந்தானாயினும்—மன்றல்-வாசனைபொருந்திய—அம்-அழகிய—தார்-மாலையை—சூட்டுவேனோ-(யான்)சூட்டுவேனோ—நெய்-நெய்யானது—ஒழுகு-ஒழுகப்பெற்ற—வேல-வேலையுடைய—தாதை-(என்)தகப்பனானவன்—பிறற்கு-மற்றொருவனுக்கு—அளிப்ப-(என்னைக்) கொடுக்க—நேர்குவனேல்-உடன்படுவானாயின்—வெய்யதழல்- வெப்பம்பொருந்தியநெருப்பினுள்—புகுந்து-முழுகி—ஆவிவிட்டு- உயிரைவிட்டு—உன்-உனது—உரை-சொல்லை—நிறுத்துவன் - (நளனிடத்தில்) னிலைபெறுவிப்பேன்—(எ-று)(கருத்து) அன்னமே யான் நளனுக்கே மாலையிடுவேன் என்பிதா பிறனுக்கென்னைக்கொடுக்கவுடன்பட்டால் அக்கினியுள்வீழ்ந்திறந் துன்சொல்லை நிலைநிறுத்துவேன்என்றாள் தமயந்தி, எ-ம். (௧௯)

ஊழியல்பின்றிறல்வேந்தைவேட்டுள்ளமுருகுமெனை........ *
வாழிமடவனங்கூட்டலரிதென்னமதித்திடேல்...... ....... *

கேழ்கிளர்தாமரையின்முகைகிளரொளித்தண்ணேற்கலரா *
தேழ்பரித்தேரவற்காணினலர்ந்திடுதலியல்பன்றே...... *

(இ-ள்) மடம்-இளமைபொருந்திய—அனம் - அன்னமே—வாழி-வாழக்கடவாய்—ஊழ்-விதியினது—இயல்பின்- சம்பந்தத்தினால்—திறல்-வலிமையுள்ள—வேந்தை-நளராஜனை—வேட்டு - விரும்பி—உள்ளமுருகும்-மனமுருகாநின்ற—எனை - என்னை—கூட்டல்-அவனுக்குமனைவியாக்குதல்—அரிது-(உனக்கு) பெரிது—என்ன-என்று—மதித்திடேல்-நினைத்திடாதே—கேழ்- நிறத்தினாலே—கிளர்-விளங்காநின்ற—தாமரையின்-தாமரையினது—முகை- அரும்புக்கு—கிளர்-விளங்காநின்ற—ஒளித்தண்ணேற்கு சீதளகிரணத்தையுடையசந்திரனால்—அலராது-மலராமல்—எழ்பரித்தேரவன் - சூரியனை—காணின்-கண்டால்—அலர்ந்திடுதல்- மலர்தல்—இயல்பன்றே-சுபாவமன்றோ—(எ-று) (கருத்து) அன்னமே விதியின்சம்பந்தத்தினாலே நளனையிச்சித்து மனமுருகுமென்னை அந்நளனோடு கூட்டுவித்தல் உனக்குப்பெரியகாரியமல்லவென்று சொன்னாள்.(௱)

வாட்டிறல்சேர்வயவேந்தின்மணிப்புயத்தென் முலைதிளைப்பக்
கூட்டுதியே லுயிர்வாழ்வல்கூட்டாயேலுலகறிய..... ..... *
மூட்டழலிற்புகுந்தாவிமுடித்திடுவலொளிகெழுசெஞ் ..... *
சூட்டுமடவனமிவற்றுளென்செய்வான் றுணிந்தனையால்... *

(இ-ள்) ஒளிகெழு-காந்திபொருந்திய—செஞ்சூட்டு - செய்யவுச்சிக்கொண்டையையுடைய—மடம்-இளமைபொருந்திய—அனம்-அன்னமே—வாள்-வாளினது, திறல்-போரினாலே—சேர் - சேர்ந்த—வயம்-வெற்றிபொருந்திய—வேந்தின்-நளராஜனுடைய—மணி-அழகிய—புயத்து-தோள்களிடத்து—என்-என்னுடைய—முலை-முலைகளானவை—திளைப்ப-அழுந்தும்படியாக—கூட்டுதியேல்- (என்னை அவனோடு)சேர்ப்பாயானால்—உயிர்வாழ்வல் - உயிர்வைத்திருப்பேன்—கூட்டாயேல்-சேர்க்காயானால்—உலகறிய-உலகத்தாரறிய—மூட்டு-மூட்டப்பட்ட—அழலில்-நெருப்பினுள்—புகுந்து- முழுகி—ஆவி-உயிரை—முடித்திடுவல்-விட்டுவிடுவேன்—இவற்றுள்-(கூட்டலுங்கூட்டாமையுமாகிய) இவ்விரண்டனுள்—என்செய்வான் - எது செய்யும்படியாக—துணிந்தனை-(நீ)நிச்சயித்தாய்— (எ-று) [கருத்து] அன்னமே நீ என்னை நளனோடு சேர்த்தால் உயிர்வைத்திருப்பேன் சேர்க்காவிட்டால் உயிரைவிட்டுவிடுவேன் என்றாள், எ-ம்.௱க

* உயிருதவிசெய்தவர்க்கொன்றாற்றக்காணுணர்வுடையோர்*
செயிரறுதம்முயிரளித்துச்செய்ந்நன்றிக்கடன்கழிப்பார் *

மயர்வறவென்றுயிரினுஞ்சீர்வாய்ந்தநளன்றனையளிப்பி... *
னயர்வறுமோதிமமதற்குக்கைம்மாறேதறிகிலன்யான் ... *

(இ-ள்) அயர்வறு-(மனச்) சோர்வற்ற--ஓதிமம்- அன்னமே--உணர்வுடையோர்-அறிவுடையோர்--உயிருதவிசெய்தவர்க்கு - (ஆபத்துவந்தபோது தம் முயிரைக்காப்பாற்றினவர்க்கு--ஒன்று- ஓராபத்து--உற்றக்கால்-வந்ததாயின்--செயிரறு - குற்றமற்ற—தம்- தம்முடைய--உயிர்-உயிரை--அளித்து- கொடுத்து--செய்- (அவரால்) செய்யப்பட்ட--நன்றி- உபகாரமாகிய--கடன்-கடனை--கழிப்பார்- தீர்ப்பார்--மயர்வு-மயக்கமானது--அற- நீங்க--என் - எனது--உயிரினும்-உயிரைக்காட்டிலும்--சீர்வாய்ந்த- சிறப்புப்பொருந்திய--நளன்றனை- நளராஜனை---அளிப்பின்-கொடுப்பாயானால்—அதற்கு- அவ்வுபகாரத்திற்கு--கைம்மாறு-எதிருபகாரம்--எது - யாது--யான் -நான்--அறிகிலன்-(அதனை)யறியேன்—(எ-று.) [யாது அறியேனெனவே யில்லையென்றதாயிற்று] * தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-கிளவியாக்கம்-௫அ-காலமுலகமுயிரேயுடம்பே - பால்வரைதெய்வம்வினையம்பூத-ஞாயிறுதிங்கள்சொல்லெனவருமாயிரை ந் தோடுபிறவுமன்ன-வாவயின்வருஉங்கிளவியெல்லாம் - பால்பிரிந்திசையாவுயர்திணைமேன. [கருத்து] அன்னமே உயிர்க்குதவிசெய்தவர்க்கு உயிர்க்குதவிசெய்வார்கள்- உணர்வுடையவர்கள் என்றுயிரினுஞ்சிறந்த நளனை நீ எனக்குக்கொடுத்தால் உனக்கென்னபிரதி உபகாரஞ்செய்வேன் என்றாள் என்பதாம். (௱௨)

கைம்மாறுநினக்காற்றலரிதெனினுங்களிப்பினுளஞ்...... *
செம்மாந்துன்செயிரறுசீரோவாதுசெப்புவல்யா......... *
னெம்மாவியிறந்துபடாதிருக்குங்கொல் விரைவினிற்போய்த்
தெம்மாறுசுடர்வேலான்றிருவருள்பெற்றிடாயெனினே ... *

(இ-ள்) கைம்மாறு-பிரதியுபகாரத்தை--நினக்கு- உனக்கு--ஆற்றல்-செய்தல்--அரிதெனினும்-இல்லையாயினும்--களிப்பின் - மகிழ்ச்சியினாலே--உளம்-உள்ளத்தில்--செம்மாந்து - இறுமாந்து--உன்- உனது--செயிரறு-குற்றமற்ற--சீர்- குணத்தை - ஓவாது-இடைவிடாமல்--யான்-நான்--செப்புவல்-சொல்லுவேன்(ஆனால் அதைநன்றுகவாலோசித்து விரையாமற்செய்வேனென்பாயாயின)--விரைவினில்-சீக்கிரத்தில்--போய்-சென்று--தெம் - பகைவரும்--மாறு-(நட்பினராய்)வேறுபடுதற்குக்காரணமாகிய, சுடர்-ஒளிபொருந்திய--வேலான்-வேலையுடையவனது--திரு-அழகிய--அருள்-அருளை--பெற்றிடாயெனின்--பெறுயாயின்--எம்-எம்முடைய--ஆவி-* உயிர்களானவை--இறந்துபடாது- நீங்கிப்போகாமல்--இருக்குங்கொல்- இருக்குமோ—(எ-று)[ தாய்மார் பாங்கிமாரையுஞ்சேர்த்துப்பன்

மையாக எம்மாவி என்றாள்] [கருத்து] அன்னமே நானுனக்குப் பிரதியுபகாரஞ்செய்ய வரிதென்றாலும் உன்புகழ்ச்சியை இடைவிடாதுசொல்லுவேன் நீவிரைவிற்போய் நளனருளைப்பெறாவிடில் எங்களுயிர்களிருக்குமோ என்றாள் என்பதாம். * தருக்கசங்கிரகம் அறிவிற்பண்பிற்றுணையாவதுதா னிறையுறுமுயிருமென் றுயிருவகைத்தே. (௱௩)

என்குறைநீவயவேந்தற்கியம்புதியேலவடங்கிடந்து.........*
பொன்பிதிர்மின்சுணங்கார்ந்தபொம்மலிளமுலையினர்பா *
லன்புறுநல்லமயமதிலறையற்கவறைகுதியே............. *
னன்றுரை தீங்காமவர்பானயப்புற்றதன்மையினால்.........*

(இ-ள்) என்-எனது--குறை-குறையை--நீ-நீ--வயம்-வெற்றியையுடைய--வேந்தற்கு - நளராஜனுக்கு--இயம்புதியேல் - சொல்வாயாயின்--வடம்-முத்துவடமானது--கிடந்து-தங்கப்பெற்று--பொன்பிதிர்-பொன்பொடிபோல்--மின் விளங்குகின்ற, சுணங்கு-தேமலால்--ஆர்ந்த-நிறைந்த- பொம்மல்-பொலிவும்--இள-இளமையும் பொருந்திய--முலையினர்பால்-முலையினரிடத்து--அன்புறு-அன்புற்றிருக்கின்ற--நல்லமயமதில்-நல்லசமயத்தில், அறையற்க(அதனைச்)சொல்லாதே--அறைகுதியேல்-அப்போதுசொல்வையேயானால் அவர்பால்-அவரிடத்தே--நயப்புற்ற இன்பமுற்ற, தன்மையினால்-குணத்தினாலே--நன்றுரை-(உனது நல்லசொல்லும்--தீங்காம் (அவனுக்குக்)குற்றமுள்ளதாகும்—(எ-று)(கருத்து).அன்னமே நீ என்குறைகளை அரசனிடத்திற் சொல்லுவையேயானால் அரசன் பெண்களிடத்தன்புள்ளசமயத்திற் சொல்லாதே சொன்னால் நல்வார்த்தையும் குற்றமாய்விடும் என்றாள்,எ-ம். (௱௪)

வேற்றரசர்திறைகொணரும்வேலையினுஞ் * சொல்லற்க.. *
மாற்றரசர்பால்வெகுளுமமயத்தும்வகுத்துரையே... ... *
றேற்றமுடைமதிவல்லோர்தேர்ச்சியினுந்தெரிந்துரையேல் *
சாற்றினுரைத்தனவெல்லாந்தவறுதலறிதியே............... *

(இ-ள்) வேற்றரசர் - பிறவரசருடைய--திறை - இறைப்பொருளை--கொணரும்-வருவிக்கின்ற--வேலையினும்-காலத்திலும் -- சொல்லற்க-சொல்லாதொழிக-- மாற்றரசர்பால் - பகையரசரிடத்து--வெகுளும்-கோபஞ்செய்கின்ற--அமயத்தும் - காலத்திலும்--வகுத்துரையேல்-சொல்லாதே--தேற்றம்-தெளிவை--உடை-உடைய--மதிவல்லோர்-மந்திரிகளோடு--தேர்ச்சியிலும்- ஆலோசனைசெய்யுங்காலத்திலும்--தெரிந்துரையேல்- சொல்லாதே -- சாற்றின்-(நீ) சொல்லின்--உரைத்தனவெல்லாம்-(உன்னாற்)சொல்லப்பட்டனவெ

ல்லாம்—தவறுதல்-குற்றமுடையனவாதலை—அறிதி-(நீ) அறிவாய்
(எ-று) * இலக்கணத்திரட்டு. எதிர்மறையேவற்கேலேயல்லே - ய
ன்மோவற்கவாகுமோருமைக்-காமினன்மினற்பிரபன்மை இவ்விதி
யாலஃதற்கவிகுதி ஒருமையில்வந்தது (கருத்து) அன்னமே, அரசர்
நிறைதரும்போதும பகையரசரைக் கோபிக்கும்போதும் மந்திரி
கள்மதிசொல்லும்போதும் என்வார்த்தைகளைச்சொல்லாதே யான்
சொன்னதெல்லாஞ்சொல்லென்றான் என்பதாம், (௱௫)

பொறிசெறித்தமாண்பினராய்ப்பொருநலர் செற்றிருநிதிய
ஞ், செறிதருமாறீட்டியருவினைவாங்குஞ்செயலினரு... ... ...*
முறுபிழையுட்சிறிதியற்றினுறுத்திடுவர்வயவேந்த... ...*
ராறுதிபெறநீமொழியுமமயமறிந்துரைத்தியால்...... .. ..*

(இ-ள்) பொறி-ஐம்பொறிகளையும்—செறித்த - அடக்கிய—மா
ண்பினராய்-நற்குணமுடையவராகி—பொருநலர்-பகைவரை—
செற்று-வென்று—இருநிதியம் - அதிகதிரவியத்தை—செறிதருமா
று-நெருங்குமாறு—ஈட்டி-சேர்த்து—அருவினை-பெரியதொழில்
களை--வாங்கு-(தம்மிடத்து)வாங்கிய--செயலினரும் - செய்கையை
உடையவரும்—உறு-(பலவா)யுறுகின்ற—பிழையுள்- குற்றங்களுள்
—சிறிது-சிறியவொருகுற்றத்தை—இயற்றின்- செய்தாலும்—வய
ம்-வெற்றியையுடைய—வேந்தர்- அரசராயினோர்—அறுதி- (தம்மி
ழுழிவை—பெற-அடைய—ஒறுத்திடுவர்- (அப்டிப்பட்டவரை
யும்)தண்டிப்பார்—(ஆதலால்) நீ-(விவேகியாகிய) — நீ-மொழியும்
சொல்லுதற்குரிய—அமயம்-காலத்தை—அறிந்து - தெரிந்து—உ
ரைத்தி- சொல்லு—(எ-று) (கருத்து) அன்னமே பகையன்னை
வென்றுபாக்கியஞ்சம்பாதித்துத்தரும் வல்லவர்களும் அற்பகுற்ற
ஞ்செய்தால் அரசர்தண்டிப்பாராகையால் குற்றமின்றிக்காலமறித்
துகூறென்றான் * தாதுவிளக்கம் இடுவிடுமுதலிய வினையிடைச்
சொல்லே. (௱௬)

உளத்தனவாண்முகத்தனவாயுதிக்குமவைகுறிப்பினாற்.*
றெளித்துரைத்தல்சீர்மைத்தேதூதர்செயலிற்றாகும்.. *
விளக்கமுறநீயலதியாரறிவரிவைமெலியுமென ... ....*
யளித்திடுதிவிரைவினிற்போயாய்தூவிமடவனமே. ...*

(இ-ள்) ஆய் - மிகமெல்லிய—தூவி-இறகையுடைய—மடம்-இ
ளமைபொருந்திய—அனமே - அன்னமே—உளத்தன- (ஒருவர்)ம
னத்திலுள்ளகுணங்களானவை—வாள்-ஒளியுள்ள— முகத்தனவாய்-
முகத்திடத்தனவாகி—உதிக்கும்-தோன்றும்—அவை- அக்குணங்க
ளை—குறிப்பினால்- (அம்முகக்) குறிப்பினாலே—தெளிந்து - அறிந்

தூ—உரைத்தல்-சொல்லுதல்—சீர்மைத்தே-சிறப்புடைத்தாகும்—தூதர்-தூதரது—செயல்-தொழிலானது—இற்றாகும். இத்தன்மைத்தாகும்—இவை- (நளன்மனத்திலுள்ள) விலற்றை—விளக்கமுற-விளங்குதலுற—நீயலது-நீயல்லாமல்—யார்-(வேறே)யாவர்—அறிவர்-அறியவல்லவர்—வினாவினில்-சீக்கிரத்தில்—போய்-(நளராஜனிடத்துப்)போய்—மெலியும்-வருந்துகின்ற—எனை- என்னை—அளித்திடுதி- காப்பாற்று—(எ-று) (கருத்து) அன்னமே, அகத்திலுள்ளவைமுகத்திற்காட்டும் முகக்குறிப்பறிந்து சொல்லுதல் தூதர் திறமாகும், நளன்மனத்துள்ளவை நீயல்லாமல் யாரறிவார்கள் சீக்கிரம் போய் என்னைக்காப்பாற்றுஎன்றாள் என்பதாம். (௱எ)

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

என்னவாங்குவெளிப்படையிற்குயிலுநாண*வின்னமிழ்திற்......*
கன்னற்பாகிற்கோற்றேனிற்கனியிற்கனிந்தமொழிநவிலும்......*
பொன்னம்பாவையன்னாடன்னுள்ளந்தேர்ந்துமகிழ்புரியா.......*
வன்னங்கண்ணாலருந்துதல்போனோக்கிச்சிலசொல்லறையுமால்.....*

(இ-ள்) என்ன-என்று—அன்னம்-அன்னமானது—ஆங்கு - அந்தச்சோலையினிடத்து—வெளிப்படையின்- வெளிப்படையினாலே—குயிலும்-கோகிலமும்—நாண-வெட்கமுற—இன்னமிழ்தின்- இனிதாகியவமிர்தத்தினும்—கன்னற்பாகின்-சர்க்கரைக்குழம்பினும்—கோற்றேனின்-கொம்புத்தேனினும்—கனியின்-முக்கனியினும்—கனிந்த-சுவைமிகுந்த—மொழி-இந்தச்சொற்களை—நவிலும்-சொல்லிய—பொன்-பொன்மயமாகிய—அம்- அழகிய—பாவையன்னாள்-பாவைபோல்பவளது—உள்ளம்-கருத்தை—தேர்ந்து-அறிந்து—மகிழ்புரியா- மகிழ்ந்து—கண்ணாலருந்துதல்போல் - கண்களால்விழுங்குதல்போல—நோக்கி- (அவளைப்) பார்த்து—சிலசொல்-சிலசொற்களை—அறையும்-சொல்லும்—(எ-று) * தாதுவிளக்கம். சாரியைவிகுதிதாங்கெடலுரித்தே, இவ்விதியால்இனிப்பு, என்றதில்இகரச்சாரியையும்-பு-விகுதியும்கெட்டன- (கருத்து) அன்னமானது தமயந்தியைப்பார்த்துசிலசொற்களைச்சொல்லும். (௱அ)

சுணங்குபூத்துக்குவிகச்செப்பெனலாய்ச்சுருங்கிநுழைநுசுப்பு...*
வணங்கித்தேம்பவருமுலையாயுரைத்தமாற்றமெய்யாமே..........*
விணங்குவாயில்யார்வேண்டுநளற்குநினக்குமிதயத்து.........*
லணங்குநோய்செய்தலர்தூற்றுமநங்கனொருவனிருக்கவே.........*

(இ-ள்) சுணங்கு-தேமலானது—பூத்து-படரப்பெற்று—குவிகச்செப்பெனலாய்-இங்குலிகத்திலாகிய செப்புக்களைஒத்ததாகி—நுழை-நுண்ணிய—நுசுப்பு-இடையானது—சுருங்கி- இளைத்து—

வணங்கி-வளர்ந்து—தேம்ப-வருந்த—வரு-வளர்கின்ற—முலையாய்-
முலைகளையுடையவளே—உரைத்த-(உன்னால்)சொல்லப்பட்ட, மா
ற்றம்-சொல்லானது—மெய்யாமேல் - சத்தியமாயின்—நளற்கும்-
நளராஜனுக்கும்— நினக்கும்-உனக்கும்—இதயத்துள்-மனத்தின்க
ண், அவனுக்கு-வருத்தஞ்செய்கின்ற—நோய்- (காம)நோயை—செ
ய்து-உண்டாக்கி—அலர்தூற்றும்- பழிமொழியைப்பரப்புகின்ற--
அநங்கனொருவன்-மன்மதனொருவன்—இருக்க- உளனாக—இணங்
கு-(உங்களிருவரையும்)பொருந்துதற்கு--வாயில்- சந்திசெய்வோர்--
யார்-எவர்—வேண்டும்-(உங்களுக்கு)வேண்டும்—(எ-று)(கருத்து)
தமயந்தியே, நீசொன்னசொல மெய்யானால் இருவரையுங் கூட்டி
வைக்க இடையில்மன்மதனொருவனிருக்க வேறேயாருவர் வேண்
டும்மாவென வன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௱௯)

*கடல்சூழ்புவியிற்பாதலத்திலமரருலகிற்கவின்றிகழுங்,
கொடிநேரிடையாள்யாரொன்ன நின்னையாங்கள் கூறுத
லும், படியேழ்புரக்கும்வேந்துளத்துப் படைவேள்பக
ழிபுகும்வழிபோய்; மடமானோக்கிநீயுறைதல் மறந்தா
ய்கொல்லோமறைத்தனையோ...................... *

(இ-ள்) மடம்-இளமைபொருந்திய—மான்- மான் (கண்போலு
ம்)—நோக்கி-கண்களையுடையவளே—படியேழ்- எழுதீவுகளையும்
—புரக்கும்-காக்கின்ற—வேந்து-நளராஜனுடைய—கடல்- கடலா
னது—சூழ்-சூழப்பெற்ற—புவியில்- பூலோகத்திலும்—பாதலத்தி
ல்-நாகலோகத்திலும்—அமரருலகில்-தேவலோகத்திலும்—கவின்-
அழகினாலே—திகழும்-விளங்காநின்ற, கொடிநேரிடையாள்-கொ
டிபோலிடையையுடையமங்கை—யாரொன்ன- எவளொன்றுவினவ,
யாங்கள்-நாங்கள்—நின்னை-உன்னை—கூறுதலும்- சொல்லுதலும்,
படை-படையையுடைய—வேள்-மன்மதனது--பகழி- பாணமான
து—புகும்-சென்ற—வழி-வழியால்—போய்-சென்று—உளத்து-
(அவன்)மனத்தின்கண்—நீ-நீ—உறைதல் - இருக்கையை—மறந்
தாய்கொல்-மறந்தாயோ—மறைத்தனையோ-(எனக்கு) ஒளித்தனை
யோ—(எ-று)(கருத்து) தமயந்தியே நளமஹாராஜன் அழகுள்ள
பெண்யாரென்றெங்களைக்கேட்க யாங்களுன்னைச் சொல்லுதலும்
மன்மதபாணஞ்சென்றவழியே நீபோயிருந்ததைமறந்தாயோ அல்
லது மறைத்துச்சொல்லுகிறாயோ என்றன்னஞ்சொல்லியது *தரு
க்கசங்கிரகம்-௰௯-ஞ-கடலியாறுதியவிடயமாகும். (௱௰)

ஈட்டுமணிகள்பலதெரித்துன்னெழுதற்கரிய* திருவுரு
வங், கோட்டுங்கிழிதான்முலைகோட்டப்பாயின்றெண்

னுங்கொடிமருங்குல், நீட்டவரிகோனுதிநுண்மையில
தென்றெண்ணித் திகைக்குமுளம், வேட்டுநெடுங்கண்
ணிமையாமனோக்கித்தளரும்வேல்வேந்தே............*

(இ-ள்) வேல்-வேற்படையையுடைய—வேந்து-நளராஜனானவன்--உன்-உனது—எழுதற்கரிய-(சித்திரக்காரரா)லெழுதற்கரியதாகிய—திரு-அழகிய—உருவம்-(உனது) வடிவத்தை—ஈட்டு-(தன்னால்)சம்பாதிக்கப்பட்ட—பல-பலவகையாகிய—மணிகள்-மணிகளை—தெளித்து-பதித்து—கோட்டும்-எழுதுகிறான்—முலை-(உன்) முலைகளை—கோட்ட-எழுதுதற்கு—கிழி-படத்தில்--பரப்பு-அகலம்—இன்றென்னும்-இல்லையென்கிறான்—கொடி-பூங்கொடிபோலும்—மருங்குல்-(உன)திடையை—நீட்ட-எழுதுதற்கு—வரிகோல்-தூரிகைக்கோலினது—நுதி-நுனியின்கண—நுண்மை கூர்மையானது—இலதென்று-இல்லையென்று—எண்ணி-நினைத்து---திகைக்கும்-திகைக்கிறான்—உளம்-மனத்தில்—வேட்டு-விரும்பி—நெடுங்கண்-நெடியகண்களானவை—இமையாமல்-இமையாதிருக்க—நோக்கி-(அவ்வடிவத்தைப்)பார்த்து—சோரும்-வருந்துகிறான்—(எ-று) * இலக்கணத்திரட்டு-கனவுநினைவு கட்பொறி செவிப்பொறி யெனநான்காகுமெவ்வகைக்காட்சியும்-இவ்விதியால் சித்திரக்காட்சிசொல்லப்பட்டது. (கருத்து) நளமஹாராஜன் உனதுதிருவுருவத்தை யெழுதுகிறான் உன்கனதனங்களையெழுதப்படமகலமில்லையென்கிறான் உனதிடையை எழுதுதற்குத் தூரிகைக்கோல் கூர்மையில்லையென்கிறான் உன்னுருவத்தை இமையாது நோக்கிவருகிறான் என்பதாம். (௱௰௧)

பருந்துங்கழுகுங்கொடியினமு மருந்தப்பகைஞருடற
டிந்து, விருந்துசெய்யுஞ்சுடர்வடிவேல்வேந்தனுயிருநீ
யென்னும், பொருந்துங்காமப்பிணிநீக்கிப் புலம்புதீர்
த்தின்னுயிரளிக்கு, மருந்துநீயேயென்றெண்ணிமகிழ்
தூங்குளத்தோடிருந்தயரும்........................... *

(இ-ள்) பருந்தும்-சேனங்களும்—கழுகும்-எருவைகளும்—கொடியினமும்-காக்கைக்கூட்டங்களும்—அருந்த-தின்னும்படியாக—பகைஞர்-பகைவருடைய—உடல்-உடம்புகளை—தடிந்து-துணித்து—விருந்துசெய்யும்-(அவற்றிற்கு)விருந்துசெய்கின்ற--சுடர்-ஒளியும்—வடி-கூர்மையும்பொருந்திய--வேல்-வேலையுடைய—வேந்தன்-நளராஜனானவன்—உயிரும்-(தன்)னுயிரும்—நீயென்னும்-நீயாக—வேண்டுகிறான்-பொருந்தும்—(தன்னைப்) பற்றியகாமப்பிணி-காமநோயை—நீக்கி-ஒழித்து—புலம்பு(அதனாலா

கின்ற) துன்பத்தை—தீர்த்து-தீர்வித்து—இன்- இனிதாகிய—உயிர்-(தன்) னுயிரை—அளிக்கும்-காப்பாற்றும்—மருந்தும்- ஔஷதமும்—நீயேயென்று-நீயேயாக—எண்ணி-இடைவிடாது நினைத்து—மகிழ்-மகிழ்ச்சியில்—தூங்கு - பரவசப்பட்டிருக்கின்ற—உளத்தோடு-மனத்துடனே—இருந்து-தங்கி—அயரும்-வருந்துகின்றான். (எ-று) (கருத்து) தமயந்தியே நளமஹாராஜன் உன்னைத்தன்னுயிராக நினைக்கின்றான் அன்றியுந் தன்காமநோயைத் தீர்த்து உயிரைக் காப்பாற்றுமருந்தும் நீயேஎன்றெண்ணுகின்றான் என்றுசொல்லிற்று என்பதாம். (௱௰௨)

தேற்றாரொளிருமணிமௌலி யிடறித்தேய்ந்துவிளங்குந
கக், கூற்றமென்னுமால்யானைப்பிடரிற்றோன் றுமெழி
ல்குறியா, வாற்றாராகியாடவரும்பெண்மைவிரும்புமட
ல்வேந்தன், வேற்றோர்பொருளிலைம்புலனும் விழையா
வாக * மெலியுமால்........................... *

(இ-ள்) தேற்றார்-பகைவரது—ஒளிரும்- விளங்காநின்ற—மணி-நவமணிகளாலாகிய—மௌலி-மகுடத்தில்—இடறி-தாக்குண்டு—தேய்ந்து-தேய்தலால்—விளங்கு-விளங்காநின்ற—நகம்-நகங்களையுடைய—கூற்றமென்னும்-(கொலையிலே) யமனெனப்படுகின்ற—மால்-பெரிய—யானை-யானையினது—பிடரில் - எருத்தத்தில்—தோன்றும்-காணப்படுகின்ற—எழில்-(தன) தழகை—குறியா-நினைத்து—ஆடவரும்-புருஷரும்—ஆற்றாராகி-பொறுக்கமாட்டாதவராகி—பெண்மை-பெண்வடிவத்தை—விரும்பும் - விரும்பப்பெறுகின்ற—அடல்வேந்தன்-வெற்றிவேந்தனானவன்— வேற்றோர்பொருளில்-(உன்னிடத்தன்றி)வேறொருபொருளிடத்து—ஐம்புலனும்-பஞ்சவிஷயங்களும்—விழையாவாக-விரும்பப்படாதனவாக—மெலியும்-தளர்கின்றான்—(எ-று)* நன்னூல்-பல்லோர்படர்க்கைமுன்னிலைதன்மையிற்- சொல்லாதாகுஞ்செய்யுமென்முற்றேஇவ்விதியால் மெலியும் என்றது மெலிகின்றானென்றாயிற்று. [கருத்து] நளமஹாராஜனானவன் உன்னையல்லாமல் வேறொருபொருளிடத்திலிச்சைவைத்திலன் என்றுசொல்லிற்று, எ-ம். (௱௰௩)

கார்க்கும்வெண்மையளித்திருண்டகரியசுருப்பற் கனங்கு
ழையா, யார்க்குஞ்சுரும்புமிசைத்தேனும் வண்டுஞ்சூழ
லுமைங்கணைவேள், போர்க்குமெலிந்தோவெண்டிங்க
ள்பொழிபுநிலவிற்றேம்பியோ, பார்க்குந்தோறும் புதி
தாக * வுடலமெலியும்பார்வேந்தே.................... *

(இ-ள்) கார்க்கும்-மேகத்திற்கும்—வெண்மை-வெள்ளைநிறத்தை

—அளித்து-கொடுத்து—இருண்ட-கறுத்த—கரிய- பெரிய—கூந்தல்-கூந்தலையும்—கனம்-கனம்பொருந்திய—குழையாய் - குண்டலத்தையுமுடையவளே--பார்-பூமியையுடைய--வேந்து- நளராஜன்--ஆர்க்கும்-ஒலிசெய்கின்ற--சுரும்பும்-பொறிவண்டுகளும்--இசை-இசைபாடுகின்ற--தேனும்-தேன்வண்டுகளும்—வண்டும்- கருவண்டுகளும்- சுழலும்-சுழலப்பெறுகின்ற--ஐங்கணை- பஞ்சபாணத்தையுடைய--வேள்-மன்மதனது--போர்க்கு-சண்டையினால் -- மெலிந்தோ-இளைத்தோ--வெண்டிங்கள்-வெள்ளியசந்திரனது—பொழியும்-சொரியப்பட்ட— நிலவின்-நிலாவினாலே--தேய்ப்யோ - வருந்தியோ--பார்க்குந்தோறும்-காணுந்தோறும்—புதிதாக - நூதனமானதாக--உடலம்-உடம்பு--மெலியும்- இளைக்கப்பெறுகின்றான்.—(எ-று) * தொல்காப்பியமெய்ப்பாட்டியல்-உஉ-ரூ- இன்பத்தைவெறுத்த றுன்பத்துப்புலப்ப-லெதிர்பெய்து பரிதலெதமாய்தல்-பசிபடநிற்றல்பசலைபாய்த-லுண்டியிர்குறைதலுடம்புநனிசுருங்கல்-கண்டுயின்மறுத்தல்கனவொடுமயங்கல் இவ்விதியால் உடலமெலிவுகூறினார். (கருத்து) தமயந்தியே நளமஹாராஜனவன் மன்மதன்போரினாலேயோசந்திரகிரணங்களாலேயா உடலிளைக்கப்பெறுகின்றான் என்றுசொல்லிற்று, எ-ம். (௱௰௪)

அலர்வார்பகழிதூர்த்துதூரந் தாகமெலிவித்திடுதலன்றிச், சிலைவேள்வேந்தனியல்பனைத்துங்கவர்ந்தான்போலு
ந்தீங்கிழைத்தன், முலைமேற்கூடப்பெறுமெனிலோ வ
துவுமியற்றுமுதுக்குறைவற், றுலையாக்காமக்கொடுந்
துயரமுழந்துநாணுமிழக்குமால்....................... *

(இ-ள்) சிலை-கருப்புவில்லையுடைய—வேள்- மன்மதனவன்—வார்-நெடிய--அலர்-மலர்களாகிய--பகழி- பாணங்களை—தூர்ந்து தூர்ந்து-செலுத்திச்செலுத்தி, ஆகம்-உடம்பை---மெலிவித்திடுதலன்றி-இளைப்பித்தலல்லாமலும்—வேந்தன்- அரசனுடைய—இயல்பனைத்தும்-(பாவத்தையஞ்சுதல் இழிதொழிலைணல்முதலாகிய) சுபாவகுணமுழுவதையும்--கவர்ந்தான்போலும்- வெளவிக்கொண்டானோ— ஏனென்றால்) தீங்கு- பாவத்தை—இழைத்து- செய்தலினாலே—-உன்முலைமேல்- உன்கொங்கைகளின்மேலே----கூடப்பெறுமெனிலோ-கூடப்பெறலாமென்றாலோ—அதுவும்-அப்பாவத்தையும்—இயற்றும்-(அஞ்சாது)செய்வான்—முதுக்குறைவற்று - பேரறிவற்று— உலையா-கெடாத—காமம்-காமமாகிய—கொடு- கொடிய—துயரம்-துன்பத்தில் — உழந்து-வருந்தி—நாணும்- நாணத்தையும்—இழக்கும்-விட்டுவிடுகிறான்—(எ-று) (கருத்து) தமயந்தியே நளன் பாவஞ்செய்தாவது உன்னைக்கூடப்பெறுவானாகில் அது

வருஞ்செய்வான்பேரறிவிழந்து காமத்திலுழந்து நாணத்தையும்விடு
கிறான், எ-ம். (௱௰௫)

நின்சீருருவுவெளிப்படுதனோக்கிநோக்கிநிலைதளரு,மெ
ன்புடுருகவிளமுலைமேற்புல்லுமுனிந்தா யெனவருந்து,
மன்போடுடறீர்த்தனன்போ னகைக்குமகன்றனையென
வெளியிற், பின்போகுநல்லுணர்விழந்த பித்தர்போ
லப் * பேதுறுமால்........ ....................*

(இ-ள்) நின்-உனது—சீர்-சிறப்புப்பொருந்திய—உருவு-வடிவமானது—வெளிப்படுதல்-தோன்றுதலை—நோக்கிநோக்கி-பார்த்துப்பார்த்து—நிலை-(தன்னறிவு)நிலை—தளரும்-தளரப்பெறுகின்றான்—என்பு-எலும்பும்—உடுருக-உள்ளுருக--இள-இளமைபொருந்திய—முலைமேல்-(அவ்வடிவத்தின் முலைகளின்மேல்-- புல்லும்-தழுவுகின்றான்—முனிந்தாயென-ஊடினையென்று—வருந்தும்-வருந்துகின்றான்—அன்போடு-ஆசையினால்—உடல்-அவ்வுடலை—தீர்த்தனன்போல்-நீக்கினவன்போல்—நகைக்கும்-சிரிக்கின்றான்--அகன்றாயென-நீங்கினையென்று---வெளியில்- வெறுவெளியில்---பின்-(அவ்வடிவத்தின்) பின்னே---போகும்-போகின்றான்---நல்லுணர்வு நல்லறிவை—இழந்த-துறந்த--பித்தர்போல-பித்தநோயினார்போல--பேதுறும்-மறவியுற்றிருக்கின்றான்— எ-று.) * இலக்கணவிளக்கம்-அகத்திணையியல்- ௱௯-ஞு - காட்சிவேட்கையுள்ளுதன்மெலிதலாக்கஞ்செப்பலுறுவரையிறத்த-னோக்குவவெல்லாமவையேபோறன்-மறத்தன்மயக்கஞ்சாக்காடென்ற-வையிரண்டவத்தையும்மெய்கழற்காளையும்- புகுமுகம்புரிதன்முதலவாகிக் - காட்சிமுதன்மூன்றையுங்கருதிநந்நான்காய்- மாட்சியினமைந்தவீராறுமெய்ப்பாடு- முருந்திளமுறவலும்பொருந்துதலுமினே - மெய்யுறுபுணர்ச்சியெய்துதற்குரித்தே. இவ்விதியால் மயக்கங்காண்க. (கருத்து) தமயந்தியே நளன் உன்னுருவெளிதோற்றத்தைக்கண்டு நிலைதளருகிறான் உன்னுருவெளியைத் தழுவுகிறான் பிணங்கினையென்று வருந்துகிறான் பிணக்குநீக்கினவன்போலநகைக்கிறான் உருவெளியின்பின்போகிறான் நல்லறிவிழந்திருக்கிறான் என்றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௱௰௬

புலவுநாறும்வேல்வேந்தர்சேனைப் புணரிகடந்தெதிரத்,
தலவுநிடதக்கடாயானையுளதுவிரகப்பேராற்றி, னலை
யினிலைகாண்பரிதாகியந்தோவாழ்ந்து * மயங்கிய
தாற், சிலைகொணுதலாய்பின்னர்வருமவத்தைசேராதரு
ள்புரியாய்........................................ *

(இ-ள்) சிலை - வில்வடிவத்தை---கொள்-கொண்ட---நுதலாய் - நெற்றியையுடையவளே---புலவு-(பகைவ)ரூனால்---நாறும் - நாறுகின்ற---வேல்-வேலைத்தாங்கி---வேந்தர் - அரசர்களுடைய--சேனை-சேனையாகிய---புணரி-கடலை---கடந்து-தாண்டி--எதிரற்று- எதிரியில்லாமல்--உலவும்-திரிகின்ற---நிடதக்கடாயானை-நளனாகிய களிறானது---உனது-உன்சம்பந்தமாகிய---விரகம்-விரகமென்கின்ற--பேர்-பெயரையுடைய---ஆற்றின்-ஆற்றினது--அலையின் - அலையில்---நிலை-நிலையை--காண்பரிதாகி-காணமாட்டாததாகி--ஆழ்ந்து-முழுகி--மயங்கியது - மூர்ச்சித்தது--,அந்தோ - ஐயோ---பின்னர் வரும்-(அம்மயக்கத்தின்பின்)வருவதாகிய--அவற்றை-(சாக்காடாகிய) அவஸ்தையை--சேராது-அடையாமல் -- அருள்புரிவாய் - அருள்செய்வாயாக---(எ-று) * தொல்காப்பியமெய்ப்பாட்டியல்-௩- நகையேயழுகை-யிளிவரன்மருட்கை-யச்சம்பெருமிதம்வெகுளியுவகையென்-றப்பாலெட்டே மெய்ப்பாடென்ப, இவ்விதியால் மயக்கமாகிய மருட்கைவந்தது மெய்ப்பாடென்க. (கருத்து) தமயந்தியே நளனென்னும்யானையானது உனதுகாமக்கடலியாற்றில்முழுகி மயங்கியது அதற்கு மரணமாகியபத்தாமவத்தையைச்சாராதருள்புரிவாயாக என்றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௱௰௭)

குடங்கையணையிற்பகைவேந்தர் துயிலுங்கொற்றமுற்ற
த்து, மடங்கலனையபோர்மீளியின்னவாறுமதிமயங்கித்
தடங்கொண்முலையாயெனைத்தூதுநின்பால்விடுத்தான்
றளர்ந்திடேல், முடிந்ததுவுமிருவீரு முன்னர்ச்செய்
ததவப்பேற்றால்.................................. *

(இ-ள்) தடம்- மலைவடிவத்தை, கொள்-கொண்ட, முலையாய் - முலைகளையுடையவளே, பகை-(தன்னோடு) பகைத்த, வேந்தர்-அரசரானவர், குடங்கை-உள்ளங்கையாகிய, அணையில் - தலையணையில், துயிலும்-நித்திரைசெயப்பெற்ற, கொற்றம்- வெற்றிபொருந்திய, முற்றத்து-முற்றத்தையும், மடங்கலனைய- ஆண்சிங்கம்போலும், போர்-போர்த்தொழிலையுமுடைய, மீளி-அக்காளையானவன், இன்னவாறு - இப்படிப்பட்டவிதமாக, மதிமயங்கி-அறிவுகலங்கி, நின்பால் - உன்னிடத்து, தூது- தூதாக, எனை-என்னை, விடுத்தான்-அனுப்பினான், தளர்ந்திடேல்-(நீ)வருந்தாதே, இருவீரும்-நீங்களிருவரும், முன்னர்-முற்பிறப்பிலே, செய்த-செய்துவைக்கப்பட்ட, தவப்பேற்றால்- தவங்களைப்பெற்றிருக்கையினாலே, அதுவும்-அக்காரியமும், முடிந்தது-முடிவுபெற்றது---(எ-று) (கருத்து) தமயந்தியே நளமஹாராஜனானவன் இவ்வாறு மதிமயங்கி உன்னிடத்தென்னை யனுப்பினான்- நீவருந்தாதே

முற்பிறப்பி லிருவருஞ் செய்ப்பெற்றதவத்தா லதுவுமுடிந்ததென ன்றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௱௰௮)

முருகன்வேலுமுக்கண்ணான்முடித்தபனிற்றுப் பிறைக்
கொழுந்துந் -திருவின்கொழுநன்பாயலுங்கண்டிலகநு
தல்பேரகலல்கு-லுருவமாகத்தளிக்கவர்ந்த வுனக்குக்க
லுழிமதமொழுகுங்- கடக்களிற்றுநளனுள்ளங் கவரு
மாறுவியப்பாமோ.................................... ...*

(இ-ள்) முருகன்-சுப்பிரமணியனது—வேலும்-வேலையும்—முக்கண்ணான்-பரமசிவனது—முடித்த-முடியிற்சூடப்பட்ட—பனிற்று புதிய- பிறைக்கொழுந்தும்-பிறைப்பிள்ளையையும்---திருவின்கொழுநன்-திருமாலினது---பாயலும்-(பாம்பாகிய) சயனத்தையும்---கண-கண்ணினதும்--திலகம்-பொட்டையுடைய--நுதல்- நெற்றியினதும்--பேர்-பெரிய--அகல்-பரந்த--அல்குல்- அல்குலினதும்—உருவமாக-வடிவங்களாக--தளி-தரித்து--கவர்ந்த- வௌவிய--- உனக்கு-நினக்கு— கலுழி-கான்யாறுபோல்—மதம் - மதநீரானது—ஒழுகும்-இழியப்பெற்ற—கடம் - கதுப்பையுடைய—களிறு - களிறுபோலும்—நளன்-நளராஜனது—உள்ளம்-உள்ளத்தை--கவருமாறு- வௌவுமாறு—வியப்பாமோ - ஆச்சரியமாமோ—(எ-று) (கருத்து) தமயந்தியே நளமஹாராஜனதுமனதை வௌவுதலுனக்காச்சரியமாமோ என்றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௱௰௯)

பொன்னேயமுதேமொழிக்கரும்பே பூந்தாமரையிற்றி
ருவேநின்-மின்னேரிடைதேய்ந்தறவருந்த விம்முமுலை
யினல்லாம-லென்னைதொய்யிற்றொழிலனைத்து மெழு
தலாமேயென்றெண்ணி - மன்னையுனக்குமெங்களுட
ன்மதுவார்பொழிலினிடையிருந்தே... ...............*

(இ-ள்) பொன்னே-தங்கமே—அமுதே-அமிர்தமே—மொழி-சொல்லாகிய(சாரத்தை)யுடைய—கரும்பே - கன்னலே—பூ - அழகிய—தாமரை-தாமரைமலரிடத்து—இல்- இல்லாத—திருவே - ஸ்ரீதேவியே—நின்-உனது—மின்னேர்-மின்போலும்—இடை- இடையானது—தேய்ந்து-இளைத்து—அற-மிகவும்— வருந்த - நோவ—விம்மும்-பருக்கின்ற—முலையினல்லாமல்-முலைகளிடத்தல்லாமல்--தொய்யில்-சந்தனக்கோலத்தினது—தொழிலனைத்தும் - வேலைமுழுவதும்— என்னை-என்றாலும்—எழுதலாமேயென்று-(மற்றொன்றி)லெழுதலாமோவென்று— எண்ணி-ஆலோசித்து—மன்னை-நளராஜனை—மது-வண்டுகளானவை---ஆர்- ஒலிசெய்யப்பெற்றிருக்கின்ற---பொழிலினிடை-சோலையின்கண்---இருந்து-தங்கி---எங்களு

டன்-எங்களோடு---உரைக்கும்- (இனிச்) சொல்லுவான்—(.எ-று) (கருத்து)தமயந்தியே உன்னை நளன்மனைந்துன் முலைகளிற்றொய் யி லெழுதிப்பார்த்து வியந்துசொல்வான் என்பதாம். (௱௨௰)

இன்பக்கலவிக்கரணங்களியாவுமியற்றியிருவீரு.......*
மன்புற்றவசமுறுமேனி யயர்தீர்வதற்கெம் பொலஞ்சி
றையான்-முன்புற்றுயர்வானதிப்புனலின் மூழ்கித்தண்
ணெங்குறுந்திவலை-நன்கிற்றெறிப்பவீசுதற்குக் காலமு
ணித்தாய்நண்ணியதே...................................*

(இ-ள்) இருவீரும்-நளராஜனுநீயும்--இன்பம்-சுகத்தைத்தருகி ன்ற---கலவி-புணர்ச்சியினுடைய---கரணங்கள்யாவும்- கரணங்கள் யாவற்றையும்--இயற்றி-செய்து--அன்புற்று - (ஒருவர்மேலொருவ) ரன்புமிக்கு-அவசமுறும் - பரவசப்படுமாறுண்டாகும்----மேனி- (உங்க)ளுடம்பினுடைய---அயர் - தளர்ச்சியானது --தீர்வதற்கு - நீ ங்குதற்பொருட்டு---உயர்-உயர்வாகிய-- வானதி ஆகாயகங்கையின து--புனலின் நீரின்கண்--மூழ்கி-முழுகிவந்து--முன்புற்று- முன்னி ருந்து--எம்-எமது--பொலன்---பொன்னுருவமாகிய— சிறையால்- சிறைகளினாலே---தண்ணெண-குளிர்ச்சிபொருந்திய--குறுந்திவலை- சிறியதுளிகள்---நன்கின-நன்றாக--தெறிப்ப- பட-- வீசுதற்கு-வீசு தல்செய்தற்கு--காலம் காலமானது--அணித்தாய்-சமீபித்து-- நண் ணியது-வந்தது—(எ-று)கலவிக்கரணங்களாவன- ஆலிங்கனம்(ரு) சும்பனம்(௰௧)அமிர்தநிலை (௰௬ நகக்குறி (அ) பற்குறி அ) குரல்- (அ)தாடனம்-(அ)ஆ (௬௪) கொக்கோகத்திற்காண்க-(கருத்து) தமயந்தியே நீங்களிருவரும் புணர்ந்திளைப்புறுந் திருமேனியிலே ஆகாயகங்கை நீர்த்துளிபொருந்திய என்சிறகுகளினால் வீசுதற்கு க்காலஞ்சமீபமாயிற்று என்றது. (௱௨௧)

கொல்லும்வேலுங்கூர்வாளுங்கூற்றுங்கொடியகடல்விட
மும்,வெல்லுநெடியகருங்கண்ணாய்வேல்வேந்திடத்திபா
ன்விரைவிற் - செல்லுமளவுநீவருந்தேல்செலவிற்றிகழ்பூ
ண்வனமுலைகள் - புலலும்வேட்கைத்தேருர்ந்துவேந்து
ன்னகரம்புகுவானால்.....................................*

(இ-ள்) கொல்லும்-கொலைசெய்கின்ற--வேலும் - வேலையும்-- கூர்-கூரிய--வாளும்-வாளையும்---கூற்றும்-யமனையும்---கடல் - கட லிற்பிறந்த---கொடிய-தீய--விடமும்-ஆலகாலத்தையும்---வெல்லு ம்-வெல்லுகின்ற---நெடிய-நீட்சிபொருந்திய---கரு- கரிய----கண் ணாய்-கண்களையுடையவளே---யான்-நான்--வேல்-வேலையுடைய---- வேந்திடத்து-அரசனிடத்தே----விரைவில்-சீக்கிரத்தில்---செல்லும

ளவும்-போமளவும்—நீ-நீ—வருந்தேல்-வருந்தாதே—செல்வினை-போனுல்—திகழ்-விளங்காநின்ற--பூண்-ஆபரணத்தையும்--வனம்-சந்தனக்கோலத்தையுமுடைய--முலைகள் - முலைகளோ—புணரும்-ஆபுவதலிக்குநீத்துணையாகிய—வேட்கை-ஆசையிருக்ல—வேந்து-அரசனவன்--தேர்-தேரை—ஊர்ந்து-செலுத்தி--உன்-உனது--நகரம்-பட்டணத்தில்--புகுவான்-வருவான்—(எ-று) (கருத்து) தமயந்தியே நீவருத்தப்படாதே நான்போனுல் நளன் உனதுநகரத்திற்குவருவான் என்றன்னஞ்சொல்லிற்று என்பதாம். (௱௨௨)

மடைவாய்த்தவழுஞ்சூற்சங்கம் வனசப்பொகுட்டின்ம
ணியுயிர்ப்பப், பெடைநாரைகடங்கருவென்றுவடைசே
ர்நிடதப்பெருமான்பால், விடைதாவென்ன மடவன்ன
ஞ்சிறகர்நீவிவிருப்பினெடும், படைவாணெடுங்கட் பசு
ந்தோகைமுகமனுரைகள்பணித்தனளால்... .......

(இ-ள்) மடைவாய்-மடையின்கண்--தவழும்-ஊர்கின்ற—சூல்-கருப்பத்தையுடைய--சங்கம்-சங்குகளானவை--வனசம் - தாமரைமலர்களுடைய—பொகுட்டில்-கர்ணிகையில்—மணி-முத்துக்களை—உயிர்ப்ப-ஈன்றிட—பெடைநாரைகள்- பெண்நாரைகளானவைதம்-தம்முடைய--கருவென்று-முட்டைகளென்று-- அடைசேர்-அடைகாக்கின்ற--நிடதம்- நிடதநேயத்தையுடைய—பெருமான்பால்-அரசன்கட்(செல்ல)--விடை-உத்தரவை--மடம் - இளமைபொருந்திய--அன்னம்-அன்னமானது—தாவென்ன - கொடுவென்றுசொல்ல--சிறகர்-(அத)னிறகை--நீவி - தடவி--விருப்பினெடும்-ஆசையோடும்—படைவாள் - வாட்படைபோலும் --நெடுங்கண்-நெடியகண்களையுடைய—பசுந்தோகை - பச்சைமயில்போல்பவள்—முகமனுரைகள்-உபசாரவார்த்தைகளை--பணித்தனள்-சொல்லினுள் (எ-று)(கருத்து) அன்னமானது நளனிடத்துச்செல்ல உத்தரவுதாவென்றுகேட்கத்தமயந்திஉத்தரவுகொடுத்தாள், எ-ம். (௱௨௩)

இவ்வாறிருந்துநன்மொழிக ளியம்புமெல்லை யமுதூறு
ஞ், செவ்வாய்மடந்தைசீறடியின்வடிவுநோக்கிச் சிலநுப
ரு, மெய்யவாணெடுங்கட்டோழியரும்வரக்கண்டயிர்ப்ப
ரியவென்று, வெவ்வாய்வடிவேல்வேந்தன்பா லன்னம்வி
ரைவிலேகிடதே........................................*

(இ-ள்) இவ்வாறிருந்து-இவ்விதமாயிருந்து—நன்மொழிகள்-நல்லவார்த்தைகளை—இயம்புமெல்லை - சொல்லிமுடித்தசமயத்தில்—அமுது-அமிர்தமானது—ஊறும்-சுரக்கின்ற--செவ்வாய் - செய்யவாயையுடைய--மடந்தை-தமயந்தியினது--சீறடியின்-சிறியவடிவ

ளது--சுவடு-சுவட்டை---நோக்கி - பார்த்துக்கொண்டு---சிலதியரு
ம்-தாதிகளும்--மை-அஞ்சனம்பொருந்திய---வாள்-வாள்போலும்
--நெடு நெடிய---கண்-கண்களையுடைய---தோழியரும் - பாங்கிய
ரும்--வர-(தேடிக்கொண்டு)வர--கண்டு-(அவர்களைப்) பார்த்து---
இவர்-இம்மங்கையர்--அயிர்ப்பரென்று-சந்தேகிப்பாரென்று நினை
த்து--வெவ்வாய்-வெவ்வியவாயின்கண்--வடி-கூர்மைபொருந்திய--
வேல் - வேலையுடைய--வேந்தன்பால்- அரசனிடத்து---அன்னம்-அ
ன்னமானது---விரைவில்-விரைவிலே--ஏகியது-போயிற்று. (எ-று)
(கருத்து) தமயந்தி இவ்வாறுசொல்லுகையில் பாங்கியருந்தோழி
யரும் வருதலைக்கண்டு அன்னமிவர்கள் சந்தேகிப்பார்களென்று
நளனிடத்துச்சென்றது என்பதாம். (௱௨௪)

அன்னமுரைத்தமொழியமுத மருந்தித்தெவிட்டாவார
முதக், கன்னற்குதலையிருகண்ணுங்கருத்துமதன்பின்
றொடர்ந்தேகப், பொன்னம்பாவைதழற்பெய்தாலென்
னவுருகிப்புலம்புகொண்டாங், கின்னற்கடலின்கரைகா
ணாதிருந்தாளிருந்தவேலைதனில்.......... .............. *

(இ-ள்) அன்னம்-அன்னத்தினால்--உரைத்த- சொல்லப்பட்ட---
மொழி-சொல்லாகிய--அமுதம்-அமிர்தத்தை--அருந்தி - உட்கொ
ண்டு--தெவிட்டா-வெறுக்காத--ஆர்-உண்டற்குரிய--அமுதம்- அமி
ர்தமும்--கன்னல்-சர்க்கரையும்போலும்--குதலை - மழலைச்சொற்க
ளையுடையவள்--இருகண்ணும்- (தன்) இருகட்பார்வையும்-- கருத்
தும்-மனமும்-அதன்பின் - அவ்வன்னத்தின்பின்--தொடர்ந்து- பற்
றிக்கொண்டு--ஏக-போக--பொன்னம்பாவை - பொன்மயமாகிய
பாவையை--தழல்-நெருப்பின்கண்--பெய்தாலென்ன - இட்டா (ல
து)போல--உருகி-கரைந்து--புலம்புகொண்டு இரங்குதல்கொண்
டு--ஆங்கு-அவ்விடத்து--இன்னல்-துன்பமாகிய--கடலின்-|கடலின
து--கரை-கரையை--காணாது-காணாமல்--இருந்தாள்-இருந்தனள்,
இருந்தவேலைதனில்- (அப்படி) யிருந்தசமயத்தில்---(எ-று) (கருத்
து) தமயந்தி கருத்துங்கண்ணும் அன்னத்தின்பின்செல்லத் துன்
பக்கடலின் கரைகாணாதிருந்தாள் இருந்தசமயத்தில். (௱௨௫)

ஆயவெள்ளம்புடையெய்தி யனிச்சமலரின்றுதுறைப்ப
ச், சேயநிறமாஞ்சீறடிகள்கன்றச்செங்காலனந்தொடர்
ந்து, மேயதென்னமதிகொல்லோமுருகுவிம்மநறவுமி
ழுந், தூயமலர்ப்பங்கயப்போதைத்துறந்தெம்மனையிற்
புகுந் * திருவே ................ ......................... *

(இ-ள்) ஆயவெள்ளம்-வெள்ளம்போலுமங்கையர்கூட்டமானது

--புடை-பக்கத்தில்--எட்டி-அடைந்து—முருகு- வாசனையானது—விம்ம-பெருக—நறவு-தேனை--உமிழும்-கக்குகின்ற--தூயமலர்-பரிசுத்தமொராகிய--பங்கயப்போதை- தாமரைப்பூவை—துறந்து-விட்டு--என்மனையில்-எமதுவீட்டின்கண்—புகும்-வந்த—திருவே-இலக்குமியே—அளிச்சமலரின்-அலிச்சப்பூவினது—தாது-மகரந்தமானது—உரைப்ப உறுத்த—சேயநிறமாய்- சிவப்புநிறமாகின்ற—சிறுகால்-சிறியவடிகள்—கன்ற-வாட—செங்கால்-செய்யகால்களையுடைய—எனம்- அன்னத்தை—தொடர்ந்து-(பிடிக்கும்படியாகப் பின்சென்று—மேயது- (இங்கே) யடைந்ததற்குக்காரணமாயது-- என்னமதி என்னவறிவு—(எ-று) தொல்காப்பியம்-விளிமரபியல்-ம-ரு-அன்னமைச்சொல்லேயியற்கையவாகும்- இவ்விதியால் திருவே என்றதன்மை விளியியல்பாயிற்று. (கருத்து) தமயந்தியே அன்னத்தைத்தொடர்ந்துசென்ற தென்னமதி என்றார்கள் பாங்கிமார்கள். (௱௨௬)

மையுன்மதவெங்களியானை வீமன்வரத்தால் வருந்திரு
வே, கையுமுகமுமரிபரந்தகண்ணுமுருகு கொப்புளிக்
கும், செய்யகமலமெனவீழு, மளிகளோச்சுந்திறத்தா
லோ, தொய்யிலெழுதுந்தடமுலைகள்சுமந்தோமேனிது
வண்டதுவே ........................................ *

(இ-ள்) மையல்-மயக்கஞ்செய்கின்ற—மதம்- மதத்தாலுண்டாகிய—வெங்களி-வெவ்வியசெருக்கையுற்ற--யானை-யானையையுடைய—வீமன்-வீமராஜனது—வரத்தால்-வரத்தினாலே—வரும்-(மகளாய்ப்பிறந்த—திருவே-திருமாதே— கையும்-(உன்)கைகளையும்--முகமும்-முகத்தையும்—அரி-இரேகையானது—பரந்த-படரப்பெற்ற—கண்ணும்-கண்களையும்—முருகு- தேனை—கொப்புளிக்கும்-உமிழ்கின்ற—செய்யகமலமென - செந்தாமரைமலர்களென்று மயங்கி—வீழும்-(வந்து)வீழ்கின்ற—அளிகள்-வண்டுகளை—ஓச்சுந்திறத்தாலோ- ஓட்டுஞ்செயலாலோ—தொய்யில் - சந்தனக்கோலத்தை—எழுது-எழுதப்பெற்ற—தடம்-மலைபோலும்—முலைகள்-முலைகளை—சுமந்தோ-தாங்கியோ—மேனி-உடம்பானது--துவண்டது-வாடியது—(எ-று) (கருத்து) வீமராஜன் பெற்றெடுத்ததமயந்தியேஉனதவயவத்தாமரைகளிலவிழுந்த வண்டுகளைஓட்டும்வகையினாலோ உனதுகனதனங்களைச்சுமந்தோ திருவுருவந்தளர்வடைந்தது என்றார்கள் என்பதாய். (௱௨௭)

அன்னந்தொடருமயர்வதுவோவபலார்விழிபூ றடைந்த
துவோ, பன்னும்பொழில்வாய்ப்பல்வலைகயெதிர்ந்தே

மருட்டப்பயந்ததுவோ,பொன்னங்கிளியேமடமயிலே
புகல்வாய்க்குயிலேபூங்கமல, மன்னுந்திருமானேயன்
னவணங்குவாய்ந்தமரகதமே.............................. *

(இ-ள்) பொன்னங்கிளியே - அழகியபொற்கிளியே—மடமயிலே இளமயிலே—புகல்-கூவும்—வாய்-வாயையுடைய— குயிலே-குயில்போல்வாளே—பூ-அழகிய—கமலம்- தாமரையில்—மன்னும்-நிலைபெற்றிருக்கும்—திருமானேயன்ன- இலக்குமிக்கொப்பான—அணங்கு-அழகு--வாய்ந்த-பொருந்திய—மரகதமே - மரகதம்போல்பவளே--அன்னம்- அன்னப்பறவையைப்பற்றி--தொடரும்-தொடர்ந்த-- அயர்வதுவோ-வருத்தமோ—அயலார் - அயலவர்களது—விழிபூறு-கண்ணேறு—அடைந்ததுவோ - சேர்ந்ததுவோ—பன்னுப[illegible]ால்லும்—பொழில்-சோலையின்—வாய்- இடத்து—பல்வகை-பலபேய்கள் —எதிர்ந்து-எதிர்ப்பட்டு —மருட்ட-வெருட்ட—பயந்ததுவோ - பயமடைந்ததுவோ (அம்மேனி)— (எ-று.) (கருத்து) தமயந்தியே அன்னத்தின்பின் சென்றவருத்தமோ அயலார்கண்பட்டதோ பேயால்வந்ததோ என்பதாம். ☞ இக்கவி சிலபுத்தகங்களி லிருக்கின்றது ஆகையிற் சேர்த்துக்கொண்டனம்.

தாதுகமழுமலர்த்திருவேயென்னச்செவிலித்தாயர்பலர்
பூதியணிந்தாங்கயினிநீர்சுழற்றித்தெய்வம்பராய்ப்போ
ற்றிக், காதன்மயிலைக்கொடுவந்துகடிமாமனையிற் பசுந்
தேறற்,சீதமலர்மெல்லணைமீதுசேர்த்தாரவளுஞ் * செ
யலிழந்தாள்........................................*

(இ-ள்) தாது-மகரந்தமானது—கமழும் - மணக்கப்பெற்ற—மலர்-தாமரைப்பூவிலுள்ள— திருவே-திருமாதே—என்ன - என்று சொல்ல--பலர் பலராகிய—செவிலித்தாயர்-வளர்த்ததாய்மாரானவர்—பூதி-திருநீற்றை—அணிந்து-(நெற்றியி)லிட்டு—அயினிநீர்-ஆலாத்தியை—சுழற்றி-சுற்றி—தெய்வம்- குலதெய்வத்தை—பராய்-பிரார்த்தித்து--போற்றி-துதிசெய்து,காதல்-ஆசையைத்தருகின்ற—மயிலை-மயில்போல்பவளை—கொடுவந்து - கொண்டுவந்து—கடி-காவலையுடைய—மா-பெரிய—மனையில்-மாடத்தின்கண்--பசுந்தேறல்-பசியதேனையும்— சீதம்- குளிர்ச்சியையுமுடைய—மலர்-மலர்களாலாகிய—மெல்-மெல்லிய—அணைமீது-சயனத்தின்மேல்—சேர்த்தார்-கிடத்தினார்—அவளும்-அத்தமயந்தியும்—செயல் - (தன்)செய்கைகளை—இழந்தாள்-இழந்தனள்—(எ-று) * தொல்காப்பியமெய்ப்பாட்டியல்- ௩-சூ - நகையேயழுகையிளிவரன்மருட்கை யச்சம்பெருமிதம்வெகுளியுவகையெனு| றப்பாலெட்டேமெய்ப்பா

ம்—தருமமோ-அறமோ—உயிர்நிலை-சீவநிலையானது—தளர்ந்து-தளர்ச்சியடைந்து—வாடுமென்- மெலிவேனாகியவென்னுடைய—மருமமீது-மார்பினிடத்தில்—ஊன்றிய - தைக்கச்செய்த—வாளில் - வாளாயுதத்தைப்போல்—போழ்வது-பிளக்கின்றது—(எ-று) (மேகலை-எழுசாருள்ளது.) (கருத்து) தமயந்தியின்கண்ணோ-மன்மதன்பாணமோ, பொய்யுரைநீதென்னுந்தருமமோ, என்னுடைய மார்பில்வாளாயுதம்போலும்பிளக்கப்பட்டதுஎன்றான்நளன்-எ-ம்.

என்னும்விள்ளாதயர்ந்திருக்குமேமுறுநீ...... *
தன்னையுமறக்குமெய்த்தருமநன்றெனாப்...... *
புன்னகைகோட்டுமெய்புழுங்கும்வெய்துயிர்த் *
தன்னமுன்னுரைத்ததையனைத்துமெண்ணுமால்.

(இ-ள்) என்னும்- இப்படியென்றுசொல்லுவான்—விள்ளாது-பேசாமல—அயர்ந்திருக்கும்-துன்பப்படுவான்—எமுறும்- மயங்குவான் —தன்னையுமறக்கும்-தன்னையுமறப்பான்--மெய்-உண்மைபொருந்திய—தருமம்- அறம்--நன்றெனா - நல்லதென்று—புன்னகைகோட்டும் - புன்சிரிப்புக்கொள்ளுவான் — மெய்புழுங்கும்-உடல்வெதும்புவான்—வெய்துயிர்த்து-அச்சமடைந்து--அன்னம்-அன்னப்புள்ளானது--முன்னுரைத்ததையனைத்தும்-(தூதுபோய்வந்து முன்சொல்லியசெய்தியாவையையும், எண்ணும்- நினைப்பான் (எ-று) (கருத்து)இவ்வாறுசொல்வான், பேசாதுதுன்பப்படுவான், மயங்குவான், தன்னையுமறப்பான், நல்லதருமமென்றுசிரிப்பான், வெதும்புவான், அன்னஞ்சொன்னவற்றைநினைப்பான் என்பதாம்.

முற்றிழைவனமுலைமுயங்கு*நன்னலம்........*
பெற்றிலனெனினும்வேள்பெய்யும்வாளியான் *
மற்றுயிரிறப்பினும்வானவேந்தொடு............*
சொற்றதுமறுக்கிலனென்றுசொல்லுவான்... *

(இ-ள்) முற்று-முற்றிய, இழை-ஆபரணங்களையணிந்ததமயந்தியினது--வனம்-அழகிய--முலை-தனங்களை--முயங்கும்- தழுவுகின்ற--நன்னலம்-நல்லசுகத்தை, பெற்றிலனெனினும்-பெறுமற்போனேனாயினும்---வேள் - மன்மதனானவன்---பெய்யும்- சொரிகின்ற--வாளியால்-பாணங்களினாலே--உயிரிறப்பினும்- ஆவிமாயினும்--வானவேந்தொடு-இந்திரனுடன்--சொற்றது- சொல்லியதை—மறுக்கிலன்-தடுக்கமாட்டேனென்றுநிச்சயித்துக்கொண்டு--சொல்லுவான்-சொல்லுவான்—(எ-று) முற்றுதல்-வளைத்தல்-மற்று - அசைநிலை.)

[* குவலயாநந்தம் உறுப்பியல். பொருளிடங்காலஞ் சினைகுணந்தொழிலென, வருமிவையாறுங்காரணப்பொதுவாய், திரிசொல்

லெழுமெனச்செப்பினர்புலவர், இவ்விதியால்நன்னலம்என்றதுபயன்பிற்றிரிசொல்.](கருத்து) தமயந்திஇன்பத்தைப்பெறேனாகிலுமன்மதன்கணையா லுயிர்போயினும் இந்திரனோடுசொன்னதை மறுக்கிலேன் என்றான் என்பதாம். (௬௧)

எப்பொருளாயினும்யாவருள்ளமுங்............ *
கைப்படுநெல்லியங்கனியிற்காணுநீர்............ *
துப்பிதழ்மடந்தைபாற்றூதுபோகெனச்...... *
செப்பியதெவன்கொலென் சிந்தையோர்ந்துமே.

(இ-ள்) எப்பொருளாயினும்-எந்தப்பொருளானாலும்---யாவருள்ளமும்- எவர்களுடையமனமும்—கைப்படு - உள்ளங்கையிற்பட்ட—நெல்லியங்கனியில்-நெல்லிப்பழத்தைப்போல—காணும்-அறிகின்ற—நீர்-நீவிர்—துப்பு- பவளம்போன்ற—இதழ் - அதரத்தையுற்ற— மடந்தைபால் - தமயந்தியினிடத்து — தூதுபோகென- தூதுபோவென்று—என்-என்னுடைய—சிந்தை - மனதை—ஓர்ந்தும்-தெரிந்தும்—செப்பியது-சொல்லியது—எவன்கொல் - என்கொல்—(எ-று) (கருத்து) எல்லாமறிந்தநீர் தமயந்தியிடத்துத்தூதுபோவென்றுசொல்லிய தென்னவோவென்றான் என்பதாம். நெல்லிக்கனி யுள்ளும்புறமுந்தோற்றும். (௬௨)

வழங்கியநும்முரைமறாதுசென்றியான்................ *
மொழிந்தனனாயினுமுன்னரோவெனை............... *
விழைந்தவத்தளிரியல்வெள்குறாதுளங்...... ......... *
குழைந்துநும்பான்மணம்பொருந்தல்கூடுமோ..... *

(இ-ள்) வழங்கிய-சொல்லிய—நும்முரை-உம்முடையசொல்லை—மறாது-மறுக்காமல்—யான்சென்று- யான்போய்—மொழிந்தனனாயினும்-சொன்னேனானாலும்—முன்னரோ - முன்னமே—எனைவிழைந்த-என்னைவிரும்பிய—அத்தளிரியல்- அத்தமயந்தி—வெள்குறாது-நாணமல்—உளங்குழைந்து- மனங்கரைந்து— நும்பால்- உம்மிடத்தில்—மணம்- விவாகத்திற்கு—பொருந்தல்கூடுமோ-சம்மதிப்பாளோ—(எ-று) (கருத்து) உமதுசொல்லைநான்சொன்னேனானாலும் என்னைவிரும்பிய தமயந்தி உம்மைவிரும்புவாளோ என்றான் என்பதாம். (௬௩)

என்னவேந்துரைத்தலுமிசைத்தசொன்மறு......... *
நின்னைமெய்ப்பரதனைநிகரில்பார்த்தனை............... *
முன்னினுநினைத்தவையனைத்துமுற்றுமா........ *
லன்னநீமயங்கலேதரியதாகுமே........... *

(இ-ள்) என்ன-இப்படியென்று—வேந்து- நளமஹாராஜனவன்—உரைத்தலும் - சொல்லலும்—இசைத்த- சொல்லிய—சொல்- சொல்லினை—மறா-மறுக்காத—நின்னை-உன்னையும்—மெய் - உண்மையையுடைய,பாதனை-பாதனையும்—நிகரில் - ஒப்பில்லாத—பார்த்தனை-அருச்சுனனையும்—முன்னிலும்- நினைத்தாலும்—நினைத்தவுடனேத்தும்-நினைத்தகாரியங்களியாவும்—முற்றும் - முடியும்—அன்ன-அத்தன்மையையுடைய—நீ-நீயே—ஏகில் - போனால்—ஏது-எந்தக்காரியம்—அரியதாகும் - அருமையையுடையதாகும்—(எ-று ஆல்-அசைநிலை. கருத்து) உன்னையும், பாகனையும், அருச்சுனனையும், நினைத்தால நினைத்தகாரியமுடியும்-நீயேபோனால் காரியமரிதா என்றானிந்திரன் என்பதாம். (கச)

இனையனவாசவனியம்புமெல்லையின் .......... *
வனைமலர்க்கோதைதன்வயத்தனாகியுந்......... *
தனியறனிழுக்குறாத்தகையனாதலி.............. *
னனையதற்கிசைந்தனனலங்கல்வேலினான்...... *

(இ-ள்) வாசவன்-இந்திரனானவன்—இனையன- இத்தன்மையவாகியசொற்களை—இயம்புமெல்லையின்- சொல்லுகின்றபொழுதில்—வனை-கட்டுகின்ற,மலர்க்கோதைதன்- மலராயணிந்தகூந்தலையுடைய தமயந்தியினாலே—வயத்தனாகியும் - வசப்பட்டவனாயிருந்தும்—தனி-ஒப்பற்ற—அறன்-தருமத்தினின்றும்—இழுக்குறா - கெடுதலடையாத—தகையனாதலின்-குணத்தையுடையவனாதலால்—அனையதற்கு-அவ்விந்திரன்சொன்னதற்கு—அலங்கல்- வெற்றிமாலையைத்தரித்த—வேலினான்- வேற்படையேந்தியநளமஹாராஜன்—இசைந்தனன் - உடன்பட்டான்—(எ-று) (கருத்து) நளன்றூதுபோகச் சம்மதித்தான் என்பதாம் (கரு)

பொருந்தியமன்னர்கோன்பொம்மல்வெம்முலைத்... *
திருந்திழைகடிநகர்ச்சேமமாகிய ................... *
வருந்திறல்வாயிலோரறிவுறாதுபோய்............... *
வருந்திறன்யாதெனமறித்துங்கூறினான்..............*

(இ-ள்) பொருந்திய-சம்மதிப்பட்ட—மன்னர்கோன்-நளன்—பொம்மல்-பொலிவுபொருந்திய—வெம் - விருப்பதைத்தருகின்ற—முலை-தனங்களையும்—திருந்திழை-திருத்தமாகியஆபரணங்களையுமணிந்த தமயந்தியினுடைய—கடிநகர் புதுமைபெற்றநகரம்—சேமமாகிய-காவலாகிய—அருந்திறல்- அரியவல்லமைபொருந்திய—வாயிலோர்-வாயில்காப்பவர்—அறிவுறாதுபோய்- அறியாமற்படிபுகுந்து—வருந்திறம்-வருகின்றவிதம்—யாதென- எப்படியென்று—மறித்தும்- மறுபடியும்—கூறினான் - சொல்லினான்—(எ-று)

(கருத்து) நளன் தமயந்தியரண்மனைக் காவலாளரறியாதுபோய் விரும்பிதமெப்படியென்றான் என்பதாம். (௬௬)

விட்புலந்தனிபுரந்தருளும்வேந்தர்கோ............*
னட்பொடுமினியனநவின்றியாவர்க்கும்..............*
கட்புலனுருக்காண்கிலாததோர்....................*
நுட்பநூல்விஞ்சையைநுவன்றிட்டானரோ........ *

(இ-ள்) விட்புலம் - விண்ணுலகத்தை—தனி - ஒப்பற—புரந்தருளும்-காக்கின்ற—வேந்தர்கோன் - இந்திரனானவன்—நட்பொடும்-சிநேகத்துடனே—இனியன-இன்சொற்களை—நவின்று - சொல்லி—யாவர்க்கும்-எவர்களுக்கும்—கட்புலனால்-கண்ணறிவினால்—உரு-வடிவத்தை—காண்கிலாது- அறியப்படாததாகிய—ஓர்-ஒரு—நுட்பநூல்- நுண்ணிய நூலிற்சொல்லும்—விஞ்சையை - மந்திரத்தை—நுவன்றிட்டான்-சொல்லினன்—(எ-று) விஞ்சை - மந்திரத்துக்காதலால்-ஆகுபெயர், (கருத்து) இந்திரன் நளனுக்கரூபமாகும்வித்தையைக்கற்பித்தான், எ-ம். (௬௭)

பெறலரும்விஞ்சையும்பெற்றுவானவர்க்.......... *
கிறையவனிணையடியிறைஞ்சிவண்டிமிர்........... *
நறையலர்க்கூந்தலாணகரிநண்ணுவா.......... .. *
னறைகழலிலங்குதாளரசனேகினான்................. *

(இ-ள்) பெறலரும்-பெறுதற்கரிய—விஞ்சையும்-மந்திரத்தையும்—பெற்று-பெற்றுக்கொண்டு—வானவர்க்கிறையவன்- இந்திரனது—இணையடி-இரண்டுபாதங்களையும்—இறைஞ்சி - வணங்கி—வண்டு-வண்டுகள்—இமிர்-ஒலிக்கின்ற—நறை- தேனொழுகுகின்ற—மலர்-மலராயணிந்த—கூந்தலாள் - அளகபாரத்தையுற்ற தமயந்தியினது—நகரி-குண்டினபுரத்திலே—நண்ணுவான்-சேரும்பொருட்டு—அறை-ஒலிக்கின்ற—கழல்-வீரக்கழலானது, இலங்கு-பிரகாசிக்கின்ற—தாள்-பாதத்தையுடைய—அரசன் - நளன்— ஏகினான்-போனான்—(எ-று) (கருத்து) நளன்மந்திரத்தைக்கற்று இந்திரனை வணங்கிச்சென்றான், எ-ம். (௬௮)

பண்ணமைகூந்தன்மான் § றேரிற்பார்புக......... *
ழண்ணலுமிமையவரார்வப்பின்செல...................*
மண்ணிடைவானவர்மகளிர்தம்மொடும்...............*
விண்ணிழிந்திருந்தனநகரமேயினான்..................*

(இ-ள்) பண்ணமை-கல்லணையமைந்த—கூந்தல்- புறமயிராயுற்ற—மான்-குதிரைகட்டிய—தேரில்-இரதத்தில்—பார் - பூமியிலுள்ளார்—புகழ்-புகழ்கின்ற— அண்ணலும்- நளமஹாராஜனும்—இ

மையவர்-தேவர்களுடைய—ஆர்வம்-ஆசையானது—பின்செல-பின்றொடர்ந்தொடர—மண்ணிடை-மண்ணுலகத்தில்--வானவர்மகளிரொடும்-அரம்பையருடன்—விண்-சுவர்க்கமானது--இழிந்திருந்தன-இழிந்திருந்ததை-யொத்த—நகரம்- குண்டினபுரத்தை--மேயினன்-பொருந்தினன்.(எ-று § குவலயாநந்தம்-உறுப்பியல்-அ-ரு.
அருந்தநலணிதல் வாகனய்விருதோ, டாயதமாடைகாதலிதோற்றம்,தந்தைதாய்கிளையாதிபஞ்செல்வ, மிசையெனவருபீரேழிவையாண்பாற், கோட்பொருளெனவேகூறப்படுமே, இவ்விதியால்தேர் ஆண்பாற்கங்கொள்பொருள். (கருத்து) நளன்குண்டினபுரத்திற் போயினன்,எ-ம். (௱௬)

வாம்பரித்தேரினின்றிழிந்துவண்டுளர்............ *
தேம்பொதிநறுமலர்த்தெரியன்மார்பினன்........... *
காம்புறழ்தோளினுள்செவ்விகாண்குறு............. *
மேம்பலிற்கோநகரெய்தினனரோ...... .. ......... *

(இ-ள்) வாம்-தாவுகின்ற--பரி-குதிரையையுடைய—தேரினின்றிழிந்து-தேரினின்றுமிறங்கி—வண்டு-வண்டுகளானவை—உளர்-ஒலிக்கின்ற—தேம்-வாசனை—பொதி-நெருங்கிய—நறும் - பரிமளம்பொருந்திய—மலர்-மலராற்றொடுத்த—தெரியல்-மாலையணிந்த—மார்பினன்-மார்பையுடையவனாகிய நளமகாராஜன்—காம்பு-மூங்கிலை—உறழ்-ஒத்த—தோளினுள்-தோளினையுடையவளாகிய தமயந்தியினது—செவ்வி-அழகை—காண்குறும்- காணவேண்டுமென்கிற—எம்பலின்-ஆசையினாலே—கோநகர் - குண்டினபுரத்தை—எய்தினன்-அடைந்தான்—(எ-று) (கருத்து) நளன் தமயந்தியைக் காண வாசையால் குண்டினபுரத்தையடைந்தான்,எ-ம். (௬௰)

உருகுதங்கொழுநர்பாலூடிநீத்தநல் - *
விரைகமழ்தெரியலும்மின்செயாரமும் - *
குருமணிக்கலன்களுங்குலவுவீதிவா - *
யெரிமணிப்பூணினனிடறியேகினன். - *

(இ-ள்) உரிய-உரிமையையுடைய—தம்- தம்முடைய—கொழுநர்பால்-கணவரிடத்து—ஊடி-பிணங்கி—நீத்த-நீக்கிய—நல்- நல்ல—விரை-வாசனை—கமழ் வீசுகின்ற—தெரியலும்-மாலையும்—மின்செய்-பிரகாசத்தைச்செய்கின்ற--ஆரமும்- பதக்கமும்—குரு-நிறம்பொருந்திய—மணிக்கலன்களும்-ரத்தினாபரணமும்--குலவு பிரகாசிக்கின்ற -வீதிவாய்-வீதியினிடத்தில்--எரி-ஒளிபொருந்திய--மணி-மணிகள்பதித்த--பூணினன்- ஆபரணத்தையுடையநளமஹாராஜன்--இடறி-காலினாலிடறிக்கொண்டு--ஏகினன்-போனான்(எ-று)

(கருத்து) நளன்பூமாலை இரத்தினுபாணமிவற்றைஇடறிநடந்தான் என்பதாம். (௪௧)

மனங்கவர்வனப்பமைவடிவினன்றியுங் - *
கனம்பயிலவாயிலோர்காண்குறுவகை - *
சினங்கொள்கூரிலையவேற்செம்மல்போதலா - *
லநங்கனென்றுரைப்பதற்கையமில்லையே. - *

(இ-ள்) மனம்-மனதை—கவர்-கவர்ந்துகொள்ளுகின்ற—வனப்பு-அழகு—அமை-அமைந்த--வடிவின்-வடிவினாலும்—அன்றியும்-அல்லாமலும்--கனம்-மேகங்கள்--பயில்-சஞ்சரிக்கின்ற--வாயிலோர்-வழியிலிருக்குங்காவலாளர்கள்--காண்குறுவகை-காணுகவிதம்—சினங்கொள்-கோபங்கொண்ட--கூர்-கூர்மைபொருந்திய—இலைய-இலையையுடைய, வேல்-வேற்படையேந்திய--செம்மல்-நளமஹாராஜன்—போதலால்-செல்கின்றபடியால்—அநங்கனென்று-அருவத்தையுடையவனாகியமன்மதனென்று—உரைப்பதற்கு-சொல்வதற்கு--ஐயம்-சந்தேகம்--இல்லை-இல்லை—(எ-று) இது தற்குறிப்பணி (கருத்து) நளன் அருபமாய்ச்செல்லுதலால்மன்மதனென்றுசொல்லுவதற்குச்சந்தேகமில்லை, எ-ம். (௪௨)

கண்ணகன்மணிக்கடைக்காவலாளர்தா - *
நண்ணினரெவரெனவெவரைநாடினுந் - *
தண்ணறுந்தெரியலான்றன்னையாமென - *
வெண்ணிவெம்மடங்கலினெருத்தங்கோட்டுமால்.

(இ-ள்) கண்ணகல்-இடமகன்ற—மணி அழகிய—கடை-வாயிலிலிருக்கின்ற—காவலாளர்தாம்-காவல்செய்வோர்--நண்ணினர்-வந்தவர்கள்--எவரென-யாவரென்று- எவரைநாடினும்- யாரைநாடிப்பார்க்கினும்--தண்-தண்ணிய--நறும்-பரிமளம்பொருந்திய—தெரியலான் - மாலையையுடையவனாகிய நளமஹாராஜன்—தன்னையாமென-தன்னையாருமென்று--எண்ணி-நினைத்து--வெம்-வெவ்விய--மடங்கலின்-சிங்கத்தைப்போல—எருத்தங்கோட்டும்- திருப்பிப்பார்ப்பான்—(எ-று) (கருத்து) வாயில்காப்பார்யார்யாரென- நளன்தன்னையென்று திரும்பிப்பார்ப்பான், எ-ம். (௪௩)

மலர்பயில்வாவிதோய்மாதர்நுண்டுகி - *
லலைபுனனனைதலுமல்குறோன்றலாற் - *
கலைவலான்கண்முகிழ்த்தேகக்காண்குறூண் *
முலைமுகடழுந்துறவொருத்திமுட்டினாள். - *

(இ-ள்) மலர்பயில்- மலர்கள்நெருங்கிய—வாவி - தடாகத்தில்—தோய்-முழுகிய—மாதர்-மடவாருடைய—நுண்-நுண்ணிய—துகி

ல்-ஆடையானது—அலை-அலைவீசுகின்ற—புனல்- நீரிலே—நனைதலும்-நனைந்தவளவில்—அல்குல்- நிதம்பமானது—தோன்றலால்-தெரிதலால்—கலைவலான்-அறநூலில்வல்லவனாகிய நளமஹாராஜன்—கண்முகிழ்த்தேக-கண்களைமூடிக்கொண்டுபோக — காண்குழலீ-காணாளாகி—முலை-தனங்களினுடைய—முகடு-உச்சி — அழுந்தற-அழுந்தும்படி—ஒருத்தி - எதிர்ப்பட்டவொருமங்கை—முட்டினாள்-முட்டினாள்.— எ-று) (கருத்து) நளன்வாவியிலாடுமாதரல்குலைக்கண்டு கண்மூடிச்செல்லுதலால எதிரில்வருமொருத்திமுலைமுகடழுந்தமுட்டினாள் என்பதாம். (௪௪)

காமுறுமொருத்திதன்வதனங்கண்டகண்... ... *
கோமகன்முகிழ்த்தலாற்கோதைமார்முக ... ...*
மாமதியென்பதுமன்னன்செய்யகண்............*
§டாமரையென்பதுந்தக்கவாயவே................*

(இ-ள்) காமுறும்-விரும்புதற்குரிய—ஒருத்தி- ஒருமங்கையினுடைய,வதனம்-முகத்தை—கண்டகண-பார்த்தகண்களை—கோமகன்-நளமஹாராஜன்—முகிழ்த்தலால்- மூடிக்கொள்ளுதலால்—கோதைமார்முகம்-மாதருடையமுகம்—மா-பெரிய--மதியென்பதும்-சந்திரனென்றுசொல்வதும்—மன்னன் - இந்தநளமஹாராஜனின் செய்ய-சிவந்த--கண்-கண்கள்—தாமரையென்பதும்- தாமரைமலரென்றுசொல்வதும்--தக்கவாய-தகுதியாயின--(எ-று) § குவலயாநந்தம்-ஒருமொழிதொடர்மொழிபொதுமொழியெனவரு - மிருதிணைப்பொருட்பெயர்க்கிடுகுறியாமே-இவ்விதியால்தாமரை 'என்றது பொதுமொழிஇடுகுறி-(கருத்து) நளன் ஒருபெண்முகத்தைக் கண்ட கண்களைமூடலால் பெண்கள்முகஞ்சந்திரனென்பதும் நளன்கண்கள் தாமரையென்பதுஞ் சரியே என்பதாம். (௪௫)

செய்யகண்முகிழ்த்திடல்விழித்தறீதெனா..... *
வையனுங்கடைக்கணானோக்கவன்பிதென்... ...*
றெய்யும்வேள்கணைமலரிதயமோர்ந்துமால் ... *
பொய்யெனவருச்சனைபுரிதல்போன்றதே... ...*

(இ-ள்) செய்ய-சிவந்த—கண்-கண்களை—முகிழ்த்திடல்- மூடிக்கொள்வதும்—விழித்தல்-விழிப்பதும்--தீதெனா- குற்றமென்று நினைத்து—ஐயனும்- நளமஹாராஜனும்—கடைக்கணானோக்க- கடைகண்ணாலேபார்க்க — அன்பிதென்று - இது ஆசையினாலே பார்ப்பதென்று—எய்யும்-பிரயோகஞ்செய்கின்ற—வேள் - மன்மதனுடைய—கணைமலர்-பாணமலர்கள்—இதயம்- கருத்தை—ஓர்ந்து-அறிந்து—மால்- மயக்கமானது—பொய்யென - பொய்யென்

று—அருச்சனை-பூசை—புரிதல்போன்றது - செய்வதுபோலுமா யிற்று—(எ-று.)[கருத்து]நளன்கடைக்கண்ணாற்பார்க்க அன்பான பார்வையென்றுமன்மதனறிந்துபாணந்தொடுக்க அப்பாணம்அரு ச்சனைசெய்தமலருக் கொப்பாயிற்று என்பதாம். (௬௬)

தெரிவையென்றுருவெளியோடுசெப்பிய... ...*
வரசனதுரையசரீரியாமெனா ...................*
வெருவியமாதர்சொற்கேட்டுவெள்குறா..........*
வுருவெளியிதுவெனவுள்ளந்தேறினான்... .......*

(இ-ள்) தெரிவையென்று-தமயந்தியென்று—உருவெளியோடு உருவெளித்தோற்றத்துடனே—செப்பிய - சொல்லிய—அரசனது நளமஹாராஜனது—உரை-சொல்லை—அசரீரியாமெனா - அசரீரி வாக்கென்று—வெருவிய - பயந்த—மாதர்- மாதருடைய—சொற் கேட்டு-சொல்லைக்கேட்டு—(அந்நளனானவன்)வெள்குறா- நாணி— உருவெளியிதுவென- உருவெளித்தோற்றமிதுவென்று—உள்ளம்- மனம்—தேறினான்-தெளிவையடைந்தான்—(எ-று) (கருத்து)உரு வெளியொடு சொல்லிய நளன்சொல்லை மாதர் அசரீரிவாக்கென்று சொல்ல நளன்தெளிவடைந்தான் என்பதாம். (௬௭)

விழைவெனும்பாகெறிந்தமரர்விஞ்சையாந் - *
தழைமுகபடாத்தமைதறுகண்வாரணங் - *
கழைமதனியற்றியகருங்கண்மங்கைய - *
ரழகெனும்படுகுழியாழ்ந்ததில்லையால் - - *

(இ-ள்) விழைவெனும்-ஆசையென்கின்ற—பாகு - பாகனை— எறிந்து-தள்ளி—அமரர்-தேவர்களுடைய—விஞ்சையாம் - மந்தி ரமாகிய—தழை-தழைந்த—முகபடாத்து - முகப்போர்வையினா லே—அமை - பொருந்திய—தறுகண் -அஞ்சாமையையுற்ற—வா ரணம்-யானையானது—கழைமதன் - கருப்புவில்லேந்தியமன்மத ன்—இயற்றிய-செய்த—கருங்கண் - கரியகண்களையுடைய—மங் கையர்-மாதரது—அழகெனும்- அழகென்றுசொல்லும்—படுகுழி பள்ளத்தில்—ஆழ்ந்ததில்லை-அழுந்தியதில்லை—(எ-று) ஆல் - அசை (கருத்து)நளனென்னும்யானைமாதரழகென்னும்படுகுழியில் வீழ் ந்ததில்லை என்பதாம். (௬௮)

அங்கலுழ்மேனிய ஓவணங்கைநாடொறு - *
மெங்கணுங்காண்குறுமயக்கம்மனைய - - *
பங்கயவாண்முகப்பாவைமாரையும் - - *
மங்கையென்றெண்ணுறுமயக்கந்தீர்த்ததே - *

(இ-ள்) அம்-அழகானது—கலுழ்-ஒழுகுகின்ற—மேனிய- மே

ளியையுடைய—அணங்கை-தமயந்தியை—நாடொறும்- எந்நாளு
ம்—எங்கணும்-எவ்விடத்திலும்—காண்குறும் - உருவெளித்தோற்
றமாகக்காணுகின்ற—மயக்கம்-மயக்கமானது—எனைய - மற்றை
ய—பங்கயம் - தாமரைமலர்போன்ற—வாள் - ஒளிபொருந்திய—
முகம்-முகமுள்ள—பாவைமார-மகளிரை—அம்மங்கையென்று-
அந்தத்தமயந்தியென்று—எண்ணுறும் - நினைக்கின்ற—மயக்கம்-
மயக்கத்தை—தீர்த்தது - நீக்கியது—(எ-று) அழகுமிகுதிபற்றிக்
கூறெனப்பட்டது.[§அகத்தியம்.எவ்வொற்றிகரமுகரமைகாரம்,
பெண்பால்விதிபிறங்குமென்க, இவ்விதியால் அணங்கு உகரவீற்
றுப்பெண்பாற்சொல்.] (கருத்து) நளனுக்குத்தமயந்தியென்கிற
மயக்கமற்றது என்பதாம். (ருக)

கணங்குழைமுகத்தியர்கதிர்த்துவிம்மிய............ *
சுணங்கவிரிளமுலைச்சுவடுதாக்கிய.................. *
மணிந்தகுங்குமமெழிலகலமூழ்கிய..................... *
மணந்தனர்போன்றனன்மன்னரேறனு.................. *

இ-ள்) மன்னர்-அரசர்களுக்கு—ஏறனு-ஆண்சிங்கத்தையொ
த்தநளன்—கணம்-கூட்டமாகியமணிபதித்த—குழை- குண்டலந்
தரித்த—முகத்தியர் - முகத்தையுடையவராகியமாதர் —கதிர்த்து-
காந்திபொருந்தி—விம்மிய - பருத்த—சுணங்கு- தேமலானது—
அவிர்-பிரகாசியாநின்ற—இளமுலை - இளமைபொருந்தியதனங்க
ளுடைய—சுவடு-தழும்புகள்—தாக்கியும்-மோதப்பெற்றும்—அ
ணிந்த-தரித்த—குங்குமம்-குங்குமக்குழம்புகள்—எழில்- அழகிய
—அகலம்-மார்பினிடத்து—மூழ்கியும்- மூழ்கப்பெற்றும்—மண
ந்தனர்-கூடினவர்களை--போன்றனன்-ஒத்தனன்--(எ-று) (கருத்து)
நளன்மார்பில்மாதர்தனங்களழுந்தப்பெற்றும்குங்குமமூழ்கப்பெ
ற்றும்புணர்ந்தவனை ஒப்பாயினன் என்பதாம். (ருய)

விளங்கிழையொருத்திபேரணியில்வேந்தெழில்.........*
றுளங்கலுமதிசயந்தோன்றநோக்கினாள்... ....... *
வளங்கெழுபுகழினன்மறையக்காண்கிலா............... *
ளுளம்புகுந்தொளித்தகவ்வுருவென்றெண்ணினாள் ... *

(இ-ள்) விளங்கு-பிரகாசியாநின்ற--இழை- ஆபரணத்தையணிந்
த—ஒருத்தி-ஒருமாதானவள்—பேர்-பெரிய--அணியில்- தன்னுபர
ணத்தில--வேந்து-அரசனுடைய--எழில்- அழகானது—துளங்கலு
ம்-பிரகாசித்தலும்--அதிசயம்-ஆச்சரியம்—தோன்ற- உண்டாக--
நோக்கினாள்-பார்த்தாள்--வளங்கெழு-வளம்பொருந்திய—புகழினு
ன்-கீர்த்தியையுற்றநளன்--மறைய - மறைந்துபோக—காண்கிலா

ள்-காணுதவளாகி—உளம்-மனத்தினிடத்து—புகுந்து- நுழைந்து—ஒளித்தது-ஒளித்துக்கொண்டது—அவ்வுருவென்று- அவ்வடிவமென்று—எண்ணினாள் - நினைத்தாள்—(எ-று) (கருத்து) ஒருத்தி தன்னுடைய ஆரணத்தில் நளன்வடிவு தோன்றப்பார்த்தாள் நளன்மறைய அவ்வடிவுதன்னுளத்துட் புகுந்ததென் றெண்ணினாள் என்பதாம்.

வாட்டிறன்மன்னவன்வனிதைபேரெழி.............. *
நீட்டியொண்கதிருமிழ்செய்யவார்வடஞ்............ *
சூட்டினனகலவிவ்வுருவுதோன்றயார்............... *
கோட்டினரொனச்சிலர்குறிப்பிணுடுவார்.............. *

(இ-ள்) வாள்-வாளாயுதத்திலே—திறல்- வல்லமைபெற்ற—மன்னவன்-நளமஹாராஜனானவன்—வனிதை - தமயந்தியினது—பேர்-பெரிய—எழில்-அழகை—நீட்டி-எழுதி—ஒள் ஒள்ளிய—கதிர்-கிரணங்களை—உமிழ்-உமிழ்கின்ற—செய்ய சிவந்த—வார்-நெடிய—வடம் ரத்நமாலைகளை—சூட்டினன்-தரித்தனனாகி—அகல-நீங்க—இவ்வுருவுதோன்ற-இந்தவடிவந்தெரிய—யார் - எவர்கள்—கோட்டினரொன-செய்காரொன்று—சிலர்-சிலர்கள்—குறிப்பின் - குறிப்பினாலே—நாடுவார் - தேடுவார்கள்—(எ-று (கருத்து) நளன் தமயந்தி வடிவத்தையெழுதி அரதனாபரணஞ் சூட்டிப்போக வடிவத்தையாரெழுதினரொன்று சிலர்தேடுவார்கள், எ-ம். (௫௨)

பூந்துகள்செறிந்தகோமறுகிற்போகிய.............. *
வேந்தருளழுந்துமவ்விடங்களேணுக்குறு .............. *
மாந்தளிர்மேனியர்வையங்காவல்செய்.............. *
வேந்தர்தாளிலக்கணமேயதென்னென்பார் ...... .. *

(இ-ள்) பூந்துகள்-மகரந்தப்பொடிகள்—செறிந்த - நெருங்கிய—கோமறுகில்-அரசவீதியில்—போகிய சென்ற—ஏந்தல்- நளமஹாராஜனின்—தாள்-பாதங்கள்—அழுந்தும்-அழுந்துகின்ற—அவ்விடங்கள்-அந்தவிடங்களை—நோக்குறு - பார்த்து—மாந்தளிர்-மாந்தளிர்போன்ற—மேனியர் - வடிவத்தையுடையமங்கையர்—வையம்-உலகத்தை—காதல்செய்-காத்தல்செய்கின்ற—வேந்தர்-அரசரின்—தாள்-பாதங்களிலிருக்கும்—இலக்கணம்- இலக்கணங்கள்—மேயது - இவ்வடிச்சுவட்டிற்பொருந்தியது— என்னென்பார்-என்ன ஆச்சரியமென்பார்கள்—(எ-று) (கருத்து) மகரந்தநிறைந்த இராஜவீதியில் நளன் அடிவைத்தவிடத்தைமாதர்கள்கண்டு அரசர்களடிச்சுவடுபொருந்தியதென்னவென்பார்கள், எ-ம். (௫௩)

கள்ளவிழ்கோதையரொறிந்தகந்துகம்............... *
வள்ளன்மார்புற்றெதிர்மறிந்துவீழ்தலுந்............ *

கள்ளருமதிசயமெய்தித்தத்தமில்.............................*
வெள்ளிடைப்பட்டிவண்மீண்டதென்னென்பார்... *

(இ-ள்) கள்ளவிழ்-தேனொழுகுகின்ற—கோதையர்-மாலையைய ணிந்தமாதர்—எறிந்த-வீசிய—கந்துகம்-பந்துகள்—வள்ளல்-நளமஹாராஜனுடைய—மார்பு-மார்பினிடத்திலே—உற்று-பொருந்தி—எதிர்-எதிராக—மறிந்து-மறிபட்டு—வீழ்கலும்-வீழ்ந்தவளவில்—கள்ளரும்-தள்ளுதற்கரிய—அதிசயம்-ஆச்சரியத்தை—எய்தி-அடைந்து—தத்தமில்-தங்கள்தங்களுக்குள்ளே—வெள்ளிடைப்பட்டு-வெளியிடத்திற்பட்டு—இவண்-இவ்விடத்தில்—மீண்டது-திரும்பியது—என்னென்பார்-என்னவென்றுசொல்லுவார்கள்—(எ-று) [* தவலயாநந்தம். வினைச்சொல் லனைத்துங்காரியச் சொல்லே, இவ்விதியால்மீண்டதுகாரியம்.] (கருத்து) மாதர்களெறிந்த பந்துகள் நளன்மார்பில்பட்டெதிராகவிழுந்தமாத்திரத்தில் வெள்ளிதென்ன வாச்சரியமென்பார்கள் என்பதாம். (ருச)

எதிர்முகமாயிருந்திருவர்பைந்துணர்.........*
புதுமலர்தொடுத்தலுநடுவட்புக்கவன்.........*
கதுமெனவேகலுமறைப்பக்கன்னியர்.........*
மதிமயக்குறமுகமறைத்ததென்னென்பார்... *

(இ-ள்) எதிர்முகமாயிருந்து-அபிமுகமாகவிருந்து—இருவர்-இரண்டுபேர்—பைந்துணர்-பசியபூங்கொத்துக்களிலிருக்கின்ற—புதுமலர்-அன்றலர்ந்தமலரை—தொடுத்தலும்-கட்டலும்—நடுவண்-அவருக்கிடையில்—புக்கவன்-புகுந்தநளன்—கதுமென-விரைந்து—ஏகலும்-போனவளவில்—மறைப்ப-மறைக்க—கன்னியர்-அம்மாலைதொடுத்தமாதர்கள்—மதி-புத்தி—மயக்குற-மயக்கத்தைப்பொருந்த—முகமறைத்தது-முகத்தைமறைத்துவிட்டது—என்னென்பார்-என்னஆச்சரியமென்று சொல்லுவார்கள்—(எ-று) கருத்து)மாலைகட்டுமாதரிருவர்நடுவேநளன்போனவளவில் அம்மாதர்கள் முகத்தை மறைத்துவிட்டதென்ன வென்பார்கள் என்பதாம். (ருரு)

அண்ணறன்மார்பகத்தணிந்தபேரணி.................*
மண்ணியமணிவயின்வடிவுதோன்றலும்...........*
கண்ணுறநோக்குவாள்கன்னிமாரொடும்..............*
விண்ணிடையெனதுருவிளங்கலென்னென்பாள்......*

(இ-ள்) அண்ணறன்-நளமஹாராஜனுடைய—மார்பகத்து-மார்பினிடத்து—அணிந்த-தரித்த—பேர்-பெரிய—அணி-ஆபரணங்களிலுள்ள—மண்ணிய-தெளிந்த—மணிவயின்-மணியினிடத்தி

ல்—வடிவு-உருவமானது—தோன்றலும்- தெரிதலும்—கண்ணுற-கண்ணிணைப்பொருந்த—நோக்குவாள் - பார்ப்பாளாகிய—வொருத்தி- கன்னிமாரொடும்—மாதர்களுடன் - விண்ணிடை—ஆகாயத்தினிடத்து-எனது—எனதுவடிவம் - விளங்கல்—பிரகாசித்தல்-என்னென்பாள்—என்னஆச்சரியமென்று சொல்லுவாள்— எ-று.)
(கருத்து)நளனுபாயத்தில்ஒருத்திதன்வடிவுதோன்றியவளவில்என்வடிவுவெளியிற்றோன்றியதென்னென்பாள் என்பதாம். (௫௬)

வெற்பினெழில்கெடவிளங்குதோளினான்......*
பொற்பொளிர்பித்திகைப்புறத்திற்றோன்றலு...*
மற்புதமிதுவெனநோக்கியன்பினாற்..........*
கற்புடைமகளிருநிலைகலங்கினார்.............. *

(இ-ள்) வெற்பினது - மலையினது—எழில்- அழகு—கெட-கெடும்படி—விளங்கு - பிரகாசியாநின்ற—தோளினான் - தோளினையுடையநளமஹாராஜனது—பொற்பு-அழகானது— ஒளிர்- பிரகாசிக்கின்ற—பித்திகைப்புறத்தில்- சுவர்த்தலத்தினிடத்து—தோன்றலும்-தோன்றுதலும்—அற்புதமிதுவென- ஆச்சரியமிதுவென்று—நோக்கி- பார்த்து—அன்பினால் - ஆசையினால்—கற்புடைமகளிரும் - கற்புடையமாதர்களும்— நிலைகலங்கினார் - மயங்கினார்கள்—(எ-று) (கருத்து) நளன்வடிசுவரிற்றோன்றகற்புள்ளமாதரும் நிலைகலங்கினார்கள் என்பதாம். (௫௭)

இழைவளர்முலையினொருவனேர்பெறு...........*
நிழலிவணோக்கினெனவுநீளிடை.................*
மொழிவனகேட்டனெனவுமொய்ம்புறத்.........*
தழுவினனென்னவுந்தம்மிற்கூறுவார்................*

(இ-ள்) இழை - ஆபரணத்தோடுகூடி—வளர் - வளர்கின்ற—முலையினார்- முலையையுள்ளமாதர்கள்—ஒருவன் - ஒருஆண்மகனுடைய—ஏர்பெறு-அழகைப்பெற்ற—நிழல்-நிழலை—இவண் - இவ்விடத்தில்—நோக்கினெனவும்-பார்த்தேனென்றும்—நீளிடை- இந்நீண்டவிடத்தில்—மொழிவன - பேசுவனவற்றை— கேட்டனெனவும்- கேட்டேனென்றும்—மொய்ம்புற - தோள்கள்பொருந்த—தழுவினனென்னவும்-தழுவினேனென்றும்—தம்மில்- தங்களுக்குள்ளே—கூறுவார்-பேசிக்கொள்ளுவார்கள். (எ-று)(கருத்து)மாதர்கள்ஒருவனிழலைக்கண்டேனென்றும் - ஒருவன்சொல்லைக்கேட்டேனென்றும்ஒருவனைத்தழுவினேனென்றும்சொல்லிக்கொள்வார்கள்.

இன்னிசையளிபயில்பொழிலினேர்தன்முன்...*
பொன்னவிர்முலைத்தடமயந்திபோதலு.........*

மன்னமுன்கூறியவற்றைநாண்முதல்......... *
மூன்றுமுருவெனமுன்னினனோ........ *

(இ-ள்) இன் - இனிய—இசை- இசையைப்பாடும்—அளி-வண்டுகள்—பயில்-சஞ்சரிக்கின்ற—பொழிலின் சோலையிடத்தில்--மந்தல்-நளமஹாராஜன்—முன் - தன்னெதிரே—பொன் - பொன்னையொத்த—அவிர்-பிரகாசியாநின்ற—முலை-முலையையுடைய—தமயந்தி-தமயந்தியானவள்—போதலும்-வருதலும்—அன்னம்-அன்னப்புள்ளானது--முன்கூறிய-முன்சொல்லிய—அற்றைநாண்முதல்-அன்றையநாண்முதலாக—மூன்றும்- எதிரேதோன்றுகிற--உருவென-உருவெளித்தோற்றமென்று—முன்னினன்-நினைத்தான்--(எ-று) ஆரோ-அசை.(கருத்து) சோலையில்நளன்முன்னே தமயந்தி வருதலும்அவனுருவெளியென்றெண்ணினன் என்பதாம். (௫௧)

மடவாளுருவெளிமன்னன்றோண்மிசை............... *
யிடையறாவிழைவுடனென்றுஞ்சூட்டல்போன்...... *
மிடைமலர்ப்பூந்தொடைசூட்டமேவிய.... ......... *
சுடரிலைவேலினன்றோளில்வீழ்ந்ததே.............. *

(இ-ள்)மடவால்-தமயந்தியானவள்—உருவெளி-உருவெளியாய்த்தோன்றிய—மன்னன் - நளமஹாராஜனுடைய—தோண்மிசை-தோளின்மேல்—இடையறா-இடைவிடாத—விழைவுடன் - ஆசையுடனே—என்றும்-என்றைக்கும்—சூட்டல்போல - சூட்டுதல்போல—மிடை-நெருங்கிய—மலர்-மலராற்றொடுத்த—பூந்தொடை-பூமாலையை—சூட்ட-தரிக்க—மேவிய-அங்கிருக்கின்ற—சுடர் - காந்திபொருந்திய— இலைவேலினன் - இலைபோன்ற வேற்படையுள்ள நளமஹாராஜன்—தோளில் புயங்களில்—வீழ்ந்தது - விழுந்தது—(எ-று) (கருத்து)தமயந்தியானவள்உருவெளித்தோற்றமென்று மாலைசூட அம்மாலைநளனுடைய தோளில்விழுந்தது என்பதாம்.

உருவெளியாகயான்கண்டவொண்ணுதல்... ... ..*
மருமலர்மாலிகைவனைந்ததென்னென.................*
வரசனுமெண்ணினனவளுஞ்சூட்டிய ... ... .......*
தெரியல்காண்கில்லெனதெருமந்தளாரோ... .......*

(இ-ள்) உருவெளியாக-உருவெளித்தோற்றமாக—யான்கண்ட-என்னாற்காணப்பட்ட—ஒண்ணுதல்-ஒள்ளியநெற்றியையுடையதமயந்தியானவள்—மருமலர்மாலிகை - வாசனைபொருந்தியபூமாலையை—வனைந்ததென்னென-சூட்டியதென்னகாரணமென்று—அரசனும்-நளமஹாராஜனும்—எண்ணினன்-நினைத்தான்—அவளும்-அத்தமயந்தியும்—சூட்டிய-தரித்த—தெரியல்-மாலையை — காண்

கிலெனன-கண்டிலேனென்று—தெருமந்தாள்-மனஞ்சுழன்றாள்—
(எ-று) (கருத்து) உருவெளியாகக் காணப்பட்ட தமயந்தி மாலை
சூடிய தென்னவென்று நளனெண்ணினான் தமயந்தியு மாலையைக்
காணேனென்றுமயங்கினாள் என்பதாம். (௬௧)

முருகவிழ் தழைகுழலினாளையுமூன்றுறு.................. *
முருவெளியெனவிறையுவந்துபுல்லினா.................. *
னரிவையுமன்னவாறெண்ணியாங்கெதிர்.................. *
* புரவலன்மார்புறப்புல்லினாளரோ.................. *

(இ-ள்) முருகவிழ்-வாசனைவீசுகின்ற—குழலினாளையும்-கூந்தலையுடையதமயந்தியையும்—முன்னுறும்-முன்னேதோன்றுகின்ற—உருவெளியென-உருவெளித்தோற்றமென்று—இறை-நளமஹாராஜன்—உவந்து-மகிழ்ச்சியையடைந்து—புல்லினான்-தழுவினான்—அரிவையும்-தமயந்தியும்—அன்னவாறு-அந்தப்பிரகாரம்—எண்ணி-நினைத்து—ஆங்கு-அவ்விடத்திலே—எதிர்-எதிரேவந்த—புரவலன்-அரசனது—மார்புற-மார்புபொருந்த—புல்லினாள்-தழுவினாள்—(எ-று.)[*குவலயாநந்தம்! பெயர்ச்சொல்லைத்துங் காரணச்சொல்லே. இவ்விதியால் புரவலன்காரணச்சொல்,] (கருத்து) நளன் உருவெளித்தோற்றமென்று தமயந்தியைப்புணர்ந்தான் தமயந்தியு மப்படியேநினைத்து நளனைப்புணர்ந்தாள் என்பதாம்.

சொல்லருமின்பமீதூரத்தோன்றலும்.................. *
புல்லுவிட்டவ்வுருப்பொலிவுநோக்கினான்.................. *
மெல்லியலவ்வுருவிழியிற்காண்குறு.................. *
தல்லலுற்றணிவளையங்கைநீக்கினாள்.................. *

(இ-ள்) சொல்லரும்-சொல்லுதற்கரிய—இன்பம்-இன்பமானது—மீதூர-அதிகரிக்க—தோன்றலும்-நளனும்—புல்லுவிட்டு-தழுவுதலைநீக்கி—அவ்வுரு-அந்தவடிவினுடைய—பொலிவு-காந்தியை—நோக்கினான்-பார்த்தான்—மெல்லியல்-தமயந்தியானவள்—அவ்வுரு-அந்தவடிவத்தை—விழியில்-கண்ணினால்—காண்குறுது-காணாதவளாகி—அல்லலுற்று-பயத்தையடைந்து—அணிவளை-அழகியவளையலையணிந்த—அங்கை-அழகியகையை—நீக்கினாள்-விடுத்தாள்—(எ-று.) [கருத்து] நளன், இன்பந்தோன்றப்புணர்ந்துதமயந்திவடிவத்தைப்பார்த்தான், தமயந்தி அவ்வடிவத்தைக் காணாது கையை விட்டாள், எ-ம். (௬௨)

பொன்னடிப்பூஞ்சிலம்பொலிப்பமேகலை.................. *
யின்னரிக்கிண்கிணியிகலியார்ப்பெழ.................. *

மின்னடைகற்பதுபோன்றுமெல்லெனத்..............*
தன்னமர்கோயிலுட்டையலெய்தினாள்...............*

(இ-ள்) பொன்-பொன்னினாற்செய்த--அடிப்பூஞ்சிலம்பு-பாதத்திலணிந்த அழகியசிலம்புகள்--ஒலிப்ப-ஒலித்தலைச்செய்ய---மேகலை-மேகலையிலிருக்கின்ற--இன்-இனிய--அரி-பருக்கைக்கல்லையுடைய--கிணகிணி-சதங்கைகள்--இகலி-ஒன்றோடொன்றுதாக்கப்பட்டு--ஆர்ப்பெழ-ஒலியெழுப்ப- மின்-மின்னல்--நடைகற்பதுபோன்று-நடத்தலைக்கற்பதொத்து -மெல்லென-மிருதுவாக--தன -தனது--அமர்-அமர்கின்ற--கோயிலுள் கன்னிமாடத்தில்--தையல்-தமயந்தியானவள்--எய்தினாள்-அடைந்தாள்—(எ-று) (கருத்து)தமயந்திகன்னிமாடத்திற்சேர்ந்தாள்,எ-ம். (௬௪)

கருந்தடங்கண்ணியைக்கையிற்புல்லியும்........*
பொருந்தியவுருவெளியென்றுபோக்கிநல்......*
லருந்தனம்பெற்றிழந்தாரிலையனும்............*
வருந்திவெந்துயரொடுமதிமயங்கினான்........*

(இ-ள்) கரும்-கரிய--தடம் - விசாலம்பொருந்திய--கண்ணியை கண்களையுடையதமயந்தியை--கையிற்புல்லியும் - கையினாலேதழுவியும்--பொருந்திய-பொருந்தப்பெற்ற--உருவெளியென்று- உருவெளித்தோற்றமென்று--போக்கி-விட்டு--நல் - நல்ல—அருந்தனம்-அரியதிரவியத்தை--பெற்று எளிதிற்பெற்று--இழந்தாரில- இழந்தவர்களைப்போல்--ஐயனும்-நளமஹாராஜனும்---வருந்தி - வருந்தமடைந்து—வெந்துயரொடு- வெவ்வியதுன்பத்துடன்---மதிமயங்கினான் -புத்திமயங்கினான் --(எ-று) (கருத்து) நளன்கைப்பொருளிழந்தவர்கள்போலத் தமயந்தியைப்புணர்ந்து துன்புற்றுமயங்கினான் என்பதாம். (௬௫)

பாணிகர்வண்டினம்பாடுஞ்சோலையுஞ் ..............*
சேணுறநிவந்தசெய்குன்றுந்தேடியும் ..... ... .......*
காணலனாகியகளிநல்யானையான்................. ......*
மாணிழையுறைதருமாடமெய்தினான் . ... - .. ...*

(இ-ள்) பாண்-இசைப்பாட்டுக்கு—நிகர்-நிகராக---வண்டினம் வண்டுக்கூட்டங்கள்--பாடும்-பாடுகின்ற--சோலையும்-சோலையிடத்திலும்—சேண்-ஆகாயத்தில்—உற- பொருந்த—நிவந்த-உயர்ந்த—செய்குன்றும்-கட்டுமலையினிடத்திலும் —தேடியும்-தேடுதல்செய்தும்—காணலனாகிய-காணாதவனாகிய—களிநல்யானையான் - நளமஹாராஜாவானவன்--மாணிழை தமயந்தி--உறைதரும்- வசிக்கின்ற —மாடம்-கன்னிமாடத்தை—எய்தினான்-அடைந்தான் —(எ-று) (கருத்து)நளன் தமயந்திகன்னிமாடத்திற்சேர்ந்தான் என்பதாம்.

மின்னிடையரம்பையர் குழாத்துண்மேவிய... *
வன்னமென்னடையயிராணியாமென...... ... *
நன்றுதன்மடந்தையர் நாப்பணின்னகைக்..... *
கன்னிவீற்றிருத்தல்கண்களிப்ப நோக்கினான் ... *

(இ-ள்) மின் மின்னலையொத்த--இடை-இடையையுடைய--அரம்பையர் குழாத்துள்-தெய்வமாதர்கள் கூட்டத்துள்--மேவிய-பொருந்தி--அன்னம்-அன்னநடைபோன்ற--மெல்-மெல்லிய--நடை - நடையையுடைய--அயிராணியாமென- இந்திராணியாமென்றுசொல்லும்படி--நல்-நல்ல--நுதல்-புருவத்தையுற்ற--மடந்தையர்-மாதர்களது--நாப்பண்-நடுவே--இன்-இனிய--நகை-புன்சிரிப்பையுடைய--கன்னி-தமயந்தியானவள்--வீற்றிருத்தல்-வீறுடனிருத்தலை--கண்களிப்ப-கண்களிக்க--நோக்கினான் - பார்த்தான்--(எ-று) அயிராணியாமெனவென்றமையால்-உவமையணி. (கருத்து) நளன் தமயந்தியைக்கண்டான் என்பதாம். (சுஎ)

மண்டமர்கடந்தவேனளன்வந்தானெனத்...... ....... *
தொண்டைவாய்மடந்தையர் நாளுஞ்சொல்வன... ... *
பண்டருமொழிக்கிளியயின்றுகூறலுங்.............. *
கண்டதோவிஃதெனக்காளையெண்ணினான்... ... ... *

(இ-ள்) மண்டு-நெருங்கிய--அமர்-போரை--கடந்த-வென்ற--வேல-வேற்படையையுள்ள--நளன்வந்தானென-நளமஹாராஜன்வந்தானென்று--தொண்டைவாய்- கொவ்வைக்கனிபோன்றவாயையுடைய--மடந்தையர்-மாதர்கள்--நாளும்-நாடோறும்--சொல்வன-சொல்வனவற்றை--பண்டரும்-இசையைத்தருகின்ற--கிளி-கிளிப்பிள்ளை--பயின்று-பழகி--கூறலும்-சொன்னயளவில--இஃது- இந்தக்கிளிப்பிள்ளை--கண்டதோவென-பார்த்ததோவென்று--காளை-நளமஹாராஜன்--எண்ணினான்-நினைத்தான் (எ-று) * (கருத்து) கிளிவழக்கமாக நளன்வந்தானென்றுசொல்லநளன் இதுகன்னையறிந்ததென்றுசந்தேகித்தானென்பதாம் ) * அகத்தியம் [☞பொருளன்னநல்லோர்புகல்வதுகருத்துஅதுவே தொகைவகைபாகுமெனக், பின்னட்பொருளாய்ப்பேசுவதேதொகை,கற்றோர்க்கினிதாகக் காட்டுவதேவகை என்பதாம். (சுஅ)

ஒருத்தியானளனெனவிருப்பவுள் ளுறும்... ... *
விருப்பினாலொருத்தியானவிமன்மாதென ... *
மருக்கமழ்பூந்தொடைசூட்டமன்னவன்... ...*
பொருப்புறழ்தடம்புயம்புளகம்பூத்தவே. .. *

(இ-ள்) உள்ளூறும்-உள்ளேயிருக்கின்ற--விருப்பினால்-ஆசையினால்—யானளனென-நானளமஹாராஜனென்று—ஒருத்தியிருப்ப-ஒருமங்கையிருக்க--ஒருத்தி-ஒருமங்கையானவள்—யான்-நான்—வீமன்மாதென-தமயந்தியென்றுசொல்லி—மருக்கமழ் - வாசனைகமழ்கின்ற—பூந்தொடை-மலர்மாலையை—சூட்ட- தரிக்க—மன்னவன்-நளமஹாராஜனுடைய—பொருப்புறழ்- மலையையொத்த—தடம்-பருத்த—புயம்-தோள்களானவை—புளகம்பூத்த- மயிர்க்குச்செறிந்தன—(எ-று) (கருத்து) ஒருத்திநளனாகவும் மற்றொருத்திதமயந்தியாகவும்மாலைசூட்டக்கண்ட நளன்மகிழ்ந்தான்,எ-ம்.

மலர்ந்தசெந்தாமரைமென்மடலின்மேற்றனக்... *
இலங்கிழையுகிரினாலெழுதுபாசுர.............. *
நலம்பெறக்காண்டலுநண்ணலார்புக........ *
ழூலம்பொருதோளினானுவகையெய்தினான் ... *

(இ-ள்) மலர்ந்த - விரிந்த—செந்தாமரைமென்மடலின்மேல்-சிவந்ததாமரையினுடையமெல்லியவிதழின்மேல்—தனக்கு- தனக்கு, இலங்கிழை-தமயந்தியானவள்—உகிரினால்-நகத்தினாலே—எழுது-எழுதப்பட்ட—பாசுரம்-வசனங்களை—நலம்பெற - நன்மைபெற—காண்டலும்-பார்த்தவளவில்—நண்ணலார்-பகைவரால்—புகழ்-புகழப்பட்ட—உலம்-திரள்கல்லை—பொரு - ஒத்த—தோளினான்-தோள்களையுடையநளமஹாராஜன்—உவகை - சந்தோஷத்தை—எய்தினான்-அடைந்தான்—(எ-று) (கருத்து) தமயந்திதாமரைமடலிலே நகத்தினாலே நளன்றனக்கெழுதும் வசனங்களைப்பார்த்த வளவில் மகிழ்ச்சியடைந்தான்,எ-ம். (எய)

செழுமணிப்பித்திகைத்தலத்திற்றீதறு......... *
மழவிடையனையவன்வடிவந்தோன்றலும்...... *
கழையமைதோளினார்காளைபேரெழி ......... *
லெழுதியவுருவிலொன்றென்னவெண்ணினார்... *

(இ-ள்) செழுமணி-செழுமையுள்ளமணிகள்பதித்த—பித்திகைத்தலத்தில்-சுவர்த்தலத்தில்—தீதறு-குற்றமற்ற--மழ-இளமைபொருந்திய—விடையனையவன்-இடபத்தையொத்தநளமஹாராஜனின்—வடிவம்-உருவம்—தோன்றலும் - தெரிந்தவளவில்—கழை-மூங்கில்போல—அமை-பொருந்திய—தோளினார்-தோளையுடைய மாதர்கள்—காளை-நளமஹாராஜன—பேர்-பெரிய—எழில - அழகை—எழுதிய-தம்மாலெழுதப்பட்ட—உருவில்- வடிவத்தில்—ஒன்றென்ன - ஒருவடிவென்று—எண்ணினார்- நினைத்தார்கள்—(எ-று) (கருத்து)இரத்தினச்சுவரில்நளன்வடிவுதோன்றியவளவில் பெண்களெழுதியவுருவிலொன்றென் றெண்ணினார்கள்,எ-ம். (எக)

நாமவேல்வலனுயர்நளனுக்காங்கமர்............*
வாமமேகலையினர்நடுவண்வைகுவா.............*
டாமமார்குழற்றமயந்தியென்றவள்...........*
காமருபேரெழில்காட்டுகின்றதே................*

(இ-ள்) நாமம்- அச்சத்தைத்தருகின்ற—வேல்- வேற்படையால் —வலனுயர்-வெற்றியிருந்த—நளனுக்கு- நளமஹாராஜனுக்கு— ஆங்கு-அவ்விடத்தில்—அமர்-அமர்ந்த—வாமம் - அழகிய—மேகலையினர்-மேகலாபரணமுள்ள மகளிருடைய—நடுவண்-நடுவே— வைகுவாள்-இருப்பவள்—தாமம்-மாலைகள்--ஆர்-நிறைந்த—குழல் -கூந்தல்பொருந்திய— தமயந்தியென்ற-தமயந்தியென்னும்பெயரையுடையவளென்று—அவள் - அவளது—காமர் - ஒளியுள்ள— பேர்-பெரிய—எழில்-அழகானது—காட்டுகின்றது- காண்பிக்கின்றது—(எ-று)(கருத்து) அழகினால்தமயந்தியென் றறியப்பட்டது என்பதாம். (எஉ)

ஏதமில்குணத்தினனிணையனாகநுண்.................*
டாதவிழ்பூங்குழற்றையல்பாற்றம................*
தாதரம்பெருகியவமரரேவிய.......................*
தூதியர்செய்திறஞ்சொல்லுவாமரோ.............*

(இ-ள்) ஏதமில்-குற்றமற்ற—குணத்தினன்-குணத்தையுடையநளமஹாராஜன்—இனையனாக - இத்தன்மைபொருந்தியவனாக—நுண்-நுட்பமாகிய—தாது-மகரந்தப்பொடிகள்—அவிழ்- உதிர்கின்ற—பூ- மலரையணிந்த—குழல்- கூந்தலையுடைய—தையல்பால்-தமயந்தியிடத்தில்—தமது-தமது—ஆதரம்-ஆசையானது—பெருகிய-மிகுந்த—அமரர்-தேவர்களால்—ஏவிய - ஏவப்பட்ட—தூதியர்-தூதிகள்—செய்திறம்-செய்தவகையை—சொல்லுவாம் - சொல்லுவாம்—(எ-று)(அரோ-அசை) (கருத்து) நளனிப்படியிருக்கத் தேவர்கள்தமயந்தியிடத்துஏவப்பட்ட தூதிகள் செய்கையைச்சொல்லுவாம் என்பதாம் (எங)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

கானமரலங்கன்மாலைக்கடவுளர்விடுப்பவந்த.........*
பானலங்கடந்ததீஞ்சொற்பணைமுலைப்பாவைநல்லா...*
ரூனெலும்புருகிநெய்த்தோருமிழ்ந்துவெம்புலவுநாறு *
மானவேலவீமனின்றவனிதையையினிதுகண்டார்... *

(இ-ள்) கான்-வாசனை—அமர்-பொருந்திய—அலங்கல் - அசைகின்ற—மாலை-மாலையையுடைய—கடவுளர்- தேவர்களால—வி

ேப்ப-அனுப்பப்பட்டு—வந்த - வந்த—பால்-பாலினது—நலம்-ந
ன்மையை—கடந்த-வென்ற--நீ- நித்திப்புப்பொருந்திய— சொல்-
சொல்லையும்--பணை-பருத்த- முலை-முலையையுமுடைய—பாவைநல்
லார்-பாவைபோலிருக்கின்ற மாதர்—ஊனொடு-மாமிசத்துடன்
—பழகி-பழகுதல்செய்து—நேர்ந்தோருமிழ்ந்து - உதிரத்தையு
மிழ்ந்து—வெம்-வெம்மைபொருந்திய—பலவு புலானாற்றம்—நா
று-நாறுகின்ற—மான ஒப்பற்ற—வேல்-வேற்படைபெற்ற—வீம
னின்ற-வீமராஜன் பெற்ற—வனிதையை - தமயந்தியை—இனிது-
இனிதாக—கண்டார் கண்டார்கள்—(எ-று)(கருத்து) தேவர்கள்வி
டுக்கப்பட்டதூதிகள் தமயந்தியைக்கண்டார்கள், எ-ம். (எச)

பொருவருவனப்பின்மிக்கபுலோமசைமுதல்வராய... *
வரிவிழிகுமுதச்செவ்வாய்வானவர்மகளிர்தாமித், தெரி
யிழையின்செவ்விநோக்கிற்சேணிடைப்பொலிந்துதோன்
றுமிரவிமுன்மதியமாவதொன்றெனவுளத்தெண்ணினாரால். *

(இ-ள்) பொருவரு-ஒப்புச்சொல்லுதற்கரிய—வனப்பின்-அழகினாலே—மிக்க-மிகுந்த—புலோமசைமுதல்வராய இந்திராணிமுதலியராகிய—வரி-இரேகையுள்ள— விழி - கண்களையும்—குமுதச்செவ்வாய்-அல்லிமலர்போன்றசிவந்தவாயினையுமுடைய—வானவர்மகளிர்-தெய்வமாதர்—இத்தெரியிழை இந்த தமயந்தியினது—செவ்வி-அழகை—நோக்கில்-பார்த்தால்—சேணிடை - ஆகாயத்தினிடத்து—பொலிந்து-பிரகாசித்து—தோன்றும்-தோன்றுகின்ற—இரவிமுன்-சூரியன்முன்னே—மதியமாவதொன்று - சந்திரன்போலாவதொன்று—உளத்து-மனத்திலே—(தூதியர்)எண்ணினார்- சிந்தித்தார்கள்—(எ-று)(தாம்-ஆல்-அசைகள்.)[இத்தலையாநந்தம் உறுப்பியல்பழிவுநிறங்குணமலைவயவநடைநகை, பார்வைவசனமெனுமிருநான்கும்,பெண்பாலைவிமையணியும்புனைபொருள் இவ்விதியால் செவ்விபெண்பாற்புனைபொருள்.] (கருத்து) தமயந்தி அழகுக்கு முன்னே தேவமாதராகு சூரியன் முன்னே தோன்றும் சந்திரன் போலும் என்றெண்ணினார்கள் என்பதாம் (எரு)

எய்தியமகளிர்தம் மிலிமையவர்தலைவன்றூதி, யையரி
நெடுங்கட்செவ்வாயணங்கிற்குமணங்குபோல்வாய். *
கொய்துணர்த்தருவினீழற்கோமகன் பணியாற்போந்த
செய்திநீகேட்டியென்றுசீறடிவணங்கிச்சொல்வாள். *

(இ-ள்) எய்திய-அடைந்த—மகளிர்தம்மில்- தூதியர்நால்வருள்—இமையவர்தலைவன்-இந்திரனது—தூதி-தூதியானவள்—ஐ- அழகிய—அரி-இரேகைகளையுற்ற — நெடுங்கண் - நெடியகண்களையு

ம்—செவ்வாய்-சிவந்தவாயினையுமுடைய--அணங்கிற்கும்-தெய்வம் ங்கைக்கும்--அணங்குபோல்வாய் - தெய்வமாதையொத்த தமயந்தி யே--கொய்-கொய்கின்ற--தூணர்- பூங்கொத்துக்களுள்ள--தருவி னீழல்-ஐந்தருவினிழலிலிருக்கின்ற--கோமகன்- இந்திரனது--பணி யால் ஏவலினாலே- போந்த-வந்த--செய்தி - செய்தியை--நீகேட்டி யென்று- நீகேட்பாயாகவென்று--சீறடி-சிறியபாதங்களை--வணங் கி- வணங்குதல்செய்து--சொல்வாள் - சொல்வாள்---(எ-று) (கருத் து) இந்திரன் றூதியானவள் தமயந்தியைவணங்கிச் சொல்வாளாயி னாள்,எ-ம். (எசா)

இருவிசும்பொருகோலோச்சியேதிலர்க்கடந்துதேவர் *
பரவிநின்றிறைஞ்சநாளும்பனிமலர்த்தருவினீழ..... *
லரியணைப்புறத்துவைகுமண்ணலுக்கமிர்தமன்னாய்... *
யுருவிலாரொருவன்செய்யுமுறுபகைகாத்தல்வேண்டும்

(இ-ள்) இரு-பெரிய--விசும்பு-வானுலகை--ஒருகோலோச்சி- ஒ ருசெங்கோல்செலுத்தி--ஏதிலர்-சத்துருக்களை--கடந்து-வென்று-- தேவர்-தேவர்கள்--பரவிநின்று- துதிசெய்துநின்று--இறைஞ்ச-வ ணங்க- நாளும்-நாடோறும்--பனி- குளிர்ச்சிபொருந்திய--மலர்- மலரானிறைந்த--தருவினீழல்- ஐந்தருவினிழலில்--அரியணைப்புற த்து-சிங்காதனத்தினிடத்து--வைகும்-தங்கிய--அண்ணலுக்கு- இந் திரனுக்கு--அமிர்தமன்னாய் - அமிர்தத்துக்கொப்பானவளே--உரு விலான்-வடிவமில்லாதவனாகிய--ஒருவன்- மன்மதனானவன்---செய் யும்-செய்கின்ற--உறு-மிகுந்த--பகை-பகையைநீக்கி--காத்தல்வே ண்டும்- (நீ) காக்கவேண்டும்--(எ-று) (கருத்து) இந்திரனுக்கமிர் தம்போன்ற தமயந்தியே நீமன்மதபாணத்தை நீக்கிக்காக்கவேண் டுமென்றாள்,எ-ம். (எஎ)

எம்மிறையிளவற்காகவிருங்கடல்கடைந்துவாசச்-செம்
மலர்த்திருவையீந்ததேவர்வாசவற்குமின்னுங்- கைம்மல
ர்வருந்தவிக்குக்கடல்கடைந்துழலாவண்ணம்- பொம்ம
ல்வெம்முலையாயன்னோற்கின்னருள்புரிதல்வேண்டும். *

(இ-ள்) எம்மிறை-எங்களரசனது--இளவற்காக - உபேந்திரனுக் காக--இரும்-பெரிய--கடல்கடைந்து- பாற்கடலைக்கடைந்து--வாச ம்-வாசனைபொருந்திய--செம்மலர்த்திருவை - செந்தாமரைமலரிலி ருக்கின்றதிருமகளை--ஈந்த-தந்த--தேவர்- தேவதைகள்--வாசவற்கு ம்-இந்திரனுக்கும்--இன்னும்-இன்னமும்--கைம்மலர்வருந்த - கை களாகியமலர்கள்வருந்த--இக்குக்கடல்கடைந்து-கருப்பிரதக்கடலை க்கடைந்து--உழலாவண்ணம்-அலையாதவிதம்--பொம்மல்-பொலி

வினையுடைய--வெம்-விரும்பத்தக்கவாகிய--முலையாய்- முலைகளுள்ள தமயந்தியே--அன்னோற்கு-அவ்விந்திரனுக்கு--இன்னருள்- இனியவருளை, புரிதல்வேண்டும்-(நீ)செய்தல்வேண்டும்.(எ-று)(கருத்து) இந்திரனுக்கருள்செய்யவேண்டுமென்றாள், எ-ம். (௭௮)

மாயிருஞாலந்தன்னின்மகம்பலவியற்றிப்பெற்ற ... *
மீபுயர்பசும்பொனாட்டின்மேதகுசெல்வமெல்லா... *
ஏயினநின்பாலன்றோவிமையவர்க்கிறைவன்பானின் *
சேயரிக்கடைக்கணோக்கஞ்சிறிதருள்புரியின்மாதோ. *

(இ-ள்) மா-மகத்தாகிய--இரு-பெரிய--ஞாலந்தன்னின்-பூமியிலே--மகம்பலவியற்றி - நூறுவேள்விசெய்து--பெற்ற - பெற்றுக்கொண்ட--மீ-மேலாக--உயர்-உயர்ந்த--பசு- பசுமைபொருந்திய--பொன்னாட்டின்-பொன்னுலகத்தில்--மேதகு- மேன்மையுடைய--செல்வமெல்லாம்-பாக்கியமெல்லாம்--நின்பால்-உன்னிடத்து--ஏயினவன்றோ-பொருந்தியனவல்லவா-- இமையவர்க்கிறைவன்பால்-இந்திரனிடத்தில், நின்-உன்னுடைய, சேயரி-செவ்வரிபரந்த, கடைக்கணோக்கம்-கடைக்கண்பார்வையானது- சிறிது-கொஞ்சம், அருள்புரியின்-அருள்செய்தால்—(எ-று) கருத்து) உன்கடைக்கண்பார்வைசிறிதுஇந்திரனிடத்தில்வைத்தால்அவன்செல்வமெல்லாம்உனக்குடையவாம் என்றாள் தூதி, எ-ம். (௭௯)

* மண்ணினிற்சிறந்துவாழுமன்பதைத்தொகுதிதன்னி
லெண்ணிடிற்சிறந்தாரன்றோவியக்கரவ்வியக்கர்தம்மில்
விண்ணவர்சிறந்தாரன்றோவிண்ணவர்தமையுமாளு *
மண்ணலின்னேவல்கேட்பினதனினுஞ்சிறந்ததுண்டோ.

(இ-ள்) மண்ணினில்-பூவுலகத்தில்--சிறந்து- சிறப்பைப்பொருந்தி--வாழும்-வாழ்கின்ற, மன்பதைத்தொகுதிதன்னில்-மக்கட்கூட்டத்துக்குள்--எண்ணிடில்- நினைக்குமிடத்தில்--இயக்கர் - இயக்கரானவர்கள்--சிறந்தாரன்றோ-சிறந்தவர்களல்லவா--அவ்வியக்கர்தம்மில்-அந்தவியக்கருக்குள்ளே—விண்ணவர் - தேவர்கள்- சிறந்தாரன்றோ-சிறப்பைப்பொருந்தினவர்களல்லவா -- விண்ணவர்தமையுமாளும்-அத்தேவர்களையுமாட்சிசெய்கின்ற--அண்ணல்-இந்திரனானவன்--நின்னேவல்கேட்பின-உன்னுடைய ஏவற்றொழிலைக்கேட்பானாயின--அதனினும்-அதைக்காட்டிலும்--சிறந்தது - சிறப்புடையது--உண்டோ- ஒருபொருளுண்டோ இல்லை—(எ-று) குவலயாநந்தம்-உறுப்பியல்-௰௫-சூ- இம்மனைக்கிம்மனைவிசேடஞ்சித்திர-மிம்மணிக்கிம்மணிவிசேடஞ்சோதி- யெனவேவிளங்கும் விசேடத்தின்பொருள் - இவ்விதியால் - ஒன்றற்கொன்றுவிசேடமதிக. (கருத்து)

இந்திர னுனக்கேவல்செய்தால் இதிலுஞ்சிறந்ததில்லை யென்றாள், என்பதாம். (யஅ)

தாதொடுநறவுதூற்றுந்தருநிழலினிதுவைகு........ *
மேதகுநிதியிமானும்வேட்டனவுவந்துநல்க........ *
வேதமிலரம்பைமாதர்முறைமுறையேவல்கேட்ப .. *
நீதொழுமமரர்யாருநிற்றொழப்பணித்தியென்றாள்... *

(இ-ள்) தாதொடு-மகரந்தப்பொடியோடு--நறவு- தேனையும்-தூற்றும் - தூற்றுகின்ற--தருநிழல்- ஐந்தருநிழலில்--இனிது-இனிதாக---வைகும்-தங்கிய---மேதகு-மேன்மைபொருந்திய ---நிதியும்-சங்கநிதிபதுமநிதிகளும்--ஆனும்- காமதேனுவும்---வேட்டன-விரும்பியவைகளை--உவந்து-மகிழ்ந்து--நல்க-கொடுக்க-- ஏதமில்-குற்றமில்லாத---அரம்பைமாதர் - தெய்வமடவார்கள்--- முறைமுறை- வரிசைவரிசையாக---ஏவல்கேட்ப - ஏவற்றொழிலைக்கேட்க---நீதொழும்- நீவணங்குகின்ற---அமரர்யாரும் - தேவர்கள்யாரும்--நிற்றொழ-நின்னைவணங்க---பணித்தியென்றாள்- சொல்லென்றாள்--(எ-று)(கருத்து) நீ வணங்கப்படுந் தெய்வங்கள் உன்னை வணங்கச்செய்யென்றாள், எ-ம். (அக)

இனையனவுரைத்தலோடும்யாவர்தமுளமுந்தேரும்... *
பனியிருவிசும்பினிற்றேவர்பரவவீற்றிருக்கும்வேந்தென் *
மனநிலைபுணரான்போலுமழைமதர்நெடுங்கணல்லா *
யுனைவிரைந்திங்ஙன்றூதுவிடுத்ததென் னுரைத்தியென்று.

(இ-ள்) இனையன-இத்தன்மையவாகியசொற்களை -உரைத்தலோடும்-சொன்னமாத்திரத்தில்--யாவர்தம்-எவர்களுடைய-- உளமும்-மனமும்--தேரும் - தெரியாநின்ற--- பனி - குளிர்ச்சிபொருந்திய—இரு-பெரிய—விசும்பில்-தெய்வலோகத்திலிருக்கின்ற— தேவர்-தேவர்கள் —பரவ-வணங்க—வீற்றிருக்கும்- அரசிருக்கின்ற—வேந்து - இந்திரனானவன்---என்மனநிலை - என்மனத்தினிலைமையை--உணரான்போலும்- தெரியாதவன்போல--மழை - குளிர்ச்சிபொருந்திய---மதர்-மதர்த்த---நெடுங்கண் - நெடியகண்களையுடைய--- நல்லாய்-தூதியே---உனை-உன்னை--விரைந்து- சீக்கிரமாக---இங்ஙன் - இவ்விடத்தில்---தூதுவிடுத்தது-தூதாகவனுப்பியது--என் - யாது காரணமாக— உரைத்தியென்று- சொல்லென்று---(எ-று) அறியான்போலுமென்றமையால்தற்குறிப்பணி.(கருத்து) தமயந்தியானவள் தூதியே ! இந்திரனென்னுமனத்தையறியாதவன்போல உன்னை யென்னகாரணமாகத் தூதுவிட்டானென்றுசொல்லி,எ-ம். (அஉ)

என்னுளத்தென்றுநீங்காதிருப்பவனளனேயாகும், பொ
ன்னகர்க்கிறைவன்றன்பாற் பொருந்துதி யென்னுந்தூ
துக்கன்னவனிலையுங்கொல்லோவெனமறைந்தயலேநி
ற்கு, மன்னவன்மகிழ்ச்சிகூரமடவாலினிதுசொன்னாள்.

(இ-ள்) என்னுளத்து - என்னுடையமனத்தில் -- என்றும் - எந்நாளு
ம் — நீங்காதிருப்பன் - பிரியாமனிலைநிற்பவன் — நளனேயாகும் - ந
ளமஹாராஜனேயாகும் — பொன்னகர்க்கிறைவன்றன்பால - இந்திர
னிடத்து — பொருந்துதி - நீபொருந்தக்கடவாய் — என்னுந்தூதுக்
கு - என்றுசொல்லுந்தூதுக்கு — அன்னவன் - அந்தநளமஹாராஜ
ன் — இலையுங்கொல்லோவென - சம்மதிப்பானோவென்று — மறை
ந்து - ஒளித்து — அயலேநிற்கும் - பக்கத்திலேநிற்கின்ற — மன்னவ
ன் - அரசன் — மகிழ்ச்சிகூர - மகிழ்ச்சிமிக — மடவால் - தமயந்தி -- இ
னிது - இனிதாக — சொன்னாள் - சொல்லினாள் — (எ-று) (கருத்து)
என்னுள்ளத்திருப்பவனளனாகும், இந்திரனுக்கு பொருந்தென்னு
ந்தூதுக்கு நளனிசைவானோவென்றாள் எ-ம். (௮௩)

கோற்றொடிநளன்மேலுற்றகாதலைக்குறித்துநோக்கி. *
மாற்றுதலரிதென்றெண்ணிவாசவன்றூதியேக... ... *
வாற்றல்வாசவற்குநேராவணங்கெவர்க்கியையுமென்னு
ந், தேற்றமோடுரையார்மற்றைத்தேவர்தூதியரும்போனார்

இ-ள், கோற்றொடி - தமயந்தியானவள் — நளன்மேல் - நளனிடத்
தில் — உற்ற - வைத்த — காதலை - ஆசையை — குறித்துநோக்கி - குறி
த்துப்பார்த்து — மாற்றுதல் - அதனைநீக்குதல் — அரிதென்று - அரி
தாகுமென்று — எண்ணி - நினைத்து — வாசவன்றூதி - இந்திரனுடை
யதூதி — ஏக - தன்னிடத்துக்குச்செல்ல — ஆற்றல் - வலிமைபெற்ற
— வாசவற்கும் - இந்திரனுக்கும் — நேரா - உடன்படாத — அணங்கு
- தமயந்தி --- எவர்க்கு - யாவர்க்கு --- இயையுமென்னும் - சம்மதிப்பா
(ளொருவனுக்கும்சம்மதியா)ளென்கின்ற --- தேற்றமோடு - தெளிவு
டனே --- உரையார் - பேசாதவர்களாய் -- மற்றைத்தேவர்தூதியரும் -
மற்றைததேவர்கள்விடுத்ததூதிகளும் --- போனார் - சென்றார்கள் (எ-
று உம்மைஇறந்ததுதழீஇயவெச்சம்) (கருத்து) தமயந்திநளன்
மேல்வைத்த வாசையைக்கண்டு இந்திரன்றூதும்போக மற்றதூதியரு
ம்போனார்கள் என்பதாம். (௮௪)

தூதியரேகக்கண்டதோன்றல்செங்கமலக்கண்கள் ...*
மேகஞ்செல்வமிக்கவிதர்ப்பர்கோன்றவத்திற்றோன்று.
மாதர்மென்றேக்கிளுடன்வடிவினிலழுந்திப்பின்னு. .*
மாதரம்பெருகியின்பவாரியிலாழ்ந்தவன்றே... ......*

(இ-ள்) தூதியர்-தேவர்தூதிகள்---எக- தம்மிடத்துக்குப்போதலை--கண்ட-பார்த்த---தோன்றல்- நளமஹாராஜன்---செங்கமலக்கண்கள் - செந்தாமரைபோன்றநேத்திரங்கள்---மேதகு - மேன்பட்ட---செல்வம்-செல்வத்தினாலே---மிக்க-மிகுந்த---விதர்ப்பர்கோன்-வீமராஜனுடைய---தவற்றிற்றோன்றும்- தவத்தினாலவதரித்த---மாதர்-அழகிய---மெல்-மெல்லிய---நோக்கினுடன்- பார்வையையுற்றதமயந்தியினது---வடிவினில்-உருவத்தில்---அழுந்தி-ஆழ்ந்து--பின்னும்-பின்னும்---ஆதரம்பெருகி - ஆசைமிகுந்து---இன்பவாரியின்-இன்பக்கடலிலே---ஆழ்ந்த - அழுந்தின---(எ-று)(கருத்து) நளன்கண்கள்தமயந்திஉருவத்திலழுந்திப்பின்னுமின்பக்கடலில்மூழ்கின என்பதாம். (அகு)

பாசிழைபரந்தவல்குற்பனிமொழிக்குமுதச்செவ்வாய்*
மாசறுமதியமன்னவாண்முகத்தணங்கைநோக்கி.....*
யாசையங்கடலுளாழ்ந்துகலைபெறுவரசனேக்க ... *
மேசுவதொன்றுமில்லாமுலைவரையிவர்ந்தவன்றே....*

(இ-ள்) பாசிழை-பசும்பொன்னாற்செய்தவாபரணங்கள்---பரந்த-பரவப்பெற்ற---அல்குல்-அல்குலையும்---பனிமொழி - குளிர்ச்சிபொருந்தியசொற்களையும்---குமுதம் - அல்லிமலர்போன்ற---செவ்வாய்-சிவந்தவாயினையும்---மாசறு-குற்றமற்ற---மதியமன்ன-சந்திரனையொத்த---வாள்-ஒளிபொருந்திய -- முகத்து-முகத்தையுடைய--அணங்கை-தமயந்தியை--நோக்கி-பார்த்து -- ஆசையங்கடலுள்-ஆசையாகியகடலுள்--ஆழ்ந்து-முழுகி--கலைபெறு-கலையைப்பெறுத--அரசனேக்கம்- நளராஜனதுபார்வை --- ஏசுவதொன்றுமில்லா-பழிப்பதொன்றுமில்லாத--முலைவரை - முலைகளாகியமலையின்மேல்--இவர்ந்த-ஏறின(எ-று)(கருத்து) நளன்கண்கள்ஆசைக்கடலிலேமுழ்கித்தமயந்திமுலைகளாகியமலைகள்மேலேயேறின எ-ம்.

போர்க்களிறனையவீமன்புரிந்தமெய்த்தவத்திற்றோன்று
ங்காரக்கருங்கூந்தலாண்மைக்கண்வலையதனுட்பட்டோ
வீர்க்கிடைபுகாதபொம்மலிளமுலைநெருக்கிற்பூக்கோ*
பார்த்தசெங்கமலக் * கண்கள்பறிப்பரியனவாய்நின்ற*

(இ-ள்) போர்-போர்செய்கின்ற-- களிறனைய - யானையையொத்த---வீமன்-வீமராஜன்--புரிந்த-செய்த--மெய்த்தவத்தில்--உண்மையானதவத்தினாலே--தோன்றும்- அவதரித்த--கார் - மேகம்போன்ற--கருங்கூந்தலாள்-கரியவளகபாரத்தையுடையதமயந்தியினது---மை-மையையணிந்த--கண்வலையதனுட்பட்டோ - கண்ணாகியவலையிலகப்பட்டோ--ஈர்க்கு-ஈர்க்கானது--இடை- மத்தியப்ரதேசம்--புகாத- நுழையாத--பொம்மல் - பொலிவுபெற்ற--இளமுலை - இளமை

பொருந்திய ஸ்தனபாரங்களின்—நெருக்கில்-நெருக்கத்தில்—புக்கோ-புகுந்தோ—பார்த்த-நோக்கிய—செங்கமலக்கண்கள் - செந்தாமரைமலர்போன்ற நேத்திரங்கள்—பறிப்பரியனவாய்- பறிப்பதற்கரியவாகி—நின்ற-நின்றன—(எ-று)[* அகத்தியம். காரணமின்றிக் காரியந்தோன்றாது,காரியமின்றிக்காரணந்தோன்றாது, இவ்விதியால்காமங்காரணமாகக்கண்கள்நின்றன](கருத்து)நளன்கண்கள் தமயந்திகண்வலையிற்பட்டோதனநெருக்கிற்பட்டோ பறிப்பதற்கரியவாகநின்றன என்பதாம். (அஎ)

விண்ணவர்மகளிர்யாரும்வெள்குறவனப்புவாய்ந்து...*
பெண்ணலங்கனியநின்றபேதைபேரழகுமுற்றுங் . *
கண்ணொடுபிணித்தாலென்ன வியப்புறக்களித்துநோக
கும், புண்ணுறுபுலவுவேலானுளத்தொடுபுகலலுற்றான்.

(இ-ள்) விண்ணவர்-தேவர்களுடைய—மகளிர்யாரும்- மங்கையரெல்லாம்—வெள்குற-நாணமடைய—வனப்புவாய்ந்து- அழகைப்பெற்று—பெண்-பெண்களுக்குரிய—நலம்- நற்குணங்கள்—கனிய-முதிர—நின்ற-நிற்கப்பெற்ற—பேதை- தமயந்தியினது—பேர்-பெரிய—அழகுமுற்றும்-அழகுமுழுவதும்—கண்ணொடு-கண்களுடனே—பிணித்தாலென்ன-கட்டினதையொப்ப—வியப்புற- ஆச்சரியமிக—களித்து-களிப்பையடைந்து—நோக்கும்- பார்க்கின்ற—புண்ணுறு- மாமிசத்தையுற்ற—புலவு - நாற்றத்தையுடைய—வேலான்-வேற்படையேந்திய நளமஹாராஜன்—உளத்தொடு- மனத்துடனே—புகலலுற்றான்-சொல்லத்தொடங்கினான்(எ-று) உளத்தொடுபுகலல்-சிந்தித்தல)(கருத்து) தமயந்தியழகைக்கண்டு நளன் தன்னுள்ளத்தொடு சொலவான் என்பதாம். (அஅ)

வடிவமைநூலிற்சொல்லும்வனப்பெலாமமைத்துவேதன் *
கடிமலர்ச்செங்கைவண்ணங்காட்டியவுருவுகொலலோ.....*
வடிகணைவேனிலானின்னுருகொலோவேறுட்த்துத்திட்டும் ......*
படிவமோவுயிரைவாட்டும்பாவைதன்வடிவந்தானே....| ...*

(இ-ள்) உயிரைவாட்டும்-என்னுயிரைவாட்டுகின்ற—பாவை- இப்பாவைபோல்வாளுடைய—வடிவம்-உருவமானது—வேதன்-பிரமனுனவன்—வடிவமைநூலில் - சாமுத்திரிகநூலிலே—சொலும்-சொல்லாநின்ற—வனப்பெலாம்-அழகனைத்தும்—அமைத்து - அமையச்செய்து—கடி-புதுமைபெற்ற—மலர் - தாமரைமலர்போன்ற—செங்கைவண்ணம் - தனதுசிவந்தகைகளின்றிறத்தை—காட்டிய-காண்பித்த—உருவுகொல்லோ-உருவமோ—அடு-கொல்லாநின்ற—கணை-பூங்கணையுடைய—வேனிலான் - மன்மதனுனவன் —

இன்-இனிய—அமுது-அமிர்தத்தில்—கோல் - தூரியக்கோலை—தோய்த்து-நனைத்து—தீட்டும்-எழுதப்பட்ட—படிவமோ - உருவமோ - (எ-று) (கருத்து) நளன் தமயந்திவடிவம் பிரமன்வகுத்ததோ, மன்மதனெழுதியவுருவமோ, என்றான் என்பதாம். (அக)

குழையெதிர்நடந்துபைம்பொற்குமிழ்மிசைமறிந்துநீண்ட
வுழை* பொருநெடுங்கணுடனுறுப்பினுக்குவமையாகச்...*
செழுமலர்முதலவாயபொருள்களைத்தெரிந்துகூறி.... ... *
னழகினிக்குவமைதீர்ந்தவவற்றினுக்கிகழ்ச்சியாமே........*

(இ-ள்) குழை-குழையென்னுங்காதணிக்கு—எதிர்நடந்து-முன்பாகச்சென்று—பைம்பொன் - பசியபொன்போன்ற—குமிழ்-குமிழம்பூவினது—மிசை-மேற்பக்கத்தில்—மறிந்து- மறிபட்டு—நீண்ட-நீட்சியையடைந்த—உழைபொரு-மான்போன்ற—நெடுங்கணுடன் - நெடியகண்களையுடையதமயந்தியினது— உறுப்பினுக்கு-அவயவத்துக்கு—உவமையாக-உவமானமாக—செழும்-செழுமைபெற்ற—மலர்முதலவாய- தாமரைமலர்முதலாகிய---பொருள்களை - வஸ்துக்களை---தெரிந்துகூறின் - தெரிந்துசொல்லின்---அழகினுக்கு-அழகுக்கு---உவமைதீர்ந்த - உவமைநீங்கிய---அவற்றினுக்கு - அவ்வுறுப்புக்களுக்கு---இகழ்ச்சியாம் - பழிப்பாகும்---(எ-று-) குமிழென்பது - அதுபோன்றமூக்கெனக்கொள்க .[*அகத்தியம் காரியமூர்த்தியுங்காரணப்பிந்தியும்!வருவனகாரிய காரணச்சொல்லே-இவ்விதியால் பொருநெடுங்கண்காரிய காரணச்சொல்] (கருத்து) தமயந்தி அவயவங்களுக்கு உவமானப்பொருள்களிகழ்ச்சியவாம் என்றான் என்பதாம். (கூய)

குடைந்துவண்டிமிருஞ்செய்யகொழுமலர்த்திருவிறுேடுந் *
தடஞ்சினைபொதுளுமென்பூந்தருநிழலுறையுந்தெய்வ ....*
மடந்தையர்தம்மையெல்லாம் வைகலும்படைத்துச்செங்கை
படிந்தபினிந்தமாதைப்படைத்தனன்கமலத்தோனே......*

(இ-ள்) வண்டு-வண்டுகளானவை---குடைந்து-மூக்கினுலேகிண்டி---இமிரும்- ஒலிக்கின்ற---செய்ய-சிவந்த---கொழு - செழுமைபெற்ற---மலர்-தாமரைமலரிலிருக்கின்ற---திருவினுேடும்- இலக்குமியுடனே---தடம்-பருத்த---சினை-கிளைகள்---பொதுளும்-நெருங்கிய--மெல்-மெல்லிய--பூ-மலர்களையுடைய---தருநிழல் - ஐந்தருநிழலில்---உறையும் - வசிக்கின்ற---தெய்வமடந்தயர்தம்மையெல்லாம்-தெய்வமங்கையரனைவரையும்---வைகலும்- நாள்தோறும்--படைத்து-சிருட்டித்து---செங்கைபடிந்தபின் - தன்னுடைய சிவந்தகைகள்பழகியபின்பு---இந்தமாதை - இந்ததமயந்தியை---கமல

த்தோன்-பிரமனானவன்—படைத்தனன்-சிருட்டித்தான்—(எ-று) ஏ அசைநிலை. (கருத்து) பிரமன் இலக்குமியையும், தேவமாதர்களையும் படைத்துக் கைதேர்ந்தபின் இவளைப்படைத்தான் என்றனன் என்பதாம். (கூக)

விரிந்தசெங்க மலத்தண்பூம் பொகுட்டில் வீற்றிருக்கு
மேலோன், முருந்திள முறுவற்செவ்வாய் முகிழ்முலைக்க
ரியகூந்தற், றிருந்திழைபழகுவாய்ந்த திருமுகந்திங்களா
கப்,புரிந்தனன் களங்கமன்றே புருவமாவியற்றினானே *

(இ-ள்) விரிந்த-விரியப்பெற்ற—செங்கமலம்-செந்தாமரையினது—தண்-குளிர்ச்சிபொருந்திய—பூம்பொகுட்டில்-மலர்க்கொட்டையின்மேல்—வீற்றிருக்கும்-அரசிருக்கின்ற—மேலோன்-பிரமனானவன்—முருந்து-மயிலிறகின்முதலின்முள்போன்ற—இள-இளமைபொருந்திய—முறுவல்-தந்தங்களையும்—செவ்வாய்-சிவந்தவாயினையும்—முகிழ்-அரும்பையொத்த—முலை-முலைகளையும்—கரிய-கறுத்த—கூந்தல்-அளகபாரத்தையுமுடைய—திருந்திழை-தமயந்தியினது—அழகுவாய்ந்த-அழகுபொருந்திய—திருமுகமாக-திருமுகமாக—திங்கள்-சந்திரனை—புரிந்தனன்-செய்தான்—களங்கமன்றே-அதன்களங்கத்தையல்லவா—புருவமா-புருவமாக—இயற்றினான்-செய்தான்—(எ-று.) (கருத்து) பிரமனிவள்முகத்தைச்சந்திரனாகப்படைத்தான் என்றான் என்பதாம். (கூஉ)

* மணிமுடியதனைக்கொம்மைமுலையெனவமைத்துமார...*
னணிமலர்க்கணைகளைந்திலான்றமூவுலகுமூன்று............*
கணைகளால்வென்றுமற்றைக்கணைகளுக்கெதிரில்லாமை ...*
யிணைவிழியென்றுபேரிட்டிவண்முகத்திருத்தினானே...... *

(இ-ள்) மாரன்-மன்மதனானவன்—மணிமுடியதனை-தன்னுடையமணிகள்பதித்தகிரீடத்தை—கொம்மை-இளமைபொருந்திய—முலையென-ஸ்தனங்களென்றுசொல்ல—அமைத்து-பொருத்தி—அணி-அழகிய—மலர்க்கணைகளைந்தில்-பூவம்புகளைந்தனுள்—ஆன்ற-நிறைந்த—மூவுலகும்-திரிலோகங்களையும்—மூன்றுகணைகளால்-மூன்றுபாணங்களால்—வென்று-வெற்றிகொண்டு—மற்றைக்கணைகளுக்கு-மற்றையிரண்டுபாணங்களுக்கு—எதிரில்லா-எதிரில்லாத—மை-அஞ்சனந்தீட்டிய—இணைவிழியென்று-இரண்டு கண்களென்று—பேரிட்டு-பேர்வைத்து—இவண்முகத்து-இந்தத்தமயந்தியினுடையமுகத்தில்—இருத்தினான்-இருத்திவைத்தான்—(எ-று) * அகத்தியம். (காரணமுந்தியுங் காரியம்பிந்தியும், வருவன காரணகாரியச் சொல்லே, இவ்விதியால் மணிமுடி. காரணகாரியச்

சொல்)(கருத்து) மன்மதன் தன்முடியைமுலையாகவுங் கணைகளைக் கண்களாகவும் அமைத்தான் என்றான் என்பதாம். (௬௩)

வெதிர்புரைபசியமென்றோள்வேனெடுங்கண்ணினுடன்
றிதலைவெம்முலைபோன்முத்தந்தெரிதரவணிந்திடாமன்
மதமழைகொழிக்கும்வேழமருப்பிணைவெருவியன்றோ
கதிர்மணிமுத்தமுள்ளேகரந்துவைத்திருக்குமாறே...*

(இ-ள்) வெதிர்புரை-மூங்கிலையொத்த—பசிய- பசுமைபொருந்திய—மென் - மெல்லிய—தோள்-தோளையும்—வேல் - வேற்படைபோன்ற—நெடு-நெடிய—கண்ணினுடன்- கண்களையுற்ற தமயந்தியின்—திதலை-தேமலையுடைய—வெம்- விருப்பத்தைத்தருகின்ற—முலைபோல்- ஸ்தனங்களைப்போல்—முத்தம்-முத்துக்களை—தெரிதர-தெரியும்படி—அணிந்திடாமல் - தரித்துக்கொள்ளாமல்—மதமழை-மதமாகியமழையை—கொழிக்கும் - கொழிக்கின்ற—வேழம்-யானையின்—மருப்பிணை - கொம்பிரண்டும்—வெருவியன்றோ-பயந்தல்லவா—கதிர்-கிரணங்களையுடைய—மணி - அழகிய—முத்தம்-முத்துக்களை—உள்ளே - தமக்குள்ளே—கரந்து - ஒளித்து—வைத்திருக்குமாறு - வைத்திருக்கும்விதம்—(எ-று.) (கொழித்தல்-பெருக்குதல்.) (கருத்து) தமயந்தி முலைகளைப்போல முத்துக்களை வெளிப்படுத்தாமல் அம்முலைகட்குப்பயந்தல்லவா யானைக்கொம்புகள் முத்துக்களை உள்வைத்திருக்கின்றன என்றானளன் என்பதாம். (௬௪)

மடலவிழ்கமலப்புத்தேள்வடிவினையமைத்துவெய்ய...... *
தடமுலையமைப்பமாதினுறுப்பலாற்றரமின்றென்று...... *
இடையினுக்கமைத்தகூற்றையெடுத்தெடுத் தமைத்தலாலோ,
கொடியெனத்தேய்ந்துதேய்ந்துகுறைந்ததுமருங்குலே.*

(இ-ள்) மடல்-இதழ்களானவை—அவிழ் - விரிந்த—கமலப்புத்தேள்-தாமரைமலரிலிருக்கும் பிரமனானவன்—வடிவினை - உருவத்தை—அமைத்து-முன்புசெய்து—வெய்ய-வெவ்விய—தடம்-பருத்த—முலை-ஸ்தனங்களை—அமைப்ப-பின்புசெய்ய—மாதின்-தமயந்தியினுடைய— உறுப்பலால்-அவயவமல்லாமல்—தரமின்றென்று-தகுந்தபொருளில்லையென்று—இடையினுக்கு-மருங்குற்கு—அமைத்தகூற்றை-வைத்தபங்கை—எடுத்தெடுத்து-கொஞ்சங்கொஞ்சமாகவெடுத்துக்கொண்டு—அமைத்தலாலோ-செய்தபடியாலோ—கொடியென- கொடியென்றுசொல்ல—தேய்ந்துதேய்ந்து—தேய்பட்டுத்தேய்பட்டு—மருங்குல்- இடையானது—குறைந்தது - குறைபட்டது—(எ-று) (கருத்து) பிரமன் இடைக்கமைத்த பங்

கையெடுத்து முலைக்கமைத்த படியிது வல்லவோ இவளுக்கிடைக
ருங்கிற்று என்றனன் என்பதாம். (௬௫)

மௌவலந்தெரியல்வேய்ந்துமணங்கமழ்கரியகூந்தல் *
கொவ்வையங்கனிவாய்ப்பேதைகுவிமுலைக்களிநல்யானை
செவ்விதிற்பிணித்தநீலச்செழுமணிவல்லிபோலு......*
மவ்வயிறணிந்தகோலவணிமயிரொழுக்கந்தானே... *

(இ-ள்) மௌவல்-முல்லையினுடைய—அம்-அழகிய—தெரியல் வேய்ந்து-மாலையைத்தரித்து--மணம்-வாசனை--கமழ்-கமழ்கின்ற--கரிய-கறுத்த--கூந்தல் - அளகபாரத்தையும்--கொவ்வையங்கனிவாய்ப்பேதை- கொவ்வைக்கனிபோன்றவாயையுள்ளதமயந்தியின்--குவி-குவிந்த--முலை- ஸ்தனங்களாகிய--களி - களிப்பையுடைய--நல்யானை-நல்லயானையை--செவ்விதின்-நேராக--பிணித்த-கட்டிய--நீலச்செழுமணிவல்லிபோலும் - செழுமையுள்ள நீலரத்னக்கொடிபோலும்--அவ்வயிறு--அந்தவயிறுனது--அணிந்த-தரித்த--கோலம்-ஒப்பனையமைந்த--அணி-அழகிய--மயிரொழுக்கம்-மயிரொழுங்கு—(எ-று) (தான்-ஏ-அசைகள்) (கருத்து) மயிரொழுங்கானது தமயந்திமுலைகளாகிய யானைகளைக்கட்டியவல்லிபோலிருந்தது என்றனன், எ-ட். (௬௬)

ஐங்கணைக்கிழவன்வைகுமணியாசிருக்கைப்பாங்கர்.........*
தங்குறவமைத்தவாழைத்தண்டுகொலறுகட்சீற்றத்.........*
துங்கவெம்பருமயானைத்தடக்கைகொறுணிதறேற்றுஞ் ... *
செங்கயற்கருங்கட்செவ்வாய்த்திருந்திழைகுறங்குதாமே...*

(இ-ள்) செங்கயல்-சிவந்தகயல்போன்ற--கருங்கண்-கரியகண்களையும்--செவ்வாய்-சிவந்தவாயினையும்--திருந்திழை-திருத்தமாகிய ஆபரணத்தையுமுடையதமயந்தியினது--குறங்கு - துடைகள்--ஐங்கணைக்கிழவன்-மன்மதன்--வைகும்-தங்குகின்ற--அணி-அழகிய--ஆசிருக்கை-அத்தாணிபீடத்தின்--பாங்கர்-பக்கத்தில்-- தங்குற-தங்கும்படி--அமைத்த-செய்த--வாழைத்தண்டுகொல்-வாழைத்தண்டோ--தறுகண்-அஞ்சாத--சீற்றம் - கோபத்தையுற்ற--துங்கம்-உயர்ச்சிபொருந்திய--வெம்-வெவ்விய--பருமம்-ஒப்பனையமைந்த--யானை-யானையினது--தடம்-பருத்த--கைகொல்- துதிக்கையோ—துணிதல்-இன்னதென்று துணிதலை--தேற்றும் - (யாம்) தேறும்—(எ-று)(கருத்து) தமயந்தி துடைகள் மன்மதன் அத்தாணிமண்டபத்து வாழைஸ்தம்பங்களோ யானைத்துதிக்கைகளோ-அறியோம் என்றனன் என்பதாம். (௬௭)

பைந்தருநீழல்வைகும்பாவையர்பதுமபீடத்........*
திந்திராக்கணங்குசெய்யுமேந்திழையெழிற்குத் தோற்

று, வர்தடிபணியுந்தோறும்வாணுதல்கவினத்தீட்டுஞ் *
சிந்தூரத்திலகந்தோய்ந்தோசீறடிசிவந்தவாறே...... *

(இ-ள்) பைந்தருநீழல்-பசியவைந்தருநீழலில்—வைகும்-தங்கிய—பாவையர்-அரம்பையர்கள்—பதுமபீடத்து-தாமரைமலரி லிருக்கின்ற—இந்திரைக்கு-திருமாதுக்கு—அணங்குசெய்யும்- வருத்தத்தைச்செய்கின்ற—ஏந்திழை-தமயந்தியினது—எழிற்கு- அழகிற்கு—தோற்றுவந்து- தோல்விபெற்றுவந்து—அடிபணியுந்தோறும்-அடிகளில்வணங்குந்தோறும்—வாள்- ஒளிபொருந்திய—நுதல்-நெற்றியானது—கவின-அழகுபெற—தீட்டும்- எழுதப்பட்ட—சிந்தூரத்திலகம்-சிந்தூரப்பொட்டு—தோய்ந்தோ- தோயப்பெற்றோ—சீறடி - சிறியபாதங்கள்—சிவந்தவாறு - சிவந்தவிதம்—. எ-று. (கருத்து) தேவமாதர்கள் தமயந்தியழகுக்குத் தோற்று அடியை வணங்குதலால் அவர்கள் நெற்றித்திலகம்பட்டுப் பாதஞ்சிவந்ததோ வென்றுளான் என்பதாம். (கஅ)

இன்னவாறுளத்தினெண்ணியெறும்வலிமடங்கலன்னான் ... *
மின்னவிர்குலிசவேந்தன் விஞ்சையின்புணர்ப்பினீங்கி......*
பொன்னவிர்சுணங்குபூத்தபொம்மல்வெம்முலையினாண்முன்.
கன்னலஞ்சிலைவேளென்னக்கட்புலன்கதுவநின்றான்........*

(இ-ள்) இன்னவாறு-இந்தப்பிரகாரம்—உளத்தின்-மனதிலே—எண்ணி-சிந்தித்து—எறும்வலி மிகுந்தவலிமைபெற்ற— மடங்கலன்னான் சிங்கத்தையொத்தநளன்—மின்னவிர் - ஒளிவிளங்குகின்ற—குலிசவேந்தன் - வச்சிரப்படையையுடையவிந்திரனது—விஞ்சையின்- வித்தையின்—புணர்ப்பினீங்கி - சம்பந்தத்தினின்று நீங்கி—பொன்-பொன்போலும்—அவிர்-பிரகாசிக்கின்ற—சுணங்கு- தேமல்—பூத்த-உண்டாகிய—பொம்மல்-பொலிவினையுற்ற—வெம்-விருப்பத்தைத்தருகின்ற—முலையினாண்முன்- தனங்களையுள்ள தமயந்திக்குமுன்னாக—கன்னலஞ்சிலைவேளென்ன-கருப்புவில்லேந்திய மன்மதன்போல—கட்புலன்-கண்ணறிவு—கதுவ - பற்றும்படி—நின்றான்-நின்றனன்—எ-று. (கருத்து) நளன் தமயந்திக்குமுன் அருவத்தைவிட்டு உருவமாய் நின்றான், எ-ம். (க௯)

விளைகமழ்நறியதண்டார்விதர்ப்பர்கோ னளித்தபாவை
யரசிளங்குமரன்றன்னையார்வமோடினிதுகண்டா.... *
ளொருவெளிகண்டுநாணுமுவர்த்துளமயர்வாண்முன்னந் *
தெருணறக்காணிலெய்துமுவகையார்தெரிக்கற்பாலார்,

(இ-ள்) விளை-வாசனை—கமழ்-கமழ்கின்ற—நறிய- நல்ல—த

ண்-குளிர்ச்சிபொருந்திய—தார்-மாலையணிந்த—விதர்ப்பர்கோன் வீமராஜன்—அளித்த-பெற்ற—பாவை- தமயந்தியானவள்—அர சிளங்குமரன்றன்னை- நளமஹாராஜனை—ஆர்வமோடு - ஆசையுட ன்—இனிது-இனிதாக—கண்டாள்-பார்த்தாள்—உருவெளிகண்டு- உருவெளித்தோற்றத்தைக்கண்டு—நாளும்-நாடோறும்—உவந்து- உவப்படைந்து—உளம்-மனம்—அயர்வாள் - வருந்துகின்றவள்— முன்னம்-முன்னாக—தெருளுற-தெளிவுபொருந்த—காணில- கண் டால்—எய்தும்-அப்போதடைகின்ற—உவகை-மகிழ்ச்சியை—யார் -எவர்கள்—தெரிக்கற்பாலார்- தெரியப்படுத்தவல்லவர்கள் (ஒருவரு மில்லை)—எ-று. [கருத்து] தமயந்தி நளனை ஆசையோடு கண்டாள் அவள்மகிழ்ச்சியையார்சொல்லவல்லார், எ-ம். (௩)

அங்கண்மாஞாலங்காக்குமண்ணன்மேலணங்கனுடன் *
செங்கயற்கருங்கண்வாளிசிறிதுசென்றழுந்தாமுன்னம்
பைங்கழைதாங்கியாவம்பரித்திடம்பார்த்துநின்ற... *
துங்கவேள்விடுத்தவாளிதூவன்மட்டாழ்ந்தவன்றே...*

(இ-ள்) அம்-அழகிய—கண்-இடமகன்ற—மா- மகத்தாகிய— ஞாலம்- பூமியை—காக்கும்-அளிக்கின்ற—அண்ணன்மேல் -நளம ஹாராஜன்மேல்—அணங்கனுடன் - தமயந்தியினுடைய—செங்க யல்-சிவந்தகயல்போன்ற—கருங்கண்-கரியகண்ணாகிய—வாளி- பா ணங்கள்—சிறிதுசென்று- கொஞ்சம்போய்—அழுந்தாமுன்னம்- அழுந்துவதற்குமுன்னமே—பைங்கழை-பசியகருப்புவில்லை—தா ங்கி-சுமந்துகொண்டு—ஆவம்பரித்து- அம்பறாத்தூணியைத்தாங்கி க்கொண்டு—இடம்பார்த்துநின்ற- இடநோக்கியிருந்த—துங்கம்- உயர்ச்சிபொருந்திய—வேள்-மன்மதனானவன்—விடுத்த- பிரயோ கம்பண்ணின—வாளி- பாணம்—தூவன்மட்டு - குதைவரையும்— ஆழ்ந்த-அழுந்தின—எ-று [கருத்து] தமயந்திகண்கணையெய்யுமு ன்னே நளன்மேல்மன்மதன்கணை யெய்தாள், எ-ம். (௩க)

கழிபெருங்காதலாள்*கட்கருவிளைமலர்கள்வெய்ய......... *
மழவிடையனையான்செய்யமணிப்புயவரையிற்பூத்த...... *
விழைவொடுமகிழ்ச்சிகூரும்வேனில்வேளனையான்செங்கண் *
முழுநெறிக்கமலமன்றூண்முலைத்தடத்தலர்ந்தமாதோ.. *

(இ-ள்) கழி-மிகுந்த—பெருங்காதலாள்-பேராசையுள்ள தமயந் தியின்—கண்-கண்ணாகிய—கருவிளைமலர்கள்- காக்கணம்பூக்கள்— வெய்ய- வெவ்விய—மழவிடையனையான் - இளவேற்றையொத்த— நளமஹாராஜனது—செய்ய- சிவந்த—மணி - அழகிய—புயவரையி ல்-தோளாகியமலையில்—பூத்த - மலர்ந்தன—விழைவொடும்- அன்

புடனே--மகிழ்ச்சிகூரும் - மகிழ்ச்சியடைகின்ற--வேனில்வேலனை யான்-நளமஹாராஜனுடைய---செங்கண் - சிவந்தகணணாகிய---மூழுநெறி-முழுநெறிப்பையுடைய---கமலம்-தாமரைகள்--அன்னாள் -அத்தமயந்தியின்-முலைத்தடத்து-தனதடமாகிய குளத்தினிடத்து- அலர்ந்த-பூத்தன--(எ-று) தடமென்பது- மலையும்- குளமும் - மாது-ழூ-(அசைகள்)[*அகப்பொருள்விளக்கம் அரிவைநாட்டத்தகத்துநிகழ்வேட்கை, தெரியவுணர்த்துங்குறிப்பெனப, இவ்விதியால் ஆசைகொண்டதறிக.](கருத்து) தமயந்திகண்களாகியநீலோற்பல மலர்கள் நளன்றோட்களிற்பூத்தன, நளன்கண்களாகிய தாமரைமலர்கள் தமயந்திமுலைகளிற் பூத்தன,எ-ம். (௱௨)

படவரவல்குற்செவ்வாய்ப்பனிமொழிக்கொடியன்னாளை... *
மடலவிழ்கமலப்போதின்மடந்தையென்பதற்குவெற்றிக் *
கடகளிறென்னநின்றகாமருகாளைதன்னை......... ...... .. *
யிடையறாதினிதுநோக்கியிமைப்புறுகுறையுந்தீர்ந்தாள். *

(இ-ள்)படவரவல்குல் - அராப்படம்போன்றவல்குலையும்-- செவ்வாய்-சிவந்தவாயையும்--பனிமொழி- குளிர்ந்தசொல்லையுமுள்ள--கொடியன்னாளை-தமயந்தியை-- மடலவிழ் - இதழ்விரிந்த--கமலப்போதின்-தாமரைமலரிலிருக்கின்ற--மடந்தையென்பதற்கு - இலக்குமியென்றுசொல்வதற்கு---வெற்றி - சயத்தைப்பெற்ற-- கடகளிறென்ன-மதயானையைப்போல--நின்ற-அருகிலிருந்த--காமர்- அழகிய--காளைதன்னை-நளமஹாராஜனை--இடையறாது - இடைவிடாமல்--இனிதுநோக்கி-இனிதாகப்பார்த்து---இமைப்புறு-(இமைத்தலையும்)இமைப்பினையடைந்த---குறையும்- குறைவையும்--தீர்ந்தாள்-நீக்கினாள்---(எ-று)(கருத்து)தமயந்திநளனைப்பார்த்துக்கண்குறைதீர்ந்தாள்,எ-ம். (௱௩)

உள்ளிறைவுடையகாமமுருவெடுத்தென்னநின்ற... *
வள்ளலுமணங்கன்னாளுமழகெனுமினியந்தேற..... *
லெண்ணருங்காதல்கூரவினிதினின்மாறிமாறிக், * கண்
ணினாற்பருகியின்பக்களிப்பெனுங்கடலுளாழ்ந்தார். *

(இ-ள்) உள்-உள்ளே--நிறைவுடைய- நிறைவினையுடைய--காமம்-ஆசையானது--உருவெடுத்தென்ன- ஒருவடிவுகொண்டதுபோல- நின்றவள்ளலும்-நின்றநளனும்--அணங்கன்னாளும் தமயந்தியும்--அழகெனும்-அழகென்றுசொல்லும்--இனியந்தேறல் - இனிப்புள்ளதேனை - எண்ணரும் - எண்ணுதற்கரிய--காதற்கூர - ஆசைமிக--இனிதினின்-இனிமையினாலே--மாறிமாறி,- ஒருவர்கொருவராடிக் கடிமாறிக்கொண்டு-- கண்ணினால் - நேத்திரோதயங்களினால்--ப

ருசி - உண்டு--இன்பம்- இன்பத்தைத்தரும்--களிப்பெறும்- களிப்பெறுகின்ற--கடலுள்- கடலின்கண்--ஆழ்ந்தார் - அழுந்தினோர்கள்--(எ-று [*குவலயாநந்தம் உறுப்பியல்.எ-ரூ-கண்ணாலத்தனிறமொடு நெடுமை, குறுமைதூரஞ்சமீபம்வடிவு, கூடல்பிரிதலவையுளபொருளே, இவ்விருடால் கண்ணாற்கண்டுகளித்தனர்.] கருத்து) நளனும் தமயந்தியும் ஒருவரையொருவர்பார்த்துமகிழ்ச்சிக கடலிலழுந்தினோர்கள்,எ-ம். (௩௪)

இருதடம்புயமு மந்தாரகலமுமியைந்ததாமெலன்......*
தெரிவருமாவியென்றுதெரிவையுமண்ணறுனு .... *
முருகவிழ் தழலும்வெய்யமுகிழ்முலைத்துணையுங்காங்கு
முருவுடைத்தாமொலென்றனுபிமானவியந்துநின்றான்.

(இ-ள்) தெரிவையும் - தமயந்தியும்---என் - எனது--தெரிவரும் தெரிதற்கரிய--ஆவி-உயிரானது--இருதடம்புயமும்-பருத்ததோள்களிரண்டையும்--அம்-அழகிய--தார்-மாலையணிந்த, அகலமும்-மார்பையும் -இயைந்ததென்றாள்- பொருந்தியதென்றாள்--அண்ணலும்-நளனும்--என்றனுயிர் -என்னுடையவுயிரானது--முருகவிழ்-தேனொழுகப்பெற்ற--குழலும்-கூந்தலையும்--வெய்ய வெவ்விய--முகிழ்-அரும்பையொத்த--முலைத்துணையும்-இரண்டுஸ்தனங்களையும்--காங்கும்- சுமக்கப்பெற்ற--உருவுடைத்தாமென - உருவுடையதாமென்று--வியந்து-அதிசயித்து--நின்றான்- நின்றான்— எ-று) (கருத்து தமயந்திநளன் றோட்களையுமார்பையும் தன்னுயிரென்றாள் நளன்தமயந்திகூந்தலையுந்தனங்களையுந்தன்னுயிரென்றான்,எ-ம்.

மாதுபால்விழைவினேகுமனத்தினையல்லசெய்த, றூதி
னுக்கியல்பன்றென்றுத்தோன்றல்பேரறிவினமீட்டக் *
காதலினவன்பாற்செல்லுங்கருத்தினைக்கமலத்தண்பூம்*
போதுறைமடந்தையன்னாட்பொருந்துநாண்டடுத்ததன்றே.

(இ-ள்) அல்லசெய்தல் - தூதுக்குரியவல்லவைகளைச்செய்தல்--தூதினுக்கு- தூதுக்கு--இயல்பன்றென்று- இயற்கையன்றென்று--தோன்றல்-நளமஹாராஜாவானவன்--மாதுபால்-தமயந்தியினிடத்து--விழைவின-ஆசையினாலே--ஏகும்- செல்லுகின்ற--மனத்தினை-மனத்தை--பேரறிவின்-பேரறிவினால்--மீட்ப- மீட்க--கமலத்தண்பூம்போதுறை-குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரிலிருக்கின்ற--மடந்தையனாள்-இலக்குமியையொத்ததமயந்தியை, பொருந்து நாண்-பொருந்தியநாணமானது--காதலின் - ஆசையினால்-அவன்பாற்செல்லுங்கருத்தினை-அந்நளமஹாராஜனிடத்திற்செல்லுமனத்தை--தடுத்தது - தடுத்துவிட்டது—(எ-று) (கருத்து) நளன் இச்

செய்கை தூதற்குத்தகாதென்று மனதைமீட்கத் தமயந்திநாணந் தன்மனதைத்தடுத்தது என்பதாம். (௱௬)

நாணமீதூரநின்றநகைமதிமுகத்தினாளும்............ *
பூணினுக்கழகுசெய்யும்புணர்முலைத்தோழிமாரும்... *
நீணகர்க்கடிகொள்வாயினீங்கிவந்தருகுநின்றான் ... *
சேணுறையமரன்கொல்லோதிருந்தெழிலியக்கனேயோ.

(இ-ள்) நாணம்-நாணமானது--மீதூரநின்ற- அதிகரிக்கவிருந்த--நகை-ஒளிபொருந்திய--மதி- திங்கள்போன்ற--முகத்தினாளும்-முகத்தையுடையதமயந்தியும்--பூணினுக்கு-ஆபரணங்களுக்கு--அழகுசெய்யும்-அழகைச்செய்கின்ற--புணர்- ஒன்றோடொன்றுசேர்ந்த--முலை-ஸ்தனங்களையுள்ள--தோழிமாரும்-தோழிகளும்--நீள்-நீண்ட--நகர்- இந்நகரத்தினது--கடிகொள் - காவலைக்கொண்ட--வாயில் - வாயிலை--நீங்கிவந்து- கடந்துவந்து--அருகுநின்றான்-நம்மருகேநின்றவன்--சேணுறை ,ஆகாயத்திலிருக்கின்ற--அமரன்கொல்லோ-தேவனோ--திருந்து-திருந்தப்பெற்ற எழில்-அழகையுற்ற--இயக்கனேயோ-இயக்கனோ--(எ-று) (கருத்து) தமயந்தியுந்தோழிமார்களும்,இவன்தேவனோ, இயக்கனோ, [இதுமுதல் மூன்றுங்குளகம்.] என்பதாம். (௱௭)

கடிகமழ்கமலச்செல்விகண்கவர்வனப்புவாய்ந்த, வடி
வுறுதவவுத்திண்டோள் வண்டுழாய் மாயன்கொல்லோ,
மிடல்கெழு வெள்ளிவெற்பின் விஞ்சையர்க்கிறைவன்
கொல்லோ, முடியுடையமரர்போற்றுமொய்கழற்குமர
ன்கொலல்லோ...................................... *

(இ-ள்) கடி - வாசனை--கமழ்-கமழ்கின்ற -கமலச்செல்வி- தாமரைமலரிலிருக்கின்றதிருமாதினுடைய--கண் -கண்களை--கவர்- கவர்கின்ற — வனப்புவாய்ந்த-அழகுபெற்ற—வடிவுறு - வடிவின்மிக்க — குவவு-திரட்சிபொருந்திய — திண்டோள் - திண்ணியபுயங்களையுள்ள—வண்- அழகிய— துழாய்-துளபமாலையணிந்த—மாயன்கொல்லோ-திருமாலோ— மிடல்கெழு - வலிமைபொருந்திய—வெள்ளிவெற்பின் - வெள்ளிமலைக்கணுற்ற— விஞ்சையர்க்கிறைவன்கொல்லோ-விஞ்சையர்க்கரசனோ—முடியுடை- மகுடத்தையுடைய—அமரர்போற்றும் தேவர்களால்வணங்கப்பட்ட—மொய்- நெருங்கிய—கழல்-வீரக்கழலையணிந்த— குமரன்கொல்லோ - குமாரக்கடவுளோ—(எ-று) (கருத்து) விஷ்ணுவோ, விஞ்சையர்க்கரசனோ, சுப்பிரமணியனோ, என்பதாம். (௱௮)

# நளன்றூதுப்படலம்.

விருப்பியவனைத்தூதல்குமேதகுதவத்தில்மாய்ந்தோர்......*
திருந்தெழிலியாக்கைபெற்றுத்திகழ்வொன்றுனக்குநீராற் *
கரும்புறக்கிளவிபாகன்கட்டழற்பாய்ந்து துஞ்சி....... *
அரும்பெறலரியயாக்கைபெற்றகாமனோ*வறிகலேமால்..... *

(இ-ள்) விருப்பியவனைத்தூய்- இச்சித்தவைகளெல்லாம்—நல்கும்-தருகின்ற—மேதகு-மேம்பட்ட—தவத்தின் - தவத்தினால்—மாய்ந்தோர்-இறந்தவர்கள்—திருந்து-திருத்தமாகிய—எழில் - அழகுபொருந்திய—யாக்கைபெற்று - தேகத்தைப்பெற்று—திகழ்வொன்று- விளங்குவர்களென்று—உரைக்குநீரால் - சொல்லுகின்றதன்மையால் —கரும்புறம் - கரும்பிரசத்தையொத்த—கிளவி சொல்லையுடையவுமையாளது—பாகன்- தனதிடப்பாகத்திலேவைத்தகடவுளது—கண்-நெற்றிக்கண்ணிலுடைய—அழல்- நெருப்பிலே—பாய்ந்து-புகுந்து— துஞ்சி-இறந்து— அரும்பெறல் - பெறுதற்கரிய—யாக்கைபெற்ற அழகுள்ள, தேகத்தைப்பெற்ற—காமனோ-மன்மதனோ—அறிகிலேம் (யாம் அறியேம்—(எ-று)[* அகத்தியம். கண்டவைகேட்டவைகண்டுரைக்கின்றவை, பிறந்தபினிறந்தவை பிறங்குமாந்தர்க்கே,இவ்வியால்அறியோமென்றார்கள்.](கருத்து) மன்மதனோ அறியோமென்றார்கள் என்பதாம். (௱௯)

மங்கையர்நிறையுநாணுங்கவர்ந்திடவனப்புவாய்ந்த... *
இங்கிவன்றன்னைஞாலமின்புறப்படைத்திலானேற்... *
திங்களங்கண்ணிவேய்ந்தசெஞ்சடைக்கடவுளெங்ஙன் *
பைங்கழைமதனைக்கொன்றபடுபழிதீருமாறே ..... *

(இ-ள்) மங்கையர் - மாதர்களின்—நிறையும் - கற்பையும்—நாணும்-நாணையும்—கவர்ந்திட-கொள்ளையிடத்தக்க—வனப்புவாய்ந்த-அழகுபெற்ற—இங்கு- இவ்விடத்து—இவன்றன்னை-இப்புருடனை—ஞாலம்- உலகம்—இன்புற - இன்பத்தையடைய—படைத்திலானேல-சிருட்டியாதிருப்பானேல்—திங்களங்கண்ணிவேய்ந்த-மூன்றாம்பிறையைத்தரித்த—செஞ்சடைக்கடவுள் -சிவந்தசடாபாரத்தையுற்றபரமசிவன்—பைங்கழை-பசியகருப்புவில்லேந்திய—மதனைக்கொன்ற-மன்மதனைக்கொன்ற—படுபழி-கொலைப்பழி—தீருமாறு- தீரும்விதம்—எங்ஙன்-எப்படி—(எ-று.) உலகமென்பது அதிலிருக்கும் உயிருக்காதலால் ஆகுபெயர். (கருத்து) சிவன் மன்மதனைக்கொன்றபழிதீர இவனைப்படைத்தான் என்பதாம். (௱௰)

மாயிருஞாலத்தானேன்மண்ணினிற்பொலிந்ததில்லை..*
மீயுயர்விசும்புளானேல்விசும்பினிற்சிறந்ததுண்டோ *
பாயொளிபரிதிவேலான்பாதலத்துள்ளானாயின்...... *
மேயகீழுலகேயெல்லாவுலகினுமேலதாமால்........ *

(இ-ள்) பாய்-தாவுகின்ற—ஒளி-காந்திபொருந்திய—பரிதி-சூரி யனையொத்த—வேலான் - வேற்படையையுடைய விப்புருடன்— மா-மகத்தாகிய—இரு-பெரிய—ஞாலத்தானேல் - பூவுலகிலிருப்ப வனாகில்—மண்ணினில்-அப்பூவுலகைவிட—பொலிந்தது- பிரகாச முள்ளதாகியவுலகம்—இல்லை-இல்லை--மீ- மேலாக—உயர்-உயர்ந்த —விசும்புளானேல் - தெய்வலோகத்தானாகில்—விசும்பினில்- அத் தெய்வலோகத்தைக்காட்டிலும்— சிறந்தது-சிறக்கப்பெற்றதாகிய வுலகம்—உண்டோ-இல்லை—பாதலத்துள்ளானாயில் - கீழுலகத்திரு ப்பவனாகில்—மேய-பொருந்திய—கீழுலகே - பாதாளவுலகமே— எல்லாஉலகினும்-உலகங்களனைத்தினுக்கும்—மேலதாம் - மேற்பட் டதாகும்—(எ-று.) (கருத்து) இவனிருக்குமுலகமெதுவோ அது வே எவ்வுலகினுஞ்சிறப்புற்றது என்பதாம். (௩௰௧)

யாவனோவிவனென்றெண்ணியிருநிலத்திலங்குபைம்பொற் *
* சேவடிபொருந்துநீராற்றேவரினொருவனல்லன் ........*
றூவியஞ்சிறையவன்னஞ்சொல்லியவனப்புவாய்ந்த.........*
காவலனுங்கொலென்னக்கருதியொன்றுரைக்கலுற்றார்......*

(இ-ள்) யாவனோவிவனென்று - இவனெவனோவென்று — எண் ணி-சிந்தித்து—இருநிலத்து-பெரியபூமியிடத்து-- இலங்கு-பிரகா சிக்கின்ற—பைம்பொன் - பசியபொற்கழலணிந்த—சேவடி- சிவந் தபாதங்கள்—பொருந்துநீரால்- பொருந்துகின்றதன்மையால்— தேவரின்-தேவர்க்கூட்டத்துள்—ஒருவனல்லன்-ஒருத்தனல்லனாகும் —தூவி-தூவியென்னும்பெயரைத்தரித்த—அம்-அழகிய— சிறை ய-சிறகுள்ள—அன்னம்-அன்னப்புள்ளானது—சொல்லிய- முன்பு சொல்லிய—வனப்புவாய்ந்த-அழகுபெற்ற—காவலனுங்கொலென் ன-அரசனாகுமென்று—கருதி-நினைத்து— ஒன்று-ஒருவார்த்தை— உரைக்கலுற்றார்-(தோழிகள்)சொல்லத்தொடங்கினார்கள்—(எ-று) [* அகப்பொருள்விளக்கம்.எழுதியவல்லியுந்தொழில்புனைகலனுங் வாடியமலருங்கூடியவண்டு,நடைபயிலடியும்புடைபெயர்க்கண்ணு மச்சமும்பிறவுமவன்பானிகழுங், கச்சமிலையங்கடிவனவாகும், இவ் விதியால்நிலந்தோயும்-பாதங்கண்டு'தேவனல்லவெனல்.](கருத்து) இவன்தேவனல்ல, நளனென்று சொல்லத் தொடங்கினார்கள்.— என்பதாம். (௩௰௨)

கலைநிலாத்தவழுமாடக்கடிநகர்கடந்துபோந்த.... *
சிலைவலாய்நீயிங்கெய்தச்சிறப்புடைப்புவனந்தம்மிற் *
பொலிவிழந்திருந்ததெந்தப்புவனநீபொருளதாக... *
நலனுறுபுனிதமாயதெப்பெயர்நவிற்றுகென்றார்... *

(இ-ள்) கலைநிலா-கலைகணிறைந்தசந்திரன்---தவழும்-தவழ்கின்ற---மாடம்-உப்பரிகைகளையுடைய---கடிநகர்-காவலைப்பெற்றநகரத்தை---கடந்துபோந்த-கடந்துவந்த---சிலைவலாய்-விற்றொழிலில்வல்லவனே---நீயிங்கெய்த-நீயிங்கேவர---(உதனாலே) சிறப்புடைய-சிறப்பினையுற்ற---புவனந்தம்மில்-தேசங்களுக்குள்ளே---பொலிவிழந்து-அழகிழந்து---இருந்தது-இருக்கப்பெற்றது---எந்தப்புவனம்-எந்ததேசம்---நீபொருளாக-நின்னைப்பொருளாகவுடைய---நலனுறு-நன்மைபொருந்திய---புனிதமாயது-பரிசுத்தமானது---எப்பெயர்-எந்தப்பெயர்---நவிற்றுகென்றார்-(தோழிகள்)சொல்லென்றார்கள்---(எ-று) (கருத்து) தோழிகள்நளனைப்பார்த்து உமதுபேரென்ன ஊரென்ன என்றார்கள் என்பதாம். (௩௰௫)

கானமர்கரியகூந்தற்கன்னியரிவ்வாறோத..................*
தேனிமிர்தெரியல்வேய்ந்துசிலைத்தழும்பிருந்ததோளான் *
பானலங்கடந்ததீஞ்சொற்பைந்தொடிவதுவைவேட்டு......*
வானவர்விடுத்ததூதன்யானெனவழங்கலுற்றான்.......... *

(இ-ள்) கானமர்-வாசனைபொருந்திய---கரியகூந்தல்-கறுத்தகுழலையுடைய---கன்னியர்-மாதர்கள்---இவ்வாறோத-இப்படிச்சொல்ல---தேன்-வண்டுகள்---இமிர்-ஒலிக்கின்ற---தெரியல்-மாலையை---வேய்ந்து-தரித்து---சிலைத்தழும்பு-விற்றழும்பு---இருந்த-தங்கிய--தோளான்-தோளையுடையநளன்--பால்-பாலினது--நலங்கடந்த-நலத்தைச்செயித்த--தீஞ்சொல்-இனியசொற்களுள்ள--பைந்தொடி-தமயந்தி---வதுவைவேட்டு-நின்விவாகத்தையிச்சித்து---வானவர்-தேவர்களால்--விடுத்த-விடுக்கப்பட்ட--தூதன்யானென-தூதுவன்யானென்று--வழங்கலுற்றான்-சொல்லத்தொடங்கினான்.---(எ-று) (கருத்து) நளன்தேவர்கள்விட்டதூதன் யானென்றான் என்பதாம். (௩௰௪)

ஐந்தருநீழல்வேந்தனூர்கலிக்கிறைவன்வெய்ய... .....*
செந்தழற்கடவுடென்பாற்றிசையுறைதருமனின்னோர்,
பைந்தொடிநின்னைவேட்டுப்படைமதன்பகழிபாயக் *
சிந்தனைபிறிதாய்மாழ்கித்தெருமரலெய்துகின்றார்... *

(இ-ள்)ஐந்தருநீழல்வேந்தன்-இந்திரன்--ஆர்கலிக்கிறைவன்-வருணன்--வெய்ய-கொடிய--செந்தழற்கடவுள்-அக்கினிபகவான்--தென்பாற்றிசையுறை-தெற்குத்திக்கிலிருக்கின்ற--தருமன்-யமன்--இன்னோர்-ஆகியஇந்நால்வரும்--பைந்தொடி-தமயந்தி--நின்னைவேட்டு-உன்மேல்விருப்புற்று--படை-சேனைகளையுடைய--மதன்பகழி-மன்மதன்பாணங்கள்--பாய-தங்கண்மேற்றைக்க--(அதனால்) சிந்

தனை-மனம்--பிறிதாய்-வேறுபட்டு--மாழ்கி - மயங்கி--பெருமால் கழற்சியை--எய்துகின்றார்-அடைகின்றார்கள்---(எ-று) (கருத்து) இந்திரன், வருணன், அக்கினி-யமன்-இந்நால்வரும் தமயந்தியே, உன்னைவிரும்பி மன்மதபாணத்தால் வருந்துகின்றார்கள் என்றானன்.

இங்கிவர்தம்மையாசைக்கிறைவனொன்றறைவதெல்லாந் *
தங்கிய § திசையின்பேராற்சாற்றியமாற்றமன்றே... *
கொங்கவிழ்குழைபிற்றாவிக் குமிழ்மிசைமறியும்வேற்க
ணங்கலுழ்மேனியாய்நின் னாசையால்வந்ததாமால் ... *

(இ-ள்) இங்கு-இவ்விடத்தில்—இவர்தம்மை-இந்நால்வரையும்—ஆசைக்கிறைவனொன்று- ஆசைக்கரசனென்று—அறைவதெல்லாம்-சொல்லுவனைத்தும்— தங்கிய - இவர்களிருக்கின்ற— திசையின் பேரால் திக்கினதுபெயரினாலே — சாற்றிய- சொல்லப்பட்ட— மாற்றமன்று-சொல்லன்றாகும்— கொங்கு-வாசனை—அவிழ்- விரிகின்ற—குழையில்-காதணியில்—தாவி - பாய்ந்து—குமிழ் - குமிழம்பூவினது -- மிசை-மேற்பக்கத்தில்— மறியும் - மீளுகின்ற— வேற்கண-வேல்போன்றகண்களையுற்ற— அம் - அழகானது—கலுழ் ஒழுகுகின்ற--மேனியாய்-வடிவையுடையதமயந்தியே--நின்-உன்மேல்வைத்த— ஆசையால்-ஆசையினால்—வந்ததாம் - வந்ததாகும்——(எ-று)[§ தவலயாநந்கயஉறுப்பியல், விண்மண்புனலனல்வாயுதிசைமனங், காலமோடான்மாவொன்பதுபொருளிடம், இவ்விதியால்திசையிடப்பொருளென்றறிக.](கருத்து) தமயந்தியே! இந்நால்வரும் உன்மேல்வைத்த ஆசையினாலே ஆசைக்கிறைவரென்றபேர் பெற்றார்கள்.[ஆசை-என்பது-திசை-பொன்-அன்பு.]எ-ம்.(௱௰௬)

பற்றியகாமத்தீயாற்பைம்பொனாட்டமரர்க்கெல்லாங் *
கொற்றவன்வருந்தாவண்ணங் கொய்துகொய்தணையிற்
சேர்த்தே, யுற்றவர்வறுமைதீர்க்குமுயர்சினைத்தருக்களை
ந்தும், நற்றளிரின்மையாகிநல்குரவடைந்தமாதோ... *

(இ-ள்) பை-பசிய—பொன்னாடு- பொன்னுலகத்திருக்கின்ற—அமரர்க்கெல்லாம்-தேவரனைவர்க்கும்—கொற்றவன் - அரசனாகிய இந்திரன்—பற்றிய- தன்னைப்பற்றிய—காமத்தீயால் - காமாக்கினியால்—வருந்தாவண்ணம் - வருத்தப்படாதவிதம்—உற்றவர் - தம்மையடைந்தவர்களுடைய--வறுமை-இல்லாமையை--தீர்க்கும்-நீக்கும்—உயர்-உயர்ந்த—சினை - கிளைகளையுற்ற---தருக்களைந்தும்-பஞ்சதருக்களும்--கொய்துகொய்து-பறித்துப்பறித்து-- அணையிற்சேர்த்து-படுக்குமெத்தையிற்சேர்த்து---(அதனால்) நல்- நல்ல----தளிர்-தளிர்களை---இன்மையாகி- இல்லாமையாய்---நல்குரவு - வறு

மையை—அடைந்த-சேர்ந்தன—(எ-று) (கருத்து) இந்திரன் உன் மேல் விருப்பமுற்றடைந்தகாமந்தணிக்கும்பொருட்டடைந்தமுருக்கமு ந் தனழகிழந்தன என்பதாம். (௫௰௭)

கடிமலர்க்கூந்தனின்மேற்காதன்மீதூரநின்ற .......*
வடிதொழிற்கூற்றுமஞ்சவடர்கின்றனநங்கன்வெய்ய *
வடவையோடிகலுமுந்நீர்க்கிளைஞனையடம்வருத்தியாவுஞ்
சுடுதழற்கடவுண்மீதுஞ்சுட்டதுகாமத்தீய....... ..*

(இ-ள்) கடி-வாசனைபொருந்திய—மலர்-மலரையணிந்த—கூந்தல்-அளகபாரத்தையுற்றமடந்தை—நின்மேல் - உன்னிடத்தில்—காதல்-ஆசை—மீதூரநின்ற - அதிகரிக்கவிருந்த—வடிதொழில்-கொல்லுந்தொழிலையுடைய—கூற்றும் - யமனும்—அஞ்ச - பயங்கொள்ள—அநங்கன்-மன்மதனானவன்—அடர்கின்றான்-நெருங்குகின்றான்—வெய்ய-கொடிய—வடவையோடு - வடவைத்தீயுடனே—இகலும்-பகைகொள்ளும்—முந்நீர்க்கிளைஞனையும்-கடற்கரசனாகிய வருணனையும்—வருத்தி-வருத்தப்படுத்தி—யாவும்- எவற்றையும்—சுடு-சுடுகின்ற—தழற்கடவுண்மீதும் - அக்கினிபகவான்மேலும்—காமத்தீ-காமாக்கினி—சுட்டது-சுட்டது—(எ-று) (கருத்து) தாமத்தீயைப் பார்க்கிலுங்காமத்தீகொடிதென்பதாம். (௫௰௮)

முருக்கிதழணங்களாய்நின்முகிழ்முலைவேட்டனான்றே*
செருக்கிளரநங்கன்வாளிச்செழுமலர்வருத்தவாடி ...*
யிருத்தலாற்பழிச்சுகின்றோரேடவிழ்நறியபோதா ...*
லருச்சனைபுரியுந்தோறுமஞ்சுவரமரர்மாதோ... ...*

(இ-ள்) முருக்கு-முருக்கலரையொத்த—இதழ் - அதரத்தையுடைய—அணங்களாய்-தமயந்தி—நின் -உன்—முகிழ் - அரும்பையொத்த—முலை-ஸ்தனங்களை—வேட்டனான்றே - விரும்பியபொழுதே—செரு-போர்த்தொழிலில்—கிளர் - கிளர்ச்சியுள்ள—அநங்கன்-மன்மதனுடைய—வாளி-பாணங்களாகிய—செழுமலர் - செழுமையுள்ளமலர்கள் - வருத்த-வருத்தஞ்செய்ய—வாடி - வளைகளால்வாட்டமுற்று—இருத்தலால இருக்கையினால்—பழிச்சுகின்றோர் - பரவுகின்றவர்கள்—ஏடவிழ்-இதழ்கள்விரிந்த—நறியபோதால் - நல்லமணமுள்ளமலரால் — அருச்சனைபுரியுந்தோறும் - பூசைசெய்யுந்தோறும்—அமரர்-(அருகலிருக்குந்) தேவர்கள் — அஞ்சுவர்-பயங்கொள்ளுவார்கள்—(எ-று) (கருத்து) இந்திரன்மன்மதபாணத்தால்வருந்தியிருத்தலால்அவனைக்காணவருபவர்மலராலருச்சிக்குந்தோறும் அப்பாணமென்றுதேவர்பயப்படுவரென்பதாம்.

இன்னணந்தேவர்மாழாந்திருநிலவரைப்பிற்போந்துன் ... *
பொன்னவிர்திகலையார்ந்தபுணர்முலைப்போகம்வேட்ட ... *
முன்னமெத்தவஞ்செய்தாய்கொலிவையவே முறைமையென்
றான், கன்னல்வில்லொளித்துநின்றகாமனேயனையநீரான்...*

(இ-ள்) இன்னணம்-இவ்விதம்—தேவர்-தேவர்கள்—மாழாந்து-மயங்கி—இரு-பெரிய—நிலவரைப்பிற்போந்து-பூவுலகில்வந்து-உன்-உனது—பொன்-பொன்போலும்—அவிர்-விளங்குகின்ற—திகலையார்ந்த-தேமலாவிறையப்பெற்ற—புணர் - ஒன்றோடொன்றுநெருங்கிய—முலை-ஸ்தனங்களினுடைய—போகம்-போகத்தை—வேட்ப-விரும்ப—முன்னம்-முற்பிறப்பில்—எத்தவஞ்செய்தாய்கொல்—என்னதவஞ்செய்தனையோ - இவையவே—சம்மதிப்பதுவே-முறைமையென்றான்—கிரமமென்றான்-கன்னல்வில்—கருப்புவில்லை-ஒளித்துநின்ற—மறைத்துவைத்துநின்ற - காமனேயனைய—மன்மதனேயொத்த - நீரான்—தன்மையையுள்ள நளமஹாராஜன்(எ-று) (கருத்து)இந்திரன்முதலியோருன்னையிச்சிக்கநீமுன்னென்னதவஞ்செய்தாயோ! அவர்களுக்குச்சம்மதிப்பதே ஒழுங்கென்றான் என்பதாம். (௱உ௰)

என்றிவன்மொழிதலோடு மினையனேநளனென்றெண்ணி ...*
மன்றலங்குழலாணாணிவருத்தமோடெருத்தங்கோட்டி......*
நின்றனண்மருங்குசூழ்ந்ததோழியர்நிடதங்காக்கும்...... [ர்
வென்றிகொள்சுடர்வல்வேந்தற்கெதிர்மொழிவிளம்பலுற்றா

(இ-ள்) என்று-இப்படியென்று—இவன்-இந்தநளன் —மொழிதலோடும்-சொல்லியவளவில்—இனையனே- இவனே — நளனென்றெண்ணி- நளனென்றுநினைத்து—மன்றலங்குழலாள்-தமயந்தி—நாணி- நாணமடைந்து—வருத்தமோடு-வருத்தத்துடனே—எருத்தங்கோட்டி-தலையைவளைத்துக்கொண்டு—நின்றனள் -நின்றாள்—மருங்கு-பக்கத்தில்—சூழ்ந்த-சுற்றியிருக்கின்ற—தோழியர்- தோழிகள்--நிடதங்காக்கும்-நிடததேசத்தைப்புரக்கின்ற- வென்றிகொள்-வெற்றியைக்கொண்ட--சுடர்-கிரணங்களையுடைய--வேல் - வேற்படையையேந்திய —வேந்தற்கு-நளமஹாராஜனுக்கு—எதிர்மொழி-எதிருத்தரத்தை--விளம்பலுற்றார் - சொல்லத்தொடங்கினார்கள் (எ-று.)[கருத்து]தமயந்திஇவனேநளனென்று நாணிநின்றாள். நளனுக்குத்தோழியர்சொல்லத்தொடங்கினார்கள் என்பதாம். (௱உக)

ஆற்றல்சானளனேயன்றியாருயிர்பிறிதென்றென்னும்*
வேற்றடங்கண்ணினுடன்மெய்பதைத்தாவிசோரச்...*
சாற்றியமாற்றந்தன்னாற்றழலுமிழ்ந்தறுகட்பேழ்வாய்க்,
கூற்றுவன்றூதனென்றுகூறியநியற்கையாமே... .... *

(இ-ள்) ஆற்றல்சால்-வலிமைமிக்க—நளனேயன்றி-நளமஹாராஜனேயல்லாமல்--ஆருயிர்-நிறைந்தஆவியானது--பிறிதென்றெண்ணுமு-வேறொன்றில்லையென்கின்ற--வேற்றடங்கண்ணினுடன்-தமயந்தியினது--மெய்பனைத்து-தேகநடுங்கி--ஆவி-உயிரானது--சோர-சோர்வையடைய--சாற்றிய-நீசொல்லிய--மாற்றந்தன்னுல்-சொல்லினுல்--தழலுமிழ்-நெருப்பையுமிழ்கின்ற--தறுகண்-கொடியகண்களையும்—பேழ்வாய்-பெருவாயையுமுற்ற—கூற்றுவன்றாகனென்று-யமதூதனென்று—கூறியது-(முன்) சொல்லியது — இயற்கையாம்-(உனக்குத் தகுதியாகும்—(எ-று) (கருத்து நளனே தன்னுயிரொன்று நினைத்திருக்குந் தமயந்தி உயிர்சோர நீசொல்லியசொல்லால் யமதூதனென்பது சரியே என்றார்கள் என்பதாம்.

வையகமொருகோலோச்சிவான்புகழ் * நிடதங்காக்கு......*
மையனைமணப்பதன்றிபரிமதர்நெடுங்கட்செவ்வாய்த்..... *
தையலவேறொருவர்நாமஞ்சாற்றினுமாற்றாளாகி .........*
வெய்யசெந்தழலின்மூழ்கிவிளிவதற்கையமின்றே.... .... ௯௨

(இ-ள்) வையகம்-பூவுலகத்தை—ஒருகோலோச்சி-தனிச்செங்கோல்செலுத்தி—வான்புகழ்-மிகுந்தபுகழையுடைய—நிடதங்காக்கும்-நிடததேசத்தைப்பாக்கும்—ஐயனை-நளமஹாராஜனை—மணப்பதன்றி-விவாகஞ்செய்துகொள்வதல்லாமல்—அரி-செவ்வரிபரந்த—மதர்-களிப்பையுடைய—நெடுங்கண்-நெடியகண்களையும்—செவ்வாய்-சிவந்தவாயினையுமுடைய—தையல்-தமயந்தியானவள்—வேறொருவர்நாமம்-வேறொருவர்பெயரை—சாற்றினும்-சொசொல்லினும்—ஆற்றாளாகி-பொறுக்கமாட்டாதவளாய், வெய்ய-கொடிய—செந்தழலில்-நெருப்பினில்—மூழ்கி-முழுகி—விளிவதற்கு-இறப்பதற்கு—ஐயமின்று-ஐயமில்லை—(எ-று) * குவலயாநந்தம், ஒருபொருள்விளக்குமிரு குறிகாரண-மாகியவினை முதல்விசேடியமாகும்-இவ்விதியால் நிடதங்காக்குமையன் விசேடியமாம்-(கருத்து) தமயந்தி நளனை விவாகஞ்செய்வதன்றி வேறொருவர்பெயரைச்சொன்னாலுமக்கினியிலவிழுந்திறப்பாள் என்பதாம் (௱உரு)

என்றவர்மொழியவேந்தனியம்புவானெரியின்வீழ்ந்து .....*
பொன்றில்வெங்கனலிகன்னைப்புணர்ந்தகாமபுகன்றசெந்தி*
யன்றிவார்புனலின்வீழ்ந்துள்ளாருயிர்விடுத்தாளேனுந் ... *
துன்றுசீர்வருணன்றன்னைத்தோய்ந்ததாய்விளையுமன்றே *

(இ-ள்) என்று-இப்படியென்று—அவர்மொழிய-அந்தத்தோழிகள்சொல்ல—வேந்தன்-நளமஹாராஜன்—இயம்புவான்-சொல்லுவான்-எரியின்வீழ்ந்துபோன்றில-நெருப்பிலவீழ்ந்திறந்தால்—

வெங்கனலிதன்னை-அக்கினிபகவானை-புணர்ந்ததாம்-கூடியதாகும் — புகன்ற-(இப்பொழுது)சொல்லிய— செந்தீயன்றி- அக்கினியல்லாமல்—வார்-நெடிய—புனலின்வீழ்ந்து - நீரிலேவிழுந்து—உள்-உள்ளே—ஆர்-நிறைந்த— உயிர்விடுத்தாளேனும் - உயிரைவிட்டாளாறுலும்—துன்று-நெருங்கிய—சீர்-சிறப்பையுடைய — வருணன்றன்னை-கடலரசனை—தோய்ந்ததாய்விளையும்-கலந்ததாகிவிளையும்(எ-று) (கருத்து) அக்கினியில்வீழ்ந்திறந்தால்அக்கினையைச்சேர்ந்ததாயிருக்கும், நீரிலவீழ்ந்திறந்தால் வருணனைச் சேர்ந்ததாயிருக்கும் ,எ-ம். (௱உ௪)

அன்றியுங்கனலிசான்றுயல்லதுவதுவையாற்றற் ...... ......*
கொன்றுமோவருணனெவ்வாதுதகமோடளிக்குந்தூய ...*
மன்றலெவ்வாறுமுற்றும்வானவரருளில்லாமற்...... ... ..*
றுன்றுநீர்ப்புவியில்யார்க்குஞ்சூழ்வினைமுடிக்கலாமே... *

(இ-ள்) அன்றியும்-அப்படியல்லாமலும்—கனலிசான்றுயல்லது அக்கினிசாக்ஷியாயல்லாமல்—வதுவையாற்றற்கு- விவாகஞ்செய்தற்கு—ஒன்றுமோ-பொருந்துமோ—வருணன்-கடலரசன் — ஒவ்வாது-சம்மதியாமல்—உதகமோடளிக்கும்- நீரோடுகொடுப்பதாகிய — தூய-சுத்தமாகிய—மன்றல்-விவாகம்— எவ்வாறுமுற்றும்-எவ்வழிமுடியும்(ஆதலால்)—வானவர்-தேவர்களுடைய — அருளில்லாமல்-கிருபையில்லாமல்— துன்றுநீர்-கடல்சூழ்ந்த—புவியில்- பூமியிலே—யார்க்கும்-எப்படிப்பட்டவர்களுக்கும்—சூழ்வினை - நினைக்கப்பட்டகருமங்களை—முடிக்கலாமே- முடிக்கக்கூடுமே—— (எ-று) (கருத்து)எப்படிப்பட்டவர்க்கும் தீயுநீருமில்லாமல் விவாகமுடியாது இதற்கிவர்களருள்வேண்டுமென்றுனென்பதாம்(௱உ௫)

*வேயினைப்பழித்தமென்றோள்வேற்றடங்கண்ணினுட ... *
னேயபேரழகுமாந்தரிருகணுனோக்கவற்றோ........ ... ... *
தீயுமிழ்வைரவொள்வாளேந்தியதேவர்கோமா... ... ......*
னுயிரங்கண்களானுநோக்குதற்கமைந்ததன்றே...........*

(இ-ள்) வேயினை-மூங்கிலை—பழித்த-நிந்தித்த—மெல்- மெல்லிய—தோள்-தோளையுடைய — வேற்றடங்கண்ணினுடன் - தமயந்திபிடத்து—எய-பொருந்திய—பேரழகு-மிகுந்த அழகானது—மாந்தர்-மனிதரின்—இருகணுல்-இரண்டுவிழிகளால்— நோக்கவற்றோ-பார்க்கவல்லதோ— தீயுமிழ்-நெருப்பையுமிழ்கின்ற — வைரவொள்வாள்-வச்சிராயுதத்தை---ஏந்திய- தாங்கிய---தேவர்கோமான்-இந்திரனுனவன்---ஆயிரங்கண்களாலும் - ஆயிரம்விழிகளாலும் —நோக்குதற்கு-பார்க்கும்பொருட்டு---அமைந்தது-பொருந்திய

தாகும்—(எ-று) *அகத்தியம்- பலவகையுவமமும்பண்புமடையாய் நலனுறவுரைக்கினவையில்விசேடமாம்- இவ்விதியால் வேயிணைப்ப ழித்தமென்றேன் விசேடமாம் (கருத்து) இந்திரன் ஆயிரங்கண்க ளாற்பார்த்தற்கமைந்த தமயந்தியழகை மனிதர்க ளிருகண்களாற் பார்த்தல் பயன்படாது,எ-ம். (௱௨௬)

வெற்றிறற்களிதல்யானைவிதர்ப்பர்கோனளித்தமாதைத்... *
தந்துயிரளித்தியென்னத்தனியிருவிசும்புகாக்கு.... ......*
மிந்திரன்கேட்டபோதிலெண்ணியவனைத்துநல்கு.......... *
மைந்தருவழங்கினும்மாலன்றெனமறுக்கலாமோ........ *

(இ-ள்) தனி-ஒப்பற்ற—இருவிசும்பு- பெரியவிண்ணுலகத்தை, காக்கும்-காக்கின்ற—இந்திரன்-இந்திரனானவன்—வெற்றிறல்- வெவ்வியவலிமைபெற்ற—களி களிப்புள்ள—நல் - நல்ல—யானை- யானையையுடைய—விதர்ப்பர்கோன்-வீமனானவன்—அளித்த- பெற்ற—மாதை-தமயந்தியை—தந்து-கொடுத்து--உயிர் - என்னுயிரை—அளித்தியென்ன-காப்பாற்றென்று—கேட்டபோதில்- கேட்டாலப்பொழுது—எண்ணியவனைத்தும்-நினைத்தவைகளையெல்லாம்—நல்கும்-தருகின்ற—ஐந்தரு-பஞ்சதருக்கள்—வழங்கின் - கொடுத்தால்—நும்மால்-உங்களால்—அன்றென - அன்றென்று—மறுக்கலாமோ- மறுக்கக்கூடுமோ—(எ-று) (கருத்து) இந்திரன் ஐந்தருக்களைக்கொடுத்துத் தமயந்தியைத்தாவென்றால் உங்களால்மறுக்கக்கூடுமோ,எ-ம். (௱௨௭)

என்றிவன்புகன்றமாற்றமிருசெவிவெதுப்பக்கேட்டு...... *
நின்றுளம்பதைப்பவாடிநெட்டுயிர்ப்போடுஞ்சோரு...... *
மன்றலங்குழலினுடன்மதர்நெடுங்கயற்கணாலி..........*
குன்றெனப்பணைத்துவீங்குங்குவிமுலைவார்ந்தவன்றே .. *

(இ-ள்) என்று-இப்படியென்று—இவன்-இந்நளனானவன்—புகன்றமாற்றம்-சொன்னசொற்கள்—இருசெவி- இரண்டுகாதுகளையும்—வெதுப்ப-சுடுதலைச்செய்ய—கேட்டு-அவைகளைக்கேள்விப்பட்டு—நின்று-நின்று—உளம்-மனமானது—பதைப்ப-பதைப்படைய—வாடி- வாட்டமுற்று—நெட்டுயிர்ப்போடும் - பெருமூச்சுடனே—சோரும்- சோர்வையடைகின்ற—மன்றலங்குழலினுடன்-தமயந்தியின்—மதர்-களிப்பையுடைய—நெடுங்கயற்கண் - நெடியகயல்போன்றகண்களினின்றும்—ஆலி- நீர்த்துளிகள்—குன்றென-மலைகளென்றுசொல்ல—பணைத்து-பருத்து—வீங்கும்-வீங்கிய—குவிமுலை-குவிந்தஸ்தனங்களின்மேல்--வார்ந்த-ஒழுகின(எ-று) (கருத்து) நளன்சொன்னசொல்லைத் தமயந்திகேட்டு அவளிருகண்ணீர்த்துளிகளிருமுலைமேல் விழுந்தன என்பதாம். (௱௨௮)

மாதுகண்பனிப்பநோக்கித்தோழியர்மாழாந்துள்ளம்......✻
பேதுறவெய்திநின்றபெய்வளைத்துயரமெல்லாந்............✻
தூதுநாம்விடுத்தவன்னஞ்சொல்லியசென்னிற்சற்று...... ✻
மாதரமின்றியிவ்வாறுரைக்குமோவரசனென்றார்... .... ✻

(இ-ள்) மாது-தமயந்தியின்—கண்-கண்கள்—பனிப்ப- நீரைச் சொரிய—நோக்கி-பார்த்து—தோழியர்-தோழிகள்—மாழாந்து-மயங்கி—உள்ளம்-மனமானது—பேதுறவெய்தி- கவலையடைந்து—நின்றபெய்வளை-நிற்கின்றதமயந்தியின்—துயரமெல்லாம்-துன்பமனைத்தையும்—தூது-தூதாக—நாம்விடுத்த-நம்மால்விடுக்கப்பட்ட—அன்னம்-அன்னப்பறவையானது—சொல்லியசென்னில்-சொல்லியிருந்ததானால்—சற்றும் - கொஞ்சமும்—ஆதரமின்றி-ஆசையில்லாமல்—இவ்வாறு-இப்படி—அரசன்- நளனனவன்--உரைக்குமோவென்றார்-சொல்லுவானோவென்றார்கள்--(எ-று)(கருத்து) தோழிகள் தூதுசென்றவன்னம் தமயந்தி துயரத்தைச்சொல்லியிருக்குமானால்நளனிப்படிச்சொல்வானோவென்றார்கள்,எ-ம்.௱௨௬.

இன்னணமணங்கனுமாயமுமிரங்கநோக்கி...............✻
மன்னனுமறிவுதீர்ந்துமனஞ்சிறிதயரும்வேலைப்............✻
பொன்னிறப்பவளச்செவ்வாய்ப்பொற்புறுபசியமென்சூட் ✻
டன்னமும்விசும்பினீங்கியவ்வுழியடைந்ததன்றே......... ✻

(இ-ள்) இன்னணம்-இப்படி—அணங்கனும் - தமயந்தியும்—ஆயமும்-தோழிகளும்—இரங்கநோக்கி-வருந்துவதைப்பார்த்து—மன்னனும்-நளனும்—அறிவுதீர்ந்து- மதிமயங்கி—மனம் - மனமானது—சிறிது-கொஞ்சம்—அயரும்வேலை - தளர்வடையும்போது—பொன்னிறம்-பொன்போன்றநிறத்தையும்—பவளம் - பவளம்போன்ற—செவ்வாய்-சிவந்தவாயையும்—பொற்புறு- அழகான்மிகுந்த—பசிய-பசுமைபொருந்திய—மென்சூட்டு- மெலியவுச்சிக்கொண்டையையுமுடைய—அன்னமும்- அன்னப்பறவையும்--விசும்பினீங்கி-ஆகாயத்தினின்றுநீங்கி--அவ்வுழி-அந்தவிடத்தில்---அடைந்தது- வந்தது—(எ-று) (கருத்து) இப்படித் தமயந்தியுந்தோழிகளும் நளனும் அறிவுகலங்கி வருந்தும்வேளையில் அன்னம்வந்தது,எ-ம். (௱௨௭)

எய்தியதூவியன்னமின்னகைப்பவளச்செவ்வாய்............✻
மையவாங்கரியகூந்தல்வாண்முகமினிதுநோக்கி............✻
நெய்தவழ்புலவுவைவேனிடதர்கோனிவனேயுள்ளத் . ... ✻
தையுறேல்கமலப்போதிலணங்கிற்குமணங்குபோல்வாய்...✻

இ-ள்) எய்திய-அங்குவந்த—தூவி - இறகையுடைய—அன்னம்-அன்னப்பறவை—இன்னகை- இனியநகையையும்—பவளச்செவ்வாய்-பவளம்போன்றசெவ்வாயையும்—மை- மேகங்கள்—அவாம்- விரும்புகின்ற—கரியகூந்தல்-கறுத்தகுழலையுமுடையதமயந்தியினது—வாள்-ஒளிபொருந்திய—முகம்- திருமுகத்தை—இனிது நோக்கி- இனிதாகப்பார்த்து—கமலப்போதிலணங்கிற்கும் - தாமரைமலரிலிருக்குந்திருமாதுக்கும்—அணங்குபோல்வாய் - திருமாதுபோன்றதமயந்தியே—நெய்தவழ்- நிணந்தவழ்கின்ற—புலவு-புலாலுற்றம்பொருந்திய--வைவேல் - கூரியவேலையேந்திய---நிடதர்கோனிவனே-இவனேநளமஹாராஜன்--உள்ளத்து-மனத்தில் - ஐயுறேல்- ஐயப்படவேண்டாம்---(எ-று) * அகத்தியம் - அவனிவனென்பதுவிறுவுத்தரமே,இவ்விதியால்தமயந்திமுன்கேட்டதற்குவிறுவுத்தரமறிக, (கருத்து) அன்னமானது தமயந்தியைப்பார்த்து இவனேநளமஹாராஜன் என்றது,எ-ம். (௱௯௧)

மழைமதர்நெடுங்கட்செவ்வாய்வளர்முலைமடந்தாய்நின்மேல்
விழைவிகந்துரைத்தானல்லன்விண்ணவர்க்கிசைந்தமாற்றம் *
பழுதுறுமென்னுமாற்றாற்பகர்ந்தனன்பரிதிவேலா...... *
னழுதகங்குழைந்திடேலென்றன்பினாலறைந்ததன்றே... *

(இ-ள்) மழை-குளிர்ச்சிபொருந்திய--மதர் - களிப்பையுடைய---நெடுங்கண்-நெடியகண்களையும்---செவ்வாய்- சிவந்தவாயையும்---வளர்முலை-வளர்கின்றஸ்தனங்களையுமுடைய---மடந்தாய் - தமயந்தியே---பரிதிவேலான்-நளமஹாராஜன்---நின்மேல் - உன்னிடத்தில்---விழைவிகந்து-ஆசைநீங்கி--உரைத்தானல்லன்-சொன்னவனல்லனாகும்---விண்ணவர்க்கு-தேவர்களுக்கு--- இசைந்த தூதின் பொருட்டுச்-சம்மதித்தமாற்றம்----சொல் பழுதுறுமென்னுமாற்றால்- பழுதாகுமென்கின்றபடியால் ----- பகர்ந்தனன்-(இவ்வாறு) பேசினான்--(அதனால்)அழுது-நீயழுது-- அகங்குழைந்திடேலென்று-மனங்குழையவேண்டாமென்று----- அன்பினால்-விருப்பத்தினால்----(அன்னம்)அறைந்தது-சொல்லியது---(எ-று) (கருத்து) தமயந்தியே,நளனுன்மேல் ஆசைவையாது சொன்னவனல்ல தூதுக்குப் பழுதில்லாமற் சொன்னான் அழாதேயென்று சொல்லிற்று என்பதாம். (௱௯௨)

வடிவுகிரனையவுண்கண்மடந்தையோடிவ்வாறோதிக்... *
கடகளிறென்னநின்றகாளைதன்முகத்தைநோக்கா... *
வுடையபேரறிவாற்காமமுள்ளமைத்தின்னகூறிற், கொ
டிநெடுந்தானைவேந்தேகோற்றொடியாற்றுங்கொல்லோ

(இ-ள்) வடு-மாவடுவினது---வகிரனைய-பிளப்பையொத்த--உண்கண் - மையுண்டகண்களையுற்ற--- மடந்தையோடு - தமயந்தியுடனே---இவ்வாறோதி-இவ்விதமாகச்சொல்லி---கடகளிறென்னநின்ற-மதயானையென்னும்படிநின்ற---காளைதன்முகத்தை- அரசனது முகத்தை--நோக்கா-பார்த்து---கொடிநெடுந்தானைவேந்தே- நளமஹாராஜனே---உடையபேரறிவால் - பேரறிவுடைமையால்---காமம்-ஆசையை---உள்ளமைத்து-உள்ளேயடக்கி---இன்னகூறில்- இப்படிப்பட்டவார்த்தைகளைப்பேசினால்---கோற்றொடி-தமயந்தி---ஆற்றுங்கொல்லோ-பொறுப்பாளோ—(எ-று) (கருத்து) அன்னம் நளனைப்பார்த்துத்தமயந்திக்கிவ்வாறு சொன்னாற்பொறுப்பாளோ என்றது என்பதாம். (௱௫௩)

மாங்குயிற்குதலைப்பேதைமனமுநீயிசைந்தவண்ணந்......*
தீங்கறவுரைத்தவாறுந்தேவர்மற் * றுணராரல்ல..........*
ரீங்கினியுரைப்பதென்னையிவ்வயினிகழ்ந்தவெல்லா........ *
மாங்கவர்தம்பாலேகியறைதியென்றறைந்ததன்னம்...... *

(இ-ள்) மாங்குயில்-மாமரத்திலிருக்குங்குயிற்சொல்லையொத்த---குதலை-மழலைச்சொல்லையுடைய---பேதைமனமும் - தமயந்தியினதுமனமும்---நீயிசைந்தவண்ணம்- நீசம்மதித்துவந்தபடி---தீங்கற தீங்குநீங்க--உரைத்தவாறும்- சொல்லியவிதமும்---தேவர்-தேவர்கள்---உணராரல்லர்-அறியாதவர்களல்லர்---ஈங்கு- இவ்விடத்தில்---இனியுரைப்பதென்னை- இனிப்பேசவேண்டுவதென்ன---இவ்வயின்-இவ்விடத்திலே---நிகழ்ந்தவெல்லாம்-நடந்தவையனைத்தும்---ஆங்கவர்தம்பால்-அத்தேவரிடத்துக்கு---ஏகி-போய்---அறைதியென்று - நீசொல்லுவாயாகவென்று---அன்னம்- அன்னப்பறவை--அறைந்தது-சொல்லியது---(எ-று) [*அகத்தியம்-திரிகாலமறிதறெய்வதவியற்கை, இவ்விதியால் எல்லாந் தேவர்களறிவர்.](கருத்து) இங்குநடந்தவையெல்லாந்தேவர்களறிவார்கள்நடந்தபடி நீபோய்சொல்லென்றது,எ-ம். (௱௫௪)

அவ்வுரைகேட்டலோடுமடையலர்ச்செகுக்கும்வேலான்
மவ்வலங்குழலினுடன்வனவலியினிதிறேர்ந்து... [றுக்
செவ்விதின்மனமுங்கண்ணுந் தெரிவைமேற்கிடப்பமா
கவ்வைகொள்வாயினீங்கிவிஞ்சையிற்கரந்துபோனான்*

(இ-ள்) அவ்வுரை- அந்தவார்த்தையை--கேட்டலோடும்-கேட்டவளவில்--அடையலர்-சத்துருக்களை---செகுக்கும்- கொல்லுகின்ற---வேலான்-வேற்படையையுடையநளன்--மவ்வலங்குழலினுடன்-தமயந்தியினது---மனவலி-நெஞ்சினதுவலிமையை--இனிதிறேர்ந்து-இனிதினறிந்து---செவ்விதின்-செம்மையையுற்ற---மனமும்-த

ன்மனத்தையும்---கண்ணும் - கண்களையும்---தெரிவைமேற்கிடப்ப-அத்தமயந்தியின்மேலிருக்கவைத்து---மாறு - நீங்காத---கௌவைகொள்-ஒலித்தலைக்கொண்ட—வாயினீங்கி-வாயிலைக்கடந்து---விஞ்சையின்-மந்திரத்திறல்---காந்துபோனான் - ஒளித்துச்சென்றான்—(எ-று) (கருத்து) நளன்கண்களு மனமுந் தமயந்தியிடத்திருக்க வுருவமறைத்து அரூபமாகப்போனான் என்பதாம்.(௱௯௫)

காரிகையுளமுநாணுங்கவர்ந்தனன்கரந்துபோய........ *
மூரிவெஞ்சிலைக்கைவீரன்கடவுளர்முன்னரேகி............ *
நேரிழைதன்பாற்றூதுபோயபினிகழ்ந்தவெல்லாஞ்... [தார்
சோர்வுறா துரைத்தான்றேவர் தோன்றல்பான் மகிழ்ச்சிகூர்ந்

(இ-ள்) காரிகை-தமயந்தியின்--உளமும்-மனத்தையும்--நாணும்-நாணையும்---கவர்ந்தனன் - கொள்ளைகொண்டவனாகி---கரந்துபோய-மறைந்துசென்ற---மூரி- வலிமைபெற்ற---வெஞ்சிலைக்கைவீரன்-நளமஹாராஜன்--கடவுளர்முன்னர் - தேவர்களெதிரே---ஏகி-சென்று---நேரிழைதன்பால்-தமயந்தியினிடத்து---தூதுபோயபின்-தூதுபோனபின்பு---நிகழ்ந்தவெல்லாம்- நடந்தவைகளனைத்தையும்---சோர்வுறாது-குறைவுபடாமல்---உரைத்தான் - சொல்லினான்---தேவர்- தேவர்கள்---தோன்றல்பால் - அந்நளமஹாராஜனிடத்தில்---மகிழ்ச்சிகூர்ந்தார்-உவகையடைந்தார்கள்(எ-று) (கருத்து) நளன் தேவர்கள்முன்சென்று தமயந்திசொன்னவையெல்லாம் சொன்னான்தேவர்கள் நளனிடத்தில்மகிழ்ச்சிகூர்ந்தார்கள்என்பதாம்

நளன்றூதுப்படலம்-முற்றிற்று.

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

# சுயம்வரப்படலம்.



சுயம்வரமாவது, அரசமங்கையானவள்-தனக்குமூத்தோர்கள் தனைவிழைந்துவந்த அநேகஅரசர்களை ஏககாலத்தில்வருவிக்கஅவரிற் றனக்கிசைந்த ஒருவனுக்குத்தானேமாலையிட்டுத் தலைவனாகக் கொள்ளுதலாம்.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.)

இன்னவைநிகழும்வேலையெழுகடல்வளைப்பின்மேவு........ *
மன்னவர்குழாமும்விண்ணோர்தொகுதியுமணிச்செஞ்சூட்டுப்
பன்னகநாட்டுவேந்தர்வெள்ளமும்பரித்தேர்வீமன்......... *
கன்னியம்புரிசைசூழ்ந்தகடிநகர்க்கெழுந்தவன்றே......... *

(இ-ள்) இன்னவை-இப்படிப்பட்டவைகள்---நிகழும்வேலை-நடக்கின்றபொழுது--- எழுகடல்வரைப்பின்மேவும்-எழுகடல்சூழ்ந்த தீவுகளிலிருக்கின்ற---மன்னவர்குழாமும் - அரசர்கூட்டமும்---விண்ணோர்தொகுதியும்-தேவர்கூட்டமும்---மணி - இரத்நங்களாகிய---செஞ்சுட்டு சிவந்தசூட்டையுடைய---பன்னகநாட்டு - நாகலோகத்துள்ள---வேந்தர்வெள்ளமும்-அரசர்கள்கூட்டமும்---பரித்தேர்-குதிரைகட்டியதேரோனும்---வீமன்-வீமராஜனது---கன்னி - அழிவில்லாத----அம்-அழகிய---புரிசைசூழ்ந்த- மதிலாற்சூழப்பட்ட--கடிநகர்க்கு-காவலுள்ள குண்டினபுரத்துக்கு-- எழுந்த-எழுந்தன--(எ-று.) (கருத்து) அரசர் கூட்டங்களும் தேவர் கூட்டங்களும் நாகலோகத்தரசர்கூட்டங்களும் குண்டினபுரத்திற் செழுந்தன என்பதாம். (க)

பண்ணமைகலினப்பாய்மாபசியபொற்கொடிஞ்சித்திண்டேர்
கண்ணழற்சீற்றத்துப்பிற்கடாம்பொழிகளிநல்யானை...... *
மண்ணமைமுழவுத்திண்டோள்வாகைவேலுழவரீட்ட... . *
மெண்ணிடவிடமொன்றின்றியெங்கணும்பரந்தவன்றே... *

(இ-ள்) பண்ணமை-கல்லணையமைந்த--கலினம்- கடிவாளம்பெற்ற--பாய்-தாவுகின்ற---மா- குதிரைகளும்---பசியபொன் - பசியபொன்னாற்செய்த--கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய--திண்-வலிமைபெற்ற--தேர்-தேர்களும்--கண்-கண்களில்-- அழலை-தீயையும்--சீற்றத்துப்பின் - மிகுந்த கோபத்தைப் பொருந்திய---கடாம்பொழி-மதம்பொழிகின்ற--களிநல்யானை-களிப்புள்ளநல்லயானைகளும--மண்ணமை-ஒப்பனையமைந்த-- முழவு-மத்தளப்போன்ற---திண்டோள்-வலிமைபெற்றபுயங்களையும்--வாகைவேல் - வெற்றிபெற்றவேலையுமுடைய--உழவரீட்டம்-காலாள்கள்கூட்டமும்--எண்ணிட-எண்ணிபிடதற்கு--இடமொன்றின்றி - வெற்றிடமொன்றுமில்லாமல--எங்கணும்-எவ்விடங்களிலும்--பரந்த - பரவின---(எ-று) கருத்து. குதிரைகளும், தேர்களும், யானைகளும், காலாள்களும், எங்கும் பரவின, எ-ம். (உ)

§ கொட்புளைக்கலினமாவின்குரத்துகளெழுந்துவிம்மி......*
வையகமுழுதுஞ்சூழ்போய்மறிகடற்கிடங்குதூர்த்து ..... *
மொய்ம்பெருதசலதம்தாமுமாணியெண்டிசையுங்காக்குந்...*
கொய்யின்மாமுகத்தயானைக்கவுட்குழிதூர்த்தவன்றே ..... *

(இ-ள்) கொய்-கொய்யப்பட்ட--உளை- புறமயிர்பொருந்திய--கலினமாவின்-கடிவாளம்பூண்டகுதிரைகளின்--குரத்துகள்- குளம்புபட்டுண்டாகும்புழுதிகள்--எழுந்து-எழும்பி--விம்மி- பரவி--வைய

முழுதும்-பூவுலகமுழுவதும்--சூழ்போய்- வளைத்துக்கொண்டு--மறிகடல்-மடங்குகின்ற அலைகளையுடையகடலாகிய--கிடங்கு- அகழை--தூர்த்து-தூர்த்துவிட்டு--மொய்பெறாது-போர்பெறாமல்--அசலத்தோடுமாணி- குலகிரியுடன்மாறுகொண்டு--எண்டிசையுங்காக்கும்-திசைகளெட்டையும்புரக்கின்ற--தொய்யில் - சிந்துரமெழுதப்பெற்ற--மா-மகத்தாகிய--முகத்தயானை - முகத்தையுடையயானைகளின்--கவுட்குழி-கன்னத்துளைகளை--தூர்தத- தூர்த்தன--(எ-று) § தொன்னூல்விளக்கம் - சாதிநிலநிறந்தருநாளிராசிகோளோதினராறுமொவ்வொருபாவிற்றே யாப்பருங்கலமேற்கோள்-வெண்பாமுதலாநால்வகைப்பாவு- மெஞ்சாநாற்பால்வருணர்க்குரிய-பாவினதியற்கையுமதனேரற்கே-இவ்விதியால் இச்செய்யுளாசிரியவிருத்தம் அரசசாதி. (கருத்து) குதிரைகளின்குளம்பாலுண்டாகும்புழுதிகள் கடலையுந்தூர்த்துஅட்டகஜங்களினகவுட்குழிகளையுந்தூர்த்தன என்பதாம். (௫)

*மண்ணகவரைப்பின்வேந்தர்வரைபுயத்தெழுதுசாந்தம் *
விண்ணகத்தமரர்மார்பங்கமழ்ந்தனவிண்ணோர்வேய்ந்த...*
தண்ணறவொழுகுமன்றற்றருமலர்ப்பசும்பொற்றாது.....*
கண்ணகன்ஞாலங்காக்கும்வேந்தர்மெய்கமழ்ந்தமாதோ...*

(இ-ள்)மண்ணகவரைப்பின்-பூவுலகத்திடத்திருக்கின்ற--வேந்தர்-அரசர்களின்--வரைப்புயத்து- மலைகளையொத்ததோள்களில்--எழுது-தீரியக்கோலாற்றீட்டிய--சாந்தம் - சந்தனங்கள்--விண்ணகத்து-ஆகாயத்திடத்திருக்கின்ற--அமரர்-தேவர்களது--மார்பம்- மார்பிலே--கமழ்ந்தன-மணந்தன--விண்ணோர்- தேவர்கள்--வேய்ந்த-தரித்த--தண்-குளிர்ச்சிபொருந்திய--நறவொழுகு- தேனொழுகுகின்ற--மன்றல்-வாசனைபொருந்திய--தருமலர் - பஞ்சதருக்களினுடையமலர்களின்--பொற்றாது-மகரந்தங்கள்--கண்ணகல- இடமகன்ற--ஞாலங்காக்கும்-பூமியைப்புரக்கின்ற--வேந்தர்மெய்- அரசர்கள்தமதுதேகத்தில்--கமழ்ந்த-மணந்தன--(எ-று) * தருக்கசங்கிரகம்-கூ-சூ-மண்ணெனப்படுவது நாற்றமுடைத்தாய் - நிலைநிலையில்லதெனவிருவகைத்தே-இவ்விதியால் மண்ணியல்பறிக-(கருத்து)அரசர்கள் தோட்களிலணிந்த சந்தனங்கள் தேவர்கள்மார்பிற் பரிமளித்தன-தேவர்களணிந்த கற்பகமலர்த்தாதுக ளரசர்களுடலிற் பரிமளித்தன,எ-ம். (௬)

காந்தெரிகதுவுஞ்செங்கட்கரிமதக்கலுழியாறுங்...........*
கூந்தன்மாவுமிழ்விலாழிப்பெருக்கும்வேற்குமரனன்ன... *
வேந்தர்திண்புயத்தில்வார்ந்தவினைகமழ்நானச்சேறும்... *
பாந்தண்மேற்கிடந்தஞாலமெங்கணும்பரந்தவன்றே....*

(௫௭)

(இ-ள்) சாந்து-முதிர்கின்ற--எரி- தீயானது--சுதவும்-பற்றுகி ன்ற--செங்கண் - சிவந்தகண்களையுடைய—கரி-யானையினது—மதம் - மதநீராகிய—சுழுழியாறும் - காறுறும்—கூந்தல்-புறமயிர் பொருந்திய—மா-குதிரைகள்—உமிழ்-சொரிகின்ற, விலாழிப்பெருக்கும்-நீர்ப்பெருக்கும்—வேல்-வேற்படையேந்திய—குமரனன்ன-குமாரக்கடவுளையொத்த—வேந்தர்-அரசர்களுடைய—திண்புயத்தில்-வலிமையுள்ளதோள்களில்—வார்ந்த-ஒழுகிய—விரைகமழ் -வாசங்கமழ்கின்ற— நானச்சேறும் - கஸ்தூரிச்சேறும்—பாந்தள்மேல்-ஆதிசேடன்மேல்—கிடந்த- இருந்த—ஞாலமெங்கணும்-பூமியெங்கும்—பரந்த-பரவின—(எ-று) (கருத்து) யானைகளின் மதமும், குதிரைகள்வாய்நீரும், அரசர்கள்புயத்தொழுகிய கஸ்தூரிச்சேறும் பூமியெங்கும்பரவின என்பதாம் (ரு)

வெள்ளியங்கிரியின்மேயவிஞ்சையரியக்கர்விண்ணோ ..[ந்தர்
ரொள்ளொளியெறிக்கும்பைம்பொன் விமானமுமுலகில்வே
நள்ளிருள்சீக்குஞ்செய்யநகைமணிகொடிஞ்சித்தேருந்... *
தெள்ளிதினுணர்ந்துளோர்க்குந்தெரிவிலமயங்குமன்றே...*

(இ-ள்) வெள்ளியங்கிரியின்-கைலாசமலையில்—மேய- பொருந்திய—விஞ்சையர்-விச்சாதரரும்—இயக்கர்-இயக்கர்களும்—விண்ணோர்-தேவர்களும் ஆகியவிவர்களுடைய— ஒள்ளொளி - மிகுந்தவொளியை—எறிக்கும்-வீசுகின்ற—பைம்பொன்-பசும்பொன்னாற்செய்த—விமானமும்-விமானங்களும்—உலகில்-பூவுலகிலிருக்கும்—வேந்தர்-அரசர்களுக்குரிய—நள்ளிருள்சீக்கும் - மிகுந்தவிருளினையோட்டுகின்ற, செய்ய-சிவந்த—நகை-ஒளிபொருந்திய—மணி- இரத்நங்கள்பதித்த—கொடிஞ்சி - மேன்மாட்டையுடைய—தேரும்-தேர்களும்—தெள்ளிதின் - தெளிவாக—உணர்ந்துளோர்க்கும்-அறிந்தவர்களுக்கும்—தெரிவில - தெரிந்துகொள்ளக்கூடாமையாகி—மயங்கும்-ஒன்றோடொன்றுமயங்கும்.(எ-று) கருத்து. தேவர்கள்விமானங்களும், அரசர்கள்தேர்களும், பகுத்தறியப்படாவாம், எ-ம். (சா)

சிற்பநூல்கழியக்கற்றோர்சித்திரித்தென்னவாய்ந்த.........*
பொற்புறுநெடியவேற்கட்பூங்கொடிவதுவைவேட்டுப்... *
பற்பலதேயவேந்தர் * தொகுதலிற்பாடைதேர்வா.........*
ளற்புடனெவருந்தேவபாடையினறைவர்மாதோ......... *

(இ-ள்) சிற்பநூல் - சிற்பசாத்திரத்தை—கழிய - மிகவும்—கற்றோர்-படித்தவர்கள்—சித்திரித்தென்ன- சித்திரித்ததுபோல—வாய்ந்த-பொருந்திய—பொற்புறு-அழகான்மிக்க—நெடிய- நீட்சியு

ன்ற—வேற்கண்-வேல்போன்றகண்களையுடைய—பூங்கொடி- தம யந்தியினது—வதுவைவேட்டு - விவாகத்தைவிரும்பி—பற்பல- அனேகமாகிய—தேயவேந்தர்- தேயங்களிலிருக்கும் அரசர்கள்— தொகுதலில்-கூட்டங்கொண்டிருத்தலால்—பாடைதேர்வான்-(எல் லோர்க்குஞ்)—சொற்பொருள்-தெரியும்பொருட்டு — அற்புடன்- அன்புடனே—எவரும்-எவர்களும்—தேவபாடையின்-கீர்வாணபா ஷையால்—அறைவர் பேசிக்கொள்வார்கள்—(எ-று.)[ *தொல்கா ப்பியம்வினையியல்- ௩௧-ரு. செய்துசெய்யூச்செய்புசெய்தெனச், செய்யியர்செய்யியசெயின்செயச்செயற்கென, வவ்வகையொன்ப தும்வினையெஞ்சுகிளவி,இவ்விதியால் தொகுதலில்என்றதுசெயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.] (கருத்து) யாவருந்தேவபா ஷையிற்பேசுவார்கள் என்பதாம். (எ)

கழைசுளிகளிநல்யானைபிளிறொலிகமஞ்சூல்வான.........*
மழையொலியவியபம்பும்வார்முரசோதைதேவர்.........*
முழவொலிதடந்தேர்ச்சில்லிமுழக்கொலிபுடவிபோர்த்த...*
வெழுகடலொலியுமெஞ்சவெங்கணுமொலித்தவன்றே.....*

(இ-ள்) கழை-கரும்புகளை — சுளி-முறிக்கின்ற—களி- களிப்பு ள்ள—நல்-நல்ல—யானை-யானைகளினது—பிளிறு- ஆரவாரமாகிய —ஒலி-சத்தமும்—கமம்-நிறைந்த—சூல்- கருப்பத்தையுடைய— வானம்-ஆகாயத்திற்சஞ்சரிக்கும்—மழை-மேகத்தினது—ஒலி-சத் தமானது—அவிய-கெடும்படி—பம்பும்- நெருங்கிய—வார் - வா ரிறுக்கிய—முரசோதை - பேரிகைகளின்சத்தமும்—தேவர்முழ வொலி-தேவதுந்துபிகளின்சத்தமும்—தடம்-பருத்த—தேர்- தே ரினுடைய—சில்லி-உருளைகள்—முழக்கொலி- முழக்குகின்றசத்த மும்—புடவிபோர்த்த - பூமியைச்சூழ்ந்த—எழுகடலொலியும்-எ ழுகடலினோசையும்—எஞ்ச-குறையும்படி—எங்கணும்- எவ்விடத் தும்—ஒலித்த-சத்தித்தன—(எ-று)(கருத்து) யானைகள் சத்தமும், பேரிகைகள்சத்தமும், தேவதுந்துபிகள்சத்தமும், தேவர்கள்சத்த மும்,கடலொலிமங்க வெங்குஞ்சத்தித்தன என்பதாம். (அ)

அகலிரு * விசும்புபோர்த்தவணிமதிக்கவிகைமீட்டம்......*
பகலொளிகரப்பவெங்கும்பாயிருள்பரப்புமன்னர்........*
நகைமணிமகுடகோடிநள்ளிருட்பிழம்பைநக்கி............*
மிகவிவானிரவியோடவிளவெயிலெறிக்குமாதோ........ *

(இ-ள்) அகல்-அகன்ற—இரு-பெரிய—விசும்பு-ஆகாயத்தை— போர்த்த-மூடிய—அணி-அழகிய—மதிக்கவிகை-சந்திரவட்டக்கு டைகளின்—ஈட்டம்- கூட்டங்கள்—பகலொளி - சூரியப்பிரகாசம்

—காப்ப-மறைய—எங்கும்-எவ்விடத்தும்—பாய்- பரவிய—இருள்-இருளை—பரப்பும்-பரவச்செய்யும்—மன்னர் - அரசர்களது—நகை-ஒளிபொருந்திய—மணி-இரத்நங்கள்பதித்த—மகுடகோடி-அநேகமகுடங்கள்—நள்ளிருட்பிழம்பை- மிகுந்தவிருட்பிழம்பை—நக்கி-உண்டு—இகலி-பகைத்து—வான்-ஆகாயத்திலிருக்கும்—இரவியோட-சூரியனுடனேயெதிர்ம்படி—இளவெயில்- இளங்கதிரை—எறிக்கும்-வீசும்—(எ-று) [§சருக்கசங்கிரகம். அவற்றுள் ஓசைப் பண்பிற்றுகாயம்மே, இவ்விதியால் ஆகாயமோசை யுடையது,] (கருத்து) குடைகள் கூட்டமிருளைக் கொடுக்கும், மகுடகூட்டம் ஒளியைக்கொடுக்கும் என்பதாம். (௯)

வெங்கதிர்நெற்றிதோய்ந்து விளங்குபொற்கொடியினீட்ட*
மங்குல்வானிழியுந்தெய்வமடந்தையர்வடிவுகாட்டக்...... *
கொங்கலர்தெரியல்வேந்தர்கொற்றவெண்கவிகையீட்டந்...*
திங்களினழகுகாட்டத்திருநகர்பொலிந்ததன்றே...........*

(இ-ள்) வெங்கதிர்-சூரியனது—நெற்றிதோய்ந்து-நெற்றியிற்படிந்து—விளங்கு-பிரகாசிக்கின்ற—பொற்கொடியின்-பொன்னாற்செய்தகொடிகளின்—ஈட்டம்-கூட்டங்கள்—மங்குல்-மேகங்களுலவும்—வானிழியும்-ஆகாயத்தினின்றிழிகின்ற—தெய்வமடந்தையர்-தெய்வமாதர்களது—வடிவுகாட்ட - வடிவினைத்தெரிவிக்க—கொங்கு-வாசமிகுந்த—அலர்த்தெரியல்-மலர்மாலையையணிந்த—வேந்தர்-அரசர்களது—கொற்றம்-வெற்றிபொருந்திய—வெண்கவிகை-வெள்ளியகுடைகளினுடைய—ஈட்டம்-கூட்டங்கள்—திங்களின்-சந்திரனது—அழகுகாட்ட-அழகைத்தெரிவிக்க—திருநகர்-குண்டினபுரமானது— பொலிந்தது - பொலிவையடைந்தது — (எ-று) (அன்று, ஏ. அசைகள்) (கருத்து) கொடிகள்கூட்டம் தேவமாதர்கள்போலும், குடைகள் கூட்டஞ் சந்திரன்போலும் வடிவுகாட்டக்குண்டினபுரஞ் சிறப்புற்றது என்பதாம். (௰)

குருமணியிமைக்கும்பைம்பொற் குடைநிழல்வெயிலையோட்ட,
மருமலிநறியமென்பூமாலைவாடாமையானுந்...............*
திருநகர்ச்செவ்விநோக்கியிமைப்பிலர்திரிதலானு .........*
மரசரோடமரர்தம்மையறிவரிதாயதன்றே..................*

(இ-ள்) குரு-நிறம்பொருந்திய---மணி - இரத்நங்கள்---இமைக்கும்-பிரகாசிக்கின்ற---பைம்பொன்-பசியபொன்னாற்செய்த---குடைநிழல்-குடைகளினுடையநிழல்கள்---வெயிலையோட்ட- வெய்யிலைத்துரத்த---(அதனால்) மருவலி-வாசம்பொருந்திய---நறிய-நறியவாகிய---மென்பூமாலை- மெல்லியபூமாலைகள்---வாடாமையானும்-வாடாமையாலும்---திருநகர்- குண்டினபுரத்தினது---செவ்விநோ

க்கி-அழகைப்பார்த்து---இமைப்பிலர்-கண்களிமையாதவர்களாய்—திரிதலாலும்-திரிகின்றபடியாலும்—அரசரோடு-அரசர்களுடனே—அமரர்தம்மை தேவர்களை—அறிவரிதாயது-பகுத்தறிதலரிதாயது—(எ-று) [கருத்து] குடைகளினிழலால் மாலைகள் வாடாமையாலும் நகரத்தை இமையாது பார்த்தலாலும் அரசர்களென்றுந் தேவர்களென்று மறியப்படாது என்பதாம். (யக)

மாங்குயிலனையதீஞ்சொல்வடுவகிர்பொருவும்வேற்கட்...... *
பூங்கொடிவதுவைவேட்டுப்புவியினில்வேந்தரெல்லாந்... *
தேங்கமழ்தெரியல்வீமன்றிருநகரிறுத்தறன்று ......... *
லாங்கவர்தேயம்யாவுமரும்பொறையுயிர்த்தவன்றே..... *

(இ-ள்) மாங்குயிலனைய-மாங்குயிற்சொல்லை நிகர்த்த—தீஞ்சொல்-தித்திக்கின்றசொல்லையும்--வடுவகிர்பொருவும்-மாவடுவின் பிளப்பையொத்த,வேற்கண்-வேல்போன்றகண்களையுமுடைய--பூங்கொடி-தமயந்தியினது—வதுவைவேட்டு-விவாகத்தைவிரும்பி—புவியினில்வேந்தரெல்லாம்-பூவுலகத்திருக்கும் அரசர்களெல்லாரும்—தேங்கமழ்-வாசங்கமழ்கின்ற—தெரியல்-மலர்மாலையையணிந்த--வீமன்-வீமராஜனது--திருநகர்-குண்டினபுரத்தில்--இறுத்தறன்றல்-வந்துதங்கியபடியால்—அவர்தேயம்யாவும் - அவர்கள்தேசமெல்லாம்--அரும்பொறை-பொறுத்தற்கரியசுமையை-- உயிர்த்த-நீங்கின—(எ-று) (கருத்து) குண்டினபுரமொன்றே சுமைபெற்றது மற்றத்தேசங்கள் சுமையற்றன என்பதாம். (யஉ)

இழைபரந்திமைக்குமல்குலின்கனித்துவர்வாயேழை...... *
மழைமதர்நோக்கிற்கஞ்சிமறியுமானேறுமானின்......... *
விழைதருநகரிற்றூண்டவெருவிமீண்டேகுமாற்றுற்...... *
கழிபெருங்காதல்கூர்ந்துங்காற்றிறைவரவுதீர்ந்தான்..... *

(இ-ள்) இழை-ஆபரணங்கள்--பரந்து-பரவி—இமைக்கும்-பிரகாசிக்கின்ற—அல்குல்-அல்குலையும்—இன்-இனிய—கனி- (கொவ்வைக்)கனிபோன்ற--துவர்வாயேழை-செவ்வாயையுமுடைய தமயந்தியினது--மழை-குளிர்ச்சிபொருந்திய--மதர்-களிப்புள்ள--நோக்கிற்கஞ்சி-பார்வைக்குப்பயந்து--மறியும்-மடங்குகின்ற--மானேறும்-ஆண்மானும்--மானின்- அம்மங்கையினது--விழைதரு - விரும்புகின்ற--நகரிற்றூண்ட-குண்டினபுரத்திற்குச்செலுத்த—வெருவி-பயந்து--மீண்டு-திரும்பி—ஏகுமாற்றால்-போகின்றபடியால்--கழி-மிகுந்த--பெருங்காதல்கூர்ந்தும்-பேராசையையடைந்தும்--காற்றிறை-வாயுவானவன்--வரவு-வருதலை--தீர்ந்தான்- நீங்கினான்—(எ-று) (கருத்து)தமயந்திகண்ணைக்கண்டுதானேறுமான்வாகனந்திரும்பிவிடுமென்று வாயுதேவன்வாராதிருந்தானென்பதாம். (யங)

ஐயரிபரந்துமைதோய்ந்தம்பலைத்திகலும்* வேற்கட்......*
டையலோர்பாதியாயதன்மையாற்றனதுபைம்பொற்......*
செய்யதாள்பெயர்ப்பவன்னாள்சீறடியெழாமையாலே......*
மையணிகண்டத்தோனுமன்றலுக்கெழுந்திலானே.........*

(இ-ள்)ஐ-அழகிய—அரிபரந்து-செவ்வரிபரந்து—மைதோய்ந்து-அஞ்சனமணிந்து—அம்பலைத்து-அம்புகளையலைவுசெய்து—இகலும்-பொருகின்ற—வேற்கண்-வேல்போன்றகண்களையுடைய—தையல்-உமைமாதானவள்—ஓர்பாதியாயதன்மையால்-வாமபாகத்திலிருக்கின்றபடியால்—தனது-தன்னுடைய—பைம்பொன்-பசியபொன்போன்ற—செய்யதாள்-சிவந்தபாதங்களை—பெயர்ப்ப-தூக்க—அன்னாள்-அவ்வுமாதேவியினது—சீறடி-சிறியபாதங்கள்—எழாமையாலே-எழுதலில்லாமையால்—மையணிகண்டத்தோனும்-ஈசுரனும்—மன்றலுக்கு-(தமயந்தியின்) விவாகத்திற்கு—எழுந்திலான்-புறப்பட்டிலன்—(எ-று)[*தருக்கசங்கிரகம்-ஈசுரு அறநாற்பண்பிலுருவெனப்படுவது,விழிமாத்திரையாற்கவரப்படுங்குணம்,இவ்விதியாஃகண்ணியல்பறிக](கருத்து)தன்னிலொருபங்காகியஉமையவள்பாதம்எழாமையாலே சிவன்வாராதிருந்தான் என்பதாம். (௱௪)

உருவுகண்டுவப்பதன்றியோடரித்தடங்கணல்லார்......... *
திருவினுங்குலத்தினுஞ்செய்கிலாரார்வமென்று... .... *
மருவுதன்வடிவின்குற்றமனக்கொளாவயங்குபைம்பொற் *
குலைகழலிலங்குநோன்றாட்குபேரனும்வந்திலானே.... *

(இ-ள்)உருவுகண்டு-அழகுள்ளவடிவத்தைப்பார்த்து—உவப்பதன்றி-மகிழ்வதல்லாமல்—ஓடு-ஓடுகின்ற—அரி-செவ்வரிபரந்த—தடம்-விசாலம்பொருந்திய—கண்-கண்களையுடைய—நல்லார்-மங்கையர்கள்—திருவினும்-செல்வத்தினும்—குலத்தினும்-உயர்ந்தகுலத்தினும்—ஆர்வஞ்செய்கிலரென்று-ஆசைசெய்யமாட்டார்களென்று—தன்வடிவின்-தன்னுடையதேகத்தில்—மருவு-பொருந்திய—குற்றம்-குற்றத்தை—மனக்கொளா-மனதிலேகொண்டு—வயங்கு-பிரகாசிக்கின்ற—பைம்பொன்-பசும்பொன்னாற்செய்த—குலை-சத்தம்பொருந்திய—கழல்-வீரக்கழல்கள்—இலங்கு-விளங்குகின்ற—நோன்-பெருமைதங்கிய—தாள்-பாதங்களையுடைய—குபேரனும்-குபேரனும்—வந்திலான்-வந்திலன்—(எ-று)(கருத்து)குபேரன்குருடனாகையால் அக்குற்றத்தால் வாராதிருந்தான் எ-ம்.

விரைகமழ்தருவினீழல்விண்ணவரிடத்துமார்வம்.. ......*
புரிகிலனென்மேலன்புபூண்டனள்புலம்புகொண்ட.........*

முருகவிழ்நறுமென்கூந்தன் முகிழ்முலைத்துவர்வாய்ப்பேதை
திருதனைவிழையாளென்னதிருதியும்போந்திலானே... ... *

(இ-ள்) விரைகமழ்-வாசங்கமழ்கின்ற—தருவினீழல்- ஐந்தருவி னிழலிலிருக்கின்ற—விண்ணவரிடத்தும்-தேவர்களிடத்திலும்—ஆர்வம்புரிகிலள்-ஆசைசெய்கிலள்—நளன்மேல்-நளனிடத்தில் — அன்புபூண்டனள்-அன்புவைத்தவளாகி — புலம்புகொண்ட - இரங்குதலைக்கொண்ட—முருகவிழ்-தேனொழுகுகின்ற — நறு-நறிய--மென்கூந்தல்-மெல்லியகுழலையும்—முகிழ்முலை- அரும்பையொத்தமுலையையும்— துவர்வாய்-செவ்வாயையுமுடைய—பேதை-தமயந்தியானவள்—திருதனை-இராக்கதனை—விழையாளென்ன - இச்சிக்கமாட்டாளென்று—திருதியும்-திருதியெலபவனும்— போந்திலான் வந்திலன்—(எ-று) (கருத்து) தேவர்களைவிரும்பாதவள் இராக்கதர்களைவிரும்பாளென்று திருதியும்வாராதிருந்தான் எனபதாம்• (யகரு)

பொன்னகர்புரக்கும்வேந்தும்பொங்*கழற்கிறையுமுந்நீர். *
மன்னனுந்தருகட்பேழ்வாய்மறலியுமடமானோக்கி... ...... *
னன்னுதனளனுக்கன்றிநறுந்தொடைசூட்டாளென்ன ... *
வன்னவனுருவுதாங்கியணிநகர்மேயினாரோ..... ...........*

(இ-ள்) பொன்னகர்புரக்கும்வேந்தும்-இந்திரனும்—பொங்கழற்கிறையும்-அக்கினிபகவானும்—முந்நீர்மன்னனும்-வருணனும்--தறுகட்பேழ்வாய்மறலியும்-யமனும்—மடமானோக்கின்-இளமான் பார்வையையொத்தபார்வையையுடைய—நன்னுதல்-தமயந்தியானவர்—நளனுக்கன்றி-நளனுக்கல்லாமல்—நறுந்தொடை- நறிய மலர்மாலையை—சூட்டாளென்ன - தரிக்கமாட்டாளென்று —அன்னவன்-அந்நளனுடைய—உருவுதாங்கி- (வடிவையொத்த) வடிவத்தைக்கொண்டு—அணிநகர்-அழகியநகரத்தில்—மேயினார்- பொருந்தினார்கள்—(எ-று) தறுகண்-அஞ்சாமை, பேழ்வாய் - பெரியவாய் [*தருக்கசங்கிரகம் உ-ரு- அமற்றன்!பொருளெனப்படுவதுதெரிவுறக்கிளப்பின், மண்ணீரனல்கால்வெளிபொழுதாசை, யான்மாமனமெனவொன்பதுவகைத்தே,இவ்விதியால் அக்கினிநவபொருளிலொன்றாய] கருத்து இந்திரன்-அக்கினி-வருணன்-யமன்- இவர்கள் நளனுருக்கொண்டு குண்டினபுரத்திற்குவந்தார்கள் என்பதாம்•

கூற்றெனக்கொல்லும்வேழங் கொடியணி கொடிஞ்சித்திண்டேர், பாற்றிறைக்கவரிநெற்றிப்பண்ணமைகலினப்பாய்மா*
மாற்றருஞ்சீற்றத்துப்பின்வரிசிலையுழவரீட்ட...............*
நாற்றிசைப்பரப்பும்போர்ப்பநாமவேனளனும்வந்தான்...*

(இ-ள்) கூற்றெண-யமனென்றுசொல்லும்படியாக—கொல்லும்-கொலைசெய்கின்ற—வேழம்-யானைகளும்—கொடியணி-கொடி

களணிந்த—கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய—திண்-வலிமை பெற்ற—தேர்-தேர்களும்—பால்-பாலினுடைய —திரை-அலைகள் போன்ற--கவரி-சாமரைகள்கட்டிய--நெற்றி - நெற்றிவிளங்கிய-- பண்ணமை-கல்லணையமைந்த--கலினம்-கடிவாளம்பூண்ட- -பாய்-தாவுகின்ற—மா-குதிரைகளும்—மாற்றரும்-நீக்குதற்கரிய---சீற்றத்துப்பின்-கோபமிகுந்த—வரிசிலை-நெடியவில்லேந்திய--உழவரீட்டம்-காலாள்கூட்டமும்---(ஆகிய இந்நால்வகைச்சேனைகளும்)நாற்றிசைப்பரப்பும்-நாலுதிசைகளின்பரப்பெல்லாம்--போர்ப்ப-மூடிக்கொண்டுவர- நாமம்-அச்சத்தைத்தருகின்ற--வேல்-வேற்படைதாங்கிய--நளனும்-நளமஹாராஜனும்-வந்தான்-வந்தான்—(எ-று) (கருத்து)யானைகளும்,தேர்களும் குதிரைகளும்,காலாள்களும் - சூழ்ந்துவர நளமஹாராஜனும்வந்தான் என்பதாம். (௰அ)

உலகொருமூன்றினுள்ளவொளிமுடிமன்னரெல்லா ........*
மிலகுபொற்குடிமிவான்றோயெயிற்புறத்திறுத்தாராக ... *
வலகில்வெஞ்சேனைசூழவரும்பெறற்சுற்றத்தோடும், விலகில்
விலுமிழும்பைம்பூண்விதர்ப்பர்கோனெதிர்கொண்டானே.

(இ-ள்) உலகொருமூன்றினுள்ள-திரிலோகத்திலுமுள்ள--ஒளி-காந்தியையுடைய--முடிமன்னரெல்லாம்- மகுடத்தையணிந்த அரசர்களெல்லாரும்--இலகு-பிரகாசிக்கின்ற---பொற்குடுமி- பொன்னுலாகியசிகரம்--வான்றோய்-ஆகாயமளாவிய---எயிற்புறத்து- மதிற்புறத்திலே--இறுத்தாராக-தங்கினராக--(அதுகேட்டு)அலகில்- அளவற்ற--வெம்-வெவ்விய--சேனைசூழ-சேனைகள்சூழ்ந்துவர-- அரும்பெறல்-பெறுதற்கரிய--சுற்றத்தோடும்-கிளைஞருடன்--விலகி-வீசி---வில்-ஒளியை--உமிழும்-உமிழ்கின்ற,பைம்பூண்-பசிய ஆபரணத்தையுடைய--விதர்ப்பர்கோன்-வீமராஜன்---எதிர்கொண்டான் - எதிர்கொண்டனன்--(எ-று.)(கருத்து)திரிபுவனத்தரசர்களும்வந்திருக்கச்சுற்றத்தாரோடுவீமராஜன்எதிர்கொண்டுபோனான்என்பதாம்(௰௯)

விரைசெறியலங்கல்மாலைவிண்ணவர்விஞ்சைமன்ன ..... *
ருருகெழுமுரகவேந்தரோங்குநீருடுத்தஞாலத்......... ....*
தரசிளங்குமரரோடுமளவளாய்முகமன்கூறி......... ......*
வரிசையின்வழாமைநோக்கிவான்சிறப்பியற்றினானே......*

(இ-ள்) விரைசெறி - வாசமிகுந்த--அலங்கன்மாலை - மலர்மாலையையணிந்த--விண்ணவர்-தேவர்கள்--விஞ்சைமன்னர்-வித்தியாதரவேந்தர்--உருகெழும்-வடிவுள்ள--உரகவேந்தர் - நாகவேந்தர்--ஓங்கு-உயர்ந்த--நீருடுத்தஞாலத்து-கடலாற்சூழப்பட்டபூமியிலுள்ள--அரசிளங்குமரரோடும்-இராஜகுமாரரோடும்--அளவளாய்- கலந்து

-முகமன்கூறி-உபசாரவார்த்தைகளைச்சொல்லி, வரிசையின்-கிரமத்தினில்—வழாமை- தப்பாமல்—நோக்கி- ஆலோசித்து—வான்-மேலாகிய—சிறப்பு-சிறப்பை—இயற்றினான்-செய்தான்—(எ-று) (கருத்து) தேவர்கள் வித்தியாதரர் நாகலோகத்தரசர் பூவுலகத்தரசர் இவர்களுக்குவீமராஜன்முறைப்படிசிறப்புச்செய்தான்,எ-ம்.

தோட்டலர்மாலைநாற்றித்துறக்கமோடுறழச்செய்த...... *
வீட்டகந்தோறும்பைம்பொன் விளங்கிழைசெவ்விவாய்ப்பத்
*தீட்டியவுருவுநோக்கித்தேறல்கொப்புளித்துமாந்தும்... *
பாட்டளித்தாமவேந்தர்பகற்பொழுதாற்றினாரே... ..... *

(இ-ள்) கோடு-இதழ்களையுடைய—அலர்- மலராற்செறிந்த—மாலை-மாலைகளை—நாற்றி-தொங்கக்கட்டி—துறக்கமோடு -தெய்வலோகத்துடனே—உறழ-ஒக்கும்படி—செய்த- செய்யப்பெற்ற, வீட்டகந்தோறும்-வீடுகளினிடந்தோறும்—பைம்பொன்- பசியபொன்னினால்—விளங்கிழை - தமயந்தியினது—செவ்விவாய்ப்ப-அழகுபொருந்த—தீட்டிய - எழுதிய —உருவு நோக்கி- பதுமைகளின்வடிவங்களைப்பார்த்து—தேறல்-தேனை--கொப்புளித்து-கொப்புளித்து—மாந்தும்-உண்ணுகின்ற—பாட்டு-இசைகளைப்பாடுகின்ற--அளி-வண்டுகள்மொய்த்த—தாமவேந்தர்-மாலையையணிந்தவரசர்கள்—பகற்பொழுது-பகற்காலத்தில்—ஆற்றினார்- காமநோயைப்பொறுத்திருந்தார்கள்—(எ-று)*தருக்கசங்கிரகம்-ரூஎ - ரூப அதுவே - வெண்மைகருமை பொன்மைசெம்மை - பசுமை புகைமைசித்திரமென்னும்-பாகுபாட்டினெழுவகைத்தாகி - நிலநீர்தீயினிலைபெறுமன்னே-இவ்விதியால் தீட்டியவுருவாகியசித்திரப்பணைபுகட்புலவிடயமறிக. (கருத்து) சுவர்க்கத்திற்கொப்பாகிய வீதிகளினிடங்கள்தோறும் எழுதப்பட்டதமயந்தி திருவுருவத்தை அரசர்கள்பார்த்துப் பகற்பொழுதுபோக்கிற் காமத்தைப்பொறுத்திருந்தார்கள்,எ-ம். (உக)

சேயுயர்விசும்பிற்றேவர்தெண்டிரைப்பரவைசூழ்ந்த...... *
மாயிருஞாலங்காக்குமன்னவருரகருற்ற............ *
காயழற்காமவெந்தீக்கனற்றுமென்றஞ்சினான்போற்...... *
பாயிருளுலகம்போர்ப்பப்பகல்செய்வான்கடலுளாழ்ந்தான்.

(இ-ள்) சேயுயர்-மிகவுமுயர்ந்த—விசும்பில - தெய்வலோகத்திலிருக்கும்—தேவர் - தேவர்களும்— தெண்டிரைப்பரவைசூழ்ந்த-தெள்ளிய அலைகளையுடையகடலாற்சூழப்பெற்ற—மாயிருஞாலங்காக்கும்-மகத்தாகிய பெரியபூமியைப்புரக்கின்ற—மன்னவர்-அரசர்களும்—உரகர்-நாகவேந்தர்களும்--உற்ற-(ஆகியஇவர்க)ளடைந்த—காய்-சுடுகின்ற—அழல் - வெப்பம்பொருந்திய—காமவெந்

தீ-காமாக்கினி—கனற்றுமென்று-தன்னைச்சுடுமென்று—அஞ்சினான்போல்-பயந்தவன்போல்—பாய்-பரவிய—இருள்-இருளானது—உலகம்போர்ப்ப-உலகத்தைமூடிக்கொள்ள—பகல்செய்வான்-சூரியனானவன்—கடலுள்-மேற்றிசைக்கடலுள்—ஆழ்ந்தான்-அழுந்தினான்—(எ-று) (கருத்து) தேவர்களும் அரசர்களும் நாகவேந்தர்களும் அடைந்தகாமாக்கினி தன்னைச்சுடுமென்று சூரியன் அஸ்தமனமாயினான் என்பதாம். (உஉ)

விரிகதிர்மௌலிவிண்ணோர்மெய்யொளிபரத்தலானு...... *
மரசிளங்குமரர்மார்பிலணிவெயிலுமிழ்கலானு.......... *
மூரகர்தஞ்சுடிகையுச்சியொளிர்மணியிமைத்தலானும் .. *
பரிதிமேற்கடலுளாழ்ந்தும்பாயிருள்பரந்தின்றே...... *

(இ-ள்) விரி-விரியப்பெற்ற—கதிர்-கிரணங்களையுடைய--மௌலி-மகுடங்களைத்தரித்த—விண்ணோர்-தேவர்களின்—மெய்யொளி-தேககாந்திகள்—பரத்தலானும்-பரவுதலாலும்—அரசிளங்குமரர்மார்பில்-இராஜகுமாரர்கள் மார்பிலிருக்கும்—அணி-ஆபரணங்கள்—வெயில்-ஒளியை—உமிழ்தலானும்-கொப்புளித்தலாலும்—உரகர்-நாகவரசர்களுடைய—சுடிகையுச்சி-முடியின்மேல்—ஒளிர்-விளங்குகின்ற—மணி-இரத்நங்கள்—இமைத்தலானும்-பிரகாசித்தலாலும்—பரிதி-சூரியனானவன்—மேற்கடலுளாழ்ந்தும்-மேற்கடலுளழுந்தியும்—பாய்-பாய்கின்ற—இருள்-இருளானது--பரந்தின்று பரந்ததில்லை—(எ-று) (கருத்து) தேவர்கள் சரீரகாந்தியாலும் அரசர்கள்மார்பிலாபரணங்களாலும்நாகவேந்தர்கள்சிரோரத்நங்களாலும் சூரியன்மறைந்தும் இருள்தோற்றவில்லை, எ-ம்.

மையவாங்கரியகூந்தல்வாள்கிடந்தனையவுண்கட் ........... *
பையரவல்குற்செவ்வாய்ப்பணிமொழிவதுவைவேட்டு . .. *
வெய்யசெங்கதிரோடும்வெண்மதியுறைதறன்னா........ *
லெய்துமிக்*காலந்தன்னையிரவென்கோபகலென்கேனோ... *

(இ-ள்) மை-அஞ்சனமானது—அவாம்-விரும்புகின்ற—கரியகூந்தல்-கருமையுள்ளகூந்தலையும்--வாள்கிடந்தனைய-வாள்கிடந்ததையொத்த—உண்கண்-மையுண்டகண்களையும்—பையரவல்குல்-அராப்படம்போன்றவல்குலையும்—செவ்வாய்-சிவந்தவாயையும்—பணிமொழி-குளிர்ச்சிபொருந்தியசொல்லையுமுடையதமயந்தியினது—வதுவைவேட்டு-விவாகத்தைவிரும்பி—வெய்ய-வெவ்விய--செங்கதிரோடும்-சூரியனோடும்—வெண்மதி-சந்திரன்—உறைதறன்னால்-(அந்நகரத்தில்)தங்குகின்றபடியால்—எய்தும்-பொருந்திய—இக்காலந்தன்னை-இக்காலத்தை—இரவென்கோ-இரவென்றுசொல்லுவேனோ—பகலென்கேனோ-பகலென்றுசொல்லுவேனோ

இன்னதென்றுசொல்லேன்—(எ-று) * தருக்கசங்கிரகம்-உக-ஞு. இறப்புமுதல்வழக்கிற்கேதுக்காலம்-இவ்விதியால்காலம்நித்தியமானது-(கருத்து) தமயந்திகலிபாணத்தை விரும்பிவந்தசூரியனுஞ்சந்திரனும் அந்தகாரத்தில் வாசம்பண்ணலால் இரவென்றுசொல்வேனோ பகலென்றுசொல்வேனோ,எ-ம். (உச)

தகைமலர்த்தெரியல்வேந்தர்தளர்ந்துமெய்பதைத்துவாடப்
புகையிருட்போர்வைமெய்யிற்பொலிவுறப்போர்த்துவெய்ய
கதமெரிச்செக்கர்ப்பேழ்வாய்திறந்துவெண்கதிர்குலாய... *
மதிவகிரெயிறுதோன்றவந்ததுமாலைக்கூற்றம்........... *

(இ-ள்) தகை-நெருங்கிய—மலர்த்தெரியல்-மலர்மாலையையணிந்த—வேந்தர்-அரசர்கள்—தளர்ந்து-தளர்ச்சியடைந்து—மெய்பதைத்து-தேகம்பதைத்து—வாட-வாடும்படி—புகை-உலகத்தைச்சூழ்கின்ற—இருட்போர்வை-இருளாகியபோர்வையை—மெய்யில-தனதுடம்பில—பொலிவுற-விளக்கமிக—போர்த்து-போர்த்துக்கொண்டு—வெய்ய-கொடிய—கதம்-வேகத்தையுடைய—எரி-நெருப்பையொத்த—செக்கர்-செவ்வானமாகிய—பேழ்வாய்திறந்து-பெரியவாயைத்திறந்து—வெண்கதிர்-வெள்ளியகிரணங்கள்—குலாய-விளங்கப்பெற்ற—மதி-சந்திரனாகிய—வகிர்-பிளப்பையுடைய—எயிறு-கோரப்பல்லானது—தோன்ற-தோன்றும்படி, மாலை-மாலைப்பொழுதாகிய—கூற்றம்-இயமனானவன்—வந்தது-வந்தான்—(எ-று) (கருத்து) அரசர்கள்வாடும்படி மாலைக்காலமாகிய இயமனானவன் இருட்போர்வைபோர்த்துச் செவ்வானமாகிய வாயைத்திறந்து சந்திரனாகியவக்கிரதந்தந்தோன்றும்படிவந்தான் என்பதாம். (உரு)

விரிகதிர்பரப்பிவானமீதெழுகுழவித்திங்க............... *
ளெரிமணிப்பூண்செய்திண்டோளெழுபுவிவேந்தர்மேலும் *
வரிசிலைகுழையவாங்கிமண்டமர்தொடங்குமாரன்......... *
குரைகடன்முரசமெற்றுங்குணிலெனச்சிறந்ததன்றே... *

(இ-ள்) விரிகதிர்-விரிந்தகிரணங்களை—பரப்பி-பரவச்செய்து—வானமீது-ஆகாயத்தில்—எழு-எழுந்த—குழவித்திங்கள்-இளம்பிறை—எரி-விளங்குகின்ற—மணி-இரத்நங்கள்பதித்த—பூண்செய்-ஆபரணங்களையணிந்த—திண்டோள்-வலிமையுள்ளதோளையுடைய—எழுபுவிவேந்தர்மேலும்-எழுதீவிலுள்ள அரசர்கள்மேலும்—வரி-நெடிய—சிலை-வில்லை—குழையவாங்கி-வளையவளைத்து—மண்டு-நெருங்கிய—அமர்-போரை—தொடங்குமாரன்-ஆரம்பிக்குமன்மதனது—குரை-ஒலிக்கின்ற—கடன்முரசம்-கடலாகியபேரிகையை—எற்றும்-அடிக்கின்ற—குணிலென-குறுந்தடிபோல்—

சிறந்தது - சிறந்திருந்தது—(எ-று) (கருத்து) வானிலுதயமான இளம்பிறையானது மன்மதனது கடலாகிய முரசுக்குக் குறுந்தடி போலிருந்தது, எ-ம். (உகா)

ஏர்குடியிருந்தநங்கையிளமுலைப்போகம்வேட்ட.......... *
நீர்மலிகடலந்தானைநெடுநிலவேந்தர்தம்மேல்............. *
வார்சிலைத்தடக்கைமாரன்மண்டமர்புரியத்தூண்டுங்...... *
கூரிருள்வேழக்கோட்டினெழுந்தது குழவித்திங்கள்......... *

(இ-ள்) குழவித்திங்கள்-இளம்பிறையானது—ஏர்-அழகுகளானவை—குடியிருந்த-ஒருங்குதங்கியிருக்கப்பெற்ற-- நங்கை-தமயந்தியினது—இளம்-இளமையாகிய—முலை ஸ்தனங்களின்—போகம்-அனுபவத்தை—வேட்ட- விரும்பிய—நீர்மலி - நீர்மிகுந்த—கடல்-கடலாகிய---அம்-அழகிய---தானை-ஆடையையுடைய---நெடுநிலம்-நெடியபூமியிலுள்ள---வேந்தர்தம்மேல்-அரசர்கள்மீது---வார்சிலை-நீண்டவில்லையேந்திய---தடக்கை-விசாலமாகியகையையுடைய---மாரன்-மன்மதன்-- மண்டமர்புரிய-நெருங்கியயுத்தத்தைச்செய்ய---தூண்டும்-நடத்தப்பட்ட---கூரிருள்-மிகுந்தவிருளாகிய---வேழம்-யானையினது---கோட்டின் - கொம்புபோல்---எழுந்தது-உதித்தது---(எ-று) (கருத்து) இளம்பிறை யானது தமயந்தியைவிரும்பியஅரசர்கள்மேல் மன்மதன்போர்செய்யநடத்தப்பட்டஇருளாகியயானையின்கோட்டைப்போலுமிருந்தது என்பதாம்.

கள்ளுயிர்த்தினவண்டார்க்குங்கமலம்வாய்முகிழ்ப்பச்செய்ய
வள்ளலங்கயத்துளாம்பலலர்த்திய குழவித்திங்க......... [ட்டு
டெள்ளுசெங்கதிரோன்மாலைத் தெரிவைவெம் முலையிற்கோ
வள்ளுகிர்க்குறியிற்றோன்றிப்பொலிவுறவயங்கிற்றன்றே... *

(இ-ள்) கள்-தேனை--உயிர்த்து-தந்து--இனம்- கூட்டமாகிய--வண்டு-வண்டுகள்---ஆர்க்கும்- ஒலிக்கின்ற--கமலம்-தாமரைமலர்கள்---வாய்முகிழ்ப்ப-குவிய---செய்ய- சிவந்த---அள்ளல்-குறைசேற்றையுடைய---அம்-அழகிய---கயத்துள்- தடாகத்துள்---ஆம்பல்-அல்லிகளை—அலர்த்திய-மலரச்செய்த—குழவித்திங்கள் - இளம்பிறையானது—தெள்ளு-தெளிந்த—செங்கதிரோன் - சிவந்தகதிரையுடையசூரியனானவன்—மாலை-மாலைப்பொழுதாகிய— தெரிவை-மங்கையினுடைய—வெம்முலையில் - விருப்பத்தைச்செய்யுங்கொங்கைகளில—கோட்டும்-ஊன்றிய—வள்-கூரிய—உகிர்க்குறியின்-நகக்குறியைப்போல்—தோன்றி-உண்டாய்—பொலிவுற - அழகுபொருந்த—வயங்கிற்று-விளங்கிற்று—(எ-று) (கருத்து) தாமரைமலர்கள் குவிய அல்லிமலர்களை மலரச்செய்த இளம்பிறையானது

சூரியனானவன் மாலைக்காலமாகிய மங்கையின் கொங்கைகளில் அழுத்திய நகக்குறிபோ லிருந்தது என்பதாம். (உஅ)

சேட்டிளப்பரிதிமார்பினளனுக்குத்தெரியனாளைச்... ... ...*
சூட்டுவெனெரிவையென்னத்துலங்கு * சேட்டிசைமாதன்பிற்
காட்டியநிருத்தக்கையிற்கதிர்நிலவுமிழுந்தண்ணென்... ...*
கோட்டிளங்குழவித்திங்கள்குடபுலத்தெழுந்ததன்றே.....*

(இ-ள்) சேட்டிளம்-மிகுந்தவிளமையையுடைய—பரிதி-சூரியன்போன்ற—மார்பின்-மார்பினிடத்தில் — நளனுக்கு-நளமஹாராஜனுக்கு-- நாளை நாளைப்பொழுதில—தெரிவை — தமயந்தியானவள் —தெரியல்சூட்டுவளென்ன - மாலையைத்தரிப்பாளென்று— துலங்கு-விளங்குகின்ற—சேட்டிசைமாது - கிழக்குத்திக்காகியமங்கையானவள்—அன்பின் அன்பினாலே— காட்டிய-காட்டப்பட்ட —நிருத்தக்கையில் அபிநயக்கைபோல்—கதிர்-கதிர்களாகிய — நிலவுமிழும் ஒளியைக்கொப்புளிக்கின்ற—தண்ணென்-குளிர்ச்சிபொருந்திய—கோடு- வளைந்த—இளங்குழவித்திங்கள் - மிகுந்தவிளமைபொருந்தியபிறையானது--குடபுலத்து-மேற்குத்திசையில்-- எழுந்தது-உதயமாயிற்று.(எ-று) [*வீரசோழியம்.எழுத்ததிகாரம்நான்கொடுமூன்றென்பதாமுயிரினபின்புநய்வருமேல், ஒன்றருகாரமதாய்பதினைந்தொடெண்ணிரண்டாய்த், தோன்றுமுடற்பின்றகரம்வரிவிரண்டும்மொருக்கால், ஆன்றவைவந்தாமுடலாமுன்பிலொற்றுக்கழிவுமுண்டே, இவ்விதியால மகரமும் தகரமும் டகரமாயின] (கருத்து) நளனுக்கு நாளையத்தினம் தமயந்திமாலைசூட்டுவாளென்று கீழ்த்திசைமாதானவள் காட்டப்பட்ட அபிநயத்தைப் போல இளம்பிறை மேற்குத்திசையில உதித்தது என்பதாம். (உகூ)

கூன்பயின்குழவித்திங்கள்கொள்ளைவண்டிருந்துபாடக் ... *
கான்பயின்மலரம்பேந்துங்கன்னலஞ்சிலைக்கைவேட... ... *
றூன்பயில்குருதிவேற்கணொண்ணுதன்மடவாருள்ள... ...*
மீன்கவர்தூண்டிலென்னவிசும்பிடைவிளங்கிற்றன்றே ... *

(இ-ள்) கூன்பயில்-வளைவுபொருந்திய—குழவித்திங்கள்-இளம்பிறையானது --கொள்ளை-மிகுதியாக--வண்டிருந்து - வண்டுகளிருந்து--பாட-பாடலைச்செய்ய--கான்பயில் - வாசம்பொருந்திய---மலரம்பேந்தும்-மலர்க்கணைகளையேந்திய--கன்னலஞ்சிலைக்கைவேடன்-மன்மதனது--ஊன்பயில்-தசைபொருந்திய--குருதி - உதிரந்தோய்ந்த--வேற்கண் வேல்போன்றகண்களையும்--ஒண்ணுதல்-ஒளிபொருந்தியநெற்றியையுமுடைய--மடவார்-மாதரது--உள்ளம்- மனமாகிய--மீன்-மீனை--கவர்- கிரகிப்பதற்குப்போடப்பட்ட--தூ

ண்டிலென்ன-தூண்டிலைப்போல்--விசும்பிடை- ஆகாயத்தினிடத்து --விளங்கிற்று-பிரகாசித்து(எ-று) (கருத்து)இளம்பிறை உதயமானது மன்மதன் மாதர்கள்மனமாகிய மீனைக் கிரகிக்கப்போடப்பட்டதூண்டிலைப்போலிருந்தது என்பதாம். (௬ய)

நீனிறத்தங்கண்வான *நீள்கடற்பரப்பிற்றூய......... .... *
வானிலாக்கதிர்கள்வீசிவயின்வயின்விளங்குகின்ற ... ... ...*
மீனெனுங்கதிர்கொண்முத்தவெண்மணியுயிர்த்துத்தோன்று
ங்,கூன்முதுகிப்பியென்னவெழுந்தகுழவித்திங்கள்......*

(இ-ள்) குழவித்திங்கள்-இளம்பிறையானது--- நீனிறத்து-நீலநிறம்பொருந்திய--அங்கண்- அழகியஇடத்தையுடைய---வானம்-ஆகாயமாகிய--நீள்-நீண்ட--கடற்பரப்பில்- கடலினிதுபரப்பிலே--- தூய-பரிசுத்தமாகிய--வால்-வெள்ளிய--நிலாக்கதிர்கள் - பிரகாசத்தையுடையகிரணங்களை--வீசி-எறித்து---வயின்வயின் - இடங்கள்தோறும்---விளங்குகின்ற-பிரகாசிக்கின்ற--மீனெனும் - மீனென்கின்ற--கதிர்கொள்-கிரணங்களைக்கொண்ட --- முத்தவெண்மணி-வெள்ளியமுத்தங்களை---உயிர்த்து-ஈன்று---தோன்றும்- விளங்கும் ---கூன்முதுகிப்பியென்ன - வளைந்தமுதுகையுடைய இப்பியைப்போல்--எழுந்தது-எழுந்தது—(எ-று) *தருக்கசங்கிரகம்-சஉ-ஆளத்தல்வழக்கின்காரணவளவது, நுண்மைபெருமைநெடுமைகுறிலென்னும்,பாகுபாட்டினால்வகைத்தாகும்இவ்விநியால்நீளம்நான்களவையிலொன்றும்- (கருத்து)நட்சத்திரங்களோடு உதயமானஇளம்பிறையானதுமுத்துக்களையீன்றஇப்பிகளைப்போலிருந்தது எ-ம்,

ஓங்குயர்விசும்புபூத்தவுடுப்புகர்முகத்ததாய...............*
வாங்குவிற்றடக்கைமாரன்மலர்தலையுலகிற்றூண்டுந்... ...*
தூங்கிருட்களிநல்யானைதுரந்திடுந்தோட்டிபோலத்....... *
தீங்கதிர்க்குழவித்திங்கள்சேணிடைத்திகழ்ந்ததன்றே...... *

(இ-ள்) தீங்கதிர்-தித்திப்புப்பொருந்தியகிரணங்களையுடைய---குழவித்திங்கள்-இளம்பிறையானது---வாங்கு-வளைக்கப்பட்ட---வில்-கருப்புவில்லேந்திய--தடக்கை - விசாலம்பொருந்திய கையையுடைய--மாரன்- மன்மதனானவன்---மலர்தலையுலகில் - பரந்தஇடத்தையுடையவுலகத்தில்--தூண்டும்- செலுத்துகின்ற---ஓங்குயர்-மிகவுமுயர்ந்த--விசும்பு - ஆகாயத்தில்--பூத்த-உண்டாகிய--உடு - தாரகைகளாகிய--புகர்முகத்தாய - புள்ளிபெற்றமுகத்தையுடையதாகிய--தூங்கு-தங்கிய---இருள் - இருளாகிய---களிநல்யானை - களிப்பையுடையநல்லயானையை--துரந்திடும் - ஓட்டும் -தோட்டிபோல அங்குசம்போல்---சேணிடை-ஆகாயத்தினிடத்து-- திகழ்ந்தது-பி

ரகாசித்தது----(எ-று)(கருத்து)இளம்பிறைத்தோற்றமானது மன்மதன்செலுத்தும்இருளாகியயானையையோட்டும் அங்குசம்போலிருந்தது,எ-ம். (௫௨)

பிள்ளைமாமதியங்காய்ந்தநிலவழற்பிழம்புபற்ற.......... *
வுள்ளநெக்குருகிமாழாந்துலம்பொருவைரத்திண்டோ... *
வள்ளிலைவடிவேலேந்துமாசிளங்குமரர்பூண்ட......... *
தள்ளருங்காதலெம்மாற்சாற்றலாந்தகைமைத்தன்றே.....*

(இ-ள்) பிள்ளைமாமதியம்-இளம்பிறையானது--காய்ந்த-வீசிய, நிலவு - சந்திரிகையாகிய--அழற்பிழம்பு - அக்கினிதிரட்சியானது --பற்ற-பிடிக்க--- (அதனால் உள்ளம்- மனமானது---நெக்குருகி - மிகவுமுருகி--மாழாந்து-மயங்கி--உலம்பொரு - திரள்கல்லையொத்த--வைரத்திண்டோள் - வச்சிரம்போன்றதிண்ணியதோளையுடைய --வள்ளிலை-தசையைவள்ளிக்கொள்ளுகின்றஇலையையுடைய---வடிவேலேந்தும்-வடித்தவேலையேந்துகின்ற--அரசிளங்குமரர் - இராஜகுமாரர்கள்--பூண்ட-அடைந்த--தள்ளருங்காதல் - தள்ளுதற்கரிய ஆசை--எம்மால்-எம்மால்,சாற்றலாம்-சொல்லலாமாகிய-தகைமைத்தன்று-தகைமையையுடையதன்று---(எ-று) (கருத்து) இளம்பிறைக்கனலினால் அரசர்கள்மனமுருகியடைந்தகாதலை எம்மாற்சொல்லக்கூடுமோ,என்றார் புராணிகர்,எ-ம். (௫௩)

எற்றுரிமுரசந்துஞ்சாவிதர்ப்பர்கோனினிதினீன்ற.........*
கோற்றொடிவதுவைவேட்டுக்கூரிருட்கங்குற்போதிற்..... *
றூற்றிளம்பூகவேலித்தண்பணைநிடதங்காக்கு ..............*
மாற்றல்சானளனுக்குற்றவருந்துயருரைக்கலுற்றும்...... *

(இ-ள்) எற்றுரி-இடபத்தின்றோலாற்செய்த--முரசம்- பேரிகையானது---துஞ்சா - உறங்காதவாயிலையுடைய-- விதர்ப்பர்கோன்-வீமன்--இனிதினீன்ற-இனிமையினாற்பெற்ற--கோற்றொடி- தமயந்தியினது--வதுவைவேட்டு-விவாகத்தைவிரும்பி - கூரிருள் - மிகுந்தவிருளையுடைய--கங்குற்போதில்-இராப்பொழுதில்--தாறு குலைகளையுடைய--இளம்பூகவேலி - இளமைபொருந்திய கமுகவேலி சூழ்ந்த--தண் - குளிர்ச்சிபொருந்திய--பணை- வயல்களையுடைய--நிடதங்காக்கும்-நிடததேசத்தைப்புரக்கின்ற--ஆற்றல்சால் - பெருமைமிக்க--நளனுக்கு-நளமஹாராஜனுக்கு--உற்ற-,பொருந்திய-- அருந்துயர்-பொறுத்தற்கரியதுயரை--உரைக்கலுற்றும் - சொல்லத்தொடங்கினும்---(எ-று) (கருத்து)தமயந்தியின்விவாகத்தைவிரும்பி நளனுக்குப்பொருந்தியதுன்பத்தைச்சொல்லத்தொடங்கினோம்,எ-ம். (௫௪)

(கலிவிருத்தம்.)

பனிமைக்கடலிற்படுமாரமிர்தோ........ *
டினிதிற்றிருவோடெழுந்தனையென்... *
மனனுற்றவள்வாணுதல்போலுதியாற் .. *
கனலத்தகுமோகலைவெண்மதியே..... *

(இ-ள்) கலை-கலையையுடைய--வெண்மதியே-வெள்ளியசந்திரனே --பனி - குளிர்ச்சிபொருந்திய--மை - கரிய--கடலிற்படும்-கடலிற் றோன்றிய--ஆர்- நிறைந்த--அமிர்தோடு - அமிர்தத்துடன்--இனி தின்-இனிமையுடைய--திருவோடும்- இலக்குமியுடன்--எழுந்தனை-தோன்றினாய்--என்மனனுற்றவள் - என்மனத்திலிருப்பவளாகிய தமயந்தியினது--வாள்-ஒளிபொருந்திய--நுதல்போலுதியால்-நெற்றி போலிருக்கின்றாய்--கனலத்தகுமோ-(நீ)(என்னைச் சுட த்தகுமா-- (எ-று)(கருத்து) நளன் கலைகளையுடையசந்திரனே, அமிர்தத்தோ டும்இலக்குமியோடும்பிறந்தாய்,தமயந்திநெற்றிபோலிருக்கின்றாய் என்னைச்சுடத்தகுமா, என்றான், எ-ம். (௯௫)

கொந்தார்குவளைக்குளிர்மென்மலரிற்......... *
பைந்தாதுதைத்துப்படிந்துநறுஞ்..... ...... *
சந்தாடவியூடுதவழ்ந்துவரு....................... *
மந்தாநிலமேயுயிர்வௌவுதியோ...... ......... *

(இ-ள்) கொந்தார்-திரளாகநிறையப்பெற்ற--குவளை-உற்பலத்தி னது,குளிர்-குளிர்ச்சிபொருந்திய,மென்மலரில்-மெல்லியமலர்களி லிருக்கும்--பைந்தாது-பசியமகரந்தங்களில், துதைந்து-நெருங்கி --படிந்து-முழுகி--நறும்-நறிய--சந்தாடவியூடு-சந்தனக்காட்டினி டத்தில்--தவழ்ந்துவரும்-தவழ்ந்துவருகின்ற--மந்தாநிலமே - இள ந்தென்றலே--(நீ) உயிர்-என்னுயிரை--வௌவுதியோ- அபகரிக்கின் றனையோ---(எ-று.)(கருத்து)நளன்தென்றற்காற்றேஎன்னுயிரைக் கிரிக்கின்றாயோ,என்றான்,எ-ம். (௯௬)

அயில்வாளிதுரந்தடல்வேள்பொரலாற் ....... *
செயலேதுமிலாதுதிகைத்தயர்வே ........... *
*துயிர்போல்பவளின்சொலுணர்த்திவரிக்..... *
குயிலேயெனதாருயிர்கொல்லுதியோ......... *

(இ-ள்) அடல்-கொலைசெய்கின்ற--வேள்- மன்மதனானவன்--அ யில்-கூர்மைபொருந்திய--வாளி - அம்புகளை--துரந்து - செலுத்தி ---பொரலால்-பொருதலால்---செயலேதுமிலாது- ஒருசெய்கையு மில்லாமல்--திகைத்து-மயங்கி--அயர்வேன்--வருந்தும்வலுகிய எனது - உயிர்போல்பவள் - உயிரையொப்பவளாகிய தமயந்தியினது ---இன்சொல்-இனியமொழியை---உணர்த்தி - அறிவித்து--வரிக்கு

யிலே-இசையையுடையகுயிலே--என து-என்னுடைய--ஆர்- நிறைந்த--உயிர்-உயிரை--கொல்லுதியோ-கொல்லுகின்றனையோ எ-று) * தருக்கசங்கிரகம்-ஙசு-கூ-உயிர்தானுடன்றாம் மெய்வேறாகும்- இவ்விதியால் எல்லாவுயிர்னு மக்களுயிர்சிறந்தது (கருத்து) நளன் குயிலே! என்னுயிரைக்கொல்லுகின்றாயோ என்றான், எ-ம். (நள)

விண்ணோர்விடுதூதுவிளம்புதலாற் ............ *
பெண்ணாரமிர்தேபிழைசெய்தனளோ.......... *
வெண்ணாதுறாமிந்திரசாலமெனக் .............. *
கண்ணூடிபுகுந்துகரந்தனையே.............. ....*

(இ-ள்) விண்ணோர்-தேவர்களால்—விடு விடுக்கப்பட்ட--தூது-தூதினை—விளம்புதலால்-சொல்லுதலால்—பெண்ணாரமிர்தே- தமயந்தியே—பிழைசெய்தனளோ-குற்றஞ்செய்தேனோ— எண்ணாது- நினைக்கப்படாத (அளைத்தும்'— உறாம்-பொருந்துகின்ற--இந்திரசாலமென-இந்திரசாலவித்தைபோல்--கண்ணூடி - என்கண்ணிடத்தில்--புகுந்து-நுழைந்து--கரந்தனை-ஒளிதகாய்--(எ-று)(கருத்து) நளன் தமயந்தியை உருவெளித்தோற்றமாகக்கண்டு தன் கண்ணில் இந்திரசாலமாகஒளித்துக்கொண்டாய் என்றான், எ-ம். (நஅ)

துஞ்சாதயர்வோடுயிர் சோர்தர வெந் ............ *
நஞ்சார்விழிவேலெறிநன்னு லாம்...... ...... *
பஞ்சேரடியாயிழைபாலுறையு.... ...... .... *
நெஞ்சேயெனைநீயுநினைந்திலையே............... *

(இ-ள்) துஞ்சாது உறங்காமல்--அயர்வோடு - துன்பத்தோடு-- உயிர்-ஆவியானது--சோர்தர- தளர்ச்சியடைய--வெம் - வெப்பம் பொருந்திய--நஞ்சார்- விடநிறைந்த---விழிவேல - கண்ணாகியவேலை—எறி-எறிகின்ற—நன்னுதலாம்- நல்லநுதலையுடையவளாகிய—பஞ்சு-செம்பஞ்சுக்குழம்பணிந்த— ஏர்-அழகிய— அடி-பாதங்களையுடைய— ஆயிழைபால்-தமயந்தியிடத்து— உறையும்-தங்குகின்ற—நெஞ்சே-என்மனமே—எனை என்னை—நீயும் - நீயும— நினைந்திலை - நினைந்தாயில்லை—(எ-று) (கருத்து) தமயந்தியிடத்துத் தங்குகின்ற என்மனமே நீயும் என்னை நினைக்கவில்லை என்றான் என்பதாம். (நகூ)

என்றார்வமொடின்னபுலம்பிமணிக் ....... ..... *
குன்றார்புயன்மெய்த்துயர்கூர்தரலும்......... *
பொன்றாப்பிதர்சிந்தியபொம்மன்முலைப்...... *
பின்றாழ்குழலுற்றதுபேசிடுவாம்............... *

(இ-ள்) என்று-இப்படியென்று—ஆர்வமோடு - ஆசையோடு— இன்ன-இத்தன்மையவாக—புலம்பி-இரங்கி—மணி- அழகிய—கு

ன்றார்புயன்-நளமஹாராஜன்—மெய்- உண்மையாகிய—துயர்கூர்
தரலும்-அதிகதுன்பங்கொண்டவளவில்— பொன் - பொன்றனது
—தாழ்-தாழ்ப்படி—பிதிர்-தேமல்—சிந்திய- சிதறிய—பொம்ம
ல்-பொலிவுபெற்ற—முலை-முலைகளையும்—பின் - பிற்பக்கத்தில்—
தாழ்-தாழ்கின்ற—குழல்- கூந்தலையுமுடைய தமயந்தி—உற்றது-
அடைந்ததுயரத்தை—பேசுவாம்-சொல்வாம்--(எ-று)(கருத்து)
இவ்வாறுநளன்புலம்பித்துன்பப்படுமளவில்தமயந்திதுன்பத்தைச்
சொல்லுவாம் என்றார் புராணிகர் என்பதாம். (சய)

கணைவேணிகர்காமருகாளைபுயத்...............*
துணையாமலென்மார்பகலங்கவரா...............*
இணைமால்வரையென்னவளர்ந்தனிராற்.......*
பணையாமுலைகாள்பயனென்னைகொலாம்......*

(இ-ள்) கணை - மலர்க்கணைகளையுடைய—வேணிகர்- மன்மதனை
யொத்த—காமர்-அழகிய—காளைபுயத்து- நளமஹாராஜனுடைய
தோள்களில்—அணையாமல்-அழுந்தாமல்—என் - என்னுடைய—
மார்பகலம்-மார்பினிடமெல்லாம்—கவரா- கவர்ந்துகொண்டு—இ
ணை இரண்டாகிய—மால்-பெரிய—வரையென்ன- பர்வதங்களென்
றுசொல்லும்படி—வளர்ந்தனிர்-வளர்வுற்றீர்கள்—பணை-பருத்த--
மா-மகத்தாகிய—முலைகாள்-ஸ்தனங்களே—பயன்- (உமக்குநமக்
கும்) பயன்—என்னை-யாது--(எ-று) (கருத்து) என்சனதனங்களே
நளன்புயங்களையணையாவிட்டாலுங்களுக்குப்பயனென்னவென்றாள்

முனம்வானவர்தூதுமொழிந்திடுநாட்... *
புனைதாரவன்மார்பிடைபுல்லியநீ ........ *
நினையாதுவிடுத்தனைநின்றுருகு ........ *
*மனனேயினியென்கொல்வருந்துவதே. *

(இ-ள்) முனம்-முன்னே—வானவர்- தேவர்களுடைய—தூது-
தூதை -- மொழிந்திடுநாள்-சொல்லியநாளில் — புனைதாரவன்-நள
மஹாராஜனுடைய—மார்பிடை-மார்பினிடத்திலே—புல்லியும்- த
ழுவியும்—நீநினையாது- நீ எவ்வளவுஞ்சிந்தியாமல்—விடுத்தனை-அ
வனைவிட்டு—நின்று-நிலைத்துநின்று—உருகும்-கரைகின்ற—மன
னே-நெஞ்சமே—இனியென்கொல்-இப்போது என்னகாரணமாக
—வருந்துவது-வருத்தமடைவது—(எ-று) * அகத்தியம்-நெஞ்ச
முன்னிலையாய்நிறுதிக்கூறுதல் - சஞ்சலமிகுந்ததன்மையானே-
இவ்விதியாலறிக.(கருத்து)தமயந்திதன்மனதைக்குறித்துவருத்
தமடைகிறுயென்றாள் என்பதாம். (சஉ)

நன்றார்தொழுவேனளன்மார்பகலந்........ *
தன்றாணையிற்றழுவுங்கனவி.................*

லென்றுவிழித்துவிழித்திடுமென்......... *
கண்ணேயிஃதென்கொல்கலுழ்வதுவே.........*

(இ-ள்) நண்ணார்- பகைவர்—தொழ- துதிக்கின்ற—வேல்- வேலையேந்திய—நளன்-நளமகாராஜனுடைய—மார்பகலம்- மார்பினை—தண்ணார்-குளிர்ச்சிபொருந்திய—அணையில்- மெத்தையில்—தழுவும்-தழுவுகின்ற—கனவில - சொப்பனத்தில்—என்றது-ஆலோசியாமல—விழித்து-விழித்துக்கொண்டு—விடுத்திடும்- விட்டுவிடுகின்ற—என்கண்ணே - என்கண்களே—இஃதென்கொல்-இது என்னகாரணமாக—கலுழ்வது - கலங்குவது—(எ-று) (கருத்து) என்கண்களே நான்சொப்பனத்தில் நளனைக்கூடும்போது நீங்கள் விழித்தழுவதென்னவென்றாள் என்பதாம். (சக)

துதைநாண்மலர்வாளிதுரந்துதுரந்............ *
தெதிர்வேளுயிர்கொல்லுதலெண்ணிலைநீள்......*
கதிர்வாணிலவாரழல்கான்றெழுவெண்......... *
மதியேயெனைநீயும்வருத்துதியோ...............*

(இ-ள்) துதை-நெருங்கிய—நாண்மலர்- புதியமலராகிய—வாளி-பாணங்களை—துரந்துதுரந்து-விடுத்துவிடுத்து—எதிர்-எதிர்க்கின்ற—வேள்-மன்மதனானவன்—உயிர்கொல்லுதல்-உயிரைக்கொல்லுதலை—எண்ணிலை-நினைத்தாயில்லை—நீள்-நீண்ட—கதிர்- கிரணங்களினுடைய—வாள்-ஒள்ளிய—நிலவு- பிரகாசமாகிய—ஆரழல்-மிகுந்ததீயை—கான்று-வீசிக்கொண்டு—எழு-தோன்றுகின்ற—வெண்மதியே-வெள்ளியசந்திரனே - எனை-என்னை—நீயும்-நீயும்—வருத்துதியோ - வருத்துகின்றனையோ—(எ-று) (கருத்து) சந்திரனே மன்மதன்பாணத்தா லென்னைக்கொல்லுதலை நினைக்கவில்லை நீயும்வருத்துகின்றாய் என்றாள், எ-ம். (சஉ)

வேளாண்மைசெலுத்தல்விலக்கிலையாய்......... *
வாளாவுறைகின்றதுமன்னறமோ...............*
தோளாண்மையின்மன்னர்தொழுஞ்சுடர்வேற் *
காளாயெனதாருயிர்காவலனே..................*

(இ-ள்) தோளாண்மையின் - புயவலிமையினால்—மன்னர்தொழும்-அரசர்களால்வணங்கப்பட்ட—சுடர்வேற்காளாய்-ஒளிபொருந்தியவேலைத்தரித்த காளையையொத்தவனே—எனது-என்னுடைய—ஆர்-நிறைந்த—உயிர்-உயிருக்கு—காவலனே-அரசனாகிய நளமகாராஜனே—வேள்-மன்மதனானவன்—ஆண்மைசெலுத்தல்- (உனைவிழைந்தவென்னிடத்துப்) பராக்கிரமஞ்செலுத்துவதை—விலக்கிலையாய்-ஒழிக்காதவனாய்—வாளாவுறைகின்றது- சும்மாவிருக்கின்றது—மன்னறமோ- அரசாதுதருமமோ—(எ-று) (கருத்து)

நளமஹாராஜனே மன்மதபாணஞ்செலுத்துதலை நீவிலக்காதிருக்கிறது இராஜகருமமோ என்றாள் என்பதாம். (சரு)

இடரோதவிராதிரவோவிடியா..................*
அடல்வேலவர்தாமருளோபுரியார்..............*
குடவால்வளையேகுருகேதிரையே...........*
கடலேகழியேயிதுவோகடனே ..... ........ *.

(இ-ள்) குடவால்வளையே- குடம்போன்றவெள்ளியசங்கே—குருகே-நாரையே—திரையே-அலையே—கடலே-சமுத்திரமே---கழியே-கழிநிலமே—இடரோ-துன்பமோ—தவிராது-நீங்காது—இரவோ-இராத்திரியோ—விடியாது-விடியமாட்டாது-- அடல்-கொலைசெய்கின்ற—வேலவர்தாம்-வேற்படையையுடையநளமஹாராஜர்—அருளோபுரியார் - கருணைசெய்யார்(ஆதலால்)—இதுவோ-இப்படிவருத்துவதோ—கடன்-என்கடன் —(எ-று) ஏ-இரக்கப்பொருளிலும், ஏ- எண்ணிலும்வந்தன-(கருத்து) தமயந்தி கழிக்கரைப்புலம்பல என்பதாம். (சசு)

கழலாவளையுங்கனலாமதியு... ...........*
முழலாமனனும்பெறுநாளுளதோ..... *
மழவேறனையான்மருவாவிரகத்......... *
தழலாலுருகுந்தமியேனினியே... .... *

(இ-ள்) மழவேறனையான் - இளவேற்றையொத்தநளமஹாராஜன் —மருவா-பொருந்தப்பெறாத—விரகத்தழலால் - விரகாக்கினியால்—உருகும்-கரைகின்ற—தமியேன் - தனியேனாகியநான்—இனி-இனி—கழலாவளையும்-கழலாதவளையல்களையும்—கனலாமதியும்·சுடாதசந்திரனையும்—உழலாமனனும் - கவலைப்படாதமனத்தினையும்—பெறுநாள்-பெற்றுக்கொள்ளுநாள்—உளதோ- உண்டாகுமோ—(எ-று.) [கருத்து] நான்கழலாதவளையல்களையும் சுடாதசந்திரனையுங் கவலைப்படாதநெஞ்சையும் பெறுநாளுண்டோ என்றாள் என்பதாம் (சஎ)

அள்ளிக்கொளலாமிருளூடடர்வேள்..........*
கள்ளத்தெனதாருயிரோகவர்வான்..........*
விள்ளற்கரிதாம்விரகந்தமியே..................*
னுள்ளத்துறைவாயுணர்கிற்றிலையோ............*

(இ-ள்) விள்ளற்கரிதாம்-சொல்லுதற்கரிதாகிய—விரகம்-விரகத்தையுடைய—தமியேன்-தனியேனாகிய என்னுடைய - உள்ளத்துறைவாய் - மனத்திலிருக்கின்றநளனே— (நீ) அள்ளிக்கொளலாம்-(கையால்)அள்ளிக்கொளலாம்படியிருந்த—இருளூடு- இருளினிடத்தில்—அடர்வேள்-அடர்கின்றமன்மதனாலும்—கள்ளத்து-களவி

ளல்--எனது-என்னுடைய--ஆர்-நிறைந்த--உயிர் - ஆவியை—கவர்வான்-அபகரிப்பான்- உணர்கிற்றிலையோ- (அக்களவினை) யறிகின்றாயில்லையோ—(எ-று) (கருத்து) என்னுள்ளத்திருக்கின்ற நளனை மன்மதன் என்று னை அபகரிப்பான் நீயறியாயோ என்றாள் எ-ம்.

(எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

என்றுவெந்துயருற்றிருகணீர்வார விளமுலைத்துணை பசப்பூர
மின்னிகழ்மருங்குற் செய்யவாய்ப்பேதைமெலிவொடுவருந்து
மெல்லையினின்,மன்றலங்கமலமுகைமுறுக்கவிழ்த்துவரிச்சி
றைத்தும்பிபாட்டயரத், துன்றிருள்பருகும்விரிகதிர்பரப்பிச்
சுடரவன்குணபுலத் * தெழுந்தான்............ .......,....*

(இ-ள்) என்று-இப்படியென்று—வெந்துயருற்று- வெவ்விய துன்பத்தையடைந்து--இருகணீர்வார - இரண்டுகண்களினின்றும்நீரொழுக--இளமுலைத்துணை-இளமைபொருந்திய இரண்டுஸ்தனங்களும்--பசப்பூர-வேறுபட்டநிறத்தையடைய--மின்-மின்னல்போல்--நிகழ்-பிரகாசிக்கின்ற--மருங்குல் - இடையினையும்--செய்யவாய்-சிவந்தவாயினையுமுடைய--பேதை- தமயந்தியானவள்--மெலிவொடு-இளைப்போடு--வருந்தும்-வருத்தப்படுகின்ற--எல்லையினில்-காலத்தில்--மன்றல்-வாசனைபொருந்திய--அம்-அழகிய--கமலமுகை-தாமரையரும்பினுடைய--முறுக்கவிழ்த்து- முறுக்கவிழச்செய்து--வரி-இரேகைகள்பொருந்திய--சிறை-சிறகையுடைய—தும்பி-வண்டுகள்--பாட்டயர-பாட்டைப்பாட--துன்று-நெருங்கிய--இருள்பருகும்-இருளையுண்ணும்--விரிகதிர்பரப்பி-விரிகின்றகிரணங்களைப்பரவச்செய்து--சுடரவன்-சூரியனானவன்--குணபுலத்து-கிழக்குத்திசையில்-எழுந்தான்-உதித்தான்—(எ-று) * சருக்கசங்கிரகம்-சு-ரூ-எழும்பல்விழுதல்வளைகளிமிர்த-லடத்தலென்றகருமமைவலைத்தே-இவ்விதியால் எழுந்தான் ஐங்கருமத்தொன்று. (கருத்து) தமயந்தி வருத்தப்படுங்காலத்தில்சூரியனுதயமாகினான் என்பதாம்.

தணிவருந்துயரிற்கண்படைபெறாதளர்வொடுவருந்திவெய்
துயிர்க்கு,மணியெழுவனையபொற்றடந்திணிதோண்மன்னவ
ர்மனமகிழ்சிறப்பப், பணியரவல்குற்கதிர்முலைத்துவர்வாய்ப்
பைந்தொடிவதுவையின்றென்று, வணிநகரணிகென்றரசர்
கோன்பணியாலதிர்முரசறைந்தார்............. *

(இ-ள்) தணிவருந்துயரின்-ஆறுதற்கரிய துன்பத்தினால்- கண்படைபெறாது-நித்திரைசெய்யாமல்--தளர்வொடு- தளர்ச்சியுடன்—வருந்தி-வருத்தப்பட்டு--வெய்துயிர்க்கும்-பெருமூச்சுவிடுகின்ற--மணியெழுவனைய-மணித்தூண்போன்ற--பொன்-அழகிய--தடம்-பருத்த--திணி-வலிமைபொருந்திய--தோள் - தோளையுடைய--மன்

னவர்-அரசர்கள்,மனமகிழ்ச்சிறப்ப-மனமகிழ்ச்சிமிக, பணியரவல்குல்-அரரப்படம்போன்றவல்குலையும்,கதிர்முலை-காந்திபொருந்தியஸ்தனங்களையும்--துவர்வாய்-செவ்வாயையும்--பைந்தொடி-பசியவளையலையுமுடையதமயந்தியினது-வதுவை - விவாகம்--இன்றென்று-இன்றென்றுசொல்லி—அணி-அழகிய--நகரணிகென்று- நகராயலங்கரிக்கவென்று--அரசர்கோன்பணியால்- வீமராஜனேவலினால்--அதிர்குரல்-அதிர்கின்றவோசையையுடைய--கடி-பெருமைபெற்ற--முரசு-பேரிகையை--அறைந்தார்- (வள்ளுவ) ரடித்தார்கள்—(எ-று.)(கருத்து) அரசர்கள் மனங்களிக்க வீமராஜன் கட்டளையினாலே தமயந்திக்கு விவாக மின்றைக்கென்று நகராயலங் கரிக்கும்படி பேரிகையறைந்தார்கள் என்பதாம். (ரு௰)

இமிழ்கடிமுரசங் கறங்குபேரோதை யெழினகர் மாந்தர்தஞ்
செவியி,னமிழ்துகுத்தென்னத்தவழ்தலுமகிழ்வுற்றணிவிழவ
றாதகோமறுகிற்,கமழ்நறுந்தாற்றுப்பாளைவாய்க்கமுகுங்கன்
னலுங்கதலியுநடுவா,ருமிழ்கதிரொளிக்குமணிநெடுங்கொடிக
ளுயர்விசும்பகடுறத்திரைப்பார்......................................*

(இ-ள்)இமிழ்-இனிமையையுடைய—கடி- பழமைபெற்ற—முரசம்-பேரிகையானது—கறங்கு-ஒலிக்கும்—பேரோதை-பேரொலியானது—எழினகர்-அழகியநகரத்திலிருக்கும்—மாந்தர்தஞ்செவியின்-மனிதர்செவியில்—அமிழ்துகுத்தன்ன-அமிர்தத்தையகுத்ததுபோல்—தவழ்தலும்-தவழ்ந்தவளவில்--மகிழ்வுற்று- மகிழ்ச்சியடைந்து—அணி-அழகிய—விழவறாத - திருவிழாநீங்காத—கோமறுகில்-இராஜவீதியில்—கமழ்-பரிமளிக்கின்ற—நறு-நறிய--தாறு-குலைகளையுடைய—பாளைவாய்- பாளைகள்வாய்ந்த—கமுகும்கமுகமரமும்—கன்னலும்-கருப்பங்கழியும்—கதலியும் - வாழைமரமும்—நடுவார்-நடுவார்கள்—உமிழ்-கொப்புளிக்கின்ற--கதிரொளிக்கும்-கிரணத்தைவீசுகின்ற—மணி-இரத்திநங்கள்பதித்த—நெடுகொடிகள் - நெடியகொடிகளை--விசும்பகடுற - ஆகாயமுழுவதுநிறைய—திரைப்பார்-வரிசையாகக்கட்டுவார்கள்—(எ-று (கருத்து) மனிதர்கள்மங்கலமுரசஞ்சத்தங்கேட்டவளவில் இராஜவீதிகளில்பாக்குமரங்களுங்கரும்பும் வாழையுநடுவார்கள் ஆகாயமளாவக்கொடிகளுங்கட்டுவார்கள்என்பதாம். (ருக)

சேணுயர்பரிதிதழும்புறநிவந்தசெழுமணித்தோரணநடுவார்.
வாணிலவொழுகுமணிவடம்புனைந்துவயங்குபொற் றசும்புக
ணிரைப்பார்,பாணிகர்வரிவண்டெளர்ந்துதேனுகரும் பனிமலர்
த்தாமநாற்றிடுவார், தூணுலாகழித்துவிரிகதிரொறிக்குஞ்சுடர்மணிச்செறிதுகடைப்பார்......................................*

(இ-ள்) சேணுயர்-மிகவுமுயர்ந்த—பரிதி-சூரியனுடைய—தழும்பற-தழும்புபொருந்த—நிவந்த-உயர்ந்த--செழுமணி-செழுமையுள்ளமணிகள்பதித்த—தோரணம்-தோரணங்களை — நடுவார்-நடுவார்கள்—வாள்-ஒளிபொருந்திய—நிலவு-சந்திரிகை — ஒழுகும் வீசுகின்ற—மணிவடம்-முத்துமாலைகளை--புனைந்து-தரித்து--வயங்கு-பிரகாசிக்கின்ற—பொற்கும்புகள்-பொற்குடங்களை —நிரைப்பார்-வைப்பார்கள்—பாணர்-பண்ணையொத்த—வரி-பாட்டுக்களையுடைய—வண்டு வண்டுகள்—உளர்ந்து-தடவி — தேனுகரும்-தேனுண்ணும் —பனிமலர்-குளிர்ச்சிபொருந்தியமலரால்தொடுத்த—தாமம்-மாலைகளை—நாற்றுவார் - தொங்கக்கட்டுவார்கள்—தூண்-தூண்களின் — உறைகழித்து-உறையைநீக்கி -- விரிகதிரொளிகளும்-விரியுங்கிரணங்களைவீசுகின்ற— சுடர் பிரகாசிக்கின்ற--மணி இரத்நங்களில்—செறி-படிந்த—துகள்-புழுதியை—துடைப்பார்-துடைப்பார்கள் —(எ-று) (கருத்து) சூரியன்தழும்புடையத்தோரணம் நடுவார்கள். முத்துமாலைகளணிந்துபொற்குடங்கள் வைப்பார்கள் பூமாலைகள்கட்டுவார்கள், தூண்களினுறைகளைக்கழற்றித் தூசைத்துடைப்பார்கள் என்பதாம். (ருஉ)

மைந்தரோடியைந்தநல்லார்பரிந்த மணிவடக்குப்பைகளகற்றிச்
சந்தமென்குழம்பானன்னிலமெழுகித்தண்பூவோட்ட லிகைய
மைப்பார், இந்திரதனுவிற்றிகழ்தரச்சாந்துமெரிமணிச் சுண்
ணமுமிறைப்பார், நந்தலில்விளக்கமணிசெய்பொற்றகளிநறு
நெய்பெய்தொளியுறவெடுப்பார்........................ *

(இ-ள்) மைந்தரோடு-புருடருடன் — ஊடி-பிணங்கி--நல்லார்-அந்தமகளிர்கள்—பரிந்து நீக்கிய—மணிவடக்குப்பைகள்- முத்துமாலைகள்குவியல்களை- அகற்றி-நீக்கி--சந்தமென்குழம்பால்-சந்தனத்தினுடைய மெல்லியகுழம்பினால்—நன்னிலமெழுகி-நல்லபூமியைமெழுகி--தண்பூவை-குளிர்ச்சிபொருந்தியபூக்களையுடைய--பாலிகை-பாலிகைகளை--அமைப்பார்-வைப்பார்கள் — இந்திரதனுவில-இந்திரவில்லைப்போல்- திகழ்தர-பிரகாசிக்க--சாந்தம்-சந்தனத்தையும்--எரி-காந்தியையுடைய--மணிச்சுண்ணமும் - (அதன்மேல் இரத்நப்பொடிகளையும்—இறைப்பார்-இறைப்பார்கள்--நந்தலில்-கெடுதலில்லாத— விளக்கம்-தீபங்களை—மணிசெய்பொற்றகளி-இரத்நங்களிழைத்தபொன்னகல்களில், நறுநெய்பெய்து-நல்லநெய்விட்டு— ஒளியுற - ஒளிபொருந்த — எடுப்பார்-ஏற்றுவார்கள்— (எ-று) (கருத்து) புருஷர்களோடு பிணங்கிப் பெண்களெறிந்தமணிக்குப்பைகளைநீக்கிச் சந்தனக்குழம்பாலே நிலத்தைமெழுகிமு

ளைப்பாலிகையை வைப்பார்கள், சந்தனக்குழம்பில் நவமணிப்பொடிகளை இறைப்பார்கள், நவமணிவிளக்கேற்றுவார்கள் என்பதாம்.

ஐயரிசிதறுமழைமதர்நெடுங்கணஞ்சனமெழுதுவார்சாந்தத்
தொய்யிலவெம்முலையினிலவுகொப்புளிக்குந் தூமணிப்பிறை
வடமணிவார், மையிருங்கூந்தல்வகிர்ந்துந் தேன்முரலுமட்டுவா
ர்பூந்தொடைபுனைவார், நையுநுண்மருங்கிற்கதிரொளிபரப்பு
நகைமணிமேகலைபுனைவார் ...... ................. .... . *

(இ-ள்) ஐயரிசிதறும்-அழகியசெவ்வரிபரந்த—மழை-குளிர்ச்சி பொருந்திய—மதர்-களிப்பையுடைய — நெடுங்கண்-நெடிய கண்களில்--அஞ்சனமெழுதுவர்-மையெழுதுவார்கள் --சாந்தத்தொய்யில்-சந்தனக்கோலமெழுதப்பெற்ற--வெம்முலையின்- விருப்பத்தைச்செய்யுந்தனங்களில்--நிலவு-சந்திரிகையை--கொப்புளிக்கும்-உமிழ்கின்ற--தூ பரிசுத்தமாகிய--மணி- இரத்நங்களிலமைத்த----பிறைவடம்-சந்திரஹாரத்தை--அணிவார்-அணியார்கள்- மை- கரிய--இரும்-பெரிய--கூந்தல்-அளகபாரத்தை — வகிர்ந்து-கோதி--தேன்முரலும்-வண்டுகளொலிக்கின்ற—மட்டுவார்- தேனொழுகுகின்ற—பூந்தொடை-பூமாலைகளை--புனைவார் சூடுவார்கள்--நையும்-நைகின்ற- நுண் - நுண்ணிய--மருங்கில்-இடையில்--கதிர் கிரணங்களினது--ஒளிபரப்பும்-ஒளியைவிரிகின்ற--நகை- காந்தியையுடைய, மணி-மணிகளிழைத்த—மேகலை-மேகலாபரணத்தை— அணிவார்-அணிவார்கள்—(எ-று) (கருத்து) அந்நகர்மாதர்கள் கண்களுக்கு மையிடுவார்கள், தனங்களில் சந்திரஹாரந் தரிப்பார்கள் கூந்தலில் மாலையணிவார்கள் இடையில் மேகலாபரணந் தரிப்பார்கள் என்பதாம். (௫௬)

சில்லரிச்சிலம்புபஞ்சிமேற்பணிக்குஞ்சீறடிகவின்செயப்புனை
வா, ரொல்வளைதிருத்தியாடமைபணைத்தோளெழில்பெறத்தொ
யில்வரைந்திடுவா, ரல்லிபங்கமலமென்மலர்ககவுற்றுமடியினி
லலத்தகமணிவார், வில்லுமிழொருகாழ்முத்தணியணிவார் வி
ரைகமழ்தெரியல்கைபுனைவார்......... ................ .. *

(இ-ள்) சில்-ஆரவாரிக்கின்ற—அரி-பருக்கைக்கல்லையுடைய—சிலம்பு-சிலம்புகளை—பஞ்சிமேல்- பஞ்சின்மேலமிதிப்பினும்—பணிக்கும்-வாடுகின்ற—சீறடி-சிறியபாதங்களில்—கவின்செய-அழகுபொருந்த—புனைவார்-தரிப்பார்கள்—ஒல்- பிரகாசத்தையுடைய—வளை-வளையல்களை—திருத்தி-அணிந்து--ஆடமை-வெற்றியமைந்த—பணைத்தோள்-பருத்ததோள்களில்—எழில்பெற- அழகுபெறும்படி—தொயில்-சந்தனக்கோலத்தை--வரைந்திடுவார் - எழுது

வார்கள்—அல்லி-அகவிதழையுடைய—அம்-அழகிய—கமலமென்மலர்-தாமரையினது மெல்லியமலரை—கவற்றும்-கவலைப்படுத்தும்—அடியினில்-பாதங்களில்—அலத்தகம்-செம்பஞ்சுக்குழம்பை—அணிவார்-பூசுவார்கள்—வில்-ஒளியை—உமிழ்-கொப்புளிக்கின்ற—ஒரு-ஒப்பற்ற—காழ்-தேறிய—முத்தணி-முத்துமாலைகளை—அணிவார்-அணிவார்கள்—விரைகமழ்-வாசனைகமழ்கின்ற—தெரிபல்-மலர்மாலைகளை—கைபுனைவார்-அலங்கரிப்பார்கள் (எ-று) (கருத்து) பாதங்களிற்சிலம்பணிவார்கள்-வளையல்களணிந்துதோள்களிற்சந்தனக்குழம்பாற் சித்திரமெழுதுவார்கள்- பாதங்களிற்செம்பஞ்சுக்குழம்பு பூசுவார்கள்-முத்தாரமணிவார்கள் - மலர்மாலைகளையலங்கரிப்பார்கள், எ-ம். (௬௫)

கதிர்மதிதவழுமாடநீண்முகப்பிற்காழகிற்றீம்புகை யிடுவார்,
முதுமறைவாணர்க் * கின்னமுதடுவார்மொய்கதிர் வெயில்க
ரந்தொழிய,மதிநிலவொழுகுநித்திலப்பந்தர்மாணுறவயின்வ
யினிழைப்பார்,சதிமுறைதவறாத்தண்ணுமைகறங்கக்கூத்தியர்
தனித்தனிநடிப்பார்... ............................... *

(இ-ள்) கதிர்-கிரணங்களையுடைய—மதிதவழும்-சந்திரன் றவழ்கின்ற—மாடம்-உப்பரிகையினுடைய—நீண்முகப்பில்-நீண்டமுகப்பினில்—காழ்-வைரம்பொருந்திய—அகிற்றீம்புகை- அகிலினதினியபுகையை—இடுவார்-இடுவார்கள்--முதுமறைவாணர்க்கு-பிராமணர்களுக்கு—இன்னமுதடுவார்- இனிய அமுதுசமைப்பார்கள்—மொய்-மொய்க்கப்பெற்ற—கதிர்வெயில்-சூரியனதுவெப்பமானது—கரந்தொழிய-ஒளித்துநீங்க—மதிநிலவொழுகும்-சந்திரப்பிரகாசம்வீசுகின்ற—நித்திலப்பந்தர்-முத்துப்பந்தல்கள்—மாணுற-பெருமைபொருந்த—வயின்வயின்- இடங்கடோறும்—இழைப்பார்-செய்வார்கள்—சதிமுறை- தாளவொத்தின்முறைப்படி—தவறு-தப்பாமல்—தண்ணுமை-மத்தளம்—கறங்க- ஒலிக்க—கூத்தியர்-நாடகக்கணிகையர்—தனித்தனி-வேறுவேறாக—நடிப்பார்-கூத்தாடுவார்கள்—(எ-று) * தருக்கசங்கிரகம்- ரசு-சு- சுவைத்திறங்கவர்வது நாவினுனியது-நாவெனப்பெயரியத்தன்பொறியென்ப-இவ்விதியால் இன்னமுது நாவின்விடயம். (கருத்து) மாடங்களிலகிற்புகையூட்டுவார்கள் பிராமணர்களுக்கமுதுசமைப்பார்கள்-முத்துப்பந்தலிடுவார்கள்-நாடககணிகையர் நடனமாடுவார்கள், எ-ம்.

எழிறிகழ்கன்னிக் கமுகமென்மிடற்றி னிசையெழீஇ யினிது
பாட்டயர்வார்,செழுமலர்க்காந்தண் முகிழ்விரலசேப்பத்திவ
வியாழின்னரம்புளர்வார்,முழுநெறிக்குமுதமுகைநெரித்தெ

ணவாய்முகிழ்த்தருங்குரவைகள்புரிவார்,கொழுமலர்வளைக்கை
கொட்டிவேனெடுங்கட்கோதையர்குரவையாட்டயர்வார்.. *

(இ-ள்) எழில்-அழகானது—திகழ்-பிரகாசிக்கின்ற—கன்னி-இளமைபொருந்திய—கமுகமென்மிடற்றில்-கமுகையொத்த மெல்லியகண்டத்தில்—இசையெழீஇ-இசையையெழுப்பி—இனிது-இனிமையாக—பாட்டயர்வார்-பாட்டைப்பாடுவார்கள்—செழு-வளம்பொருந்திய—மலர்-மலரையுடைய—காந்தண்முகிழ்விரல்-காந்தளரும்பையொத்தவிரல்கள்—சேப்ப-சிவக்க—திவவு-வலிக்கட்டையுடைய--யாழ்-வீணையினுடைய--இன்னரம்பு-இனியநரம்பை—உளர்வார்-தடவுவார்கள்—முழுநெறி-முழுநெருப்பையுடைய--குமுதமுகை-செவ்வல்லியரும்பை—நெரித்தென-நெரித்ததுபோல—வாய்முகிழ்த்து-வாயைக்குவித்துக்கொண்டு—அரும்-அரிய--குரவைகள்புரிவார்-குரவைப்பாடலைப்பாடுவார்கள்--கொழுமலர்-செழுமையுள்ளதாமரைமலர்போன்ற—வளைக்கைகொட்டி-வளையலையணிந்தகைகளைக்கொட்டி--வேனெடுங்கண்-வேல்போன்றநெடியகண்களையுடைய—கோதையர்-மாதர்கள்—குரவையாட்டயர்வார்-குரவைக்கூத்தாடுவார்கள்—(எ-று) (கருத்து) பெண்கள் பாடுவார்கள்-வீணைவாசிப்பார்கள்-குரவைப்பாடல்பாடுவார்கள்-கைகளைக்கொட்டிக் குரவைக்கூத்தாடுவார்கள் என்பதாம். (ருஎ)

வெண்மதிக்கதிர்நாற்றனையவான்கவரிநெற்றிவெங்கலினவாம்
புரவி,பண்ணுறுத்திடுவார் குருதிதோய்க்கோட்டுப் படுமதக்க
லுழிவெஞ்சினத்த, வண்ணன்மால்யானைகவினுறப்பருமித்த
ணிவிழாமறுகிடைக்கொணர்வார்,மண்ணமைகொடிஞ்சிக்கூ
ந்தன்மான்றடந்தேர்வானவரூர்திபெற்றருவார்.. .......... *

(இ-ள்) வெண்மதி-வெள்ளியசந்திரனுடைய—கதிர்-கிரணங்களை—நாற்றனைய-நாற்றதையொத்த—வான்-மேலாகிய—கவரி-சாமரையணிந்த—நெற்றி-நெற்றியையுடைய—வெம்-வெய்ய—கலினம்-கடிவாளம்பூண்ட—வாய்-காவுகின்ற-புரவி-குதிரைகளுக்கு—பண்ணுறுத்திடுவார்-கல்லணைசேர்ப்பார்கள்—குருதிதோய்-உதிரந்தோய்ந்த—கோட்டு-கொம்பையுடைய—படு உண்டாகின்ற—மதக்கலுழி-மதப்பெருக்கையும்—வெஞ்சினத்த-வெவ்விய கோபத்தையும்—அண்ணல்-பெருமையினையும்—மால்-மயக்கத்தினையுமுடைய—யானை-யானையை—கவினுற-அழகுபொருந்த—பருமித்து-அலங்கரித்து—அணி-அழகிய—விழா-திருவிழாவையுடைய—மறுகிடை-வீதியிலே—கொணர்வார்-கொண்டுவருவார்கள்—மண்ணமை-ஒப்பனையமைந்த--கொடிஞ்சி-மேன்மொட்டையும்—கூந்தன்மான்-புறமயிர்பொருந்திய குதிரைகளையுமுடைய

—நடந்தேர் - விசாலப்பொருந்தியதேர்களை—வானஊர்தியில். தேவர்விமானங்கள்போல்—தருவார்-கொண்டுவருவார்கள்- (எ-று) (கருத்து [illegible] ராசர்களுக்குக் கல்லணையிடுவார்கள்- யானைகளையலங்கரித்து[illegible]கொண்டுவருவார்கள்-தேர்களையலங்கரித்துக்கொண்டுவருவார்கள், எ-ம். (௫௮)

இருங்கடற்றோன்றுமழகதிரோய்க்கு மெரிமணிச்சிவிகையின்
வருவார், சுரும்புவீழ்ந்தரற்றமும்மதம்பொழியுஞ்சூழியால்
யானையிற்புகுவார்,திருந்துமொண்சுழியகூந்தன்மான்றேரிற்
சேட்டிளம்பரிதியிற்செல்வார்,பொருந்தமண்டோயாதகல்வி
சும்பகவும்பொங்குளைப்புரவியிற்போவார்........ ..... *

(இ-ள்) இருங்கடற்றோன்றும்-பெரியகடலினுதிக்கின்ற—மழகதிரோய்க்கும்-இளஞ்சூரியனையொக்கும்—எரிமணி-பிரகாசிக்கின்ற இரத்நங்கள்பதித்த—சிவிகையின்-தண்டிகையில்—வருவார்- வருவார்கள்—சுரும்பு-வண்டுகள்—வீழ்ந்து-விரும்பி—அரற்ற- ஒலிக்க—மும்மதம்பொழியும்- மும்மதங்களையும்பொழிகின்ற—சூழி-முகபடாத்தையுடைய—மால்-பெரிய—யானையிற்புகுவார்- யானையின்மேல்வருவார்கள்—திருந்தும்-திருந்தப்பெற்ற—ஒள்-விளங்குகின்ற—சுழிய-சுழிகளையுடைய—கூந்தன்மான்- புறமயிரினையுடைய குதிரைகட்டிய—தேரில்-இரதத்தில்—சேட்டிளம்பரிதியில்- மிகுந்த இளமையுடைய சூரியனைப்போல்—செல்வார் - செல்வார்கள்—பொருந்த-பொருந்தும்படி—மண்-பூமியிலே—தோயாது- தோயாமல்—அகல்விசும்பு- அகன்ற ஆகாயத்தில்—அகவும்-ஆடுகின்ற—பொங்கு-மிகுந்த—உளை-புறமயிரினையுடைய—புரவியில்- குதிரையின்மேல்—போவார்-போவார்—(எ-று) (கருத்து) சிலர் அரதரச்சிவிகைகளில் வருவார்கள்- சிலர் யானைகளில் வருவார்கள்- சிலர் தேர்களிற்போவார்கள் - சிலர் குதிரைகள்மேற்போவார்கள்- என்பதாம். (௫௯)

நளிர்மதிதவழுமலையவெற்புயிர்த்தநறுங்குறடுரிஞ்சுபூந்தேய்
வை, தளர்கொடிமருங்குலலமரப்பணைத்ததரளமென்முலைமு
கட்டணிவா, ரளியினமோச்சிவள்ளவாய்த்தேறலமிர்தெனநுக
ர்ந்துளங்களிப்பார், துளிமதுட்பிலிற்றுக்காவதங்கமழுந் தா
டலர்ச்சிகழிகைபுனைவார் ...................., ............. *

(இ-ள்) நளிர்-குளிர்ச்சிபொருந்திய—மதிதவழும்- சந்திரன்றவழ்கின்ற---மலயவெற்பு-பொதியமலை---உயிர்த்த - பெற்ற--நறுங்குறடு-நறியசந்தனக்கட்டைகளால்---உரிஞ்சு-தேய்த்த---பூந்தேய்வை-அழகியகுழம்பினை---தளர்-தளரப்பெற்ற--கொடி-வல்லிபோன்ற---மருங்குல்-இடையானது---அலமர - சுழற்சியடைய--பணை

த்த-பருத்த---தாளம் - முத்துவடமலிந்த--- மென்முலைமுகட்டு-மெல்லியமுலைகளின்மேல்--அணிவார்-பூசுவார்கள்---அளியினமோச்சி-வண்டுக்கூட்டங்களையோட்டி--வள்ளவாய்த்தேறல்- கிண்ணத்திலிருக்குந்தேனை---அமிர்தெனநுகர்ந்து-அமிர்தம்போலுண்டு---உளங்களிப்பார்-மனமகிழ்வார்கள்--- துளி- துளிகளையுடைய---மதுப்பிலிற்றி-தேனையொழுக்கி---காவதம்-காததூரமளவும்--கமழும்-மணக்கும்--தூ-பரிசுத்தமாகிய---மலர்-மலராற்றொடுக்கப்பெற்ற---சிகழிகை-மாலைகளை--புனைவார்-தரிப்பார்கள் (எ-று) (கருத்து) சிலபெண்கள்சந்தனங்களைக்கனதனங்களிற்பூசுவார்கள்- சிலபெண்கள்தேனுண்டுகளிப்பார்கள்சிலபெண்கள்மாலைகளைத்தரிப்பார்கள்.

நிழலொடுகறுவிப்பாகெறிந்தூன்பெய் நிணத்தொடுபழகுகூ
ன்பிறைக்கோட், டழிகவுட்கடாத்ததறுகண்மால்யானையகற்
றுமினெயிற்புறத்தென்பார், மழைமதர்நோக்கிமன்றல்செய்
காலைவல்லவர்கன்னலிற்றெரிவார், விழைவொடுமகிழ்வுற்றளவ
ளாய்ப்புகுந்தோர்வியப்புறவிருந்தெதிர்கொள்வார்...... *

(இ-ள்) நிழலொடு-தங்களனிழலோடு---கறுவி-கோபித்து---பாகெறிந்து-பாகனைவீசி—ஊன்பெய்-தசையைப்பெய்கின்ற-- நிணத்தொடு - நிணத்தோடு--பழகு- பழகாநின்ற---கூன்பிறைக்கோட்டு-வளைவுபொருந்தியபிறைபோலுங்கொம்பினையும்---அழி- அழிகின்ற---கவுள்-கதுப்பினிலொழுகுகின்ற--கடாத்த- மதத்தினையுமுடைய---தறுகண்-அஞ்சாத---மால்யானை-பெரியயானையை---எயிற்புறத்து - மதிற்புறத்தில்---அகற்றுமினென்பார்- நீக்குங்களென்பார்கள்--மழைமதர்நோக்கி-தமயந்தியினது--மன்றல்செய்காலை-விவாகஞ்செய்யும்பொழுதை---வல்லவர்- (கணிதநூலில்) வல்லமையுடையவர்கள்---கன்னலில்-நாழிகைவட்டிலால்--தெரிவார்- தெரிந்துகொள்வார்கள்---விழைவொடு-விருப்பொடு--மகிழ்வுற்று- மகிழ்ச்சியையடைந்து---அளவளாய்-கலந்து---புகுந்தோர்- அடைந்தவர்களை—வியப்புற-அதிசயிக்க—விருந்து- விருந்தாக--எதிர்கொள்வார்-எதிர்கொள்வார்கள்—(எ-று) (கருத்து) யானைகளைக்கோட்டையின்புறத்தோட்டென்பார்கள்-கணிதநூலில்வல்லவர்கள் தமயந்தி முகூர்த்தகாலத்தளவை நாழிகைவட்டிலாலறிவார்கள்- வந்தோரைவிருந்துக்கழைப்பார்கள், எ-ம். (௬௧)

விரைகமழ்முல்லைமுகைநிகரடிசில் வெள்ளியங்கிரியெனக்குவி
ப்பார், *கருனையுங்கன்னற்கட்டியுந்தேமாங்கனிகளும்வயின்
வயினிரைப்பார், திரைபொருகடலினறுநெயும்பாலுந்தெருத்
தொறும்பெறுக்கெடுத்தோட, வெரிபசும்பொன்னங்கலம்ப
லபரப்பியிரவலர்க்கின்னமுதளிப்பார்..................... *

(இ-ள்) விரை-வாசம்--கமழ்-மணக்கின்ற---முல்லைமுகைநிகர்-முல்லையரும்பையொத்த---அடிசில்-சோற்றை--வெள்ளியங்கிரியென-வெள்ளிமலைபோல்---குவிப்பார்-குவிப்பார்கள்---கறிகளையும்-பொரிக்கறியும்---கன்னற்கட்டிடம்-சருக்கரைக்கட்டியும்---தேமாங்கனிகளும்-தித்திப்பமாம்பழங்களும்---வயின்வயின்-இடங்கள்தோறும்---நிரைப்பார்-ஒழுங்குபடவைப்பார்கள்--திரைபொரு-அலைமோதுகின்ற--கடலின்-கடல்போல்--நறுநெய்யும்-நயியநெய்யும்--பாலும்-பாலும்---தெருத்தொறும்-தெருக்கடோறும்--பெருக்கெடுத்தோட-அதிகரித்தோட--எரி-பிரகாசிக்கின்ற---பசும்பொன்னங்கலம்-பசியபொற்கலங்களை--பல-அனேகமாக--பரப்பி-வைத்து---இரவலர்க்கு-யாசகர்க்கு---இன்னமுது-இனியசுவையுள்ள அமுதை--அளிப்பார்-கொடுப்பார்கள்—(எ-று) * தருக்கசங்கிரகம்-ஙூஅ-ரு. நாவாற்கவருங்குணஞ்சுவையதுவே-யினித்தல்புளித்தல்கூர்த்தலகார்த்தல்-கைத்தறுவர்த்தலென்றறுவகைத்தாகி-நிலநீர்க்கண்ணதுநிலையுங்காலே-இவ்விதியால்பொரிகறி அறுசுவைநாவின்சம்பந்தம். (கருத்து)சாதங்களை வெள்ளிமலைபோற் குவிப்பார்கள்-பொரிக்கறிகளையும்வெல்லக்கட்டிகளையுமாங்கனிகளையும் இடமெங்குநிறைப்பார்கள் - தெருக்களில் நெய்யும்பாலும் பெருக்கெடுத்தோடப் பொற்கலங்களில் யாசகருக்கமுதளிப்பார்கள் என்பதாம்.

வெள்ளியங்கிரியில்விஞ்சையர்தொகுவார் விண்ணவரெண்ணி
லர்புகுவா, ரள்ளிலைநெடுவேலரசர்வந்திருப்பாரந்தணரளப்பி
லர்திரிவா, ரொள்ளொளிவிரிக்கும்பருமணிச்செஞ்சூட்டுரகர்
வெள்ளிடையறச்செறிவார்-பள்ளநீர்க்கடல்சூழெழுபெருந்தீ
விலுறையுநர்பரிவினிற்றொகுவார்..........................*

(இ-ள்) வெள்ளியங்கிரியில்-கைலாசத்திலிருக்கின்ற--விஞ்சையர்-வித்தியாதரர்கள்--தொகுவார்-கூடுவார்கள்--விண்ணவர்-தேவர்கள்--எண்ணிலர்-அளவில்லாதவர்--புகுவார்-நுழைவார்கள்---அள்ளிலை-(மாமிசத்தை)அள்ளிக்கொள்கின்ற இலையையுடைய--நெடுவேல்-நெடியவேலையேந்திய--அரசர்-அரசர்கள்-- வந்திருப்பார்-வந்துதங்குவார்கள்--அந்தணர்-பிராமணர்கள்--அளப்பிலர்-அளவற்றவர்கள்--திரிவார்-உலாவுவார்கள்--ஒள்ளொளி-மிகுந்தவொளியை, விரிக்கும்-விரிக்கின்ற--பருமணி-பரியமணியினையுடைய--செஞ்சூட்டு-சிவந்தசூட்டினையுடைய--உரகர்-நாகர்கள்--வெள்ளிடையற - (எங்கும்)வெளியிடமில்லாமல்--செறிவார்-நெருங்குவார்கள்-- பள்ளம்-ஆழம்பொருந்திய---நீர்-நீரையுடைய---கடல்சூழ்- கடலாற்சூழப்பெற்ற--எழுபெருந்தீவில்-சத்ததீவில்--உறையுநர்- வசிப்பவர்கள்--பரிவினில்-அன்பினால்--தொகுவார்-கூடுவார்கள்(எ-று)(கருத்து)

வித்தியாதரர்கள்கூடுவார்கள் அளவிலாததேவர்கள்வருவார்கள் இராஜாக்கள்தங்குவார்கள் அளவிலாப்பிராமணர்கள்திரிவார்கள் நாகவேந்தர்கள் நெருங்குவார்கள் சத்தீவாருங்கூடுவார்கள், எ-ம். (௬௩)

பொன்னவிர்திதலைப்பொம்மல்வெம்முலையார்பணைமணிமாட
கமுறுக்கி,யின்னரம்புளரும்பாடல்கேட்டுருகிடேழிசைமகர
யாழ்பண்ணிக்கின்னரமிதுனம்பாடலுக்குடைந்துதேய்ப்படு
மிளிவரனோக்கி, மின்னருசுடர்வேல்விஞ்சையர்மகளிர்வியப்
பொடுதலைபணித்திடுவார்............................*

(இ-ள்) பொன்-பொன்போல்--அவிர்- பிரகாசிக்கின்ற--திதலை-தேமல்பரந்த--பொம்மல்-பொலிவினையுடைய-- வெம் - விருப்பத்தைச்செய்கின்ற--முலையார்- ஸ்தனங்களையுடையமாதர்கள்--பணைமணி-அரதநங்கள்பதித்த--மாடகம்-முறுக்காணிகளை---முறுக்கி-திருகி--இன்னரம்பு-இனியநரம்பை--உளரும்-தடவுகின்ற, பாடல்கேட்டு-பாடலைக்கேட்டு--உருகி-மனங்கரைந்து--எழிசை- எழிசைகளையுடைய--மகரயாழ்-மகரயாழை--பண்ணி-செய்து----கின்னிரமிதுனம்-கின்னரமிதுனங்கள்--பாடலுக்குடைந்தது-அப்பாட்டுக்குத்தோற்று--தேய்ப்படும்-தாழ்வுபடுகின்ற—இளிவரல்- இருவை--நோக்கி-பார்த்து--மின்னரு-ஒளியைவீசுகின்ற--சுடர்வேல்- காந்திபொருந்தியவேலையேந்திய—விஞ்சையர்மகளிர்-விஞ்சையர்மாதர்கள்--வியப்பொடு-ஆச்சரியத்தொடு--தலை-தலையை--பணித்திடுவார்-சாய்ப்பார்கள்—(எ-று) (கருத்து) கனதனங்களையுடைய பெண்கள் வீணைவாசிக்கும்பாடலைக்கேட்டுருகிவித்தியாதரமாதர்கள் தலைவணங்குவார்கள் என்பதாம். (௬௪)

முகிறவழ்குடுமிமாடநீள் கொடிகண்மொய்ம் மணிக்கதிர்பர
ப்புதலா-னகர்வயிற்றுவர்வா யரிமதர்மழைக்க ணன்னுதல்வ
துவைவேட்டடைந்த,வகலிருவிசும்பிற்பாயிருள்பருகுமருக்க
ர்பன்னிருவருந்தமது,பகலிடைபாந்துதிரியுமிவ்மினியிற்பட
ரொளிமழுங்கினர்திரிவார்.............. .......... ... ... ...*

(இ-ள்) முகில்-மேகங்கள்— தவழ்-தவழ்கின்ற—குடுமி - சிகரத்தையுடைய—மாடம்-உப்பரிகைகளின்—நீள்கொடிகள் - நீண்டகொடிகள்—மொய்ம்மணி-நெருங்கியஅரதநங்களினது —கதிர்பரப்புதலால்-கதிர்களைவிரித்தலால்—நகர்வயின்-அந்நகரத்தில்— துவர்வாய்-செவ்வாயையும்—அரி-செவ்வரிபரந்த — மதர்-களிப்பையுடைய--மழை-குளிர்ச்சிபொருந்திய--கண்-கண்களையுமுடைய--நன்னுதல்-தமயந்தியினது--வதுவை-விவாகத்தை — வேட்டடைந்த-விரும்பிவந்த—அகல்-அகன்ற—இரு-பெரிய--விசும்பில்- ஆகாயத்தில்—பாய்-பரவிய—இருள்பருகும்-இருளையுண்ணும்---அருக்

ச்பன்னிருவரும்-சூரியர்கள்பன்னிரண்டுபேரும்—தமது-தம்முடைய--பகலிடை-பகற்பொழுதில்--பறந்துதிரியும் - பறந்துதிரிகின்ற---மின்மினியில்-மின்மினிப்பூச்சிகள்போல்—படரொளி-படர்கின்றசோதியை—மழுங்கினர்-ஒழிந்தவராகி--திரிவார்-திரிவார்கள்—(எ-று) (கருத்து) மாடங்களிற்கட்டிய கொடிகளி னிரத்தினங்கள்அநேகபிரகாசங்களை விரித்தலால் தமயந்தி விவாகத்திற்குவந்தபன்னிருசூரியர்களுமின்மினிபோ லொளிமழுங்கித் திரிவார்கள் என்பதாம். (௬௫)

விண்ணகத்தமரரளப்பிலவொன்கோ விஞ்சையரளப்பிலவொன்
கோ, * மண்ணகத்தரசரளப்பிலவொன்கோவனிதையரளப்பி
லவொன்கோ,பண்ணமைகளிறுகூந்தன்மான்றடந்தேர்பதாதி
மற்றளப்பிலவென்கோ, வெண்ணிமற்றுனாக்கினித்துணையெ
ன்னவெம்மனோர்க்கியம்புமாறரிதே.................. ... ...*

(இ-ள்) விண்ணகத்தமரர்-விண்ணுலகத்திருந்துவந்ததேவர்கள்—அளப்பிலவொன்கோ - அளவிலவொன்றுசொல்லுவேனோ—விஞ்சயர் - வித்தியாதரர்கள்—அளப்பிலவொன்கோ -அளவிலவொன்றுசொல்லுவேனோ—மண்ணகத்தரசர்-மண்ணுலகத்திருந்துவந்தவரசர்கள்—அளப்பிலவொன்கோ-அளவிலவொன்றுசொல்லுவேனோ—வனிதையர்-மங்கையர்கள்—அளப்பிலவொன்கோ - அளவிலவொன்றுசொல்லுவேனோ—பண்ணமை-ஒப்பனையமைந்த—களிறு-யானைகள்---கூந்தன்மான்-புறமயிரினையுடையகுதிரைகள்--தடந்தேர்-விசாலம்பொருந்தியதேர்கள்--பதாதி-சேனைகள் அ[illegible])- அளப்பிலவென்கோ-அளவில்லையென்றுசொல்லுவேனோ-- எண்ணி-சிந்தித்து---உனாக்கின்-சொன்னால்---இத்துணையென்ன - இவ்வளவென்று---எம்மனோர்க்கு-எம்போலியோர்க்கு --- இயம்புமாறு-சொல்லுமாறு—அரிது-அரிதாகும்-(எ-று) [* தருக்கசங்கிரகம்-மசு-கூ.மண்கன்முதலியவிடமாகும், இவ்விடத்தால மண்விடயப்பொருளறிக.] (கருத்து) தேவர்கள் அளவில்லை, வித்தியாதரர்கள் அளவில்லை அரசர்கள் அளவில்லை, மாதர்கள் அளவில்லை; நால்வகைச் சேனைகளும் அளவில்லை இவ்வளவென்று சொல்லல் எனக்கரிதென்றார் புராணிகர் என்பதாம். (௬௬)

எரிகதிர்ப்பசும்பொன்முகடுவேய்ந்தோங்கியெழுகாவதமக
ன்ற, நிரைமணித்தயிற்றிமணிவிளக்கமைத்தநித்திலவிதானம
ண்டபத்திற்,புரிமுறுக்கவிழவண்டுபாண்முரன்றுபூந்துகள்கு
டைந்துதேனுகரும்,விரைகமழ்நறுந்தார்துயல்வருதடந்தோ
ள் விதர்ப்பர்கோனினிதுவந்*தடைந்தான்...... .. .. ...*

(இ-ள்) எரி-ஒளிவிடுகின்ற---கதிர்-கிரணங்களையுடைய---பசும்பொன்-பசியபொன்னால்---முகடுவேய்ந்து-சிகரங்கூட்டி--- ஓங்கி-உயர்ந்து---எழிருகாவதம்-பதினேழுகாதவழி---அகன்ற-பறந்த---நிரை-ஒழுங்காக---மணிகுயிற்றி - அரதநங்கள்பதித்து--- மணவினைக்கமைத்த-விவாகக்கிரியைக்குச்செய்த--நித்திலவிதானம்- முத்தினாற்செய்தமேற்கட்டியையுடைய---மண்டபத்தில் - மண்டபத்தின்கண்---புரிமுறுக்கவிழ-கட்டினதுமுறுக்குவிரிய---வண்டு- வண்டுகள்---பாண்முரன்று-இராகங்களை இசைத்து ---பூந்துகள்குடைந்து-மகரந்தங்களைக்குடைந்து---தேனுகரும்-தேனையுண்ணும்----விரைகமழ்-வாசனைகமழ்கின்ற---நறுந்தார்- நறியமலர்மாலையானது---துயல்வரு-அசைகின்ற---தடந்தோள் - பருத்ததோள்களையுடைய---விதர்ப்பர்கோன்-வீமராஜன்--இனிதுவந்து-இனிதானமகிழ்ச்சிகொண்டு-- அடைந்தான்-வந்தனன்(எ-று) [ * இலக்கணக்கொத்து-டரு ரு- வவுதலியற்றும் வினையின்வேறாத, லெனவினைமுதன்முவகையாமென்ப' இவ்விதியால் அடைந்தான் என்றதுவேறுவினையாம்.] (கருத்து) செம்பொற்சிகரம் பொருத்தி அரதநங்கள்பதித்து முத்துமேற்கட்டிகட்டிப் பதினேழுகாதவழிவிஸ்தாரம்போடுவித்தபந்தலாகிய கல்யாணமண்டபத்துள் வீமசேனமஹாராஜன்வந்துசேர்ந்தான் என்பதாம். (௱௭)

குழவிவெண் டிங்களமணிவடங்கிடந்தகுங்குமக் குலவரைத்த
டந்தோளன், மழகளிறனையவிதர்ப்பர்கோன்பணியால்வானகத்
தமரர்தங்குழுவு, மொழுகொளிமணிச்சூட்டுரகருஞ்சேடி யு
றைதருவிஞ்சையர்கணமு, மெழுகடல்வரைப்பின் மன்னருந்
தேன்வேட்டிரைத்தெழுசுரும்பின்வந்தடைந்தார்....... ...*

(இ- ள்) குழவி-இளமையதாகிய---வெண்டிங்கள்-வெளளிய திங்களைபோன்ற---மணிவடம்-சந்திரஹாரம்---கிடந்த- இருந்த--குங்குமம் - குங்குமமணிந்த---குலவரை - குலாசம்போன்ற---தடந்தோள்-பருத்ததோளையுடைய, மழகளிறனைய-இளங்களிற்றையொத்த---விதர்ப்பர்கோன்பணியால்-வீமராஜனேவலினால்--வானகத்தமரர்தங்குழுவு-விண்ணுலகத்தேவர்கள்கூட்டமும்---ஒழுகொளி-ஒளிவீசுகின்ற---மணிச்சூட்டு-உச்சிமணியையுடைய--உரகரும்-நாகவேந்தரும்---சேடியுறைதரு-விஞ்சையருலகத்திலிருக்கும்---விஞ்சையர்கணமும்-வித்தியாதரர்கூட்டமும் ---எழுகடல்வரைப்பின்-சத்ததீவிலுள்ள---மன்னரும்-அரசரும்---தேன்வேட்டு - தேனைவிருப்பி--இரைத்து-சத்தித்து---எழு-எழுகின்ற--சுரும்பின் - வண்டுகள்போல--வந்தடைந்தார் - வந்துசேர்ந்தார்கள்-(எ-று)(கருத்து) வீமராஜன்கட்டளையினால் தேவர்கூட்டமும், நாகர்கூட்டமும், வித்தியாதரர்கூட்டமும் அரசர்கூட்டமும்வந்துசேர்ந்தனஎன்பதாம்.

கொய்துணர்த்தருவினறுநிழலமர்ந்தருளாகழல்விண்ணவர்க்
கரசுஞ்,செய்யகட்கயவாயெருமையேறுகைக்குந்தென்றிசை
க்கடவுளுங்கனலும்,வெய்யவான்சிகைய செந்தழற்கிறையும்
விரிதிரைக்கனைகடல்வேந்து,நெய்துடைத்தொளிருமள்ளிலை
நெடுவேனிடதர்கோனுருவொடுமடைந்தார்............... *

(இ-ள்) கொய்-பறிக்கின்ற—துணர்-பூங்கொத்துக்களையுடைய
—தருவின்-ஐந்தருவினுடைய—நறுநிழல்- நறிய நிழலின்கண்ணே
—அமர்ந்த-தங்கிய—குளா-ஒலிக்கின்ற—கழல்-வீரக்கழலையணிந்
த—விண்ணவர்க்கரசும் - இந்திரனும்—செய்யகண்- சிவந்தகண்க
ளையும்—கயவாய்-பெரியவாயையுமுடைய—எருமையேறு - எரு
மைக்கடாவை—உகைக்கும்- செலுத்துகின்ற—தென்றிசைக்கடவு
ளும்-இயமனும்—கனலும்-சுடுகின்ற—வெய்ய-வெவ்விய—வான்-
மேலாகிய—சிகைய- கொழுந்தையுடைய—செந்தழற்கிறையும்-
அக்கினிபகவானும்—விரிதிரா -விரிகின்ற அலைகளையும்—கனை-ஒ
லியையுமுடைய—கடல்வேந்தும்-சமுத்திரராஜனுகிய வருணனும்
—நெய்துடைத்து-உதிரத்தைத்துடைத்து—ஒளிரும் - விளங்குகி
ன்ற—அள்ளிலை-மாமிசத்தையள்ளுகின்ற இலையையுடைய—நெடு
வேல்-நெடியவேலையுடைய—நிடதர்கோனுருவொடும்-(தாங்கொ
ண்ட) நளனதுவேடத்துடன்—அடைந்தார் - வந்தார்கள்—(எ-று)
(கருத்து) இந்திரனும், இயமனும், அக்கினிதேவனும், வருணனும்,
நளனுருக்கொண்டுவந்தார்கள் என்பதாம். (சுஅ)

* மோட்டிளங்கயவாய்நெறிமருப்பெருமைமூலைவழியொழு
கியதீம்பால், சேட்டிளங்குருகின்பார்ப்பினமருந்துஞ்செழு
வயனிடதர்கோன்மருமான்,பாட்டிளஞ்சுரும்பர்பேட்டொடு
முரன்றுபருமுகைவிரிக்குநாண்முல்லைச்,சூட்டணிந்தம்பொ
ற்சுடர்முடிகவித்துத்தொடுகழனரலவீக்கினனால்........... *

(இ-ள்) மோடு-உயர்வும்—இள-இளமையும்பொருந்திய—கய
வாய்-பெரியவாயையும்--நெறிமருப்பு-நெறித்தகொம்புகளையுமு
டைய—எருமை-எருமைகளின்—மூலைவழி-மூலைவழியாக—ஒழுகி
ய-வந்த—தீம்பால்-தித்திப்புப்பாலை—சேட்டிளம்- மிகுந்த இளை
மைபொருந்திய—குருகின்- நாரைகளினுடைய—பார்ப்பினம்-கு
ஞ்சுக்கூட்டங்கள்—அருந்தும்-உண்ணுகின்ற—செழுவயல்- செழு
மைபொருந்தியவயல்கள்சூழ்ந்த—நிடதர்கோன்மருமான் - நிடத
தேயத்தையாளுகின்றநளமஹாராஜன்—பாட்டு - பாட்டுக்களை—
இளஞ்சுரும்பர்-இளவண்டுகள்--பேட்டொடும்-பெட்டைகளுடன்
—முரன்று-பாடி—பருமுகை - பரிய அரும்புகளை—விரிக்கும்-ம
லர்த்துகின்ற—நாள்-புதிய—முல்லைச்சூட்டணிந்து - முல்லைமாலை

யையணிந்து—அம்-அழகிய—பொன்-பொன்னாற்செய்த—சுடர்முடி-கிரணங்களையுடையமகுடத்தை—கவித்து- கவித்துக்கொண்டு—தொடு-தொடுக்கின்ற—கழல்-வீரக்கழலை—நரல- ஒலிக்க—வீக்கினன்-கட்டினான்—(எ-று) * தொன்னூல்விளக்கம்-௯௱- ௫- அடைசினைமுதன்முறையடைதலுமீரடை-முதலோடாதலும் வழக்கியலீரடை- சினையொடுசெறிதலுமயங்கலுஞ்செய்யுட்கே- இவ்விதியால்எருமைகள்பலவடையடுத்துவந்தனவுணர்க• (கருத்து) நளமஹாராஜன் மணிமுடிசூட்டி வீரகண்டாமணிகாலிற்றரித்தான்,எ-ம்.

கூற்றிறுவென்னக்குருதிகொப்புளிக்குங்குற்றுடைவாண்மரு
ங்கசைத்துப், பாற்றினஞ்சுழலநிணப்புலால்கமழும்பாயொ
ளிபரிதிவேலேந்தி, நூற்றிதழ்க்கமலமுகைமுறுக்கவிழ்நொ
றில்பரித்தேரிளங்கதிரோன், றோற்றினனென்னநிழலுமிழ்
கொடிஞ்சிச்சுடர்மணித்தேர்மிசைப்பொலிந்தான்......*

(இ-ள்) கூற்றிறுவென்ன- இயமனுடையதாவைப்போல்—குருதிகொப்புளிக்கும்-உதிரத்தையுமிழ்கின்ற—குற்றுடைவாள்-குறுகியசுரிகையை—மருங்கசைத்து- பக்கத்திற்சொருகி—பாற்றினம்-பருந்துக்கூட்டங்கள்—சுழல-வட்டமிட—நிணப்புலால்-உதிரநாற்றம்—கமழும்-நாறுகின்ற—பாய்-பரவப்பெற்ற—ஒளி-காந்தியையுடைய—பரிதி-சூரியன்போன்ற—வேலேந்தி-வேற்படையைத்தாங்கி—நூற்றிதழ்-நூறிதழ்களையுடைய—கமலமுகை- தாமரையரும்புகள்—முறுக்கவிழ-கட்டவிழ—நொறில்- வேகத்தையுடைய—பரி-குதிரைகட்டிய—தேர்-தேரையுடைய—இளங்கதிரோன்- பாலசூரியன்—தோற்றினனென்ன- உதயமானானென்றுசொல்ல—நிழலுமிழ்-நிழலைக்கொப்புளிக்கின்ற—கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய—சுடர்-கிரணங்களையுடைய—மணி - இரத்நங்கள்பதித்த—தேர்மிசை-தேரின்மேல் (நளமஹாராஜன்)—பொலிந்தான்- தோன்றினான்—(எ-று)(கருத்து) நளமஹாராஜன்குற்றுடைவாள் பக்கத்திற்சொருகி வேலாயுதந்தாங்கிச்சூரியனைப்போலத்தேரிலேறினான் என்பதாம். (௭௧)

இன்னகைத்துவர்வாயிளமுலைமகளிரெரிமணிப்படியகமேற்
றப், பொன்னவிர்திதலைப்பொம்மல்வெம்முலையார் பொழிக
திர்ச்சாமரையிரட்ட, மின்னெனநுடங்குமருங்குலார்மருங்கி
ன்வெள்ளடையுதவினர்செல்லத், தென்வரைச்சாந்துநானமெ
ன்சேறுந்திசைதிசைகாவதங்கமழ.........................*

(இ-ள்) இன்னகை-இனியநகையையும்—துவர்வாய் - செவ்வாயையும்—இளமுலை-இளமைபொருந்திய ஸ்தனங்களையுமுடைய, மகளிர்-மாதர்கள்—எரிமணி-ஒளிவிளங்குகின்றமணிகளிழைத்த—

டிகளும்—இனிய- இனிமையையுடைய—சாந்தாற்றியோடு - கால்
செய்வட்டத்துடன்—நிழறவும்-ஒளிதவழ்கின்ற—மணிக்கண்ணாடி-
இரத்நத்தால்விளிம்புசெய்தகண்ணாடிகளும்—நித்திலம்-முத்துக்க
ளால்—முகந்தவேய்ந்த-முகடுசெய்யப்பட்ட—ஒழுகொளி-மிகுந்த
வொளியையுடைய—கவரி-சாமரைகளும்—இன்ன - ஆகியவிவைக
ளை—உலப்பில அளவற்றவைகள்—நலகினான்-கொடுத்தான் (எ-று)
எ-அசை-(கருத்து) வீமராஜன் கட்டில்கள், புட்பசயனம், பெட்டி
கள், ஆலவட்டம், கண்ணாடி, சாமரை, இவைமுதலிய பலவுங் கொடுத்
தான் என்பதாம் (௩௫)

அல்லியங்கமலநீங்கியரசிற்புகுந்துவாழும்... ........ ...*
மெல்லியலைபிரியலாற்றாவிழைவொடுபலகாற்புல்லி...... ...*
மல்லலந்தெரியல்வீமன்மனைவியர்பலருமாழ்கி... ........*
யெல்லையிற்றுயரிற்றோய்ந்தனித்தனியிரங்கினாரே..........*

(இ-ள்) அல்லி-அகவிதழையுடைய—அம்-அழகிய—கமலம்-தாமரைமலரை—நீங்கி-விட்டு—அரசில்- இராஜமனையில்—புகுந்து-சேர்ந்து—வாழும்-வாழ்கின்ற—மெல்லியல்-இலக்குமியாகியதமயந்தியை—பிரியலாற்றா-பிரியமாட்டாத—விழைவொடு - ஆசையுடனே—பலகால்-பலதரம்—புல்லி-அணைத்துக்கொண்டு—மல்லல்-வளம்பொருந்திய—அம்-அழகிய—தெரியல் - மாலையணிந்த—வீமன்-வீமராஜனுடைய—மனைவியர்பலரும்-தேவிமார்பலரும்—மாழ்கி-மயங்கி—எல்லையில்-அளவில்லாத—துயரினோடும் - துன்புத்தோடும்—தனித்தனி - தனித்தனிபாக—இரங்கினார்- அழுதார்கள்—(எ-று) எ-அசை (கருத்து) வீமன்மனைவிகள்பலரும்தமயந்தியைபிரிவைச்சகியாமலாசையோடு அழுதார்கள் என்பதாம். (௩௬)

பெருந்துயருழந்துவாடும்பிணையனார்தம்மைநோக்கி... .. *
விரிந்தபூந்துளவினான்பின்விரைமலர்க்கோதையேக.. ...*
வருந்திமுன்னுயிர்த்ததெண்ணீர்மறிகடல்வருந்திற்றென்
றருந்தவர்க்கிறைவனாகோதமனாற்றினானே............ ..*

(இ-ள்) பெருந்துயருழந்து-மிகுந்ததுன்பத்திலலைந்து—வாடும்-வருந்துகின்ற--பிணையனார்தம்மை- மானையொத்தமங்கையரை—நோக்கி-பார்த்து--விரிந்த-மலர்ந்த--பூம்-புட்பத்தையுடைய—துளவினான்பின் - துளபமாலையையுடையமகாவிஷ்ணுவின்பின்னே--விரை-வாசனைபொருந்திய—மலர் - தாமரைமலரில்வாசமாயிருக்கின்ற--கோதை-இலக்குமியானவள்--ஏக-போக--வருந்தி-வருத்தப்பட்டு---முன்னுயிர்த்த-முன்னேபெற்ற—தெண்ணீர்-தெளிந்தநீரையுடைய—மறி-புரளாநின்ற—கடல்-சமுத்திரமானது—வரு

றீதிற்றோவென்று-வருத்தமுற்றதோவென்று--அருந்தவர்க்கு-அரிய தவத்தையுடையவர்க்கு—இறைவனை-அரசனை—கோதமன்-கௌதமன்--ஆற்றினன்-தேற்றினன்—(எ-று)(கருத்து)கௌதமர் வீமன்மனைவிகளைத்தேற்றினார் என்பதாம். (௬எ)

அன்னையரம்மெலோதித் * தோழியையருளினோக்கி.........*
யுன்னினுமிவண்மேற்காதலுளமெனவுரைக்கிலேமா......*
லென்னினுமின்றுதொட்டுமின்னுயிர்த்தோழியல்லை ......*
மின்னனாட்கன்னைநீயேவேண்டுவபுரிதியென்றார்.........*

(இ-ள்) அன்னையர்-தாய்மார்கள்—அம்-அழகிய—மெல்-மிருதுவாகிய—ஓதி-கூந்தலையுடைய—தோழியை-உயிர்ப்பாங்கியை—அருளின்-கிருபையினால்—நோக்கி பார்த்து—உன்னினும்-உன்னைப்பார்க்கினும்—இவண்மேல்-இந்தத்தமயந்தியின்மீது--காதல்-ஆசை-உளமென-உள்ளோமென--உரைக்கிலேம்--சொல்லுகின்றிலேம்--என்னினும்-ஆனாலும்--இன்றுதொட்டும்-இன்றுமுதலாகவும்--இன்-இனிதாகிய--உயிர்த்தோழியல்லை உயிர்ப்பாங்கியலலை--மின்னனாட்கு-மின்னலையொத்ததமயந்திக்கு—அன்னை நீயே-நீயே தாய்—வேண்டுவ-வேண்டியவைகளை—புரிதியென்றார்-செய்யென்றுசொன்னார்கள்—(எ-று) * அகத்தியம்-சொற்பொருட்படலம்-தோழமைகொள்ளலாற்றோழியெனச்சொலே (கருத்து) தாய்மார்களனைவருந் தமயந்திதோழியைப்பார்த்து இன்றுதொடங்கித் தமயந்திக்குத்தோழிநீயல்ல-நீயேதாய்-இவளுக்குவேண்டியனவற்றைச்செய்யென்றார்கள் என்பதாம். (௬அ)

மணம்புரிபடலம்-முற்றிற்று.

---

# மீட்சிப்படலம்.

---

இப்படலத்தால் நளமஹாராஜன் தமயந்தியோடுந் தன்னகரத்திற்குப்போகுதல் சொல்லப்படுகின்றது.

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மற்றிவைநிகழும்வேலைமகிழ்வொடுமாமன்றன்பால்......*
வெற்றிகொள்சுருதிவைவேல்வேந்தர்கோன்விடைகொண்டேகி
யற்றமில்கேள்விசான்றவமைச்சனையினிதினோக்கி.........*
* யிற்றைநாளெழுச்சியென்னவிமிழ்முரசறைகவென்றான் *

(இ-ள்) மற்றவை-பின்பிக்காரியங்கள்--நிகழும்வேலை- நடக்கும்பொழுது—மகிழ்வொடு - சந்தோஷித்துடனே—மாமன்றன்பால்-வீமராஜனிடத்தில்—வெற்றிகொள்- சயத்தைக்கொண்ட—குருதி-இரத்தந்தோய்ந்த—வை-கூர்மைபொருந்திய—வேல்-வேலையுடைய—வேந்தர்கோன்-நளமஹாராஜன்--விடைகொண்டேகி உத்தரவுபெற்றுக்கொண்டுபோய்—அற்றமில்-சோர்வில்லாத—கேள்வி-கல்விகள்--சான்ற-பொருந்திய--அமைச்சரை-மந்திரிகளை---இனிதினோக்கி-இன்பமாகப்பார்த்து--இற்றைநாள்-இன்றையதினம்---எழுச்சியென்ன-புறப்படுதலென்று--இமிழ்-சத்தியாநின்ற--முரசு-பேரிகையை—அறைகவென்றான் - அடியுங்களென்றுசொன்னான் (எ-று) * நன்னூல் - ஐயீற்றுடைக்குற்றுகரமுமாவே- (கருத்து) நளன்வீமனிடத்து விடைபெற்றுக்கொண்டு மந்திரிகளைப்பார்த்து இன்றுபுறப்படுதலென்று முரசறையச்சொன்னான் என்பதாம். (௧)

(கலிவிருத்தம்)

அண்ணலங்குருதிவேலரசனேவலிற்...... ......*
கண்ணகன்முரசெழுகடலினார்த்தெழ... .. ...*
எண்ணிடமிடமிலையென்னநேமிசூழ்... ......*
மண்ணகம்வரைப்பெலாமலிந்ததானையே.........*

(இ-ள்) அண்ணல்-பெருமைபொருந்திய—அம்-அழகிய—குருதி-இரத்தந்தோய்ந்த--வேல்-வேலாயுதமேந்திய--அரசன் - நளமஹாராஜனுடைய—ஏவலில்-உத்தரவினால்--கண்ணகன் - இடமகன்ற—முரசு-பேரிகையானது--எழுகடலின்-எழுகடலின் ஒலியைப்போல—ஆர்த்தெழ-மிகுந்தொலிக்க—எண்-எள்ளோ—இட - 'இடுதற்கு—இடமிலையென்ன- இடமில்லையென்றுசொல்ல—நேமிசூழ்-சமுத்திரஞ்சூழ்ந்த—மண்ணகம்-பூமியினுடைய---வரைப்பெலாம்-எல்லையெல்லாம்—மலிந்த - நிறைந்தன— தானையே - சேனைகள்—(எ-று)(கருத்து) நளனேவலால்முரசறையச் சேனைகள்நிறைந்தன என்பதாம். (௨)

* நிலவுவெண்கவிகைமேனிழற்றத்தண்மதிக் .. *
கலைநிலாக்குவிந்தனகவரிகாலசெய......... ...*
மலர்தலையுலகெலாம்புரக்குமன்னவன்... ..... *
சிலையுலாந்தமணியத்தேரிலேறினான்......... ...*

(இ-ள்) நிலவு-பிரகாசியாநின்ற—வெண்கவிகை-வெண்கொற்றக்கொடையை—மேல்-மேலே—நிழற்ற-பிடிக்க—தண் - குளிர்ச்சிபொருந்திய—மதி-சந்திரனுடைய—கலை-சோடசகலைகளின்--

நிலா-பிரகாசம்--குவிந்தன-குவிந்ததோற்றம்போல்---கவரி- சாமரைகள்—கால்செய-காற்றைச்செய்ய—மலர்தலையுலகெலாம்- பரந்தவிடத்தையுடைய உலகமுழுதும்—புரக்கும்-இரட்சிக்காநின்ற—மன்னவன்-அரசன்—சிலை- மலைபோல்--உலாம்-உலாவுகின்ற---தமனியம்-பொன்னாலாகிய--தேரில்-இரதத்தின்மீதில்--ஏறினான்- ஏறிக்கொண்டான்—(எ-று) * அகத்தியம்-குறிற்கீழாவேகுறுகியுகரம் பெறும். (கருத்து) நளன்தேரிலேறினான் என்பதாம். (௩)

கலிகெழுமுரசுகண்கறங்குமோதையாற்.......*
பொலன்முகடுடைந்துமேற்போயிற்றில்லையே..*
அலர்தலைவிசும்பினிலடங்கலாவதே ... ... ...*
நிலமிசையெழுந்துமேனிமிர்ந்ததூளியே... .. *

(இ-ள்) கலிகெழு-சத்தம்பொருந்திய—முரசுகண்-பேரிகையின்கண்ணுளது—கறங்கும்-ஒலிக்கும்--ஓதையால்-சத்தத்தினால்--பொலன்-அழகுபொருந்திய—முகடு-அண்டமுகடானது—உடைந்து-உடைவுபட்டு—மேற்போயிற்றில்லையேல் - மேலண்டங்களிற்போகாமற்போனால்—அலர்தலை-பரந்தவிடத்தையுடைய— விசும்பினில்-ஆகாயத்தில்—அடங்கலாவதே-அடங்குவதாவதா — நிலமிசை-பூமியின்மீது—எழுந்து-எழும்பி--மேல்-மேலே— நிமிர்ந்த-உயர்ந்த--தூளி புழுதிகள்—(எ-று) (கருத்து)புழுதிகள் பேரிகைச்சத்தத்தாலண்டமுடைந்து அப்பாற்போகாவிடிற் பூமிகொள்ளுமா என்பதாம். (௪)

இருங்கடற்றானையினெழுந்தநுண்டுகள்......*
பொருங்களிறுமிழ்மதம்பொழிந்ததில்லையேற்...*
கருங்கடலளறெழப்பருகிக்கார்க்குல, மொருங்கு
வான்பொழியினுமொழிக்கவொண்ணுமே......*

(இ-ள்) இரும்-பெருமைபொருந்திய—கடற்றானையின்-சேனாசமுத்திரத்தில்—எழுந்த-எழும்பிய--நுண்டுகள்-நுண்ணியபொடிகள்—பொரும்-சண்டைசெய்யாநின்ற--களிறு-யானைகள்---உமிழ்-கக்காநின்ற--மதம்-மும்மதத்தையும்— பொழிந்ததில்லையேல்-பொழியாமற்போனால்—கரும்- கறுத்த — கடல்-சமுத்திரசலத்தை--அளறெழ-சேறுபட—பருகி-குடித்து—கார்க்குலம் - மேகக்கூட்டங்கள்--ஒருங்கு-ஒருமுகமாய்--வான்-ஆகாயத்தினின்று-பொழியினும்-சொரிந்தாலும்—ஒழிக்கவொண்ணுமோ - போக்கக்கூடுமோ--(எ-று) (கருத்து) யானைகள்மதம்பொழியாவிடில் மேகங்கள் கடலைமுற்றுங்குடித்துப்பொழியினும் புழுதிகளை ஒழிக்கக்கூடுமோ என்பதாம். (௫)

சுடர்விடுபெருமணிச்சூட்டராவின்மே... ... ... *
நெடுநிலந்துளக்குறநின்றவாற்றினாற்... ... ... *
படரிருவிசும்பினிற்பாய்ந்தவல்லது... ... ... *
புடவிமேன்மிதித்திலபுரவிவெள்ளமே... ... ... *

(இ-ம்) சுடர்-பிரகாசத்தை—விடு-வீசாநின்ற — பருமணி-பருத்தஇரத்நங்கள்பொருந்திய— சூட்டு-சுழிகையுடைய— அராவின்மேல்-ஆதிசேஷன்மீது—நெடுநிலம்-நெடியபூமி— துளக்குற-அசைவுற—நின்றவாற்றினால்-இருந்தபடியால்—படர்-விரிந்த— இரு-பெருமைபொருந்திய—விசும்பினால்-ஆகாயத்தில்--பாய்ந்தவல்லது-தாவிச்சென்றவனல்லாமல் — புடவிமேல்-பூமியின்மீது— மிதித்தில-நடக்கவில்லை—புரவிவெள்ளம் -குதிரைக்கூட்டங்கள்— (எ-று) ஏ-அசை. (கருத்து) குதிரைக்கூட்டங்கள்ஆகாயமார்க்கமாகப்போயின என்பதாம். (௯)

புதையிருள்சீத்தொளிபொழியுஞ்செங்கதி ... *
ருதயமால்வரையெழுமொளியிழுத்தலான் ... *
மதிபலவாய்வெயின்மறைத்தல்போலுமாற் ... *
கதிர்நிலாமுத்தவெண்கவிகைபீட்டமே... ... *

(இ-ள்) புதை நிறைந்த—இருள்-இருளை— சீத்து- கெடுத்து —ஒளி-பிரகாசத்தை--பொழியும்-சொரியாநின்ற—செங்கதிர் -சூரியன்--உதயமால்வரையெழ-உயர்ந்தவுதயகிரியினுதித்த--ஒலியிழத்தலால்-பிரகாசத்தைநீங்குதலால்—மதி-சந்திரனானவன் — பலவாய்-அநேகரூபமாய்--வெயில்-சூரியனை--மறைத்தல்போலும்-மறைத்தலையொக்கும்—கதிர்நிலா-நிலவுபோற்கிரணத்தைவீசுகின்ற--முத்தம்-முத்தினாற்செய்த— வெண்-வெளுமைபொருந்திய— கவிகை பீட்டம்-குடையின்கூட்டங்கள்—(எ-று) ஆல்-ஏ-அசை. (கருத்து) குடைக்கூட்டங்கள் அநேகசந்திரனை யொத்திருந்தன என்பதாம்.

மழலையங்கிள்ளையும்வளர்த்தபூவையுங்... ... *
குழைபொருதடங்கணார்கொண்டுசூழ்வர ... ... *
இழைவளர்முலையினாணிலாக்கதிர்... ... ... *
பொழிமணிச்சிவிகையிற்போயினாளரோ... ... *

(இ-ள்) மழலை-மழலைச்சொல்லையுடைய—அம்-அழகிய—கிள்ளையும்-கிளிகளும்—வளர்த்த-தாம்வளர்த்த—பூவையும்- நாகணவாய்ப்புள்ளும்—குழை-குண்டலமணிந்தகாதுடன்—பொரு - போர்செய்யாநின்ற--தடம்-விசாலமாகிய--கணார் - கண்களையுடையதாதியர்கள்—கொண்டு-கையிற்கொண்டு— சூழ்வர - சூழ்ந்துவர—இழை-ஆபரணங்களையணிந்த—வளர்-வளர்ந்துவராநின்ற — முலையி

ளுள்-ஸ்தனங்களையுடைய தமயந்தி--இளநிலா-இளஞ்சந்திரன்போல—கதிர்-கிரணங்களை—பொழி- சொரியாநின்ற—மணிச்சிவிகையில்- அரத்னப்பல்லக்கின்மீது—போயினாள் - போனாள்—(எ-று) அரோ-அசை.(கருத்து)தமயந்திபெண்கள்சூழ்ந்துவர அரத்னச்சிவிகையின்மேற்போயினாள்,எ-ம். (௮)

கதிர்மணியடைப்பையுங்கால்செய்வட்டமுந் ... *
தகைமயிர்க்கவரியுந்தாங்கிமெல்லென...... ...*
வதிர்குரற்கிண்கிணிசிலம்பொடார்ப்பெழ... ...*
மதரரிநெடுங்கணார்மருங்குபோயினார் .. ... ...*

(இ-ள்) கதிர்- கிரணங்களையுடைய—மணி-இரத்நத்தினாற்செய்த—அடைப்பையும்-தாம்பூலப்பையையும்—கால்செய்வட்டமும்-விசிறிகளையும்—தகை-நெருங்கிய—மயிர்- மயிரையுடைய—கவரியும்-சாமரைகளையும்--தாங்கி-சுமந்து—மெல்லென- மெதுவாக—அதிர்-அதிர்ந்த—குரல்-சத்தத்தையுடைய---கிண்கிணி-கிண்கிணிகள்--சிலம்பு-சிலம்புகளுடனே--ஆர்ப்பெழ-ஆரவாரிக்க--மதர்-மதர்த்த—அரி-செவ்வரிபரந்த—நெடுங்கணார் - நீண்டகண்களையுடையமாதர்கள்—மருங்கு-பக்கத்தில்—போயினார்-போனார்கள்—(எ-று) (கருத்து) பெண்கள் அடைப்பை-ஆலவட்டம்-சாமரை-இவைகளைத்தாங்கிப்பின்சென்றார்கள்,எ-ம். (௯)

சாந்தணிந்தோங்கியதடங்கொள்வெம்முலை ... *
யேந்திழைத்தோழிபரெண்ணின்மங்கையர்... *
பூங்கருநீழலிற்பொன்னனாளெனக்........ ......*
கூந்தலம்பிடியிசைக்குழாங்கொடேகினார்......*

(இ-ள்)சாந்து-சந்தனத்தை—அணிந்து- தரிக்கப்பெற்று—ஓங்கிய-உயர்ந்த—தடங்கொள்-விசாலத்தைக்கொண்ட—வெம்-விருப்பத்தைத்தரும்—முலை-ஸ்தனத்தினிடத்தில்—ஏந்திழை- ஆபரணங்களைத்தாங்கிய—தோழியர்-பாங்கியர்களும்—எண்ணில- எண்ணிக்கையில்லாத—மங்கையர்-பெண்களும்—பூ-பூவினையுடைய--கரு-கற்பகவிருட்சத்தினது—நீழலில்- நிழலில்வாசம்பண்ணுகின்ற—பொன்னனாளென-இலக்குமியையொத்த|அரம்பைமாதர்கள்போல—கூந்தல்-புறமயிரினையுடைய—அம்-அழகிய—பிடியிசை- பெட்டையானையின்மேல்—குழாங்கொடு-கூட்டங்கொண்டு—ஏகினார்-போயினார்கள்—(எ-று)(கருத்து) தோழிமார்களும் பெண்களும்யானைமேலேறிப்போனார்கள்,எ-ம். (௰)

கான்பயின்மனைமலர்ச்செவ்விகாமுறு.....|...*
மான்பயினோக்கியர்மகரயாழிடைத்...... ......*

தேன்பயிறெள்விளிபாடத்தேனையிற்... ... ...*
கூன்களுஞ்சிந்தொடுகுறளுஞ்சென்றவே .. ...*

(இ-ள்) கான்-வாசனை—பயில்-பொருந்திய—மலாமலர்-தா மரைமலரில்வாசம்பண்ணுகின்ற—செல்வி- இலக்குமியானவள்—காமுறும்-இச்சியாநின்ற—மான்-மான்கள்—பயில்-கற்காநின்ற—நோக்கியர்-பார்வையையுடையமாதர்கள்—மகரயாழிடை-மகரவீணையினிடத்தில்—தேன்பயில்-தேன்போல் மதுரம்பொருந்திய—தெள்விளிபாட-தெள்விளியென்னும் இராகத்தைப்பாட—தேனையில்-தேனைபோல்—கூன்களும்-கூனரும்—சிந்தொடு - அவயவமற்றவருடன்—குறளும்-குள்ளரும்—சென்ற- போயினர்—(எ-று) (கருத்து) பெண்கள் மகரயாழ்பாடக் கூனரும் அவயவ வீனரும் குள்ளரும்போனார்கள் என்பதாம். (யக)

கொடிகளுங்குடைகளுங்குழுமப்பல்லியங்......*
கடலுடைந்தாலெனக்கறங்கியார்த்தெழ ... ...*
வடிகெழுகுருதிவேன்மன்னர்சூழ்வர ... ... ...*
நிடதநாடடைந்தனனேமிவேந்தனே... ... ...*

(இ-ள்) கொடிகளும்-துவசங்களும்—குடைகளும்-கவிகைகளும்—குழும-சுற்றிவர—பல்லியம்- நாலுவிதவாத்தியங்கள்—கடலுடைந்தாலென- சமுத்திரமுடைந்துவருதல்போல—கறங்கியார்த்தெழ-குமுறியாரவாரிக்க—வடிகெழு-வடித்தல்பொருந்திய—குருதி-இரத்தந்தோய்ந்த—வேல்-வேலாயுதத்தையுடைய—மன்னர்-அரசர்கள்—சூழ்வர-சூழ்ந்துவர—நிடதநாடடைந்தனன் - நிடத்தேயத்தைச்சேர்ந்தான்—நேமி உலகத்தையுடைய—வேந்தன் - நளமஹாராஜன்—(எ-று)(கருத்து) நளன் அரசர்கள் புடைசூழ்ந்துவர நிடதநாட்டைச்சேர்ந்தான் என்பதாம். (யஉ)

அருமறைமுனிவருமமைச்சர்வெள்ளமுங் .. ...*
குரைகடற்றனையுங்குரவர்கூட்டமு............ *
முரசொலியதிர்குரன்முகிலினார்த்தெழ .......*
விருநிலக்கிழவனையெதிர்கொண்டாரரோ... ...*

(இ-ள்) அரும்-அரிதாகிய—மறை - வேதத்தையுடைய—முனிவரும்-வேதியரும்—அமைச்சர்வெள்ளமும்- மந்திரிகளின்கூட்டமும்—குரை-சத்தியாநின்ற—கடற்றனையும்-சேனைசமுத்திரமும்—குரவரீட்டமும்-பெரியோர்கள்கூட்டமும்—முரசொலி - பேரிகையின்சத்தமானது—அதிர்குரல்-அதிர்கின்றதொனியையுடைய—முகிலின்-மேகம்போல—ஆர்த்தெழ-ஆரவாரிக்க—இரு-பெரிய—நிலக்கிழவனை-பூமிக்குரியநளமஹாராஜனை—எதிர்கொண்டார்-எதிர்

கொண்டார்கள்—(எ-று) அரோ-அசை- (கருத்து) முனிவர்களும் மந்திரிகளும், சேனைகளும், பெரியோர்களும், நளனுக் கெதிர்வந் தார்கள் என்பதாம். (யஈ)

அகழியங்கடல்புடையணிந்துநீனிற......... ...*
முகிறவழ்முதெயின்முற்றியின்னகிற்... ... ...*
புகைகமழெரிமணிப்பொன்செய்மாடத்தி ... *
னகைநிலாமதிதவழ்நகரமெய்தினன்... ... ...*

(இ-ள்) அகழி-கிடங்காகிய—அம்-அழகிய—கடல்-சமுத்திரத்தை—புடையணிந்து-பக்கத்தில்தரித்து—நீனிற- நீலநிறம்பொருந்திய—முகிறவழ்-மேகந்தவழாநின்ற—முதெயில்-பழமையாகியமதில்—முற்றி-சூழ்ந்து—இன்னகில்-இனியஅகிலினது—புகை-புகையானது—கமழ்-பரிமளியாநின்ற—எரி-பிரகாசம்பொருந்திய—மணி-இரத்நத்திறுைம்—பொன்செய்-பொன்னுலுஞ்செய்த—மாடத்தின்-உப்பரிகையின்மீது—நகை- பிரகாசியாநின்ற—நிலா-சந்திரிகையையுடைய—மதிதவழ்- சந்திரன்தவழாநின்ற — நகரம்-மாவிந்தநகரத்தை—எய்தினன்-சேர்ந்தான் (எ-று)--(கருத்து) நளன்மாவிந்தநகரத்தைச்சேர்ந்தான் என்பதாம். (யசு)

பொருவருங்கங்கைநீர்நிறைத்துப்பூசுரா... ... *
ரெரிமணிப்பொற்றசும்பேந்திமுன்வர........*
விரைகமழ்செழுந்தொடைவீமன்மாதொடுந் *
திருவளர்கோயிலிற்செல்வனெய்தினன்........ *

(இ-ள்)பொருவரும்-ஒப்பில்லாத--கங்கைநீர்- கங்காசலத்தை—நிறைத்து-பூரித்து—பூசுரர்-வேதியர்கள்—எரிமணி- பிரகாசம்பொருந்திய இரத்நமழுத்திய—பொற்றசும்பு- பொன்னுற்செய்த பூரணகும்பத்தை—ஏந்தி-தாங்கி—முன்வர-எதிர்வர—விரை- வாசனை---கமழ்-பரிமளியாநின்ற—செழும்-செழுமையாகிய—தொடை-மாலையையணிந்த—வீமன்மாதொடும்- தமயந்தியினுடனே—திருவளர்-இலக்குமிவாசம்பண்ணுநின்ற—கோயிலில்- அரண்மனையில்—செல்வன்-நளமஹாராஜன்—எய்தினன் - சேர்ந்தான்—(எ-று)(கருத்து)பிராமணர்கள்கங்கையைப் பொற்குடத்திறகொண்டெதிர்வர நளமஹாராஜன் தமயந்தியுடனே அரண்மனையிற் சேர்ந்தான் என்பதாம். (யரு)

மீட்சிப்படலம் - முற்றுப்பெற்றது.



# கலிதோன்றுபடலம்.



இப்படலத்தால் தமயந்தியின் விவாகத்தைக்கருதிவந்த கலி அவளை நளன் விவாகஞ்செய்தானென்னும் பொறாமையால் அவனை வருத்துதற்கு அவனது நகரத்திற்சென்றிக் காலம் பார்த்திருத்தல் சொல்லப்படுகின்றது.



(கலிவிருத்தம்.)

ஈங்கிவனின்னணமிருப்பவானிடைப்..............*
பூங்கழல்விண்ணவர்போகுமெல்லையிற்..... ...*
றீங்குறுபடுபழிதீதுசூழ்வர .......... ...... *
வாங்கவர்முன்கலியடைந்ததோதுவாம்.........*

(இ-ள்) ஈங்கு - மாவிந்தமாநகரத்தில்—இவன்-இந்தநளமஹாராஜன்—இவ்வண்ணம்-தமயந்தியோடுமகிழ்ந்து--இருப்ப-இருக்க—வானிடை-ஆகாயத்தினிடத்தில்—பூ-அழகிய—கழல் - வீரகண்டாமணியையணிந்த—விண்ணவர்-தேவர்கள்—போகுமெல்லையில்-போகுஞ்சமயத்தில்—தீங்குறு-குற்றம்பொருந்திய--படுபழி-படுபழியும்—தீது-பொல்லாங்கும்—சூழ்வர-சுற்றிக்கொண்டுவர—அவர்முன்-அந்தத்தேவர்களுக்கெதிரில்—கலி-கலிபுருஷனானவன்—அடைந்தது-வந்ததை--ஓதுவாம்-சொல்லுகிறோம்—(எ-று) ஆங்கு-அசை-(கருத்து) நளன்மாவிந்தமாநகரிலிருக்கத்தேவர்கள் போகும்போது அவர்கள்முன் சனிபகவான் வந்ததைச் சொல்லுவோம் என்பதாம். இஃது புராணிகர்கூற்று. (க)

வந்தவெங்கொடுங்கலிதன்னைவான்படர் .......*
ரிந்திரன்யாண்டுநீயேகின்றாயெனச்.............*
சந்தணிமுலைத்தமயந்திமன்றல்கேட்... ...... *
டந்தமிலவேட்கையாலடைந்துளேனென்றான் *

(இ-ள்) வந்த-எதிரில்வந்த—வெம்-வெவ்விய—கொடும்-கொடுமையையுடைய—கலிதன்னை-கலிபுருஷனை—வான்-தெய்வலோகத்தைநோக்கி—படர்-போகின்ற—இந்திரன்- தேவேந்திரன்—யாண்டு-எவ்விடத்துக்கு—நீ-நீ—ஏகின்றாயென்-போகின்றாயென்று கேட்க—சந்தணி-சந்தனத்தையணிந்த—முலை-ஸ்தனங்களையுடைய—தமயந்தி-தமயந்தியினது—மன்றல் - கலியாணத்தை—கேட்டு-கேள்விப்பட்டு—அந்தமில்- முடிவில்லாத—வேட்கையால்-ஆ

சையிறைவ்—அடைந்துளேனென்றான்-வந்தேனென்றான்—(எ-று) (கருத்து) இந்திரன்சனிபகவானை எங்கேபோகின்றாயெனக்கேட்க-அச்சனிபகவான் தமயந்திவிவாகத்திற்குப்போகின்றேனென்றான்-என்பதாம். (௨)

என்றலுமமரர்கோன்முறுவலெய்தியம்........*
மன்றலுக்கோதனிவந்ததீங்கெனா.............*
வென்றிவேனிடதர்கோன்றனக்குமென்றொடை*
துன்றிருங்கூந்தலாள்சூட்டினாளென்றான்...... *

(இ-ள்) என்றலும்-இப்படியென்றுசொன்னவளவில்—அமரர்கோன்-தேவேந்திரன்—முறுவலெய்தி - சிரித்து—அம்மன்றலுக்கோ-அந்தக்கலியாணத்திற்கா—தனி- தனியாய்—வந்ததீங்கெனா-இவ்விடத்தில்வந்ததென்று—வென்றி-வெற்றிபொருந்திய—வேல்-வேலையுடைய—நிடதர்கோன்றனக்கு- நளமஹாராஜனுக்கு—மென்றொடை-மிருதுவாகியமாலையை—துன்று-நெருங்கிய—இரும்-பெருமைபொருந்திய—கூந்தலாள்-கூந்தலையுடையதமயந்தி—சூட்டினாளென்றான்-அணிந்தாளென்றுசொன்னான்.(எ-று) (கருத்து) இந்திரன் தமயந்தி நளனுக்குமாலையிட்டாள் என்றான் என்பதாம்.

விண்ணவரனைவரும்வெள்கப்பூந்தொடை... ...*
மண்ணகத்தரசனுக்கணியுமாணிழை ... ... ...*
யெண்ணறுங்கெடுத்தவட்பிரிப்பனீண்டெனாக் *
கண்ணழல்கதுவவெங்கலியுங்கூறினான்.........*

(இ-ள்) விண்ணவரனைவரும் - தேவர்கள்யாவரும்—வெள்க-வெட்கப்பட—பூந்தொடை-புட்பமாலையை--மண்ணகத்தரசனுக்கு-பூலோகத்துராஜனுக்கு---அணியும்-தரித்த—மாணிழை - மாட்சிமைபொருந்திய வாபரணங்களையுடையபெண்ணினது—எண்ணறுங்கெடுத்து-நினைப்பையுங்கெடச்செய்து—அவள்-அவளை--பிரிப்பன்-பிரித்துவிடுவேன்—ஈண்டெனா-இவ்விடத்தென்று--கண்ணழல்கதுவ-கண்ணில்நெருப்புப்பொறிபறக்க—வெங்கலியும்- வெவ்வியகலிபுருஷனும்—கூறினான்-சொன்னான்—(எ-று)(கருத்து)தேவர்கள்வெட்கநளனுக்குமாலைதரித்ததமயந்தியைபிரிப்பேனென்றுசனிபகவான்சொன்னான்,எ-ம். (௩)

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

அருந்ததிகற்பினல்லாளரசிளங்குமரன்றன்னைப்............*
பிரிந்திடவியற்றிப்பின்னர்பெறுவதுதீமையன்றே... ... *
விரிந்தநூற்கேள்வியென்னும்பிறர்மனைவிழையவுள்ளம்...*
பொருந்தியதெவன்கொல்கல்லாப்புல்லரிற்புகழின்மிக்கோய்.

(இ-ள்) அருந்ததி-அருந்ததியையொத்த—கற்பின்-பதிவிரதத்தையுடைய--நல்லாள்-தமயந்தி, அரசிளங்குமரன்றன்னை-இளமையொருந்திய ராஜகுமாரனான நளமஹாராஜனை--பிரிந்திட வியத்தி-நீங்கும்படிசெய்து---பின்னர் - பின்பு---பெறுவது-அந்தமாதைப்பெற்றுக்கொள்வது--நீலமன்றோ-குற்றமல்லவோ--விரிந்த-பரந்த--நூற்கேள்வி-நூல்விசாரணை--என்னும்-யாதுபயனைத்தரும்பிறர்மனைவிழைய-பிறர்மனைவியை விரும்ப-உள்ளம்பொருந்தியதேவன்-மனஞ்சம்மதித்தது-என்னகாரணம்—கல்லா-படியாத--புல்லரில்-மூடரைப்போல--புகழினமிக்கோய்- கீர்த்தியினமிக்கவனே—(எ-று)கொல்-அசை-(கருத்து) இந்திரன் நளனைவிட்டுத் தமயந்தியைப்பிரித்தவளைப்பெறுவது குற்றமல்லவா பிறன்மனைவியை யிச்சிப்பதென்ன என்றான் என்பதாம். (ரு)

இனையனவமரர்கூறவிருகையும்புடைத்துநக்குப்...... ... *
புனைமலர்க்கோதைநல்லார்புணர்முலைகுழையப்புல்லி---.. *
வனைதுகினெகிழ்க்குமின்பவாழ்வினையன்றிமற்றோர்... ...*
நினைவருமின்பமுண்டேலிகழ்த்துதிர்நீவிரொன்றான்... ... *

(இ-ள்) இனையன-இப்படிப்பட்டவைகளை—அமரர்கூற- தேவர்கள்சொல்ல--இருகையும்-இரண்டுகையும்--புடைத்து-கொட்டி—நக்கு-சிரித்து--புனைமலர்க்கோதைநல்லார்-மலரால்அலங்கரிக்கப்பெற்றகூந்தலையுடையமாதரது—புணர்முலை- நெருங்கியமுலைகளை--குழையப்புல்லி-குழையும்படிதழுவி--வனை-கட்டியிருக்கின்ற—துகில்-ஆடையை--நெகிழ்க்கும்- அவிழ்க்கின்ற--இன்பவாழ்வினையன்றி-காமவின்பவாழ்வினையல்லாது--மற்றோர்- வேறுமொரு—நினைவருமின்பமுண்டேல்- நினைத்தற்கரியவின்பமுண்டாகில்—நிகழ்த்துதிர்-சொல்லுங்கள்--நீவிரொன்றான் - நீங்களென்றுசொன்னான்—(எ-று)(கருத்து) தேவர்களிவ்வாறுசொல்லச் சனிபகவான் பெண்களின்பத்தைப்பார்க்கிலும் வேறின்பமுண்டானாற் சொல்லுங்களென்றான், எ-ம். (சா)

மறைநெறிபிறழக்கூறுமிவனொடுமிவ்வாய்மைகூறி.........*
லறநெறியிறம்புமென்னவமரரும்வியப்பிற்போனார்...!... *
தெறுதொழிற்கலியுங்காமஞ்சிதைந்துமீதூரவேக .........*
நெறிமுறைவழுவல்செல்லாநிடதநாடதனிற்சென்றான் .. *

(இ-ள்) மறைநெறி-வேதவழி--பிறழ-மாறுபட--கூறும்-சொல்லும்--இவனொடும்-இக்கலியினோடும்--வாய்மைகூறில் - உண்மைபேசில்--அறநெறி-தருமவழி-இறம்புமென்று-கெடுமென்று, அமரரும்-தேவர்களும்—வியப்பிற்போனார்-சொர்க்கத்தைச்சேர்ந்தார்க

ள்--தெறு-கொல்லாநின்ற--தொழில்-செய்கையையுடைய--கலியும்-கலிபுருஷனும்--காமம்-விரகமானது--சிதைந்து-வரம்புகடந்து--மீதூர-அதிகரிக்க--வேதநெறிமுறை-வேதவழியின்முறையானது--வழுவலசெல்லா-மாறுபடாத--நிடதநாடதனில்- நிடததேயத்தில்--சென்றான்-போனான்--(எ-று) (கருத்து) தேவர்களிவனுடன் பேசிற்றருமங்கெடுமென்று சுவர்க்கத்திற் தப் போனார்கள் சனிபகவான் நிடதநாட்டிற்குப்போனான் என்பதாம். (எ)

மல்லலம்பழனவேலிவளங்கெழுநிடதநாட்டி...... ...... ...*
னல்லுற்றரிதிற்செல்லுங்கொடுங்கலியமரர்வேட்ப........*
வெல்லையில்வேள்வியாற்றியருமறைபயில்வோரெங்குஞ் ...*
சொல்லியபதங்கள்கேட்டுத்துணைப்பதம்பெயர்த்திலானே. *

(இ-ள்) மல்லல்-வளம்பொருந்திய--அம்-அழகிய--பழனம்-கழனிகளையே--வேலி வேலியாகவுடைய--வளங்கெழு-செல்வம்பொருந்திய--நிடதநாட்டின்-நிடததேயத்தில்---அல்லுற்று- துன்பமுற்று--அரிதிற்செல்லும்-அருமையாகப்போகாநின்ற--கொடுங்கலி-கொடியகலியானவன்--அமரர்வேட்ப-தேவர்கள்விரும்ப--எல்லையில்-அளவில்லாத--வேள்வியாற்றி-யாகத்தைச்செய்து---அரும்-அரிதாகிய--மறைபயில்வோர் வேதப்பிராமணர்கள்--எங்கும் - எவ்விடத்திலும்--சொல்லிய-சொன்ன--பதங்கள்கேட்டு- வேதப்பதங்களைக் காதிற்கேட்டு--துணைப்பதம்-தன்னுடையவுபயபதங்களை--பெயர்த்திலான்-எடுத்துவைக்கவில்லை--(எ-று) (கருத்து) சனிபகவான் நிடதநாட்டில் வேதப்பிராமணர்கள்சொல்லும்வேதப்பதங்களைக் கேட்டுத்தன்னிருபதங்களையெடுத்துவையாதிருந்தான் என்பதாம். (அ

செம்மையிற்றிறம்பல்செல்லாமறைபயில்சிறுவனாங்கோர்..*
கைம்மையைக்கலத்தனோக்கிக்களிமகிழ்சிறந்துசெல்வான்••*
வம்மினென்றமரர்தம்மைமறையினாற்கூறக்கேளா.........*
வம்மவோமகமென்றஞ்சியலக்கணுற்றகன்றுபோனான்......*

(இ-ள்) செம்மையில்-நன்னெறியில்--திறம்பல்செல்லா-மாறுபடாத--மறைபயில்-வேதம்படிக்கின்ற--சிறுவன்-ஒருபிரமசாரி--ஆங்கோர்-அங்கொரு--கைம்மையை-கைம்பெண்ணை---கலத்தனோக்கி-புணர்தலைப்பார்த்து--களி-செருக்கையுடைய---மகிழ்-சந்தோஷம்--சிறந்து-அதிகரித்து--செல்வான்-போகின்றவன்--வம்மினென்று-வாருங்களென்று--அமரர்தம்மை-தேவர்களை -- மறையினால்-வேதத்தினாலே--கூற-அழைக்க--கேளா-கேட்டு -அம்மவோ- ஓ அம்ம--மகமென்று-யாகமென்று--அஞ்சி பயந்து-- அலக்கணுற்று-துன்பமுற்று--அகன்றுபோனான் - அப்புறம்போயினான்--(எ-று)

(கருத்து) பிரமசாரிகைம்பெண்ணைக்கலந்ததைக்கண்டு செல்லுஞ்
சனிபகவான்வேதத்தினால் தேவர்களையாருங்களெனழைக்கக்கே
ட்டு ஓர்யாகமென்றஞ்சிப்போனான் என்பதாம். (௯)

அருமறைமுனிவர்யாருமோர்கலத்தார்வமோடும்...........*
பருகிய வாறுநோக்கித்தீவினைபயந்ததென்று..............*
விரைவினிற்சேறலோடுமறைமொழிகூறும்வேள்விக்... .. *
குரியதுசோமபானமெனவுளமுடைந்துபோனான்.... .....*

(இ-ள்) அரும்-அரிதாகிய—மறைமுனிவர்யாவரும்- வேதியர்களெல்லாரும்— ஓர்கலத்து-ஒருபாத்திரத்தில்— ஆர்வமோடும் - ஆசையுடன்—பருகியவாறுநோக்கி-பானம்பண்ணுகின்றநெறியைப்பார்த்து—தீவினைபயந்ததென்று - தீமையுண்டாயிற்றென்று--விரைவினில்-சீக்கிரத்தில்--சேறலோடும்-போனமாத்திரத்தில்---மறைமொழி-வேதவசனத்தை—கூறும்-சொல்லும்— வேள்விக்கு-யாகத்துக்கு—உரியது உரித்தானது--சோமபானமென-சோமபானயாகமென்று---உளமுடைந்து-மனங்கலங்கி--போனான்-போயினான்-—(எ-று) (கருத்து) சனிவேதியர் யாவருமோர்கலத்திற் பானம்பண்ணுவதைக்கண்டு செல்பவன்யாகத்திற்குரியதுசோமபானமென்றஞ்சிப்போனான், எ-ம். [சோமபானம்-மதுபானம்.] (௰)

நிழல்சுளிகளிநல்யானைநிடதர்கோன்மகிழ்ச்சிகூர்ந்து....*
பழமறைக்கிழவர்யாரும்பரிவொடுகவர்ந்துகொள்ள... ...*
விழுநிதிபழனநாடுவேண்டுபவெறுப்பநாளும்... ... ...*
பொழிதருபுனலைநீத்திடப்போக்கரிதென்னநின்றான்.......*

(இ-ள்) நிழல்-தன்னிழலை—சுளி-கோபிக்கிற—களி - செருக்கைப்பொருந்திய—நல்யானை-நல்லயானையையுடைய-- நிடதர்கோன்-நளமஹாராஜன்—மகிழ்ச்சிகூர்ந்து-சந்தோஷமுற்று — பழமறைக்கிழவர்யாரும்-பழமையாகியவேதப்பிராமணர்களெல்லாரும்—பரிவொடு-ஆசையுடன்—கவர்ந்துகொள்ள-பெற்றுக்கொள்ள—விழுநிதி-மேன்மையாகியதிரவியமும்--பழனம்-கழனிகளும், நாடு-ஊர்களும்--வேண்டுப-வேண்டியவைகளை—வெறுப்ப-வெறுக்கும்படியாக—நாளும்-நாள்தோறும்—பொழிதரு - தத்தம்பண்ணுகிற—புனலை-சலத்தை— நீத்தி - கடந்து— போக்கரிதென்ன-போகக்கூடாதென்று—நின்றான்-இருந்தான்—(எ-று) (கருத்து) சனிபகவான் நளன் பிராமணர்களுக்குத் தத்தம்பண்ணுநீரை நீந்திப்போகக்கூடாமனின்றான் என்பதாம். (௰௧)

கலைவலாரொருவன்பொய்மைகட்டுரையாடனோக்கிக், கொலை
பழுத்தொழுகுநெஞ்சங்குழைந்தனன்மகிழ்ந்துசெல்வா....*

னலர்முலைசுமக்கலாற்றாவையநுண்மருங்குற்பேதை... ... *
புலவிதீர்ப்பதற்குக்கூறும் பொய்யெனப்புலர்ந்துபோனான்.

(இ-ள்) கலைவலானொருவன்-வித்தையில்வல்லவனொருவன்—பொய்ம்மை-பொய்ச்சொல்லை—கட்டுரையாடல்-உறுதிமொழியாகச்சொல்லுதலை—நோக்கி-அறிந்து—கொலை-கொல்லுதல்—பழுத்தொழுகுநெஞ்சம்-முதிர்ந்துபெருகாநின்றமனம்—குழைந்தனன்-குழைந்தவனாய்—மகிழ்ந்து-சந்தோஷித்து—செல்வான்-போகின்றகலியானவன்—அலர்-பரந்த—முலை-ஸ்தனங்களை—சுமக்கலாற்றா-சுமக்கமாட்டாத—ஐயம்-சந்தேகத்தைத்தரும்—நுண்-நுட்பம்பொருந்திய—மருங்குல்-இடையையுடைய—பேதை-மடந்தையது—புலவி-பிணக்கை—தீர்ப்பதற்கு-போக்குதற்கு—கூறும்-சொல்லும்—பொய்யென-பொய்யென்று—புலர்ந்து-மனம்வாடி—போனான்-போயினான்—(எ-று) (கருத்து) கல்வியில்வல்லோன்பொய்சொல்லுதலைக்கண்டுசெல்லுஞ்சனிபகவான் மாதர்பிணக்கைத்தீர்க்கும்பொய்யென்றுவாடிப்போனானென்பதாம். (௰௨)

கடிமனையிடங்கடோறுங்கற்புடைமகளிரீட்டங்...... ......*
கொடிநெடுவீதியெல்லாங்கடவுளர்விழவுதுன்று .. ... ... *
நெடிபடுகானமுற்றுந்துறந்துளோர்நெருக்கம்யாண்டு ...*
மடியிடலரிதென்றெண்ணியல்லலுற்றகன்றுபோனான் .. - *

(இ-ள்) கடி-காவலையுடைய—மனையிடங்கடோறும்-வீட்டினிடங்களெல்லாம்—கற்புடை-பதிவிரதத்தன்மைபொருந்திய—மகளிரீட்டம்-மாதர்கூட்டங்கள்—கொடி-கொடிகளையுடைய—நெடும்-நீண்ட—வீதியெல்லாம்-தெருக்களனைத்திலும்—கடவுளர்விழவு-தேவர்திருவிழா—துன்றும்-நெருங்கியிருக்கும்—நெடி-சிள்வண்டுகள்—படு-உண்டாகிய—கானமுற்றும்-காடுமுழுவதும்—துறந்துளோர்-முனிவர்களுடைய—நெருக்கம்-கூட்டங்களுள்ளன (ஆதலால்) யாண்டும்-எவ்விடத்தும்—அடியிடல்-அடியெடுத்துவைத்தல்—அரிதென்று-அருமையென்று—எண்ணி-நினைத்து—அல்லலுற்று-துன்பமுற்று—அகன்றுபோனான்-நீங்கிப்போயினான் (எ-று) (கருத்து) மனைகளெங்குங்கற்புள்ளமாதர்கூட்டத்தாலும், வீதியெங்குந்தேவர்திருவிழாவாலும், காடெங்குமுனிவர்கூட்டத்தாலும், அடிவைக்கவிடமில்லையென்று சனியன்போனான், எ-ம். (௰௩)

இந்நகர்வரைப்பில்யாண்டுமெய்துதற்கரிதென்றெண்ணிச் *
சென்னிவான்றடவுதெய்வச்செழுமலர்ச்சோலைபுக்கு......*
மன்னவனிழைக்குந்தீமையாதெனமனத்திலோர்ந்து .... *
துன்னருந்தான்றிமீதிற்சூழ்ச்சியோடிருக்குநாளில் .. ... *

(இ-ள்) இந்நகர்-இந்தநகரினுடைய—வரைப்பில்- இடத்தில்—யாண்டும்-எவ்விடத்தும்—எய்துதற்கரிதென்றெண்ணி-போகுதற்குக்கூடாதென்றுநினைத்து—சென்னி-தலையானது—வான்றடவும்- ஆகாயத்தையளாவுகிற—தெய்வ - தெய்வீகமாகிய—செழும்-செழித்த—மலர் புஷ்பத்தையுடைய—சோலைபுக்கு-சோலையையடைந்து—மன்னவன்- நளமஹாராஜன்—இறையுந்தீமை-கொஞ்சமுங்குற்றம்—யாதெனை-எதுவென்று—மனத்திற்றேர்ந்து - மனதிலாராய்ந்து—துன்னரும்-சேரப்படாத—தான்றியின்கீழ்-தான்றிவிருக்ஷத்தின்கீழ்—சூழ்ச்சியோடு-ஆலோசனையுடனே—இருக்குநாளில் இருக்கின்றகாலத்திலே—(எ-று) தான்றி- நிஷீதகம்-(கருத்து) சனியகவான் சோலையிற்புகுந்து நளன்செய்யுந்தீமையெதுவென்றுநினைத்துத்தான்றிமரத்தடியேயிருக்கின்றகாலத்திலே என்பதாம்.

கலிதோன்றுபடலம்-முற்றிற்று.

# இளவேனிற்படலம்.

இப்படலத்தால் பற்பலலீலைக்குரிய இளவேனிற்காலத்தினது சிறப்புச்சொல்லப்படுகின்றது.

(கலிநிலைத்துறை)

நமதுசெங்கரங்கடோயினகைமுகவிருந்துசெய்யங் ...... ......*
கமலநாண்மலரைவாட்டும்பனியினைமுழுதுங்காய்வா ...........*
னிமயமால்வரையின்வெம்போர்க்கெழுந்தெனவுலகம்போர்த்த *
திமிரமேய்ந்துலவும்வெய்யோன்சென்றனன்வடபான்மேரு..*

(இ-ள்) நமது-நம்முடைய—செங்கரங்கள்-சிவந்தகிரணங்கள்—தோயில்-பொருந்திறல்—நகை-பிரகாசியாநின்ற—முகம்-முகத்துடனே—விருந்துசெய்யும்-விருந்துசெய்யாநின்ற—கமலம்-தாமரையினது—நாள்-புதிய—மலர்-புஷ்பத்தை—வாட்டும்-வாட்டப்பண்ணும்—பனியினை-பனியை—முழுதும்-முழுமையும்—காய்வான்-அழிக்கும்பொருட்டு—இமயமால்வரையின் - இமயபர்வதத்தில்—வெம்போர்க்கெழுந்தன-வெவ்விதாகியயுத்தத்திற்கெழு

ந்தவன்போல—உலகம்போர்த்த-உலகத்தைமூடிய—திமிரமேய்ந்து-இருளையுண்டு—உலவும்வெய்யோன்-உலவுகின்றசூரியன்—வடபால்-வடதுபக்கத்தில்—சென்றனன்-போயினான்--(எ-று)மன்-ஓ-அசைகள்-உத்தராயநம்-பிறந்ததென்பதாம்-காய்வான்-எழுந்தென-என்றல் தற்குறிப்பணி-(கருத்து) சூரியன்உத்தராயநமாயினான் என்பதாம். (௧)

இன்றுணைக்கணவர்நீங்கியிடருறுமடவார்சோர.................*
மன்றலிற்*கொழுநர்ப்புல்லுமடந்தையர்மகிழ்ச்சிகூரக் ......*
குன்றிடைப்பிறந்ததென்றற்கொழுந்துமுன்போர்த்ததேமா ... *
மென்றளிர்ப்போர்வைபோர்த்துவேனில்வந்திறுத்ததன்றே..... ※

(இ-ள்) இன்றுணை-இனியதுணையாகிய—கணவர்-கொழுநரை—நீங்கி-பிரிந்து—இடருறும்-துன்பத்தையடைகின்ற—மடவார்-மாதர்கள்—சோர-சோர்வையடையவும்—மன்றலில்-விவாகத்தின்கண்—கொழுநர்ப்புல்லும்-கணவரைத்தழுவும்—மடந்தையர்-மாதர்கள்—மகிழ்ச்சிகூர-மகிழ்ச்சியையுடையவும்—குன்றிடைப்பிறந்த-பொதியமலையினுற்பவித்த--தென்றற்கொழுந்து-இளந்தென்றற்காற்றை—முன்-முன்னே—போர்த்த-போர்த்துக்கொண்ட—தேமா-தித்திப்புப்பொருந்திய மாமரத்தினது--மென்றளிர்-மெல்லியதளிராகிய—போர்வைபோர்த்து-வஸ்திரத்தைப்போர்த்து—வேனில்-வேனிற்காலமானது—வந்திறுத்தது-வந்துதங்கியது—(எ-று)அன்று-ஏ-அசைகள். * அகத்தியம் ஞநயிடைக்கிளவிநண்ணலுமுளவே-(கருத்து) தணந்தவர்துன்புற மணந்தவரின்புற வேனிற்காலம்வந்தது,எ-ம். (௨)

கள்ளுமிர்த்தலருமுல்லைக்கடிமுகைமுறுவற்றோன்ற.........*
வள்ளிதழ்க்குவளையுண்கண்மலர்ந்துமாந்தளிர்மென்கையாக்
கிள்ளைமென்குதலைசாற்றிக்கிளரொளிவண்டுபாணாத்... ... *
தெள்விளிபாடவேனிற்றிருமகள்சிறந்தாளன்றே.. ... ...*

(இ-ள்) கள்ளுமிர்த்து-தேனைத்தந்து---அலரும்-மலருகிற-முல்லை-முல்லையினது--கடி-வாசனைபொருந்திய--முகை-அரும்புகளாகிய-முறுவற்றோன்ற-பற்கள்தோன்ற-வள்ளிதழ்-கூர்மையாகியஇதழையுடைய--குவளை-நீலோற்பலங்களாகிய,உண்கண்-மையுண்டகண்கள்--மலர்ந்து-விழித்து—மாந்தளிர்-மாந்துளிர்கள்,மென்-மிருதுபொருந்திய,கை-கையாக—ஆர்-ஆர்ந்த—கிள்ளை-கிளிப்பிள்ளையின்மொழிகளாகிய—மென்-மிருதுபொருந்திய—குதலை-குதலைச்சொற்களை—சாற்றி-பேசி---கிளரொளி-விரிந்தவொளியையுடைய—வண்டு-வண்டுகளே—பாணா-பாணர்களாக—தெள்விளியா

டு. தென்விளியென்னுமிராகத்தைப்பாட—வேனிற்றிருமகள்-வேனிற்காலமாகியபெண்—சிறந்தாள்-பொலிவையடைந்தாள்-(எ-று) அன்று-ஏ-அசைகள். (கருத்து) இளவேனிலென்கின்றபெண் சிறப்படைந்தாள் என்பதாம். (க)

பூசல்வண்டார்ப்பவேனில்போந்தமைகுயில்கள்கூறப்......*
பாசிலையுகுத்ததேமாவைந்தளிரீன்றதோற்றம்.............. *
மாசறுதுகிலைநீத்துமகிழ்நர்தம்வரவுகேட்டுக் ........ ...*
கோசிகச்செம்பொனாடைகொம்பனாரசைத்தல்போலும்

(இ-ள்) பூசல்-போர்செய்கலையுடைய—வண்டு-வண்டுகள்—ஆர்ப்ப-ஆரவாரிக்க—வேனில்-வேனிற்காலம்—போந்தமை-வந்ததன்மையை—குயில்கள்கூற-கோகிலங்கள்சொல்ல—பாசிலை-பழுப்பிலைகளை—உகுத்த-உதிர்த்த—தேமா-தித்திப்புமாமரங்கள்--பைம்-பசுமைபொருந்திய—தளிர்-தளிர்களை--ஈன்றதோற்றம்-பெற்றகாட்சியானது—மகிழ்நர்தம்வரவுகேட்டு-புருஷர்களுடையவரவுகேட்டு—மாசறு-குற்றம்பொருந்திய—துகிலை-வஸ்திரத்தை—நீத்து-நீக்கி கோசிகம்-பட்டாகிய—செம்பொன்-சிவந்தபொன்னாற்செய்த—ஆடை-வஸ்திரத்தை—கொம்பனார்-பெண்கள்—அசைத்தல்போலும்-கட்டிக்கொள்ளுதலையொக்கும்—(எ-று) *தொன்னூல்விளக்கம்-ஞநவிடைப்பகுபதநண்ணுநெறியே. (கருத்து) வேனில்வந்ததைக்குயில்களறிவிக்கமாமரந்தளிர்த்தகாட்சிகணவர்வருதலைக்கேட்டுப்பெண்கள்பொற்சேலைதரித்தாற்போலும், எ-ம்.

வானுயர்சோலைதோறுமருகுவாய்மடுத்துவீழுந்...... ...*
தேனொடுசுரும்புவண்டும்புதிதுண்டுதெவிட்டியார்ப்பக் *
கானமர்குழலினார்தங்கணவர்பாற்புலவிதீர...... ...... ...*
வேனில்வேட்குலகம்யாவும்விழவயர்ந்திட்டவன்றே.....*

(இ-ள்) வான்-ஆகாயத்தில்—உயர்-உயர்ந்த—சோலைதோறும்-தோப்புக்கள்தோறும்--மருகு-தேனை--வாய்மடுத்து-வாய்வைத்து—வீழும்-விரும்பும்--தேனொடு தேன்வண்டுடனே---சுரும்பு-ஆண்வண்டும்—வண்டும்-பெட்டைவண்டுகளும்—புதிதுண்டு விருந்துண்டு—தெவுட்டி-தெவுட்டெடுத்து—ஆர்ப்ப-ஆரவாரிக்க---கான்-வாசனை--அமர்-பொருந்திய---குழலினார்-கூந்தலையுடையமாதர்கள்---தம்-தங்கள்---கணவர்பால்-புருஷர்களிடத்தில்---புலவிதீர-பிணக்குகள்நீங்க---வேனில்-வேனிற்காலத்துக்குரிய---வேள்-மன்மதனுக்கு---உலகம்யாவும்-உலகங்களெல்லாம்--விழவயர்ந்திட்ட-திருவிழாவைச்செய்தன---(எ-று) அன்று-ஏ-அசைகள்—(கருத்து) மன்மதனுக்குஉலகங்கள்யாவுந்திருவிழாசெய்தன என்பதாம். (உ)

குன்றிடைப்பிறந்ததென்றற்கொழுந்துமேற்படர்ந்ததன்மை
துன்றிருட்பிழம்புசீக்குங்கனைகதிர்ச்சுடரோனைய ... ... ...*
தன்றுணைக்கேள்வனீங்கிவடபுலஞ்சார்தலோர்ந்து.......,.....*
தென்றிசையணங்குமாழாந்துயிர்த்ததுசிவணுமாதோ.... *

(இ-ள்) குன்றிடை-பொதியமலையினிடத்திலே—பிறந்த-உண்டாகிய—தென்றற்கொழுந்து-இளந்தென்றற்காற்று—மேற்படர்ந்ததன்மை-பூமியின்மீதுபரவியதன்மையானது—துன்று-நெருங்கிய—இருட்பிழம்பு-இருட்கூட்டத்தை—சீக்கும்-கெடுக்கும்—கனை-மிகுந்த—கதிர்-கிரணங்களையுடைய—சுடரோனைய-சூரியனைய்—தன்றுணை-தனக்குத்துணையாகிய—கேள்வன்-புருஷனை—நீங்கி-தன்னைநீங்கி—வடபுலம்-வடதிசையாகிய (பெண்ணை)— சார்தலோர்ந்-அடைதற்கயாத்திரத்தில்—தென்றிசையணங்கு - தெற்குத்திக்காகியபெண்—மாழாந்து-மயங்கி—உயிர்த்தது-பெருமூச்சுவிட்டதை—சிவணும்- ஒக்கும்—(எ-று) தென்றிசை யணங்கென்றமையால் வடபுலவணங்கென்றுங்கொள்ளப்பட்டது-(கருத்து) தென்றல்வீசியது சூரியன் வடதிசைப்பெண்ணிடத்திற் போனானென்று தென்றிசைப்பெண் பெருமூச்சுவிட்டதுபோலும் என்பதாம்.

பன்மணிவரன்றிச்சாரற்பானிறவருவிதாழும்...............*
தென்வரையினிதினீன்றபுனிற்றிளங்குழவித்தென்றல்......*
கன்னலஞ்சிலைக்கைமாரன்காதலர்ப்பிரிந்தமாத........ ...*
ரின்னுயிர்படுப்பவேண்டியியற்றியபார்வையாமால்.........*

(இ-ள்) பன்மணி-பலரத்நங்களை—வரன்றி-வாரிக்கொண்டு—சாரல்-பக்கத்தில்—பானிறம்-வெள்ளைநிறமாகிய— அருவிதாழும்-அருவிகள்பாயப்பெற்ற—தென்வரை-பொதியமலை— இனிதினீன்ற-இன்பமாகப்பெற்ற— புனிற்றிளம்-மிகவுமிளமைபொருந்திய—குழவித்தென்றல்-இளந்தென்றற்காற்றானது—கன்னல்-கருப்பாகிய—அம்-அழகிய— சிலைக்கை - வில்லைப்பிடித்தகையையுடைய—மாரன்-மன்மதனென்பவன்—காதலர்-நாயகர்களை—பிரிந்த - நீங்கிய—மாதர்-மாதர்களின்—இன்னுயிர்-இனியவுயிர்களை—படுப்பவேண்டி-பிடிக்கவிரும்பி—இயற்றிய-வரவிட்ட—பார்வையாம்- பார்வையாகும்—(எ-று) பார்வையென்பதுமிருகங்களைப்பிடிக்க அவ்வினத்தில் ஒன்றைவளர்த்துவைப்பதாம்- (கருத்து) தென்றல்வீசியது மன்மதன் நாயகரைநீங்கிய மாதருயிரைப் பிடிக்கவிட்டபார்வைபோலாம் என்பதாம். (௭)

விண்டொடர்பொதும்பர்தோறும்விரைகமழ்ப்போதில்வீழ்ந்து
வண்டினங்குடைந்துபாடமகரந்தமெழுந்தகாற்றந்......*

கொண்டல்கண்படுக்குந்தேமாங்குயிலினமழைப்பத் தோன்
றுந்- திண்டிறலநங்கன்சேனைபராகமொத்திருந்ததன்றே ...*

(இ-ள்)விண்டொடர்- ஆகாயத்தையளாவநின்ற—பொதும்ப ர்தோறும்-சோலைகள்தோறும—விரை-வாசனை—கமழ்-பரிமளியா நின்ற—போதில்வீழ்ந்து-புஷ்பத்திலிறங்கி—வண்டினம்-வண்டுக்கூ ட்டங்கள்—குடைந்து மூழ்கியுழுது—பாட - பண்ணைப்பாட —மகரந்தம்-மகரந்தப்பொடிகள்—எழுந்ததோற்றம் - எழும்பிய காட்சியானது—கொண்டல்-மேகங்கள் —கண்படுக்கும் - நித்திரை செய்யும்—தேமா-தித்திப்பமாமரத்திலிருக்கிற—குயிலினம்-குயிற் கூட்டம் —அழைப்ப கூப்பிட—தோன்றும்-ஏற்ற—திண்டிறலநங் கன்-மிகுந்தவலியையுடையமன்மதனது—சேனைபராகம்- சேனையி னின்றெழும்புகிறபுழுதியை—ஒத்திருந்தது- ஒப்பாகியிருந்தது— (எ-று) (கருத்து) மகரந்தமெழுந்த காட்சியானது மன்மதன்சே னைகளினெழும்புப்புழுதியை யொத்திருந்தன என்பதாம். (௮)

காயெரிமணியிற்செய்கதிர்முலைமகளிர்கூந்த...... ..... *
லாய்மலருகுத்தல்போலக்குயிலுடைந்தாடவீழ்ந்த ... ...*
சேயமென்போதுபோர்த்ததிருவநிலங்கள்யாவும்... ... *
பாயலிற்படுத்தசெம்பொற்படாமெனவிளங்குமன்றே ... *

(இ-ள்) காய்-கொளுத்தாநின்ற—எரி- நெருப்பைப்பொத்த— மணியிற்செய்த-இரத்நத்தினாற்செய்த ஆபரணத்தினது—கதிர்- பி ரகாசம்பொருந்திய—முலை-ஸ்தனங்களையுடைய—மகளிர்- மாதர் களது—கூந்தல்-அளகபாரமானது —ஆய்-ஆராய்ந்த— மலருகுத் தல்போல-புஷ்பத்தை உதிர்த்தல்போல—குயில்-கோகிலங்கள் ---கு டைந்தாட-கூத்தாட---வீழ்ந்த-விழுந்த---சேய-சிவந்த---மென்- மிருதுவாகிய---போது-புஷ்பங்கள்---போர்த்த - மூடப்பெற்ற--- திருவ-சிறப்புற்ற---நிலங்கள்யாவும் - நிலப்புகளெல்லாம்--- பாயலில்-சயனத்தில்---படுக்க விரித்த---செம்-சிவந்த--- பொற்ப டாமென-பொன்வஸ்திரத்தைப்போல--விளங்கும்-பிரகாசிக்கும்-- (எ-று) அன்று ஏ-அசைகள். (கருத்து) மலர்கள்விழுந்த நிலங்கள் யாவும்பொற்சேலைவிரித்தாற்போலும் விளங்கும் என்பதாம். (௯)

தாழ்சினைபூத்தமென்பூந்தண்ணறுஞ்சுண்ணமாடி... ..... *
வீழ்துணைவருகநோக்கிப்புலக்கடிமையதென்று..........*
யாழிசையிற்றசெங்கட்கருங்குயிலினிதினாடிக ......... *
கோழறைக்குமரிவாழைக்குருத்திடையொளித்ததன்றே ... *

(இ-ள்) தாழ்-வளைந்த---சினை-கிளைகளில்---பூத்த-புஷ்பிக்க-- மென்-மிருதுவாகிய---பூம்-புஷ்பத்தினது---தண் - குளிர்ச்சிபொ

ருந்திய--நறும்-வாசனையாகிய--சுண்ணமாடி- மகரந்தப்பொடியில்வீழ்ந்து--வீழ்-விரும்பாநின்ற-- துணை-புருஷனாகிய ஆண்குயிலானது---வருதனோக்கி-வருகிறதைப்பார்த்து---புதுக்கடி-புதுமணத்தலை---மேயதென்று- அடைந்ததென்றுநினைந்து---யாழிசை-வீணையினிசையையொத்த--மிடற்ற- கண்டத்தினையும்--செங்கண்-சிவந்தகண்களையுமுடைய---கரும்-கறுத்த--குயில் - பெட்டைக்குயிலானது--இனிதினாடி-இன்பத்தினாலேபிணங்கி---கோழ் - செழிப்பாகிய--அளை-அளையையுடைய---குமரிவாழை - இளவாழையினது--குருத்திடை-குருத்தினிடத்தில்--ஒளித்தது - ஒளித்துக்கொண்டது--(எ-று) [புதுக்கடியென்பதில்,நூதனவிவாகம்என்பதும்புதியவாசனையென்பதும்சிலேடையால்பெறப்பட்டமையால்அதுகண்டு பெட்டைக்குயில்ஊடியதாம்எனக்கொள்க.] கருத்து) ஆண்குயில் வருதலைக்கண்டு பெண்குயில் வாழைக்குருத்திலொளித்தது எ-ம். ☞ * தொன்னூல்விளக்கம். வசந்தத்துரிமை வசந்தத்தேதொனுந்தென்றலேவண்டினஞ்சிறுகிளிபூவை,பன்றிலேகுயிலிவையகமகிழ்ந்தார்த்தலே,மாங்கனியுதிர்தலேதெங்கயமலரொடு, வகுளந்தாழைவாழைசண்பகம்பிற, முகிழினிதவிழ்த்தலேமுன் காரிடைக்களி,மிகுவனமயின்முதன்மெலிதலேயென்ப.(இ-ள்) வேனிற்பருவத்துரிமையாவது,மன்மதன்றேராகியதென்றல்வீசலும்,பலவண்டினமுங் கிளியும்பூவையும்,அன்றிலுங்குயிலுமெனவிவைமகிழ்தலும்,மாங்கனியுதிர்தலுநீர்மலரன்றிமகிழ்தாழைபுன்னை சண்பகபலவு,மலர்தலுங் கார்ப்பருவத்துமகிழ்ந்த,கோபங்கேகயப்புண்மயிலிவைமெ,மெலிதலுமிளவேனிற்பருவத்துரிமையெனப்படும். (௰)

☞ * இளவேனிற்படலம்-முற்றிற்று.



# போதுகொய்படலம்.



இப்படலத்தால் அந்நகரத்தி லுள்ள ஆடவரும் மாதரும் லீலையோடு மலர்களைக் கொய்தல் சொல்லப் படுகின்றது.

(கலிவிருத்தம்.)

இன்னதன்மையவின்னிளவேனில்வா... ... ...*
யன்னபொன்னகராடவர்யாவரும்.............*
பொன்னவாமுலைப்பூவையர்தம்மொடுந்... ...*
துன்னுநாண்மலர்ச்சோலைசென்றெய்தினார்... *

(இ-ள்) இன்னதன்மைய-இத்தன்மையவாகிய—இன்-இனிமையாகிய—இளவேனில்வாய்- வசந்தகாலத்தினிடத்தில்—அன்னபொன்னகர் - அந்நகரத்திலுள்ள—ஆடவர்யாவரும் - புருஷர்களெல்லோரும்—பொன்-தேமலானது—அவாம்-விரும்புகின்ற—முலை-ஸ்தனங்களையுடைய—பூவையர்தம்மொடும்- தங்கள்மங்கையரோடுகூட---துன்னும்-நெருங்கிய--நாண்மலர்- அன்றலர்ந்தபுஷ்பத்தையுடைய--சோலை பூஞ்சோலையை--சென்று- போய்--எய்தினார்-அடைந்தார்கள்--(எ-று) (கருத்து) மாவிர்தநகரத்துப் புருஷர்களும்பெண்களும் பூங்காவனத்தில்வந்தார்கள் என்பதாம். (க)

உள்ளங்கொண்டாரிவரென்றுணர்த்திடப்... ...*
புள்ளவாங்கணைவேளிடைப்போதல்போ ... ...*
லள்ளிலைச்செழுஞ்சோலையிலன்பரைக்... ......*
கள்ளுண்கோதையர்கைபிடித்தேகினார்.........*

(இ-ள்) உள்ளம்-எங்கள்மனத்தை--கொண்டார்-அபகரித்துக்கொண்டார்கள்--இவரென்று-இவர்களென்று---உணர்த்திட - அறிவிக்க---புள்-வண்டுகள்-அவாம்-விரும்புகின்ற--கணை- புஷ்பபாணத்தையுடைய---வேளிடை-மன்மதனிடத்தில்---போதல்போல்-செல்வதுபோல--அள்-நெருங்கிய -- இலை - இலைகளையுடைய--செழும்-செழித்த--சோலையில-சோலையிடத்தில்---அன்பரை - கணவர்களை---கள்ளுண்-தேன்பொருந்திய---கோதையர்- மாலையையணிந்த மங்கையர்கள்---கைபிடித்து-கையைப்பிடித்துக்கொண்டு--ஏகினார்-போனார்கள்--(எ-று) கள்ளரை அரசரிடத்துப்பிடித்துக்கொண்டுபோயவனுக்கிலக்காகுவதுபோலஆடவரைக்காமனுக்கிலக்காக்குதற்கென்க. (கருத்து) பெண்கள் புருஷர்கள்கையைப்பிடித்துக் கொண்டு சோலையிற்போனார்கள் என்பதாம். (உ)

அணங்குநோய்செயுமைந்துமலரெனிற்...... *
கணங்கொள்போதுகஞலியபொங்கர்வாய்......*
மணந்துசெல்வதையன்றிமணந்தவர்த்... ......*
தணந்துசெல்லுந்தருக்கினர்யாவரோ............*

(இ-ள்) ஐந்துமலர்- ஐந்துபுஷ்பங்களே---அணங்கு-வருத்தமாகிய---நோய்-துன்பத்தை---செயுமெனில்-செய்யுமேயாமாகில்---கணங்கொள்-கூட்டங்கொண்ட---போது- புஷ்பங்கள்---கஞலிய- நெருங்கிய---பொங்கர்வாய் - சோலையினிடத்தில்---மணந்து-கூடி---செல்வதையன்றி-போவதையல்லாமல்--மணந்தவர்-கூடினவர்களை--தணந்து-பிரிந்து---செல்லும்- போகின்ற---தருக்கினர்-செருக்கையுடையவர்கள்---யாவர்-எவர்களொருவருமில்லை--(எ-று) ஒ-அசை- (கருத்து) புணர்ந்துபோவதல்லாது புணர்ந்தவரைப்பிரிந்துபோவாரில்லை என்பதாம். (௩)

திருவனார்தங்குழாத்தொடுசென்றத... .... ...*
னரிவைபஞ்சடியிற்றென்றறிகிலான்............*
வரைகொள்மார்பினுதைத்தமலரடி... ... ...*
புரைவதீதெனநோக்கினன்போகின்றான்......*

(இ-ள்) திருவனார்தம்-இலக்குமியையொத்தபெண்களுடைய---குழாத்தொடு-கூட்டத்துடன்---சென்ற-நடந்த---தன் - தன்னுடைய---அரிவை-நாயகியினது--பஞ்சு- செம்பஞ்சுக்குழம்பூட்டிய---அடி-பாதமானது---இதென்று- இன்னதென்று --- அறிகிலான்-அறியாதவொருவன்---வரை-மலையை---கொள்-உவமைகொண்டிருக்கிற---மார்பின்-தனதுமார்பினிடத்தில்---உதைத்த - உதைத்த---மலரடி-தாமரைமலர்போன்றபாதக்குறியை--புரைவது - ஒத்திருப்பது---ஈதென-இந்தஅடிக்குறியென்று---நோக்கினன்-பார்த்தவனாய்---போகின்றான்-சென்றான்---(எ-று) (கருத்து) தன்னாயகியடியிதென்றறியாதவன் தன்மார்பிலுதைத்தவடிக்கொப்பிதென்றுபார்த்துப்போனான் என்பதாம். (௪)

மையகூந்தலோர்மங்கை*யசோகினி... ... ...*
லெய்துறாதுயர்போதினையேறுபு............ *
கொய்துமென்றுகுறித்தடிவைத்தலுஞ்........ *
செய்யபோதினைதாறும்பூத்ததே... ... ...*

(இ-ள்) மையகூந்தல்-கறுத்தகூந்தலையுடைய-- ஓர்மங்கை-ஒருமங்கையானவள்--அசோகினில் - அசோகமரத்தினிடத்தில---எய்துறாது-அடையக்கூடாமல்---உயர்-உயரத்திலுள்ள---போதினை-புஷ்பத்தை--ஏறுபு-ஏறி--கொய்துமென்று - பறிப்போமென்று--த்

குறித்து-நினைத்து—அடிவைத்தலும்- பாதத்தைவைத்தமாத்திரத்தில்—செய்ய-சிவந்த—போது-புஷ்பங்கள்— சினைதோறும்-கிளைகள்தோறும்—பூத்த - மலர்ந்தன—(எ-று) * தருக்கசங்கிரகம்-உடு-கூ.விடயமாமுதலசைதற்கேது-இவ்விதியால் மரத்தியல்புமிக (கருத்து) ஒருத்தி அசோகமரத்திலேறிக் காலடிவைத்தமாத்திரத்தில் மலர்கள்மலர்ந்தன என்பதாம். (௫)

கோத்தமேகலைக்கோதையர்நோக்கலிற் ... ... *
பூத்தொசிந்ததிலகமென்போதினிற்............ *
றேத்துளிக்கமர்தெள்விளிவண்டினம்........ ... *
பார்த்தகண்ணிழல்பாய்ந்தனபோலுமே... ... *

(இ-ள்) கோத்த-கோவையிட்ட—மேகலை - மேகலாபரணத்தையுடைய—கோதையர்-மங்கையர்கள்—நோக்கலின்- பார்த்தவளவில்—பூத்து-மலர்ந்து—ஒசிந்த-வளைந்த—திலக - மஞ்சாடிமரத்தினுடைய—மென்-மிருதுவாகிய—போதினில் - புஷ்பத்தில்—தேத்துளிக்கு-தேனினதுதுளிக்கு—அமர்- பொருந்திய—தெள்விளி-தெள்விளிராகத்தைப்பாடுகின்ற—வண்டினம்-வண்டுக்கூட்டங்கள்—பார்த்த-பார்த்ததாகிய—கண்- கண்களினுடைய—நிழல்-சாயல்கள்—பாய்ந்தனபோலும்- பரவினபோலும்—(எ-று) (கருத்து) மஞ்சாடிமலரைப்பெண்கள்பார்த்தமாத்திரத்தில் வண்டுகள் பார்வைபாய்ந்தாற்போலும் என்பதாம். (௬)

காசுலாமுலைக்கன்னியர்புல்லலும்... . . ... ...*
பாசிலைக்குரவீன்றபைம்போதினின்... ... ... *
மூசுவண்டினமொய்த்ததுவெம்முலைப்...... . *
பூசுநானம்பொறித்ததுபோலுமால்..... ......*

(இ-ள்) காசுலா-இரத்நாபரணங்கள்தங்கிய—முலை-ஸ்தனங்களையுடைய—கன்னியர்-மங்கையர்கள்—புல்லலும்- தழுவினவளவில்—பாசிலை-பசுமைபொருந்தியவிலைகளையுடைய—குரவு- குராமரமானது—ஈன்ற-பெற்ற—பைம்-பசிய-- போதினில்-புஷ்பத்தில்—மூசு-நெருங்கிய—வண்டினம்-வண்டுக்கூட்டமானது—மொய்த்தது-மொய்த்துக்கொண்டது—வெம் - விருப்பத்தைக்கொடுக்கின்ற—முலை-ஸ்தனங்களில்—பூசு-பூசப்பட்ட—நானம்- கஸ்தூரி, பொறித்ததுபோலும்- பூசியதுபோலும்—(எ-று) (கருத்து) பெண்கள் குராமரத்தைத் தழுவினவளவில் அம்மரமலர் வண்டுக்கூட்டமார்பில்மொய்த்தது முலைமேற்கஸ்தூரிபூசியதுபோலும், எ-ம்.

வஞ்சிநுண்ணிடைமாதர்மிதித்தலிற்... .. ..... *
செஞ்சவேதளிரீன்றசெயலைக........ ..... ...*

ளஞ்செஞ்சீறடிதோய்ந்தவரக்கெறி...... ......*
பஞ்சியுண்டொளிர்பான்மைகடுக்குமே.........*

(இ-ள்) வஞ்சி-கொடியையொத்த—நுண்-நுட்பமாகிய—இடை-மருங்கையுடைய, மாதர்-மடவார்—மிதித்தலில்-மிதித்தலினால்—செஞ்சவே-செம்மையாக—தளிர்-தளிர்களை—ஈன்ற - தந்த—செயலைகள்-அசோகவிருக்ஷங்கள்—அய்- அழகிய—செம்-சிவந்த—சீறடி-அம்மடவார்சிற்றடியில்—தோய்ந்த-பூசிய—அரக்கெறி-செந்நிறத்தைவீசாநின்ற—பஞ்சி-செம்பஞ்சியை—உண்டு-தம்மிடத்திற்கொண்டு—ஒளிர்-பிரகாசிக்கின்ற—பான்மை- தன்மையை—கடுக்கும்-ஒக்கும்—(எ-று)(கருத்து) அசோகமரங்கள்பெண்களடிகளின்செம்பஞ்சுக்குழம்புஉண்டாற்போலிருக்குமென்பதாம்.

அரவமேகலையாயிழையார்க்குயர்.............*
குரவம்பாவைகொடுத்தகொழுதிமென் ........*
முருகுலாமளிமொய்த்தகடம்பினம்...........*
பரிவினாடவெண்பந்துகொடுத்தவே........*

(இ-ள்) அரவம்-சத்தியாநின்ற—மேகலை - மேகலாபரணத்தையுடைய—ஆயிழையார்க்கு-மாதருக்கு—உயர்-உயர்ந்த---குரவம்-குராவிருக்ஷம்—பாவை - காய்களாகியபதுமைகளை—கொடுத்த-கொடுத்தன—கொழுதி-கோதி—மென்- மிருதுபொருந்திய—முருகு-தேனினிடத்தில்—உலாம்-உலாவுகின்ற—அளி- வண்டுகள்—மொய்த்த-நெருங்கிய, கடம்பினம்-கடப்பவிருக்ஷங்கள்—பரிவின்-விருப்பத்துடனே—ஆட-ஆட—வெண்-வெண்மையாகிய---பந்து காயாகியபந்தை—கொடுத்த-கொடுத்தன—(எ-று-(கருத்து) குராமரங்கள் மாதர்க்குக்காய்களைப்பதுமைகளாகக்கொடுத்தன-கடப்பமரங்கள் காய்களைப் பந்துகளாகக்கொடுத்தன என்பதாம்.(௯)

மாங்குயிற்குரல்கேட்டுமலருறாக்...............*
கோங்கமாதர்குதலையைக்கேட்டலுந்... ... ...*
தேங்கொள்போதுசினைதொறும்பூத்தலா... ...*
லாங்கதற்கிணையோகுயிலார்ப்பதே...... ...... *

(இ-ள்) மா-மாமரத்திலிருக்கிற—குயிற்குரல்-குயிலின்குரலை—கேட்டு-கேட்டு—மலருறு-மலராத—கோங்கம்-கோங்கவிருக்ஷமானது, மாதர்-மடவாருடைய--குதலையை-குதலைச்சொல்லை--கேட்டலும்-கேட்டவளவில்—தேங்கொள் - தேனைக்கொண்ட—போது-புஷ்பங்களை—சினைதொறும் - கிளைகள்தோறும்—பூத்தலால்-புஷ்பித்தலால்—ஆங்கு-அவ்விடத்தில்--அதற்கு-அம்மடவார்சொல்லுக்கு—குயிலார்ப்பது-குயிலகூவுவது—இணையோ - ஒப்பாகு

மேர்ஆகாது—(எ-று) (கருத்து) குயிலோசையால் மலராதகோ
ங்கு மாதர்குரலோசையால் மலர்தலால் இவர்கள்குரலுக்குக் குயி
லோசையொவ்வாது,எ-ம். (௰)

காவிலன்புடைக்காளையோர்தார்குழற்........*
பூவைகண்ணுறுபூந்துகண்மாற்றலு.............*
மாவியென்னவருகுறமாற்றவள்... ... ......*
காவியங்கட்கடைகள்சிவந்தவே...... ...... ...*

(இ-ள்) காவில்-பூஞ்சோலையில்—அன்புடை-ஆசையையுடைய—காளை-புருஷனானவன்—ஓர்-ஒரு—தார்-மாலையணிந்த—குழல்-கூந்தலையுடைய—பூவை-மனையாளது—கண்ணுறு-கண்ணிலேபடிந்த—பூந்துகள்-மகரந்தப்பொடியை—மாற்றலும்-துடைத்தமாத்திரத்தில்—ஆவியென்ன-தன்னுயிரைப்போல,அருகுறை-பக்கத்திலிருந்த—மாற்றவள்-சக்களத்தியினுடைய—காவி-நீலோற்பலத்தையொத்த—அம்-அழகிய—கட்கடைகள்-கடைக்கண்கள்—சிவந்த-சிவந்தன—(எ-று)(கருத்து) நாயகன் ஒருநாயகிகண்ணில் விழுந்தமகரந்தத்தைத்துடைத்தவளவில் மற்றொருநாயகிகண்கள் சிவந்தன என்பதாம். (௰௧)

வாங்குவிற்கைவரைபுரைதோளினன்..........*
றேங்கொள்வண்டுநிரைப்பவடுவுறுங்.......... ...*
கோங்கரும்பினைநோக்கியோர்கோல்வளை...... *
வீங்குவெம்முலைநோக்கலும்வெள்கினாள்... ...*

(இ-ள்) வாங்குவில்-வளைந்தவில்லை—கை-கையிலேயுடைய—வரைபுரை-மலையையொத்த—தோளினன்-தோளையுடைய ஒருபுருஷன்—தேங்கொள்-தேனையுண்ணுகிற—வண்டு-வண்டுகள்—நிரைப்ப-பொருந்த—வடுவுறும்-வடுவுண்ட—கோங்கு-கோங்குமரத்தினது—அரும்பினை-அரும்பை—நோக்கி-பார்த்து—ஓர்-ஒரு—கோல்வளை-மடந்தையினது—வீங்கு-பருத்த—வெம்-விருப்பத்தைத்தருகின்ற—முலை-ஸ்தனங்களை—நோக்கலும்-பார்க்குமளவில்—வெள்கினாள்-அவள்வெட்கப்பட்டாள்—(எ-று) (கருத்து) ஒரு புருஷன் கோங்குமலரில்வண்டுகள்கிண்டியவடுவைக்கண்டு ஒருபெண்முலையைப்பார்த்தவளவில் அவள்வெட்கமடைந்தாளென்பதாம்.

கோதைமார்பனோர்கோல்வளைகாதினின் .. ...*
மாதர்நீலம்புனைதலுமாற்றவள்...... ... .. ...*
நோதகும்படிநோக்கியநோக்கவள்... ......*
காதிலும்புனைகாவிநிகர்த்தவே...... ......*

(இ-ள்) கோதை-மாலையணிந்த—மார்பன்-மார்பையுடையவன்—ஓர்-ஒரு—கோல்வளை-மாதினது—காதினில்-காதிலே—மாதர்

—அழகிய—நீலம்-நீலோற்பலத்தை—புனைதலும்- சூட்டியவளவில் —மாற்றவள்-சக்களத்தி—நோதகும்படி-நோகும்படி--நோக்கிய —பார்த்த--நோக்கு-பார்வையானவை—அவள்- அச்சக்களத்தியின து—காதிலும்-காதிலேயும்—புனை-சூடிய—காவி - நீலோற்பலத் தை—நிகர்த்த-ஒத்திருந்தன—(எ-று) (கருத்து) கணவன் ஒருநா யகிகாதில் நீலோற்பலந்தரித்தவளவில்அவள்சக்களத்திபார்த்தபார் வைகள் காதிற்புனைந்த நீலோற்பலத்தை ஒத்திருந்தன என்பதாம்.

கோலநாண்மலர்கொய்பவளங்கையி.......... *
லோவிநிஞ்சுரும்போச்சவும்போகில.......... *
மாலுழந்துமறிந்துவிழுவன...... ............*
நீலவொண்கழங்காடனிகர்க்குமால்... .........*

(இ-ள்) கோலம்-அழகுபொருந்திய—நாண்மலர்-புதியபுஷ் பங்களை—கொய்பவள்- பறிக்கின்றவளது—அங்கையில் - உள்ளங் கையில்—ஒலிநிஞ்-சத்திக்கின்ற—சுரும்பு-வண்டுகள்—ஒச்சவும்-ஓ ட்டவும்—போகில-போகின்றிலவாய்—மாலுழந்து- மயக்கமுற்று —மறிந்து-மறியபட்டு—விழுவன - அக்கையில்விழுகின்றனவாகி— நீலம்-கறுத்த—ஒள்-பிரகாசம்பொருந்திய--கழங்காடல்-அம்மனை ஆடலை—நிகர்க்கும்-ஒக்கும்-—(எ-று)(கருத்து)மலர்கொய்பவள் கையில் வண்டுகள்வீழ்பவை நீலப்பந்துகள் ஆடலையொப்பாகும் என்பதாம். (௰௪)

போதுகொய்படலம் - முற்றிற்று.

# புனல்விளையாட்டுப்படலம்.

இப்படலத்தால்போதுகொய்தவர்கள்பின்பு அக்காலதுக்கேற்பப் புனலில்விளையாடல் சொல்லப்படுகின்றது.

(கலிவிருத்தம்.)

இணரவிழ்பொதும்பரினிளைஞர்யாவரும்......*
புணர்முலைமகளிரும்போதுகொய்தபின்...... *
றுணையொடுமடவனமிரியத்தூநிற ............*
மணிதெளித்தனையநீர்வாவியெய்தினார்...... ...*

(இ-ள்) இணர்- பூங்கொத்துக்கள்—அவிழ் - விரியாநின்ற— பொதும்பரின்-சோலையில்--இளைஞர்யாவரும்- யௌவனபுருஷர்க

ளைவர்களும்—புணர்-நெருங்கிய—முலை-ஸ்தனங்களையுடைய—மகளிரும்-மாதர்களும்—போது-புஷ்பங்களை—கொய்தபின்-பறித்தபின்பு—துணையாயும்-பெட்டையுடனே—மடவனம்-இளவன்னங்கள்—இரிய-ஓட—தூ-வெண்மையாகிய—நிறம்-நிறத்தையுடைய—மணி-முத்தை—பதித்தனைய-பரப்பியதையொத்த—நீர்-சலத்தையுடைய—வாவி-தடாகத்தை—எய்தினார்-அடைந்தார்கள்—(எ-று)(கருத்து) வாலிபர்களும், மாதர்களும், தடாகத்திற்சேர்ந்தார்கள் என்பதாம், (௧)

வாணெடுங்கண்ணியர்வாவியெய்தலுஞ்........*
சேணிடைநேமியம்புட்கள்செல்வன........ ..*
யாணர்மென்கோங்கரும்பிடையவீங்கிய......*
பூண்முலைக்குடைந்தயல்போதல்போன்றவே...*

(இ-ள்) வாள்-வாளையொத்த—நெடுங்கண்ணியர்-நீண்டகண்களையுடையமாதர்கள்—வாவி-தடாகத்தில்--எய்தலும்- அடையவும்—சேணிடை-ஆகாயத்தின்கண்--நேமியம்புட்கள் - சக்கரவாகப்பக்ஷிகள்--செல்வன-போதலானவை—யாணர்-புதுமைபொருந்திய--மென்-மிருதுவாகிய--கோங்கரும்பு-கோங்கரும்புகள்--இடைய-தோற்றுப்போக—வீங்கிய-பருத்த--பூண்- ஆபரணத்தையணிந்த--முலைக்கு-ஸ்தனங்களுக்கு—உடைந்து-தோற்று—அயல்-புறத்தே--போதல்-போய்விடுதலை--போன்றன- ஒத்திருந்தன—(எ-று) (கருத்து) பெண்கள் குளத்துட்சென்றவளவில் சகோரங்கள் பறப்பவை, அப்பெண்கள்முலைக்குத்தோற்றுப்போவனபோலுமிருந்தன என்பதாம், (௨)

மங்கையர்செறிதலுமல்குநீரிடைப்.....-......*
பங்கையச்செழுமலர்தாழ்தல்பாவையர்..... ...*
திங்கள்வாண்முகத்தெழிற் குடைந்துதேங்கமழ்.*
பொங்குதண்புனலிடையொளித்தல்போலுமால்*

(இ-ள்)மங்கையர்-மாதர்கள்—செறிதலும்- அடைதலும்--மல்கு-நிறைந்த—நீரிடை-சலத்தினிடத்தில்--பங்கயம்- தாமரையினது--செழுமலர்-செழித்தபுஷ்பங்கள்--தாழ்தல்-மூழ்குதல்—பாவையர்-மாதர்களுடைய—திங்கள் - சந்திரனையொத்த--வாள் - பிரகாசம்பொருந்திய—முகத்தெழிற்கு-முகத்தினது அழகிற்கு—உடைந்து-தோற்று--தேம்- வாசனை--கமழ்-பரிமளியாநின்ற, பொங்கு-மிகுந்த--தண்புனலிடை - குளிர்ந்தநீரினிடத்தில்—ஒளித்தல்போலும்-ஒளித்தலையொக்கும்--(எ-று)(கருத்து) தாமரைநீரிற்முழுதல்பெண்கள்முகத்துக்கஞ்சி ஒளித்தல்போலும் என்பதாம், (௩)

வடுவகிர்நெடுங்கணார்வார்கொள்வெம்முலை .. *
குடைபுனல்வாவியுட்குளித்தலிந்திரன் ...... ...*
படர்சிறையறிவதற்கஞ்சிப்பாட்திரைக்........*
கடலிடைமால்வரையொளித்தல்காட்டுமால்... *

(இ-ள்) வடுவகிர்-மாவடுவினதுபிளப்பையொத்த—நெடுங்கணார்-நெடியகண்களையுடையமாதர்களது—வார்கொள்- கச்சையணிந்த--வெம்-விருப்பத்தைத்தரும்--முலை-ஸ்தனங்கள்---குடை-ஆடாநின்ற--புனல்-சலத்தையுடைய--வாவியுள்-தடாகத்தினுள்---குளித்தல்-முழ்குதல்--இந்திரன்-தேவேந்திரன்--படர் - விரிந்த---சிறை-இறகை--அரிவதற்கு-அறுத்தற்கு--அஞ்சி-பயந்து--பாய்-பாயாநின்ற--திரை-அலையையுடைய--கடலிடை - சமுத்திரத்தினிடத்தில்—மால்வரை-உயர்ந்தமலைகள்--ஒளித்தல்-ஒளித்தலை ---காட்டும்-காண்பிக்கும் —(எ-று)ஆல்-அசை- (கருத்து)பெண்கள்முலைகள்நீரிலிருத்தல மைநாகபரவதமொளித்தல்போலும்- என்பதாம்.

விரைகமழ்சுண்ணமெய்திமிர்ந்துமென்குழற் .*
றெரியலின்வீக்குபுதெய்வச்சாந்தணி... .. ...*
வரிமுலைதோன்றிடமகளிர்நீந்துத..... ...... *
னிரைமணிகுடத்தினுனீந்தல்போலுமால் ... *

(இ-ள்) விரைகமழ்-வாசனைபரிமளியாநின்ற--சுண்ணம்-சுந்தப்பொடிகளை--மெய்திமிர்ந்து-சரீரத்திற்பூசி---மென்குழல்-மிருதுவாகியகூந்தலை--தெரியலின்வீக்குபு-மாலையினாலேகட்டி---தெய்வம்-தெய்வீகமாகிய--சாந்தணி-சந்தனத்தையணிந்த--வரி-கோலத்தையுடைய —முலை-ஸ்தனங்கள்--தோன்றிட- தோற்ற---மகளிர்மாதர்கள்--நீந்துதல்-நீந்துதலானது--நிரை-வரிசையாகிய--மணிக்குடத்தினுல்-இரத்நகும்பத்தினுல்--நீந்தல்போலும்- நீந்தலையொக்கும் —(எ-று) (கருத்து) மாதர்கள் முலைதோன்றும்படி நீந்துதல் குடங்கொண்டு நீந்துதல்போலும் என்பதாம். (௫)

படவரல்வல்குலார்முலையிற்பாய்புன............*
லுடைதிரைக்கரத்திறற்பொருதலொண்டிறற்..*
குடமுனிகருங்கடல்குடித்தவாற்றினற்........*
புடைதிரண்மணிக்குடம்புடைத்தல்போன்றதே *

(இ-ள்) படவரவல்குலார்-பாம்பின்படத்தையொத்த நிதம்பத்தையுடையமாதரது—முலையில்-ஸ்தனங்களின்மீது--பாய்-பாயாநின்ற--புனல்-சலமானது--உடை-உடையாநின்ற--- திரைக்கரத்தினுல்-அலையாகியகையினுல்--பொருதல்-மோதுதல்--ஒண்டிறல்-பிரகாசமாகியவல்லமையையுடைய--குடமுனி- அகஸ்தியர்-- கருங்க

டல்-கருங்கடலை--குடித்தவாற்றினால்- பானம்பண்ணியநெறியினால் --புடை-பக்கங்களில்--திரள்-திரண்ட,மணிக்குடம்- இரத்நக்குடத்தை—புடைத்தல்போன்றதே-அடித்தலையொத்திருந்தது--(எ-று) (கருத்து) மாதர்கள்முலை அகஸ்தியர்கமண்டலத்தையொத்திருந்தது.

சிற்றிடையொருத்திதன்றிலகவாண்முகத்... ...*
செற்றுநீர்காதலனிறைப்பக்காண்டலு...... ...*
மற்றதுபொறுக்கலாதுயிர்த்துமாழ்கிய......*
முற்றிழைமழைக்கணீர்முகநிறைந்ததே... ...*

(இ-ள்) சிற்றிடை-சிறியஇடையையுடைய--ஒருத்திதன்- ஒருமாதினது—திலகம்-திலதப்பொட்டையணிந்த--வாண்முகத்து-பிரகாசம்பொருந்தியமுகத்தினிடத்து—எற்று-மோதுகின்ற--நீர்-சலத்தை--காதலன்-புருஷன்,இறைப்ப-இறைக்க--காண்டலும்-பார்த்தவளவில்--அது-அதை--பொறுக்கலாது-பொறுக்கமாட்டாமல்--உயிர்த்து-பெருமூச்சுவிட்டு--மாழ்கிய-மயங்கிய--முற்றிழை-சக்களத்தியினது--மழைக்கணீர்- குளிர்ச்சிபொருந்தியகண்ணீரானது--முகம்-முகத்தில்--நிறைந்தது-நிரம்பியது (எ-று) மற்று-ஏ-அசைகள்-(கருத்து) நாயகன்ஒருநாயகிமுகத்திலேநீரையிறைக்கக்கண்டவளவில் மற்றொருநாயகியழுதாள்,எ-ம். (எ)

நாள்விழவயர்ந்தவணாணிக்காதலன்...... ......*
றோளணிசாந்தநீர்தோய்ந்துநீக்கலும்...... ...*
வாளுகிருழுதமெய்வடுக்கண்டேங்குறு ... ...*
மீளவுமுளநணிவெள்கினாளரோ...... ... ......*

(இ-ள்) நாள்-புதிதாக--விழவயர்ந்தவள்-கலியாணம்பண்ணப்பட்டவள்—நாணி-வெட்கப்பட்டு--காதலன்-புருஷனது -- தோளணி-தோள்களினின்றுமணிந்த,சாந்தம்- சந்தனத்தை--நீர்தோய்ந்து-நீரிற்குளித்து--நீக்கலும்-போக்கியவளவில்,வாள்- வாள்போன்ற—உகிர்-நகங்கள்--உழுத-கிழித்த--மெய்-சரீரத்தில்--வடுக்கண்டு குறிகளைப்பார்த்து--ஏங்குறு-இரங்கி--மீளவும்-மறுபடியும்,உளம் மனதில்--நணி-மிகவும்--வெள்கினாள்-வெட்கமுற்றாள்— (எ-று) அரோ-அசை-(கருத்து) புதுமணப்பெண்மூழ்கிச் சந்தனத்தைநீக்கினவளவில்கணவன்நகக்குறிதன்மெய்யிற்கண்டுவெட்கினாள்எ-ம்.

இன்னணமாடுதநோக்கியெய்திய...............*
மன்னவர்மன்னனுமருங்குதேய்த்துயர்... .. *
பொன்னவிரிளமுலைப்பூவைதன்னொடுந்... ...*
துன்னுநீர்ப்போர்த்தொழிறொடங்கினனரோ *

(இ-ள்) இன்னணம்-இத்தன்மையவாக—ஆடுதல்-விளையாடு தலை--நோக்கி-பார்த்து--எய்திய- அத்தடாகத்தினிடத்திலேவந்த—மன்னவர்மன்னனும்- அரசர்க்கரசனாகிய நளமஹாராஜனும்—மருங்குதேய்த்து-இடையைத்தேய்த்து—உயர்-உயர்ந்த-- பொன்னவிர்-தேமல்பிரகாசியாநின்ற—இளம்-இளமைபொருந்திய--முலை-ஸ்தனங்களையுடைய-- பூவைதன்னொடும் - தமயந்தியினோடும்—துன்று-நெருங்கிய— நீர்ப்போர்த்தொழில்-சலக்கிரீடையை,தொடங்கினன்-ஆரம்பித்தான்--(எ-று)அரோ-அசை-(கருத்து) நளன் தமயந்தியுடன் நீர்விளையாடத்தொடங்கினன் என்பதாம். (கூ)

சுண்ணமென் *சிவிறிநீர் தூரக்குமெந்திர.. .. *
மெண்ணிலதாங்கிவேளனையவேந்தலைப்.........*
பெண்ணலங்கனிந்தொளிர்பேதைதன்னொடு...*
மண்ணியமணியனார்வளைந்திட்டாரரோ........X

(இ-ள்) சுண்ணம்-கந்தப்பொடிகளையும்--மென்-மிருதுவாகிய—சிவிறி-துருத்தியையும்--நீர்தூரக்குமெந்திரம்- நீரிறைக்குந்தூல்களையும்--எண்ணில்-அளவில்லாமல்--தாங்கி- எடுத்துக்கொண்டு—வேளனைய-மன்மதனையொத்த--ஏந்தலை-நளமஹாராஜனை---பெண்ணலம்-பெண்டன்மை—கனிந்து- பழுத்து--ஒளிர் - பிரகாசியாநின்ற--பேதைதன்னொடும்-தமயந்தியோடுகூட---மண்ணிய- கழுவிய---மணியனார்-இரத்நத்தையொத்தபெண்கள்--வளைந்திட்டார்-வளைந்துகொண்டார்கள்—(எ-று) * இலக்கணக்கொத்து ஒழிபியல்-தோன்றறிரிதல்கெடுதனிலைமாறுத-லெனநான்காகும்புணர்ச்சியில்விகாரம்-இவ்விதியால் இக்காலத்து சிவிறிவிசிறி என நிலைமாறிற்று.(கருத்து) பெண்கள் நீர்துருத்தியெடுத்துத் தமயந்தியோடு நளனைச்சூழ்ந்தார்கள்,எ-ம். (ய)

துன்னிருங்கூந்தலார்தூரந்ததாரைகண்.... ... *
மன்னவன்றோள்களிற்பாய்தல்வானிடை ... ...*
மின்னினங்காரொடுமிடைந்துமென்புனல் . .. *
பொன்னெடுங்குன்றின்மேறபொழிதல்போன்றதே.

(இ-ள்) துன்னு-நெருங்கிய---இரும்-பெருமைபொருந்திய---கூந்தலார்-கூந்தலையுடையமாதர்கள்---தூரந்த-தூவிய---தாரைகள்-சலதாரைகள்--மன்னவன்- நளமஹாராஜனுடைய---தோள்களில்-புசங்களில்--பாய்தல்-வீழ்தலானது—வானிடை- ஆகாயத்தினிடத்தில்--மின்னினம்- மின்னற்கூட்டம்---காரொடும் - மேகத்துடனே---மிடைந்து-நெருங்கிய---மென்-மிருதுவாகிய---புனல்-சலத்தை-- பொன்னெடுங்குன்றின்மேல் - நெடியமகாமேருவின்மீது---பொழிதல்போன்றது-பொழிதலைஒத்திருந்தது---(எ-று) (கரு

து) பெண்கள்நளன்தோள்மேல் நீரிறைத்தல் மேகம் மலைமேற் பொழிதல்போலும் என்பதாம். (யக)

அரசர்கோன்குலிசநீர்த்தாரையாயிரஞ்........*
சுரிகுழன்மடந்தையர்முகத்திற்றூவுதன்... ...*
முருகவிழ்தாமரைமலரின்மோட்டிளம் ... ...*
பரிதிசெங்கதிர்க்குழாம்பாய்தல்போன்றதே... *

(இ-ள்) அரசர்கோன்-இராசாதிராஜனாகிய நளமஹாராஜன்—குலிசநீர்-இங்குலிசநீரினது—தாரையாயிரம்-ஆயிரந்தாரைகளை—சுரி-சுழித்த--குழல்-கூந்தல்பொருந்திய--மடந்தையர்-மாதருடைய—முகத்தில்-முகங்களில்—தூவுதல்-இறைத்தலானது—முருகு-தேன்—அவிழ்-விரியாநின்ற--தாமரைமலரின்- தாமரைபுஷ்பத்தினிடத்தில்—மோட்டிளம்- மிகுந்தஇளமைபொருந்திய—பரிதி-சூரியனுடைய—செங்கதிர்க்குழாம்- சிவந்தகிரணக்கூட்டங்கள்—பாய்தல்-வீழ்தலை--போன்றது-ஒத்திருந்தது—(எ-று) ஏ-ஈற்றசை (கருத்து) நளன்பெண்கள்முகத்தில் நீர்த்தாரைதூவுதல் தாமரை மலரில் சூரியகிரணம்பாய்தல்போலும் என்பதாம். (யஉ)

விரைகமழ்சுண்ணமும்வீசுசாந்தமு...........*
மாசனுண்டெறிதலுமாற்றலாமையாற்........ *
குரைகடல்குளித்திடுமின்னிற்கோதைய .. .. *
ருரவுநீர்வாவியிலொளித்திட்டாரரோ.. ..... *

(இ-ள்) விரை-வாசனை—கமழ்-பரிமளியாநின்ற—சுண்ணமும்-கந்தப்பொடிகளையும்—வீசு-வாசனையைவீசாநின்ற- சாந்தமும்-சந்தனத்தையும்—அரசன்-நளமஹாராஜன்—ஆண்டு-அவ்விடத்தில்—எறிதலும்-வீசவும்—ஆற்றலாமையால்-பொறுக்கமாட்டாமையினால்—குரை-சத்தியாநின்ற—கடல்-சமூத்திரத்தில்—குளித்திடும்-மூழ்குகின்ற—மின்னில் - மின்னலைப்போல்—கோதையர்-மாதர்கள்—உரவு-விரிந்த—நீர்-சலத்தையுடைய-- வாவியில-தடாகத்தில்—ஒளித்திட்டார் - ஒளித்துக்கொண்டார்—(எ-று அரோ-அசை(கருத்து)நளன்கந்தபொடியையுஞ்சந்தனத்தையுமெறிதலுக்குச்சகியாமல்,பெண்கள்வாவியிலொளித்தார்கள் என்பதாம்(யங)

வாமமேகலையினார்வளர்ந்தவெம்முலை...... ...*
நேமியம்புள்ளெனநீருட்காட்டுவார்...........*
காமர்வாண்முகத்திணைகமலஞ்சேர்த்தித்தண் *
டாமரையெனமணித்தடத்தின்மூழ்குவார்... *

(இ-ள்) வாமம்-அழகுபொருந்திய—மேகலையினார்-மேகலாபரணத்தையுடையமாதர்கள்—வளர்ந்த-வளர்ந்த—வெம்-விருப்ப

துறைத்தராநின்ற—முலை-ஸ்தனங்களை—நேமியம்புள்ளென-சக்கி
ரவாகப்பக்ஷியென்று—நீருட்காட்டுவார்- சலத்துக்குள்ளேகாட்டு
வார்கள்—காமர்-அழகிய—வாள்-பிரகாசம்பொருந்திய—முகத்தி
னை-முகத்தை--கமலஞ்சேர்த்தி- தாமரைபுஷ்பத்துடனே சேர்த்து
—தண்-குளிர்ச்சிபொருந்திய--தாமரையென-தாமரைப்பூவென்
றுசொல்ல—மணி-முத்தையுடைய—தடத்தின்- தடாகத்தில்—மூ
ழ்குவார்- மூழ்குவார்கள்—(எ-று) (கருத்து) பெண்கள்முலைகளைச்
சக்கோரம்போலக்காட்டுவார்கள் முகத்தைத்தாமரையோடுசேர்த்
துமூழ்குவார்கள் என்பதாம். (௰௪)

தோற்றதன்பெரும்படைதுளங்கிறுமினி...... *
யாற்றலமெனமலரடியிற்சேர்தலுங்......... ...*
கோற்றொடியலங்கலங்குஸ்றன்ஞெடு... ... *
மேற்றனளெரிமணிச்சிவிறியேற்றியே... ......*

(இ-ள்) தோற்ற-தோற்றுப்போன—தன்- தன்னுடைய—பெ
ரும்படை-பெரியசேனைகள்—துளக்கிறும்-நடுங்கிறும்—இனி-
இனிமேல்—ஆற்றலமென-பொறுக்கமாட்டோமென்று-- மலரடி
யில்-தாமரைமலரினையொத்தபாதத்தில்—சேர்தலும்- அடையுமள
வில்—கோற்றொடி--தமயந்தியானவள்—அலங்கல்- மாலையணிந்த,
அம்-அழகிய—குன்றன்ஞெடும்-மலையையொத்தநளமஹாராஜ
னுடனே—எரி-பிரகாசியாநின்ற—மணி-இரத்நத்தாற்செய்த—சி
விறி-நீர்தூற்றுந்துருத்தியை—ஏந்தி-தாங்கி—ஏற்றனள்-எதிர்த்தா
ள்—(எ-று)(கருத்து)தமயந்திநீர்வீசுந்துருத்திகொண்டுநளனொடு
எதிர்த்தாள் என்பதாம். (௰௫)

ஓவியரெழுதருமுருவப்பூங்கொடி...... ... ...*
கோவைவார்மணிவடக்கொம்மைவெம்முலைத் *
தூவிநேர்முறுமெனச்சுடர்செய்பூணினு... ... *
ஞவியந்துகில்கரந்தமையத்தூவினன்... ......*

(இ-ள்) ஓவியர்- சித்திரகாரராலே—எழுதரும் எழுதுதற்கரிய
—உருவம்- வடிவத்தையுடைய—பூங்கொடி - தமயந்தியினது---
கோவை-கோத்திருக்கின்ற—வார் நீண்ட—மணிவடம்- முத்துமா
லையணிந்த—கொம்மை-இளமைபொருந்திய—வெம்- விருப்பத்
தைத்தருகின்ற—முலை- ஸ்தனங்களில்—தூவில் - நீரைத்தூவில்—
நோமுறுமென-வருந்துமென்று—சுடர்செய்-பிரகாசிக்கின்ற--
பூணினன்-ஆபரணத்தையுடையநளமஹாராஜன்—ஆவி- பாலாவி
யையொத்த—அம்-அழகிய—துகில்-வஸ்திரமானது—கரந்தமை
ய-மறையும்படி—தூவினன் - இறைத்தான்—(எ-று) (கருத்து)
நளன்தமயந்தியின்மேல்நீரிறைத்தான் என்பதாம். (௰௬)

அந்துகினனைதலினல்குறோன்றுதல்............ *
கந்தடுகளிற்றினான்காணவெள்குறாச்... ... ...*
சந்தச்சுண்ணநீர்முகத்திற்றாயவன்........ .. *
சந்தணிதடம்புயந்தழுவினாளரோ.. ..... ......*

(இ-ள்) அந்துகில்-அழகியவஸ்திரம் — நனைதலில்-நனைந்தவளவில் — அல்குல்-நிதம்பமானது — தோன்றுதல் - தோன்றுதலை — கந்தடு-கட்டுத்தறியைமுறிக்காநின்ற — களிற்றினான் - யானையையுடையநளன் — காண பார்க்க — வெள்குறா- வெட்கமுற்று — சந்தம்-அழகிய — சுண்ணநீர்- கந்தப்பொடிகலந்தநீரை — முகத்திற்றாய்-முகத்திலேயிறைத்து — அவன்-அவ்வரசனுடைய — சந்தணி-சந்தனமணிந்த — தடம்புயம்-பருத்ததோள்களை — தழுவினாள்-தழுவிக்கொண்டாள் — (எ-று) (கருத்து) சேலைநனைதலால் அல்குலை நளன் காணத் தமயந்திவெட்கப்பட்டு அவன்முகத்தில்நீரையிறைத்துப் புயத்தைத்தழுவினாள், எ-ம். (௱௭)

அலர்முலையம்மருங்ககறுநாமெனாக்....... .. .. *
கலுழ்வபோற்றண்டுளிகாலுமேகலை......... ...*
நிலவுமிழ்பூணினாணீக்கியேர்பெற...... ... ...*
விலகிவில்லுமிழ்கலைவீக்கினாளரோ..... .........*

(இ-ள்) அலர்முலை-தமயந்தியினது — அம்மருங்கு - அழகிய இடையை — அகறும்-நீங்குவோம் — நாமெனா-நாமென்று — கலுழ்வபோல்-அழுகின்றதுபோல் — தண்டுளி - தண்ணியதுளிகளை — காலும்-சொரியும் — மேகலை-மேகலாபரணத்தை — நிலவு-பிரகாசத்தை — உமிழ்-உமிழாநின்ற -- பூணினாள் - ஆபரணத்தையுடையதமயந்தி — நீக்கி-அகற்றி -- ஏர்பெற-அழகுபெற — விலகி- விட்டுவிட்டு — வில்-பிரகாசத்தை — உமிழ்-கக்காநின்ற — கலை-ஆடையை --- வீக்கினாள்-கட்டிக்கொண்டாள் — (எ-று) பூணினாள்மேகலைநீக்கிக்கலைவீக்கினாளெனக்கூட்டுக-(கருத்து) தமயந்திமேகலையைநீக்கி ஆடையுடுத்திக்கொண்டாள், எ-ம். (௱௮)

நகைநிலாத்தவழ்ந்தெனநானங்கோட்டிய......*
முகிழ்முலைமுன்றிலின்முத்தந்தாங்கினா.........*
ளகினறுந்தூமமென்குழலிலம்மலர்ச்... ... ...*
சிகழிகைவேய்ந்தனடிலகந்தீட்டினாள் ....!...... *

(இ-ள்) நகை-ஒளியையுடைய — நிலா-சந்திரிகை — தவழ்ந்தென-தவழ்ந்ததுபோல — நானங்கோட்டிய-கஸ்தூரியப்பிய -- முகிழ்-அரும்பையொத்த — முலைமுன்றிலில்-ஸ்தனப்பிரதேசத்தில் --- முத்தம்- முத்துவடத்தை — தாங்கினாள்- தரித்தாள் — அகில்-அகிலி

னுடைய—நறுந்தூமம்-நறியபுகையூட்டிய—மென்குழலில்-மெல்லியகூந்தலில்—அம்-அழகிய—மலர்ச்சிகழிகை- மலர்மாலையை, வேய்ந்தனள்-தரித்தாள்—திலகம்-திலதப்பொட்டை—தீட்டினுள் -எழுதினுள்—(எ-று) (கருத்து) தமயந்திமுத்துவடமணிந்தாள்-மாலைதரித்தாள் திலதமிட்டாள், எ-ம். (யகூ)

களிச்சுரும்பாரற்றுதார்க்காளைகாமநோய்...... *
தளிர்த்தெழமடமயிற்சாயறன்னொடுந் ...... *
துளிப்புயல்கண்படுசோலைநாட்பணூர்... ... *
பளிக்குமேனிலைமலர்ப்பள்ளிமேவினுன்... ... *

(இ-ள்) களி-களிப்பையுடைய—சுரும்பு-வண்டுகள்—அரற்றுதார்-சத்தியாநின்றமாலையையுடைய—காளை - நளமஹாராஜனவன்—காமநோய்-விரகநோயானது—தளிர்த்தெழ-அதிகரிக்க—மடமயிற்சாயறன்னொடும்- தமயந்தியுடனே—துளிப்புயல்-துளியையுடையமேகங்கள்—கண்படு-நித்திரைசெய்யாநின்ற—சோலைநாட்பண்-சோலைக்குமத்தியில்—ஓர்பளிக்குமேனிலை- ஒருபளிங்கினுற் செய்தமேலுப்பரிகையில்—மலர்ப்பள்ளி- புட்பசயனத்தில்—மேவினுன்-சேர்ந்தான்—(எ-று) (கருத்து)நளன்விரகமதிகரிக்கத் தமயந்தியுடன்சோலையிற்பளிங்குமேன்மாடத்துமலர்ப்பள்ளியுட்சேர்ந்தான், எ-ம். (உய)

அரிக்குரற்கிண்கிணிசிலம்பொடார்த்தன... ... *
புரிக்குழன்மலர்மழைபொழிந்துபொங்கிய ... *
வரிச்சிறைத்தும்பிபாட்டயர்ந்தமங்கைதன் ...*
திருக்கிளர்முலைநலஞ்செம்மலுண்ணவே... ...*

(இ-ள்) மங்கைதன்-தமயந்தியினது—திருக்கிளர்-அழகுமிகுந்த—முலைநலம்-ஸ்தனத்தினதின்பத்தை—செம்மல்- நளமஹாராஜன்—உண்ண-அனுபவியாநிற்க—அரி-தவளையினது—குரல்-குரலையொத்த—கிண்கிணி-சதங்கைகள்—சிலம்பொடு - சிலம்புடனே—ஆர்த்தன-ஆரவாரித்தன—புரி-கட்டுப்பட்ட—குழல்-கூந்தல்—மலர்மழை-புஷ்பவருஷித்தை--பொழிந்து-சொரிந்து--பொங்கிய-மிகுந்தன—வரி-நீண்ட—சிறை-இறகையுடைய—தும்பி-வண்டுகள்—பாட்டயர்ந்த - பாட்டைப்பாடின—(எ-று )(கருத்து) நளன்தமயந்தியையனுபவிக்கக் காலில்கிண்கிணிசிலம்புகள்சத்தித்தன-கூந்தலில்வண்டுகள்பாடின, எ-ம். (உக)

ஏந்திளவனமுலைசாடவீர்நறுஞ்... ...... ......*
சாந்துதிர்ந்தெதிரொழிறவழுமார்பினுன்...... *

பூந்துணர்பொதுளியபொதும்பர்நாப்பணோர் ✻
வாய்ந்தபூங்கொடியொடுமணந்துவைகினான். ௨௨

(இ-ள்) ஏந்து-ஏந்திய—இள-இளமையாகிய—வனமுலை-அழகிடலஸ்தனங்கள்—சாட-மோத—ஈர்-குளிர்ச்சியும்—நறும்- வாசனையும்பொருந்திய—சாந்துதிர்ந்து - சந்தனமழிந்து—எதிர்-நேராக—எழிறவழும்- அழகுபொருந்திய—மார்பினான் - மார்பையுடையநளன்—பூந்துணர்-பூங்கொத்துக்கள்—பொதுளிய-நெருங்கிய—பொதும்பர்-சோலையினுடைய—நாப்பண்-மத்தியத்தில்—ஓர்-ஒப்பற்ற—வாய்ந்த - தனக்குக்கிடைத்த—பூங்கொடியொடு-தமயந்தியினுடனே—மணந்து-கூடி—வைகினான்- இருந்தான்—(எ-று) (கருத்து) தமயந்தியுடன்கூடியிருந்தானென்பதாம். (௨௨)

புனல்விளையாட்டுப்படலம்-முற்றிற்று.

§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§§

# சூதாடுபடலம்.

இப்படலத்தால் குறைவின்றிய செல்வத்தை யனுபவிக்கும் நளன் விதிவழியால் அளவிறந்த துன்பமநுபவித்தற்குக்காரணமாகிய சூதாடல் சொல்லப்படுகின்றது.

(கலிநிலைத்துறை.)

வாம்பரித்தேரினானுமாழையொண்கண்ணினாளு ... ✻
மேம்பலோடினிதுபுல்லியிடைவிடாதொழுகுநாளி ✻
லாம்பலம்போதுகாட்டுமணிதிகழ்பவளச்செவ்வாய்க் ✻
காம்புறழ்தோளினாட்குக்கருப்பம்வந்துற்றதன்றே. ✻

(இ-ள்) வாம்-தாவாநின்ற,பரித்தேரினானும்-குதிரைகட்டியதேரையுடையநளமஹாராஜனும், மாழை-மாவடுவையொத்த—ஒள்-பிரகாசம்பொருந்திய— கண்ணினாளும்- கண்ணையுடையதமயந்தியும்,எம்பலோடு-அகமலர்ச்சியுடனே—இனிதுபுல்லி- இனிமையாகப்புல்லி,இடைவிடாது-நீங்காது,ஒழுகுநாளில் - நடக்குநாளிலே, ஆம்பலம்போது-செவ்வல்லிமலரை— காட்டும்-காட்டுகின்ற,அணிதிகழ் - அழகுபிரகாசியாநின்ற—பவளம்- பவளத்தையொத்த—செவ்வாய்-சிவந்தவாயையும்,காம்பு-மூங்கிலை—உறழ்-ஒத்த—தோளினாட்கு-தோளையுமுடையதமயந்திக்கு,கருப்பம்வந்துற்றது-கர்

ப்பமுண்டாயிற்று-- (எ-று) (கருத்து) தமயந்தி கருப்பமடைந்தாள் என்பதாம். (௧)

மெலியுநுண்மருங்குதோன்றவேயிளந்தோள்கடேம்ப.
நலனுறுசெய்யமேனிபாசொளிநரம்புகாட்ட... ...*
வலர்சுணங்கணிந்துவீங்கியழகுவீற்றிருந்தபொம்மன்.
முலைமுகங்கருகிச்செவ்விமுகமதிவிளர்த்ததன்றே...*

(இ-ள்) மெலியும்-வாடாநின்ற—நுண்-நுட்பமான—மருங்கு-இடையானது--தோன்ற-காண--வேய்-மூங்கிலையொத்த--இளம்-இளமையாகிய—தோள்கள்-தோள்கள்--தேம்ப-வாட--நலனுறு-நன்மைபொருந்திய--செய்யமேனி- சிவந்தவுடம்பு--பாசொளி-பசியவொளியையுடைய--நரம்புகாட்ட- நரம்புகளைத்தோற்றுவிக்க--அலர்-பரந்த--சுணங்கு-தேமலை--அணிந்து-தரித்து---வீங்கி-பருத்து--அழகுவீற்றிருந்த-அழகானதுதங்கியிருந்த--பொம்மல்-பொலிவுபொருந்திய--முலைமுகம்-ஸ்தனங்களின்முகங்கள்---கருகி-கறுத்து--செவ்வி-அழகையுடைய--முகமதி-முகமாகியசந்திரன்--விளர்த்தது-வெண்மையடைந்தது—(எ-று)அன்று-ஏ-அசைகள்'(கருத்து) தமயந்தியிடைதோன்ற தோள்கள்வாடப்பசிய நரம்புகாண முலைகருகிமுகம்வெளுத்தது என்பதாம். (௨)

குழைமுகங்கிழித்துநீண்டகொழுங்கடைமழைக்கட்பேதை.
பொழிகதிர்த்திங்கள்காட்டும்வலம்புரிவருந்திப்பொங்கி...*
யொழுகொளிநிலவுகாலுநித்திலமுயிர்த்ததென்ன.........*
மழகளிறனையதோற்றமாணிளங்குழவியீன்றாள்... ... ...*

(இ-ள்) குழைமுகம்-காதின்முகத்தை—கிழித்து - கிழித்து--நீண்ட-நீண்டிருக்கின்ற--செழும்-செழுமையாகிய--கடை-கடையையுடைய —மழைக்கண்-குளிர்ச்சிபொருந்தியகண்ணையுடைய-பேதை-தமயந்தியானவள்--பொழி-சொரியாநின்ற--கதிர்- கிரணங்களையுடைய—திங்கள்-சந்திரனை--காட்டும்- தோற்றுவிக்கும்---வலம்புரி-வலம்புரிச்சங்கமானது--வருந்தி-வருத்தமுற்று--பொங்கி-பிரகாசித்து--ஒழுகு-மிகுந்த--ஒளி-காந்தியையுடைய—நிலவு-சந்திரிகையை--காலும்-கக்காநின்ற--நித்திலம்-முத்தை-- உயிர்த்ததென்ன-பெற்றதுபோல--மழ-இளமைபொருந்திய--களிறனைய-யானையையொத்த--தோற்றம்-காட்சியையுடைய--மாண்- மாட்சிமையாகிய--இளங்குழவி-இளங்குழந்தையை--ஈன்றாள்-பெற்றாள். (எ-று) (கருத்து)தமயந்திஆண்பிள்ளைபெற்றாள் என்பதாம். (௩)

மழகளிறனையநம்பிபிறையெனவளருநாளிற்.....-.......*
கழைபுரைதோளிபின்றோர்கன்னியையுயிர்த்தாண்மக்கள்.*

குழலினுங்கனிந்தவந்தீங்குதலைகேட்டுருகிவெய்ய... ......*
முழைபுகுசீயமன்னானுவகையின்மூழ்கினானே............*

(இ-ள்) மழ-இளமைபொருந்திய — களிறனைய-யானையையொத்த — நம்பி-பிள்ளையானவன், பிறையென-மூன்றாம்பிறைபோல — வளருநாளில்-வளர்ந்துவருங்காலத்தில் — கழைபுரை-மூங்கிலையொத்த — தோளி-தோளையுடையதமயந்தி — பின்-பின்பு — ஓர்கன்னியை-ஒருபெண்ணை — உயிர்த்தாள்-பெற்றாள் — மக்கள்-இரண்டுகுழந்தைகளுடைய — குழலினும்-வேய்ங்குழலினும் — கனிந்த-கனிவாகிய — அம்-அழகிய — தீங்குதலை - தித்திப்புப்பொருந்திய மழலைச்சொல்லை — கேட்டுருகி-கேட்டுள்ளுருகி — வெய்ய-வெவ்வியதாகிய — முழை-குகையில் — புகும்-நுழையாநின்ற — சீயமன்னான் - சிங்கத்தையொத்தநளமஹாராஜன் — உவகையில்-சந்தோஷத்தில் — மூழ்கினான்-அழுந்தினான் (எ-று) (கருத்து) பிள்ளைவளர்ந்துவருங்காலையில் தமயந்தி பெண்பிள்ளையைப்பெற்றாள் என்பதாம். (௪)

நிழலுமிழ்ந்துதிரங்காலும்வைவாணிடதர்கோமா... ... *
னெழுபுவிவேந்தர்யாருமிடுதிறைகொணர்ந்தென்ஞான்றுந்
தொழுதனரேத்திநிற்பத்தொடுகடலுடுத்தஞால... ... ...*
முழுவதுமொருகோலோச்சிமுறைவழாதளித்தானன்றே. *

(இ-ள்) நிழல்-பிரகாசத்தை — உமிழ்ந்து-சொரிந்து — உதிரங்காலும்-இரத்தத்தைக்கக்கும் — வைவாள் - கூரியவாளையுடைய — நிடதர்கோமான்-நளமஹாராஜன் — எழுபுவி-சப்ததீவிலுமுள்ள — வேந்தர்யாரும்-அரசரெல்லாரும் — இடுதிறை-இடாநின்றகப்பங்களை — கொணர்ந்து-கொண்டுவந்து — என்ஞான்றும்-எந்நாளும் — தொழுதனர்-வணங்கினவராய் — ஏத்தி-துதித்து — நிற்ப - நிற்க — தொடு-தோண்டிய — கடலுடுத்த-சமுத்திரஞ்சூழ்ந்த — ஞாலமுழுவதும்-உலகமுழுமையும் — ஒருகோலோச்சி-ஒருசெங்கோலைச்செலுத்தி — முறைவழாது-கிரமந்தப்பாது — அளித்தான்-இரட்சித்துக்கொண்டுவந்தான் — (எ-று) அன்று-ஏ - அசை. (கருத்து) நளன் அரசர்திறைகொடுக்க உலகத்தையாண்டுவந்தான் என்பதாம். (௫)

கோவடுகுருதிவேலான்கொழுஞ்சுடர்பட்டகாலைச்.........*
சேவடிகழுவலின்றிச்செய்கடன்கழித்தனோக்கிக் ..........*
காவலற்சேருங்காலங்கருதுபுபன்னீராண்டு.............*
மேவருந்தான்றியுற்றவெங்கலிமேயினானே............*

(இ-ள்) கோ-(சத்துருக்களாகிய) ராஜாக்களை — அடு-கொல்லாநின்ற — குருதி-இரத்தந்தோய்ந்த — வேலான்-வேலாயுதத்தையுடையநளன் — கொழும்-செழித்த — சுடர்-சூரியன் — பட்டகாலை-

அஸ்தமித்தபொழுது—சேவடி-சிவந்தபாதங்களை—கழுவலின்றி-கழுவாமல்—செய்கடன்-செய்யத்தக்கநித்தியகருமத்தை--கழித்த ஞெக்கி-செய்துமுடித்ததலைப்பார்த்து—காவலன்-அரசனை—சேருங்காலம்-அடையுங்காலம் (ஏதுவென்று)—கருதுபு-நினைத்து—பன்னீராண்டு-பன்னிரண்டுவருஷம்—மேவரும்- அடைதற்கரிய—தான்றியுற்ற-தான்றிமரத்தின்கண்ணிருந்த—வெங்கலி - வெவ்விய கலியன்—மேயினான்-சேர்ந்தான்—(எ-று)(கருத்து) நளன்திருவடிகழுவாது செய்கருமத்தைக்கண்டு தான்றி மரத்திலிருந்த சனிபகவான் அந்நளனைச்சேர்ந்தான் என்பதாம். (௬)

கலிவிருத்தம்.

விட்புலத்தரசருமேனைவேந்தரும்...... .. - ...*
வட்கவிம்மன்னவன்மல்லன்மார்பகம்......... *
பெட்புறுமடந்தையைப்பிரிப்பன்யானெனப் *
புட்கரன்பாற்கலிபோயினானரோ..... ....... ௲

(இ-ள்) விட்புலத்து-தெய்வலோகத்திலிருக்கும்—அரசரும்-இந்திராதிதேவரும்—ஏனைவேந்தரும்-பூலோகத்தரசரும்—வட்க-நாணமடைய—இம்மன்னவன் - இந்தநளனுடைய—மல்லல்-வலிமைபொருந்திய—மார்பகம்-மார்பினிடத்தை—பெட்புறும்-விரும்பும்—மடந்தையை-தமயந்தியை—பிரிப்பன்-பிரித்துவிடுவேன்—யானென-நானென்று—புட்கரன்பால்-புட்கரராஜனிடத்தில்—கலி-கலிபுருஷன்—போயினான்-போனான்—(எ-று)அரோ-அசை (கருத்து) சனிபகவான்நளனைவிட்டுத்தமயந்தியைப்பிரிப்பேனென்று புட்கரனிடத்திற்போனான் என்பதாம். (எ)

வருகலிபுட்கரன்வதனநோக்குறுக்... .........*
குலாகழனளனெனுங்கொற்றவேந்தனே .....*
பொருகுடைநீழலினுலகங்காத்திட.......... ..*
விருநிலக்கிழமைநீயிழந்ததென்கொலோ......*

(இ-ள்)வருகலி வந்தகலியனானவன்—புட்கரன்-புட்கரராஜனது—வதனம்-முகத்தை—நோக்குறு- பார்த்து—குலாகழல - சத்தியாதின்றவீரக்கழலையணிந்த—நளனெனும்- நளனென்றுசொல்லப்பட்ட—கொற்றம்-வெற்றியையுடைய—வேந்தனே- அரசனே, ஒருகுடைநீழலின்- ஏகச்சத்திராதிபதியாய்—உலகங்காத்திட- இவ்வுலகத்தைரக்ஷிக்க—இரு- பெருமைபொருந்திய—நிலக்கிழமை-அரசாட்சியை—நீ —இழந்தது- கைவிட்டது—என்கொலோ-யாதுகாரணமோ—(எ-று)(கருத்து) சனிபுட்கரனைப்பார்த்துஉலகெல்லாம் நளன்ஆள நீஅரசாட்சியிழந்த தெனனவென்றான், எ-ம்.

வாட்டிறல்வேந்தனைமடந்தைதன்னொடும்... ... *
காட்டிடைப்புகுத்திமண்காக்குமன்னருன் ... *
றாட்டுணைதொழநறுந்தாமநீண்முடி.........*
சூட்டுவனினக்கெனச்சொல்லினனரோ......... *

(இ-ள்) வாட்டிறல்-வாட்போரில்வெற்றியையுடைய---வேந்தனை-அரசனை---மடந்தைதன்னொடும்-மனைவியுடனே---காட்டிடைப்புகுத்தி-காட்டினிடத்திற்போகச்செய்து--மண்-உலகத்தை---காக்கும்-ரக்ஷிக்காநின்ற--மன்னர்-அரசர்கள்---உன்-உன்னுடைய,தாட்டுணை-உபயபாதங்களை--தொழ-வணங்க--நறும்-வாசனைபொருந்திய--தாமம்-மாலையணிந்த--நீண்முடி-நீண்டகிரீடத்தை--நினக்கு உனக்கு--சூட்டுவன்-தரிப்பேன்--என-என்று--சொல்லினன்-சொன்னான்---(எ-று) (கருத்து) நளனையுந் தமயந்தியையுங்காட்டிற்றுரத்தி உனக்குமுடிசூட்டுவேனென்றான் என்பதாம். (கூ)

சொல்லலுங்களிமகிழ்தூங்கிப்புட்கரன்..........*
கொல்லியவருதிறற்கூற்றமஞ்சுறு... ... ... ...*
மல்லமர்திண்புயமன்னர்மன்னனை... ...... ......*
வெல்லுமாறெங்ஙனம்விளம்புவாயென்றான்... *

(இ-ள்) சொல்லலும்-இப்படிச்சொன்னவளவில்---களிமகிழ்தூங்கி-மிகுந்தமகிழ்ச்சியடைந்து--புட்கரன்-புட்கராஜன்---கொல்லிய-கொல்ல---வரும்-வராநின்ற---திறல்-வெற்றியையுடைய---கூற்றும்-இயமனும்--அஞ்சுறும்-பயப்படும்படியாகிய--மல்லமர்-மற்போர்செய்கின்ற--திண்புயம்-திண்ணியபுயத்தையுடைய--மன்னர்மன்னனை-நளனை---வெல்லுமாறு-வெல்லுநெறி---எங்ஙனம்-எவ்விதம்---விளம்புவாயென்றான்-சொல்லென்றுசொன்னான்---(எ-று) (கருத்து) புட்கரன் நளனைவெல்லும்வழி சொல்லென்றான் என்பதாம். (ய)

எண்ணலையாதுநானிழைத்தவஞ்சனை ..........*
விண்ணவராயினும்விலக்கற்பாலரோ... . ...*
லண்ணலைச்சூதினாற்படுப்பலஞ்சனீ.............*
கண்ணுறும்யான்கொடுங்கலியென்றனரோ ... *

(இ-ள்) யாதும்எண்ணலை-எவ்வளவும் ஆலோசிக்கவேண்டாம், நானிழைத்த நான்செய்த---வஞ்சனை-கபடத்தை--விண்ணவராயினும்-தேவர்களாலும்--விலக்கற்பாலரோ-நீக்குந்தன்மையையுடையார்களோ---அண்ணலை-நளனை---சூதினாற்படுப்பன்-சூதினாற்செயிப்பேன்---நீ அஞ்சல்-நீ பயப்படவேண்டாம்---கண்ணுறும்-எதிரேவந்த--யான்-நானும்--கொடும்-கொடிய---வெங்கலியென்,

றான்-வெவ்வியகலியனென்றுசொன்னான்---(எ-று) (கருத்து) கலி நளனைச் சூதினால் வெல்லுவேனென்றான் என்பதாம். (யக)

முழையுறைகொடுவரியனையமொய்ம்பினா......*
னுழையினிற்போதுமென்றுரைத்தவெங்கலி *
மழவிடையுருக்கொடுநிற்பவண்சுட... ....... *
ரிழைகலழ்மார்பினானிவர்ந்துபோயினான்... .. *

(இ-ள்) முழை-குகையினிடத்தில்---உறை- இருக்கா நின்ற-கொடுவரியனைய-புலியையொத்த--மொய்ம்பினான் - வலியையுடைய நளமஹாராஜனது--உழையினில்- இடத்தில்---போதுமென்று-போவோமென்று--உரைத்து-சொல்லி---வெங்கலி - வெவ்வியகலியானவன்---மழவிடை- இளவேற்றின்---உருக்கொடு - உருவத்தைக்கொண்டு--- நிற்ப-நிற்க---வண்-வளப்பமாகிய---சுடர்-காந்தியையுடைய---இழைகலழ் ஆபரணமசையாநின்ற---மார்பினான் - மார்பையுடையபுஷ்கரராஜன்---இவர்ந்து- ஏறிக்கொண்டு---போயினான்-சென்றான்---(எ-று)(கருத்து) கலியிடபம்போலுருக்கொண்டு நிற்கப் புட்கரன் அதன்மேலேறிச்சென்றான் என்பதாம். (யஉ)

உரவுநீர்க்கருங்கடலுலகுகாவலன்...... .......*
கழல்பணிந்துதங்குறைகள்சாற்றுவா......*
னரசர்கண்டுயிலமைமுகிலினார்ப்புறு............*
முரசுகண்டுயில்கிலாவாயின்முன்னினான்... ...*

(இ-ள்) உரவுநீர்- விரிந்த நீரையுடைய---கருங்கடல்-கரியகடலாற்சூழப்பட்ட---உலகுகாவலன் - உலகுக்கரசனாகிய நளனது---கழல்பணிந்து-சத்திக்கின்ற வீரக்கழலையணிந்த பாதத்தைவணங்கி--தங்குறைகள்சாற்றுவான்-தமதுகுறைகளைச்சொல்வதற்கு, அரசர்-அரசர்கள்---கண்டுயில-(சமயங்கிடையாமல்)நித்திரைபண்ண---மைமுகிலின்-கறுத்தமேகத்தைப்போல--ஆர்ப்புறும் - சப்திக்கா நின்ற--முரசு- பேரிகையானது---கண்டுயில்கிலா- நித்திரைசெய்யாத---வாயில்-அரண்மனைவாசலில்--முன்னினான் - அடைந்தான்புஷ்கரராஜன்---(எ-று) (கருத்து) புட்கரன் நளன் அரண்மனைவாயிலிற்சென்றான் என்பதாம். (யங)

மன்னவற்கெம்வரவுரைத்திவாயிலோ... ... ...*
யென்னலுமாங்கவனெய்திக்கூறலும்... ... ... *
கொன்னவில்வேலினான்கொணர்கவென்றனன்... *
னன்னவன்வருகெனவவையினெய்தினான்......*

(இ-ள்) வாயிலோய்-வாயிற்காவலாளனே--மன்னவற்கு - நளமஹாராஜனுக்கு--எம்வரவுரைத்தி- எமதுவரவைச்சொல்லு---என்

னதும்-என்றுசொல்லலும்---ஆங்கவன் - அக்காவலாளன்---எய்திக் கூறலும் போய்ச்சொன்னவளவில்--சொன்னவில்- தொல்லுதலைச் செப்பாநின்ற--வேலினான்- வேலையுடையவரசன்--கொணர்கவென் றனன் - அழைத்துவாவென்றுசொன்னான்--அன்னவன்வருகென - அக்காவலாளனைவாவென்றுசொல்ல---அவையினெய்தினன் - சண்ட யிலவந்தான்புஷ்கரராஜன்---(எ-று) (கருத்து) புட்கரன் காவலாள னுக்குச்சொல்ல அவன்நளனுக்குச்சொல்லநளனழையென்றுசொ ல்லஅவனழைக்க இவன்வந்தான் எ-ம். (௰௪)

களைகணதாகியோர்கவிகைநீழலில்...... .. ...*
வளைகடலுலகெலாம்புரக்குமன்னவன்...... .. *
றளையவிழ்தாமரைத்தாளில்வீழ்ந்தெழு........*
மிளவலோடளவளாயிருக்குமெல்லையில்... ...*

(இ-ள்) களைகணதாகி-ஆதாரமாகி---ஓர்-ஒரு---கவிகை-வெ ண்கொற்றக்குடையினது---நீழலில்- நிழலிலிருந்து---வளைகடல்-ச முத்திரஞ்சூழ்ந்த--உலகெலாம்- பூவுலகமுழுவதும்---புரக்கும்-கா ப்பாற்றுகின்ற---மன்னவன்-நளமஹாராஜனுடைய-- தளையவிழ்- முறுககுகள்விரிந்த---தாமரை- தாமரைப்பூவையொத்த---தாளில்- பாதத்தில்---வீழ்ந்து-வணங்கி---எழும்- எழுகின்ற---இளவலோடு- இளையோனாகியபுஷ்கரராஜனுடனே---அளவளாய்- ஒருவர்க்கொரு வர்கலந்துபேசிக்கொண்டு--இருக்குமெல்லையில்- இருக்குஞ்சமய த்தில்---(எ-று) (கருத்து) நளனும் புட்கரனுங் கலந்திருக்குஞ்சம யத்தில்-இதுமுதலிரண்டுங்குளகம் என்பதாம். (௰௫)

கொல்சினவாகைவேற்குரிசின்மல்லலேற்... ...*
றெல்லுமிழ்மணிக்கொடியுயர்த்ததென்னென...*
வல்லடுசூதினிலேற்றமன்னனை................ ...*
வெல்கொடியீதெனவிளம்பினானரோ...... .....*

(இ-ள்) கொல்-கொல்லுகின்ற---சினம்- கோபத்தையுடைய ---வாகை-வெற்றிபொருந்திய---வேல்-வேலாயுதத்தையுடைய---கு ரிசில்-நளமஹாராஜனானவன்---மல்லல்-பலம்பொருந்திய---ஏற்று- ரிஷபத்தின்மேல்---எல்-பிரகாசத்தை---உமிழ்-கக்குகின்ற---மணி க்கொடி-அழகியகொடியை---உயர்த்தது-பிடித்தது--- என்னென- என்னவென்றுகேட்க---வல்-சொக்கட்டானால்---அடு- பொருகின்ற ---சூதினில்-சூதாட்டத்தில்---ஏற்றமன்னனை-எதிர்த்தவேந்தனை--- வெல-செயிக்கின்ற---கொடி- துவசம்---ஈதென- இதென்று--- விள ம்பினான்-சொன்னான்---(எ-று) (கருத்து) நளன் இடபத்தின்மேற்

கொடிபிடித்ததென்னவென்றுகேட்க-புட்கரன்சூதாட்டத்திலெதிர்த்தமன்னரை வெல்லுங்கொடியிதுவென்றான் என்பதாம். (௰௬)

சொல்லியவவ்வுரைகேட்டுத்தூமணிக் ..... ....*
கல்லெனப்பணைத்துயர்கலவைத்தோளினான் ... *
வெல்கொடியுயரியவிடலைசூதினில்... ........ ... *
வல்லையேலாடுதும்வருகென்றோதினான்.........*

(இ-ள்) சொல்லிய-சொன்ன---அவ்வுரை-அந்தவார்த்தை---கேட்டு-செவியிற்கேட்டு---தூ- பரிசுத்தமாகிய---மணி- இரத்நங்களையுடைய--கல்லென-மலையைப்போல--பணைத்து-பருத்து--உயர்-உயர்ந்த--கலவை - சந்தனமணிந்த---தோளினான்- தோள்களையுடையநளன்--வெல்கொடியுயரிய- வெல்லாநின்றகொடியைப்பிடித்த---விடலை-புஷ்கரனே--சூதில்-சூதாட்டத்தில்--நீவல்லையேல்- நீவல்லமையுடையவனானால்---ஆடுதும் - ஆடுவோம்---வருகென்றோதினான்-வாவென்றுசொன்னான்---(எ-று) (கருத்து) நளன்சூதாட்டத்தில் வல்வனியானால் ஆடுவோம்வாவென்றான் என்பதாம். (௰௭)

நஞ்சினிற்கொடியவன்புணர்ப்பினம்மிறை......*
வஞ்சகச்சூதினின்மனம்வைத்தானென...... ..*
வஞ்சினாமைச்சரவ்வரசர்கோமகன்.............*
செஞ்சரண்டொழுதிவைசெப்பன்மேயினார்... *

(இ-ள்) நஞ்சினில்- விஷத்தைப்பார்க்கினும்---கொடியவன்-பொல்லாதவனாகியபுஷ்கரனது----புணர்ப்பின்-சய்பந்தத்தினால்--நம்மிறை-நம்முடையவரசன்---வஞ்சகம்- கபடமாகிய--சூதினில்-சூதில்---மனம்வைத்தானென-சிந்தைவைத்தானென்று---அஞ்சினர்-பயந்தவராய்--அமைச்சர்-மந்திரிகள்--அவ்வரசர்கோமகன்-அந்தநளமஹாராஜனது--- செஞ்சரண்டொழுது - சிவந்தபாதங்களைவணங்கி--இவைசெப்பன்மேயினார் - இவைசொல்லத்தொடங்கினார்கள்--(எ-று) (கருத்து) மந்திரிகள் நளமஹாராஜனுக்குச்சொல்லத்தொடங்கினார்கள் என்பதாம். (௰௮)

சீலநற்றருமமெய்சிதைக்குந்தெண்டிரை.. ..*
வேலைசூழ்நிலக்கிழமைவீழ்த்திடும்.........*
மாலுறத்திடுங்கவறுடன்மன்னகேள்............*
கோலிழுக்கரசர்தங்கொள்கைத்தன்றுவே.......*

(இ-ள்) மன்னகேள்- அரசனேகேளும்---கவறுடல்-சூதாடலானது--சீலம்-ஒழுக்கத்தையும்---நற்றருமம்- நல்லதருமத்தையும்--மெய்- சத்தியத்தையும்---சிதைக்கும் - கெடுக்கும்---தெண்டிரை-தெள்ளியவலையையுடைய---வேலைசூழ்ந்து - கடலினாற்சூழப்பட்ட---இரு- பெருமைபொருந்திய--நிலக்கிழமை - அரசாட்சியை---வீழ்

திரியும் - தள்ளிவிடும்---மாறுறத்திரியும்- மயக்கஞ்செய்விக்கும்---கோலிழுக்காசர்தம்-கொடுங்கோலைச்செலுத்துகின்ற அரசர்களது---கொள்கைத்தென்ப - கோட்பாட்டையுடையதென்று (பெரியோர்கள் சொல்லுவார்கள்---(எ-று) (கருத்து) நல்லசக்கிரவர்த்தியே சூதாடுதல் ஒழுக்கத்தையும், தருமத்தையும், சத்தியத்தையும் கெடுக்கும், அரசாட்சியையுந் தள்ளும், மயக்கந்தரும், இது கொடுங்கோல் வேந்தர்செய்கை என்பார்கள் என்பதாம். (௰௯)

கள்ளுணவிரும்புதல்கழகஞ்சேர்தன்மா... ....*
லுள்ளுறப்பிறர்மனைநயத்தலொன்னலர்க்... .. *
கெள்ளருநாட்பினுளிரியல்செய்திடல்... ..... *
வள்ளியோயறநெறிவழுக்குமென்பவே ..... ...*

(இ-ள்) கள்ளுணவிரும்புதல்-மதுவைக்குடிக்கவிச்சித்தலும்---கழகஞ்சேர்தல்-சூதாடுமிடத்தைச்சேர்தலும்---மாலுள்ளுற உள்ளேமயக்கமடைய---பிறர்மனைநயத்தல் - பிறர்மனையாளைவிரும்புதலும்-- ஒன்னலர்க்கு-சத்துருக்களுக்கு---எள்ளரும்-இகழ்ச்சியில்லாத---நாட்பினில்-அமர்க்களத்திலே---இரியல்செய்திடல்- பின்னிட்டோடலும் (ஆகியஇவைகளால்)--வள்ளியோய்- வரையாதுகொடுக்குமரசனே---அறநெறி-அறத்தின்வழி---வழுக்குமென்ப - பிறழுமென்று (பெரியோர்கள்சொல்லுவார்கள்)---(எ-று) (கருத்து) அரசனே கள்ளையிச்சித்தல், சூதாடுமிடத்தைச்சேர்தல், பிறன்மனையாளையிச்சித்தல், யுத்தத்திலோடுதல், இவைதருமவழிக்கு இழுக்கென்பர்,எ-ம்- (௨௰)

ஐயநீயாடுதற்கமைந்தசூதுமற் .........*
றெய்துறுநல்குரவினுக்கிசைந்ததூதுவெம்... ...*
பொய்யினுக்கருந்துணைபுன்மைகீன்றதாய்... *
மெய்யினுக்குறுபகையென்பர்மேலையோர்... *

(இ-ள்) ஐய-ஐயனே--நீயாடுதற்கு-நீயாடுகிறதற்கு--அமைந்த-சம்பவித்த- சூது-சூதாட்டமானது---எய்துறுநல்குரவினுக்கு - தானேவருதற்குரியதரித்திரத்துக்கு--இசைந்ததூது--நல்லதூதாகும்---வெம்பொய்யினுக்கு- வெவ்விய பொய்க்கு---அருந்துணை- நல்லசகோதரமாகும்-- புன்மைக்கு - கீழ்த்தொழிலுக்கு--ஈன்றதாய்-பெற்றதாயாகும்--மெய்யினுக்கு-சத்தியத்துக்கு--உறுபகையென்பர் - மிகுந்தபகையென்றுசொல்லுவார்கள்--மேலையோர் - பெரியோர்கள்--(எ-று) (கருத்து) அரசனே சூதானது வறுமைக்குத்தூதும், பொய்க்குதவியும், இழிதொழிலுக்குத்தாயும், மெய்க்குப்பகையும், ஆகுமென்பார்கள் பெரியோர்கள்,எ-ம். (௨௧)

என்றுகசூதினையிகலிவென்றதூஉங்...... ........*
கள்ளமேற்கொடுவலைகரந்துவேட்டுவ.. .......*
ருள்ளுறவமைத்திடுமுணவையோர்கிலாப்... ... *
புள்ளினமருந்தினபோலுமென்பவே...... ....*

(இ-ள்) என்றுக-இகழக்கடவாய்--சூதினை-சூதாட்டத்தை---இகலி-பகைத்து--வென்றதூஉம்-செயித்ததும்---கள்ளம்-கபடத்தை---மேற்கொடு-மேற்கொண்டு--வலைகரந்து-வலையைமறைத்து--வேட்டுவர்-வேடர்கள்--உள்ளுறவமைத்திடுமுணவை-உள்ளேவைத்திருக்கிறஇரையை---ஓர்கிலா-அறியாத--புள்ளினம்-பறவைக்கூட்டங்கள்--அருந்தின-உண்டவை--போலும்-ஒக்கும்-- என்பவே-என்றுசொல்லுவார்கள்--- (எ-று) (கருத்து) அரசனைசூதாட்டத்தையிகழ்வீராக என்றார்கள் என்பதாம். (உஉ)

கலைக்கடல்கடந்துளார்கழறுங்கட்டுரை ... ...*
சிலைத்தழும்பிருந்ததோட்செம்மல்கேட்டுயி... *
ருலப்பினுமறுக்கிலேனுரைத்தவாய்மைநீர் ... *
விலக்குவதென்னெனவிளம்பினனரோ........*

(இ-ள்) கலைக்கடல்-அறுபத்துநாலுகலைகளாகிய சமுத்திரத்தை---கடந்துளார்-ஆராய்ந்தமந்திரிகள்---கழறும்-சொல்லுகிற---கட்டுரை-சொல்லை--சிலைத்தழும்பிருந்ததோட்செம்மல்-சிலையின்தழும்புபொருந்தியபுயத்தையுடையநளமஹாராஜன்---கேட்டு- கேட்டு---உயிருலப்பினும்-உயிரிறந்துவிட்டாலும்--உரைத்தவாய்மை-யான்சொன்னசொல்லை--மறுக்கிலேன்-தடுக்கமாட்டேன்---நீர்விலக்குவதென்னென- நீங்கள்விலக்குகிறதென்னென்று --- விளம்பினான்-சொன்னான்---(எ-று) (கருத்து) நளன்மந்திரிகளைவிலக்கவேண்டாமென்றான் எ-ம்- (உங)

மன்னவனியைந்தவைமறுக்கலானென....... ...*
வின்னலுற்றமைச்சராண்டிருப்பவெங்கலி......*
துன்னியதாலுமூழ்துரந்தவாற்றினு...... .. *
முன்னருஞ்சூதினின்முயல்கின்றனனரோ....... *

(இ-ள்) மன்னவன்-அரசன்--இயைந்தவை-சம்மதித்தவை--மறுக்கலானென-தடுக்கமாட்டேனென்று--இன்னலுற்று- வருத்தமடைந்து--- அமைச்சராண்டிருப்ப-மந்திரிகளவ்விடத்திலேயிருக்க--வெங்கலி துன்னியதாலும்-வெவ்வியகலிசேர்ந்ததினாலேயும்-ஊழ்-ஊழ்வினையானது--துரந்தவாற்றினும்-செலுத்துதலினாலும்--முன்னருஞ்சூதினில்- நினைத்தற்கரியசூதாட்டத்தில்---முயல்கின்றான்-முயற்சிபடுகின்றான்---(எ-று) (கருத்து) நளன்ஊழ்வினையின்படிசூதாடமுயற்சிசெய்கின்றான் என்பதாம். (உச)

நிழலுமிழ்வைவாளிடர்கோமக... ... ... ...*
னொழுகொளிப்பூணினை யொட்டம்யாதென ...*
மழவிடையதனையான்வைப்பனீயுமு............*
னெழுகடன்ஞாலமுமிலையகவென்றனன்... ...*

(இ-ள்) நிழல்-பிரகாசத்தை--உமிழ்-கக்காநின்ற--வைவாள்-கூரிய வாளையுடைய--இடர்கோமகன்-நளமஹாராஜனானவன்---ஒழுகொளிப்பூணினை-மிகுந்தபிரகாசம்பொருந்திய--- ஆபரணத்தையுடையபுஷ்கரனே--ஒட்டம்யாதென - பந்தயம்யாதென்றுகேட்க--மழவிடையதனை-எல்லுடைய இளமேவற்றை-யான்-நான்--வைப்பன்-பந்தயமாகவைப்பேன்--நீயும்-நீயும்--உன்னெழுகடல்ஞாலமும்-உனதுஎழுசமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையும்--இலையக-வைத்தற்குசம்மதி--என்றனன் - புஷ்கரன்சொன்னான்--(எ-று)(கருத்து) நளன் பந்தயம்யாதெனக்கேட்க நான் இடபத்தை வைக்கிறேன் நீ உலகத்தைவையென்றான் என்பதாம். (௨௫)

சூழ்வினைப்புணர்ப்பினாற்சொன்னவாறியைந்-- *
தாழ்கடற்புவிதொழுமரசனாடவெவ்...... ......*
காழ்மனக்கொடுங்கலிகவற்றின்வண்ணமாய் ...*
வீழ்தலும்புட்கரன்வென்றிட்டானரோ...... ..*

(இ-ள்) சூழ் சூழ்ந்த--வினை-ஊழ்வினையின்---புணர்ப்பினால் சம்பந்தத்தினால்--சொன்னவாறியைந்து-அவன்சொன்னபடிசம்மதித்து--ஆழ்-ஆழ்ந்த--கடற்புவிதொழும்-கடலாற்சூழப்பட்டவுலகம்வணங்கும்--அரசன்-நளமஹாராஜன்--ஆட-சூதாட--வெவ்-வெவ்விய--காழ்-வைரம்பொருந்திய--மனம்-மனத்தையுடைய---கொடுங்கலி-கொடியகலியானவன்--கவற்றின் வண்ணமாய்-சூதின்வடிவமாய்--வீழ்தலும்-புரளவும்--புட்கரன்-புட்கரராஜன் -- வென்றிட்டான்-செயித்தான்--(எ-று)(கருத்து) ஊழ்வினைப்படி நளனுடைப் புட்கரன்வென்றான் என்பதாம். (௨௬)

மழைகளிபுகர்முகக்களிறுதேர்பரி... ... ......*
யிழைகவழிளமுலைமகளிரீட்டிய.......... ... ...*
விழுநிதிக்குப்பைகள்வேலைசூழ்புவி...... ......*
முழுவதுந்தோற்றனன்முழவுத்தோளினான்... *

(இ-ள்) மழைகள்-கருமையுறுகின்ற--புகர்முகம் - புள்ளிபொருந்தியமுகத்தையுடைய--களிறு-யானையும்---தேர்- இரதமும் பரி-குதிரையும்--இழை-ஆபரணமானது--கவழ்-அசையாநின்ற--- இளம் - இளமைதங்கிய --- முலை - ஸ்தனங்களையுடைய --- மக

விர்-மாதர்களும்---கூட்டிய-சம்பாதித்த--விழு- மேன்மையாகிய--நிதிக் குப்பைகள்-திரவியக்கும்பலும்--வேலைசூழ் - சமுத்திரஞ்சூழ்ந்த--புவி-பூமியும்---முழுவதும் - ஆகியவனைத்தையும்--- முழவுத்தோளிஞன்-மத்தளத்தையொத்ததோளேயுடைய நளமஹாராஜன், தோற்றனன்-தோற்றுவிட்டான்---(எ-று)(கருத்து) நளன் யாவுந்தோற்றுப்போனன்,எ-ம். (உஎ)

அனைத்தையுந்தோற்றனையருவிபாய்கவுட்...... *
சினக்களிமால்களிறனையசீற்றத்தோய் .... ......*
மனத்திடைநினைக்குவதென்னைவல்லைநின்.... ... *
புனக்கொடிக்கியைந்தினிப்பொருதும்யாமென்முன்.

(இ-ள்) அனைத்தையும்-முழுமையும்---தோற்றனை- தோற்றுவிட்டாய்--அருவி-மதசலவருவியானது--பாய்- பாயாநின்ற -கவுள்-கபோலத்தையுடைய--சினம் - கோபம்பொருந்திய - -களி- செருக்கையுடைய--மால் - பெருமைபொருந்திய--களிறனைய- யானையையொத்த--சீற்றத்தோய்- கோபத்தையுடையநளனே--மனத்திடை-மனதினிடத்தில்--நினைக்குவதென்னை- ஆலோசிப்பதென்னை--வல்லை சீக்கிரத்தில்--நின்-உன்னுடைய--புனக்கொடிக்கு- மனையாளுக்கு -இயைந்து-பந்தயத்துக்கியைந்து--நாம் - இருவரும்--இனிப்பொருதும் - இனிஆடுவோம்---என்முன் - என்றுசொன்னன்--(எ-று)(கருத்து) புட்கரன்,நளனே, உன்மனையாளையும்வைத்தாடுகவென்முன்,எ-ம். (உஅ)

சூதாடுபடலம்-முற்றிற்று.

# நகர் நீங்குபடலம்.

இப்படலத்தாற் சூதிற்றோல்வியடைந்தநளன் தான்பழகிய அந்நகரத்திலுள்ளாரோடும்வழியனுப்பக்கூடிப்புறப்பதில்விழையாமல் அந்நகரைவிட்டு நீங்கல் சொல்லப்படுகின்றது.

(கலிவிருத்தம்.)

என்றலுமுறுவலித்திசைக்கலாதன...............*
வொன்றுநீயுரைத்திடலுலங்கொடோளிஞய்...*

வென்றநின்னகர்வயின்மேவலேனென்றே... ..... *
துன்றுகானகஞ்செலத்துணிதன்மேயினான்... *

(இ-ள்) என்றலும்-என்றுசொன்னவளவில் — மூறுவலித்து-சிரித்து--இசைக்கலாதன-சொல்லப்படாதவைகளை — நீயொன்றுமுரைத்திடல்-நீயொன்றுஞ்சொல்லாதே—உலங்கொடோளினாய்-திரண்டகல்லையொத்ததோளையுடையபுட்கரனே—வென்ற - செயித்த—நின்னகர்வயின்-உன்னூரினிடத்து—மேவலேனென்று-இருக்கமாட்டேனென்று—துன்று-நெருங்கிய—கானகஞ்செல-காட்டினிடத்திலேபோக—துணிதன்மேயினான்-நளமஹாராஜ னிச்சித்தான். (எ-று) (கருத்து) நளன்காட்டிற்செல்லத்துணிந்தான் என்பதாம்.

வாட்டிறன்மன்னவன்கமலவாண்முகம்... ....... *
மீட்டருமரசியலிழந்தபோதினும்................*
பாட்டளிக்கூந்தல்வேந்தவையிற்பைந்தொடை *
சூட்டியஞான்றினுந்துலங்குகின்றதே....... ....*.

(இ-ள்) வாள்-வாட்போரில்—திறல்-வல்லமையுடைய — மன்னவன்-நளமஹாராஜனது—கமலம்-தாமரைப்பூவையொத்த--வாள்-ஒளிபொருந்திய—முகம்-முகமானது—மீட்டரும்-சம்பாதிக்கற்கரிய—அரசியல்-அரசாட்சியை—இழந்தபோதினும்-இழந்தகாலத்திலும்—பாட்டு-இராகங்கள்பாடாநின்ற--அளி-வண்டுகள்மொய்க்கின்ற—கூந்தல்- அளகபாரத்தையுடைய தமயந்தியானவள்—வேந்தவையில்-இராஜசபையிலே—பைந்தொடை - பசியபூமாலையை—சூட்டியஞான்றினும் -சூட்டினநாளிற்பார்க்கிலும்— துலங்குகின்றது-பிரகாசிக்கின்றது—(எ-று) (கருத்து) நளன்முகமபொலிவையடைந்தது என்பதாம். (உ)

சாமரையிரட்டுநரடைப்பைதாங்குநர்.......... ...*
தீமுகத்துமிழும்வாளேந்திச்செல்குந ... ... ...*
ரேமுறயானையும்விலக்கியேந்தறுன்........ ....*
கோமகளினிதுறைகோயிலெய்தினான்... ... ... *

(இ-ள்) சாமரையிரட்டுநர்-சாமரை வீசுகிறவர்களையும்—அடைப்பைதாங்குநர்-தாம்பூலப்பையையேந்தப்பட்டவர்களையும்--தீ-அக்கினியை—முகத்து-தன்முகத்தில்— உமிழும்-கக்குகின்ற—வாள்-கத்தியை—ஏந்து-தாங்கி—செல்குநர் - உருகின்றவர்களையும்—ஏமுற-மயக்கமுற—யானையும்-மற்றவர்களையும்— விலககி-நீக்கி—ஏந்தறுன்-நளமஹாராஜன்—கோமகள்-தமயந்தி— இனிது-இனிமையாக—உறை-வாசம்பண்ணுகிற—கோயில் - அரண்மனையை—எய்தினான்-சேர்ந்தான்—(எ-று) (கருத்து) நளன் ஒன்றியா

சத் தமயந்தி யரண்மனைக்குப்போனான், என்பதாம். (௫)

கற்றையங்கவரியுங்கால்செய்வட்டமும்........*
கொற்றவெண்கவிகையுமின்றிக்கோதைவேலன்.. *
மற்றடந்தோளினான்வருதல்காண்டலும்........ *
உற்றதையென்கொலென்றுள்ளத்தெண்ணினாள் *

(இ-ள்) கற்றை-கொகுதியாயிராநின்ற — அம்-அழகிய — கவரியும்-சாமரையும் — கால்செய்வட்டமும்-சாந்தாற்றியும் — கொற்றவெண்கவிகையும்-வெண்கொற்றக்குடையும் — இன்றி இல்லாமல் — கோதைவேல்-மாலையணிந்தவேலையுடைய — மல்-வலிமைபொருந்திய — தடம்-பருத்த — தோளினன்-தோளையுடைய நளமஹாராஜன் — வருதல்காண்டலும்-வருதலைப்பார்த்தவளவில் — உற்றதை-இப்படிக்கு அரசன்வருவதை — என்கொல்- என்னகாரணமென்று — உள்ளத்தெண்ணினாள்-மனத்தில் ஆலோசித்தாள். — (எ-று) (கருத்து) தமயந்தி நளன்தனித்துவந்ததைக்கண்டாலோசித்தாள்-எ-ம்

எண்ணிவந்திறைஞ்சியவெழிற்கொம்பன்னவள் *
மண்ணியமதிநிகர்வதனநோக்குறாப்......... *
புண்ணுழைவேலெனப்புகுந்தயாவையும்...... *
நண்ணலர்க்கடந்தவேனம்பிகூறினான்...... ...*

(இ-ள்) எண்ணிவந்து-இப்படியாலோசித்தெதிர்வந்து — இறைஞ்சிய-வணங்கிய — எழில்-அழகுபொருந்திய — கொம்பன்னவள்-பூங்கொம்பையொத்ததமயந்தியினது — மண்ணிய- கழுவிய — மதிநிகர்-சந்திரனையொத்த — வதனம்-முகத்தை — நோக்குறா- பார்த்து — புண்-புண்ணினிடத்தில் — நுழை-நுழைகின்ற — வேலென வேலைப்போல — புகுந்தயாவையும்-தானடைந்தவைகளையெல்லாம் — நண்ணலர்-சத்துருக்களை — கடந்த-செயித்த — வேல் - வேலையுடைய — நம்பி-நளமஹாராஜன் — கூறினான்-சொன்னான் — (எ-று) (கருத்து) நளன்தமயந்திக்கு நடந்தவற்றைச்சொன்னான்-எ-ம்(று)

தாழ்தடக்கையினனின்னசாற்றலும்... .... ...*
வீழிவாய்மடமயில்வெய்துயிர்ப்பொடு.........*
மாழ்கினள்வருந்தினண்மழைக்கணீருகுத்.....*
தூழ்வலியிதுவெனவுள்ளந்தேறினாள்... ... ... *

(இ-ள்) தாழ்-முழங்கால்மட்டுநீண்ட — தடம்- விசாலமாகிய — கையினன்-கைகளையுடையநளமஹாராஜன் — இன்ன - இவைகளை — சாற்றலும்-சொன்னவளவில் — வீழி - வீழிக்கனியையொத்த — வாய்-அதரத்தையுடைய — மடமயில்-தமயந்தியானவள் — வெய்துயிர்ப்பொடும்-வெவ்வியபெருமூச்சுடனே — மாழ்கினள்-மயங்

கிறாள்—வருந்தினள்-வருத்தமுற்றாள்—மழைக்கண்-குளிர்ந்தகண்ணினின்றும்—நீருகுத்து-நீரைச்சொரிந்து—ஊழ் - ஊழ்வினையினது—வலி-வல்லமை—இதுவென-இதுவென்று— உள்ளந்தேறினாள்-மனந்தெளிந்தாள்—(எ-று) (கருத்து) தமயந்தி ஊழ்வினையென்றறிந்தாள், என்பதாம். (௬)

இந்திரசேனனென்றிசைக்கும்பேருடை ...... *
மைந்தனுமழலைவாய்க்கொடியுமாழ்குறு... ... *
துய்ந்திடக்கொண்டுபேரோசைபோயநின் ... *
றந்தைதன்வளநகர்சார்கவென்றனன் ... ... ...*

(இ-ள்) இந்திரசேனனென்று-இந்திரசேனனென்று— இசைக்கும்-சொல்லுகின்ற—பேருடை-நாமத்தையுடைய — மைந்தனும்-பிள்ளையும்—மழலை-மழலைச்சொற்பொருந்திய—வாய்-வாயையுடைய—கொடியும்-புதல்விநளாயினியும்—மாழ்குறுது-வருத்தமுறாது—உய்ந்திட-பிழைத்திருக்க—கொண்டு- உடன்கொண்டு—பேரோசைபோய-பெருங்கீர்த்தியையுடைய— நின்-உன்னுடைய-தந்தைதன்-தகப்பனுடைய—வளம்-வளப்பம்பொருந்திய— நகர்-பட்டணத்தை—சார்கவென்றனன்-அடையக்கடவையென்று நளமஹாராஜன்சொன்னான்--(எ-று) (கருத்து) நளன்பிள்ளைகளையழைத்துக்கொண்டு தமயந்தியைத் தன்பிதாவின்வீட்டிற்குப் போவென்றான் என்பதாம். (௭)

உயிர்நிகர்மக்களோடுலங்கொடோளினான்......*
செயிரறுதந்தைபாற்செல்கென்றோதலும் ... *
புயனறுங்கூந்தலாள்புண்ணினூடெரி ....... *
யயினுழைந்தாலெனவலமந்தேங்கினாள்........ *

(இ-ள்) உயிர்நிகர்-உயிரையொத்த— மக்களோடு-பிள்ளைகளுடனே—உலங்கொள்-திரண்டகல்லினழகைக்கொண்ட— தோளினான்-தோள்களையுடையநளமஹாராஜன்—செயிரறு- குற்றமற்ற—தந்தைபால்-தகப்பனிடத்தில்—செல்கென்றோதலும்-போகவென்றுசொல்லலும்—புயல்-மேகத்தையொத்த—நறும் - வாசனைபொருந்திய—கூந்தலாள்-அளகபாரத்தையுடைய தமயந்தியானவள்—புண்ணினூடு புண்ணினுள்—எரி-எரியாநின்ற—அயில் - வேலானது—நுழைந்தாலென-நுழைந்ததுபோல—அலமந்து- மனங்கலங்கி—ஏங்கினாள்-அழுதாள்—(எ-று) (கருத்து) தமயந்திமனங்கலங்கினாள் என்பதாம். (௮)

நெடியடுகானிடைத்தமியைநீங்கிப்போய்ப் ... *
படுபாலடவிமேற்பள்ளிகொள்ளவெங்...... ...*

கடிநகரடைந்துமெல்லணையிற்கண்படி ... ... *
லடியனேற்கிதனினுமறனுண்டாங்கொலோ ... *

(இ-ள்) நெடுபடு-சிள்வண்டுகளையுடைய—கானிடை-காட்டினிடத்தில்—தமியை-தனியாகியவென்னை—நீங்கிப்போய் விட்டுநீங்கிப்போய்—படு-உறுத்தாநின்ற—பரல்-பரற்கல்லுகளாகிய--அமளிமேல்-அணையின்மீது—பள்ளிகொள்ள-நீர் நித்திரைசெய்ய—வெம்-குரூரமாகிய—கடி-காவலையுடைய—நகர்-பட்டணத்தை—அடைந்து-சேர்ந்து—மெல்-மிருதுவாகிய—அணையில்- சயனத்தில்—கண்படில்-(நான்) நித்திரைசெய்யில்—அடியனேற்கு-அடியேனுக்கு—இதனினும்-இதைப்பார்க்கிலும்— அறனுண்டாங்கொல்-தருமமுண்டோ—(எ-று) (கருத்து) தமயந்தி நீகாட்டிற்போக நான்வீட்டிற்போகுதல் தருமமோ என்றாள் என்பதாம். (௯)

என்றவளுரைத்தலுமடங்கலேறனான் ... ... *
மென்றளிர்கவற்றிநின்மெல்லென்சீறடி .. ... *
கன்றவெம்பரல்படுகானினேகுதற் ... ... *
கொன்றுமேலெனதுயிருய்யுமோவென்றான்.. *

(இ-ள்) என்று-இப்படியென்று—அவள்- அத்தமயந்தியானவள்—உரைத்தலும்-சொன்னவளவில்--மடங்கலேறனான்-ஆண்சிங்கத்தையொத்தநளமஹாராஜன்—மென்றளிர்-மெல்லியதளிரை--கவற்றும்-வருந்தச்செய்யும்—நின்-உன்னுடைய--மெல்லென்-மிருதுவாகிய—சீறடி-சிற்றடிகள்—கன்ற-கன்றிப்போக—வெம்-குரூரமான—படுபரல்-மணிபருக்கைக்கல்லுண்டாகிய—கானின்-காட்டில்—ஏகுதற்கு-போகுதற்கு—ஒன்றுமேல்- பொருந்துமாகில்—எனதுயிர்-என்னுடையபிராணன்—உய்யுமோவென்றான் - பிழைக்குமோவென்றுசொன்னான்—(எ-று) (கருத்து) நளன்தமயந்தியே உன்னடிகாட்டில் நடக்க என்னுயிர்பிழையாதென்றான் என்பதாம்.

பொற்பினுக்குறையுளாம்பொன்னங்கொம்பனா *
யற்பினிற்பயந்தநம்மக்களாயிடை...... - .. ...*
யெற்பிரிந்துறைகுநரேனுமெங்கன...... ...... *
நிற்பிரிந்தாற்றுவர்நிகழ்த்துவாயென்றான்...... *

(இ-ள்) பொற்பினுக்கு-அழகிற்கு—உறையுளாம்- இருப்பிடமாகிய—பொன்னங்கொம்பனாய்- அழகுபொருந்திய பொற்கொம்பையொத்ததமயந்தியே—அற்பினில் - ஆசையினாலே—பயந்த-பெற்ற--நம்மக்கள்-நம்முடையபிள்ளைகள்--ஆயிடை- அந்தவீமன்வீட்டில்- எற்பிரிந்து-என்னைவிட்டுநீங்கி—உறைகுநரேனும்-இருப்பாராயினும் எங்கனம்-எத்தன்மையாய்--நிற்பிரிந்து- உன்னைவிட்

டுநீக்கி—ஆற்றுவர்-பொறுத்திருப்பார்கள்—நிகழ்த்துவாயென்றான்-சொல்லென்றுசொன்னான்—(எ-று) மக்கட்குத் தந்தையினுந் தாயரதிகமென்பதாம்-(கருத்து) தமயந்தியே பிள்ளைகளென்னைவிட்டிருந்தாலும் உன்னைவிட்டிடார்கள் என்பதாம். (௰௧)

கூற்றுறழ்குருதிவேற் குரிசின்மக்கடா
ஆற்றினு மாற்றலாதஞரின்மூழ்கினும்
மாற்றருங்கற்பினார்மகிழ்நர்கான்செல
வேற்றுநாடுறைவதுவிழுமிதோவென்றாள்

(இ-ள்) கூற்றுறழ்-இயமனையொத்த--குருதி-உதிரந்தோய்ந்த--வேல்-வேலாயுதத்தையுடைய--குரிசில்-அரசனே--மக்கள் - பிள்ளைகள்--ஆற்றினும்-பொறுத்தாலும்---ஆற்றலாது - பொறுக்காமல்--அஞரில-துக்கத்தில்---மூழ்கினும்- மூழ்கினாலும்-- மாற்றரும்-பிறரால்கெடுத்தற்கரிய--கற்பினார்-பதிவிரதா தருமத்தையுடைய பெண்கள்--மகிழ்நர் - புருஷர்கள்---கான்செல - காட்டிற்போக-- வேற்றுநாடுறைவது-வேறுதேசத்திற்போயிருப்பது--விழுமிதோவென்றாள் - மேன்மையுடையதோவென்று தமயந்திசொன்னாள்-- —(எ-று) (கருத்து) கற்புள்ளபெண்கள் நாயகனைவிட்டிருத்தல் சிறப்பல்லவென்றாள் என்பதாம். (௰௨)

விரிகடலமிழ்தமும்வேலைஞாலமுஞ்
செருமுகத்தழலுமிழ்சிறுகண்யானையு
மெரிமணிக்குப்பையுமெளிதினெய்தலா
மருமகப்பெறுதன்மற்றரியதென்பவே

(இ-ள்) விரி-பரந்த—கடல்-திருப்பாற்கடலிலுண்டாகிய—அமிழ்தமும் - தேவாமிர்தத்தையும்--வேலை- சமுத்திரஞ்சூழ்ந்த---ஞாலமும்-பூமியையும்--செருமுகத்து - யுத்தத்தினிடத்திலே---அழலுமிழ்-நெருப்பையுமிழ்கின்ற--சிறுகண்யானையும்- சிறியகண்களையுடையயானைகளையும்--எரி - பிரகாசிக்கின்ற-- மணிக்குப்பையும்-இரத்தினக்குப்பைகளையும்--எளிதினெய்தலாம்-எளிதிலேயடையலாம்--அருமகப்பெறுதல்-அரியபிள்ளைகளைப்பெறுதல் -- அரியதென்ப-அரியதென்றுசொல்வார் பெரியோர்கள்—(எ-று) மற்று-ஏ-அசைகள். (கருத்து) எல்லாஞ்சம்பாதிக்கலாம் பிள்ளைகளைச்சம்பாதித்தலரிதென்றான் என்பதாம். (௰௩)

விம்மியின்னுழைமருங்கொசியவீங்கிய
கொம்மைவெம்முலையினல்குதலைமென்மொழிச்
செம்மையவருமகப்பெறுததீமையோர்க்
கிம்மையுமறுமையுமின்பமில்லையால்

(இ-ள்) விம்மி-பருத்து--மின்-மின்னலையொத்த— நுழை-நுட்பமாகிய--மருங்கு-இடையானது--ஒசிய - ஒடிந்துபோகும்படி—வீங்கிய-பூரித்த--கொம்மை இளமைபொருந்திய—வெம் - விருப்பத்தைச்செய்கின்ற—முலையினாய்-ஸ்தனங்களையுடைய தமயந்தியே--குதலை மழலையாகிய--மென்மொழி-மிருதுவாகியசொல்லையும்—செம்மைய-நல்லகுணத்தையுமுடைய--அருமக - அரியபிள்ளைகளை—பெறாத-பெற்றுக்கொள்ளாத--தீமையோர்க்கு- குற்றத்தையுடையோர்க்கு--இம்மையும்-இப்பிறப்பிலும்—மறுமையும்-மறுபிறப்பிலும்--இன்பமில்லை-சுகமில்லை—(எ-று) ஆல்-அசை-(கருத்து) தற்பிள்ளைகளைப்பெறாதார்க்கு இருபிறப்பிலுமின்பமில்லை-என்பதாம். (௰௪)

என்னலும்வணரிருங்கூந்தலேந்திழை... ......*
மன்னவமழலைவாய்மக்கடம்மொடு... ... ......*
மின்னுகுபரிதிவேல்வீமன்மாநகர்.. ...........*
துன்னுதும்யாமெனச்சொல்லினளரோ ... ...*

(இ-ள்) என்னலும்-இப்படியென்று அரசன்சொல்லவும்—வணர்-வளைந்த—இரும-பெரிதாகிய--கூந்தல்-அளகபாரத்தையுடைய—ஏந்திழை-தமயந்தியானவள்—மன்னவ-அரசனே—நம்- நம்முடைய—மழலைவாய்-மழலைச்சொல்பொருந்தியவாயையுடைய—மக்கடம்மொடும்-பிள்ளைகளுடனே—யாம்-நாமிருவரும்--மின்னுகு-மின்னலைப்பழிக்கின்ற—பரிதி-சூரியனையொத்த—வேல்-வேலாயுதத்தையுடைய—வீமன்-வீமராஜனுடைய—மாநகர்- பெரியநகரில—துன்னுதும்-சேர்வோம்--யாம்-நாம்--என-என்று--சொல்லினள்-சொன்னாள்—(எ-று) (கருத்து) தமயந்தி,நளனைத்தன்தகப்பன்வீட்டுக்குவாவென்றாள், எ-ம். (௰௫)

கோற்றொடிசெல்வர்பாற்குறையிரந்துநின் ...*
றேற்றயின்றுயிர்சுமந்திருத்தலீறிலா... ... ...*
வாற்றலுமானமுமறிவுங்கல்வியு... ... .........*
மாற்றருஞ்சீர்த்தியுமாற்றுமென்பவே... ... ..*

(இ-ள்) கோற்றொடி-தமயந்தியே— செல்வர்பால் - செல்வத்தையுடையவர்களிடத்தில்—குறைஇரந்துநின்று-குறையைச்சொல்லியிரந்துநின்று--ஏற்று-வாங்கி--அயின்று-உண்டு---உயிர்சுமந்திருத்தல்-உயிரைத்தாங்கியிருத்தலானது--ஈறிலா-முடிவில்லாத-ஆற்றலும்--வலியையும்-மானமும்—அபிமானத்தையும்---அறிவு- அறிவையும்--கல்வியும்-வித்தையையும்--மாற்றரும்-நீக்கப்படாத—சீர்த்தியும்-கீர்த்தியையும்--மாற்றுமென்ப - போக்குமென்று பெரி

யோர்சொல்வார்கள்—(எ-று) (கருத்து) நளன், இரந்துண்டலிழி வென்றான் என்பதாம். (௰௬)

மிக்கவெஞ்சமத்திடைவெருவியோடின .... ஜ
ஒக்கலுந்துன்புறத்தனியுலகில்வாழுநர்... ... ...*
புக்குவேட்டகத்தினிதுண்ணும்புன்மையோர்...*
மக்களுட்பதடியென்றுரைக்கும்வையமே... ...*

(இ-ள்) மிக்க-அதிகரித்த--வெஞ்சமத்திடை-வெவ்வியயுத்தத்தினிடத்தில்--வெருவியோடினர்-பயந்தோடினவர்களும்--ஒக்கல்-சுற்றத்தார்--துன்புற-வருத்தமடைய--தனி-தனித்திருந்து--உலகில் உலகத்தில்--வாழுநர்-செல்வத்துடன்வாழ்கின்றவர்களும்--- புக்கு-போய்--வேட்டகத்தினில்-மாமனார்வீட்டில்--உண்ணுய்-புசிக்கின்ற—புன்மையோர்-கீழ்மக்களும்--மக்களுள்-மனிதருக்குள்---பதடியென்று-பதரொன்று--வையம்-உலகம் -- உரைக்கும்-சொல்லும்—(எ-று) (கருத்து) போரிலோடினவர் இனம் வருத்தமுறவாழ்பவர் மாமனார்வீட்டிலுண்பவர், கீழோர் இவர்கள் மக்கட்பதரெனப்படுவரென்றான் என்பதாம். (௰௭)

என்றலுந்திருவுளமின்னதாகுமேல்... ... ... ...*
மன்றலந்தெரியலாய்மக்கடம்மைநம்... .. ...*
மின்றிகழ்மானவேல்விதர்ப்பன்மாநகர்.........*
சென்றிடப்பணித்தருளென்றுசெப்பினாள் ... *

(இ-ள் என்றலும்-இப்படியென்று அரசன்சொன்னவளவில்—திருவுளம்-உம்முடையசித்தம்--இன்னதாகுமேல் - இத்தன்மையதாகுமானால்--மன்றல்-வாசனைபொருந்திய--அம்-அழகிய--தெரியலாய்-மாலையையுடையஅரசனே--மக்கடம்மை-பிள்ளைகளை--நம் நம்முடைய---மின்றிகழ்-மின்போலுப்பிரகாசிக்கின்ற--- மான[illegible]-பெருமைபொருந்திய--வேல்-வேலாயுதத்தையுடைய--விதர்ப்பன் வீமராஜனுடைய--மாநகர்-பெரியநகரத்தில்--சென்றிட- போக--பணித்தருள்-உத்தரவுகொடு--என்று-இப்படியென்று--- செப்பினாள்-தமயந்திசொன்னாள்—(எ-று) (கருத்து) தமயந்திபிள்ளைகளைத் தன்தகப்பன்வீட்டிற்கனுப்பிவிடென்றாள் என்பதாம். (௰௮)

தண்டலில்பாகனைநோக்கித்தாதுசேர் .... ... ...ஜ
வண்டிமிர்தெரியலான்வருந்திமக்களை...... ...ஜ
விண்டொடுபுரிசைசூழ்விதர்ப்பன்றன்னுழை.. *
கொண்டனைபோகெனக்கூறினானரோ... .. ...*

(இ-ள்) தண்டலில்-நீங்குதலில்லாத--பாகனை-தேர்ப்பாகனை--நோக்கி-பார்த்து--தாதுசேர்-மகரந்தஞ்சேர்ந்த--வண்டிமிர்-வண்

கேள்சப்தியாநின்ற--தெரியலான்- மாலையையணிந்தநளமஹாராஜன்—வருந்தி-வருத்தமுற்று—மக்களை பிள்ளைகளை---விண்டொடு-மேகத்தையளாவநின்ற---புரிசைசூழ்-மதில்சூழ்ந்த -- விதர்ப்பன்றன்னுழை-வீமராஜனிடத்தில்---கொண்டனைபோகென - கொண்டு போவென்று—கூறினான்-உத்தரவுகொடுத்தான்—(எ-று) அரோ-அசை. (கருத்து) நளன், தேர்ப்பாகனைப்பார்த்துப் பிள்ளைகளையழைத்துக்கொண்டு வீமராஜனிடத்திற்போவென்றான், எ-ம். (௰௯)

தழுவியதாதைதன்முகமுந்தாயர்த..........*
முழுமதியனையவாண்முகமுநோக்குறு... ...*
விழிவழிநீருகவிம்மிவிம்மிநின் ........ ......*
றழுதனர்கண்டுளோரலக்கணெய்தவே . .... *

(இ-ள்) தழுவிய-தங்களைத்தழுவிக்கொண்ட—தாதைதன்முகமும்-தகப்பனுடையமுகத்தையும்—தாயர்தம்-தாயாரினுடைய-முழுமதியனைய-பூரணசந்திரனையொத்த--வாண்முகமும்-ஒளிபொருந்தியமுகத்தையும்—நோக்குறு-பார்த்து—விழிவழி-கண்ணின்வழியிலே-- நீருக-நீர்சிந்த- விம்மிவிம்மிநின்று- தேம்பித்தேம்பிநின்று—கண்டுளோர் பார்த்தவர்கள்---அலக்கணெய்த- துன்பமுறும்படி--அழுதனர்-அழுதார்கள்—(எ-று) (கருத்து) பிள்ளைகள், தாய்தகப்பனைப்பார்த்து அழுதார்கள் என்பதாம். (௨௰)

அலமருமக்கடமாகமெங்கணு.................*
முலைவழியொழுகுபாலனைப்பமோந்துவாய் ...*
புலர்தரப்பற்பல்காற்புல்லிக்கொண்டுகண் ... *
கலுழ்தருபுனலினாற்கழுவினாளரோ.......... ...*

(இ-ள்) அலமரு-மனங்கலங்காநின்ற—மக்கடம்- பிள்ளைகளுடைய—ஆகமெங்கணும்-சரீரமுழுமையும்—முலைவழி- முலையின்வழியால்—ஒழுகு-ஒழுகாநின்ற—பால்-பாலானது—நனைப்ப - நனைக்கும்படி—மோந்து உச்சிமோந்து--வாய்புலர்தர- வாயுலர—பற்பல்கால்-அனந்தந்தரம்—புல்லிக்கொண்டு-தழுவிக்கொண்டு—கண்கலுழ்தரு- கண்ணினின்றொழுகாநின்ற--புனலினால்-சலத்தினால்—கழுவினாள்-கழுவினாள்—(எ-று) அரோ-அசை (கருத்து) தமயந்தி,பிள்ளைகளைக்கண்ணீராற்கழுவினாளென்பதாம். (௨௧)

மடவரறன்னையுமதலைவேத்தையும்... ... ...*
படுதுயரொழிகெனவாற்றிப்பாகனுங்... .....*
குடனுயிர்பிரித்தெனவுவகைமக்களைக்...... ..*
கொடிநெடுந்தேர்மிசைக்கொண்டுபோயினான்..*

(இ-ள்)மடவரறன்னையும்-தமயந்தியையும்--மதலை-வலிமைய

யுடைய-வேற்றுமையும் நளனையம்--படு-உண்டாகாநின்ற-துயரொ
ழிகென-துக்கநீக்கக்கடவீரென்று--ஆற்றி-தணித்து, பாகன்-தேர்
ப்பாகன்—ஆங்கு-அவ்விடத்தினின்றும் — உடலுயிர்பிரித்தென-
உடலையுமுயிரையும் வேறுபிரித்ததுபோல்— உவகைமக்களை - சந்
தோஷித்தைச்செய்யும்பிள்ளைகளை—கொடி- கொடியையுடைய—
நெடுந்தேர்மிசை-நெடியதேரின்மீது--கொண்டு-ஏற்றிக்கொண்டு
—போயினான்-சென்றான்—(எ-று) (கருத்து) பாகன், பிள்ளைகளை
த்தேர்மேற்கொண்டுபோனான் என்பதாம். (உஉ)

மிகைப்படுதுன்பமும்விழையுமின்பமு........*
மகத்திடைநிகரெனநோக்குமையனும்... .. *
தகைப்பருந்துயரொடுதளர்ந்துசாம்புமேன் ...*
மகட்பிரிவினுந்துயர்வலிதியாவதே...... ..... *

(இ-ள்) மிகைப்படு-அதிகரித்த--துன்பமும்-துயரத்தையும்--விழையும்-இச்சிக்கப்பட்ட—இன்பமும்-இன்பத்தையும்---அகத்திடை-மனதில்--நிகரென-ஒப்பாக--நோக்கும்-பார்க்கின்ற-- ஐயனும்-நளனும்--தகைப்பரும்-தடுத்தற்கரிய--துயரொடு - துன்பத்துடன்--தளர்ந்து-வருந்தி—சாம்புமேல-சோர்வானேயானால்--- மகட்பிரிவினும்-மக்கட்பிரிவிலும்--துயர்-துயரில்--வலிது - வலிமையுடையது--யாவது-(எது)ஒன்றுமில்லை-- எ-று) (கருத்து) பிள்ளைகளைப்பிரிதலைவிடத் துன்பமில்லை என்பதாம். (உங)

சிலதியர்பரப்பியதேங்கொண்மெல்லிதழ்...... *
மலர்மிசைமிதிப்பினும்வருந்துசீறடி... ...... *
நிலமிசைப்படுபரலுறைப்பநேரிழை...... .... *
புலவுவேற்காளைபின்றொடர்ந்துபோயினாள் ... *

(இ-ள்) சிலதியர்-தோழிகள்--பரப்பிய-பரவச்செய்த--தேங்கொள்-வாசனைகொண்ட--மெல்லிதழ் மெல்லியவிதழையுடைய—மலர்மிசை- புஷ்பத்தின்மீது--மிதிப்பினும்- அடிவைத்தாலும்--வருந்து-வருந்துகின்ற--சீறடி - சிறியபாதங்களில—நிலமிசை-பூமியின்மீது--படு-உண்டாகிய--பரல்-பருக்கைகள்--உறைப்ப-உறுத்தும்படி—நேரிழை- தமயந்தியானவள்--புலவுவேல் - புலானாற்றத்தையுடையவேலையேந்திய—காளை-நளனது-பின்றொடர்ந்து-பின்னேதொடர்ந்து- போயினாள்-சென்றாள்---(எ-று) (கருத்து) தமயந்தி, நளன்பின்னேபோனாள் என்பதாம். (உச)

மடவாறன்றெனப துலகைவேந்தனைக்...... ..... *
கடிமுரசறுதகோமறுகிற்கண்டலு... .. ......*

மிடியுறுமரவெனவேங்கியேங்கிநின்.......... ...*
றுடல்வெறுத்துயிருகவுழல்கின்றூர்சிலர்.. ......*

(இ-ள்) மடவார்றன்ஞெடு - தமயந்தியுடன்-- மதுகைவேந்தனை-வலியையுடையநளனை--கடி-சிறந்த--முரசு - பேரிகையின்ஞெலி--அறுத - நீங்காத--கோமறுகில் - அரசர்வீதியில்--காண்டலும்-பார்த்தவளவில்--இடியுறு - மேகத்தின்ஞெலியைக்கேட்ட---அரவென-சர்ப்பத்தைப்போல--ஏங்கியேங்கி-மிகவுமேக்கமுற்று--நின்று-திகைத்துநின்று-உடல்வெறுத்து - தேகத்தைவெறுத்து-- உயிருக-உயிர்நீங்கும்படி--சிலருழல்கின்றூர் - சிலருழல்கின்றனர்---(எ-று) (கருத்து) கண்டவர்வருந்தினர் என்பதாம். (உரு)

மண்ணியமணிவரையனையமார்பிஞன்...... ...*
பெண்ணலங்கனிந்தவிப்பேதைதன்ஞெடு... ...*
நண்ணருங்கானிடைநடத்தல்காணவோ. ......*
கண்ணிணைபடைத்தனன்கமலத்தோனென்பார் *

(இ-ள்) மண்ணிய-கழுவிய--மணிவரை-அரதநமலையை---அனைய-ஒத்த--மார்பிஞன்-மார்பினையுடைய நளமஹாராஜன் -- பெண்ணலங்கனிந்த-பெண்டன்மைமுதிர்ந்த---இப்பேதை தன்ஞெடும்-இத்தமயந்தியுடனே--நண்ணரும்-போகப்படாத---கானிடை-காட்டினிடத்தில்--நடத்தல்காணவோ- போதலைப்பார்க்கவோ---கமலத்தோன்-பிரமன்---கண்ணிணை- இரண்டுநேத்திரங்களை--படைத்தனன்-(எங்களுக்கு) அமைத்தனன்--என்பார்-என்று (சிலர்)சொல்லுவார்கள்-- (எ-று) (கருத்து) சிலர் இந்தத்துன்பத்தைக்காணவோ பிரமன்கண்ணைப்படைத்தான் என்பதாம். (உசா)

மல்லடுதிணிபுயமன்னர்மன்னவ............ ... *
னெல்லையிறுயருழந்தேகக்காண்டலு..... ..... *
மொல்லையில்வெடித்துயிரொழிந்ததில்லையாற்...*
கல்லினும்வலியதோகவலுநெஞ்சென்பார்......*

(இ-ள்) மல்-மல்லர்களை--அடு-கொல்லாநின்ற--திணி- பலம்பொருந்திய--புயம்-புயத்தையுடைய---மன்னர்மன்னவன் - அரசர்க்கரசஞகிய நளன்--எல்லையில்-அளவில்லாத---துயருழந்து- துன்பமுற்று--ஏக-போக---காண்டலும்-பார்க்கவும்--ஒல்லையில்- சீக்கிரத்தில்--வெடித்து-மார்புவெடித்து--- உயிர்-பிராணஞனது---ஒழிந்ததில்லை- நீங்கியதில்லை (ஆதலால்)--கல்லினும்-கல்லைப்பார்க்கினும்--வலியதோ-வலிமையுடையதா--கவலும்-துன்பப்படும்---நெஞ்சு-மனமானது--என்பார்- என்றுசொல்லுவார்கள்--(எ-று) (கருத்து) சிலர்தங்கள்மனதைக் கல்லினும்வலிதென்பார்கள் என்பதாம்.

தாயினுமருள்புரிதரணிமன்னவன்... ... ... ...*
போயினன்கானிடையென்றபோழ்தினின் .. *
மாய்வுறப்பெற்றிலேமன்னர்மன்னன்பா,.. ...*
லேயபேரன்பினரெம்மில்யாரென்பார்...... ...*

(இ-ள்) தாயினும்-தாயைப்பார்க்கிலும்--அருள்புரி - உயிர்களிடத்திற்கிருபையைச்செய்கின்ற--தரணிமன்னவன் - உலகத்தையாளுநரசன்--கானிடை-காட்டினிடத்தில்--போயினன்- சென்றான் என்றபோழ்தினில்-என்றுசொல்லியபொழுதிலே-- மாய்வுறப்பெற்றிலேம்-இறக்கப்பெறவில்லை(ஆதலால்,--மன்னர்மன்னன்பால் - இராஜாதிராஜனாகிய நளனிடத்தில்--ஏய - பொருந்திய---பேரன்பினர்-பேரன்பையுடையவர்கள்--எம்மில் - எங்களைப்பார்க்கிலும்--யார்-யாவர்-- (உளர்) என்பார்-என்று (சிலர்) சொல்வார்கள்---(எ-று) (கருத்து) சிலர் இறக்கவிசனப்படுவார்கள் எ-ம். (உஅ)

அடிதொழுமரசருமமைச்சர்வெள்ளமு ... ...*
மடவியரனைவருமைந்தரீட்டமுங்,,,........ ...*
கொடிநெடுவீதிவாய்க்குறுகியெங்கணுங்,,... *
கடன்மடைதிறந்தெனக்கலுழ்ந்திட்டாரரோ...*

(இ-ள்) அடிதொழும் - பாதத்தைவணங்காநின்ற--அரசரும்-இராஜர்களும்---அமைச்சர்வெள்ளமும் - மந்திரிகூட்டங்களும்--மடவியரனைவரும்-மாதர்கூட்டங்களும்--மைந்தரீட்டமும்- புருஷர்களீட்டமும்---கொடி-கொடிகளையுடைய--நெடுவீதிவாய் - நீண்டவீதியினிடத்தில்--குறுகி-வந்து---எங்கணும்-எவ்விடத்தும்---கடன்மடைதிறந்தென - கடல்மடைதிறந்ததுபோல---கலுழ்ந்திட்டார்-அழுதார்கள்--(எ-று) (கருத்து) பலருங்கடலுடைந்தாற்போலழுதார்கள் எ-ம். (உகூ)

பொய்யுறுதிமொழிபுகல்கிலேனென... ... *
வையநீயெம்மையிங்கருளில்வேந்துதன்......*
கையகப்படுத்தினைகானிலேகினின் ... ... ......*
மெய்யினும்பொய்மையேவிழுமிதாமென்பார் *

(இ-ள்) பொய்யுறு-பொய்யாகிய--தீமொழி- தீயசொல்லை--புகல்கிலேனென - சொல்லமாட்டேனென்று--ஐய- ஐயனே--நீ-நீ--எம்மை-எங்களை---இங்கு-இப்பட்டணத்தில்---அருளில் - கிருபையில்லாத--வேந்துதன்-அரசனுடைய--கையகப்படுத்தினை - கையிற்சேர்த்தவனாய்-- கானிலேகின் - காட்டினிடத்துக்குப்போனல்---நின் - உன்னுடைய---மெய்யினும் - சத்தியத்தைப்பார்க்கிலும்--பொய்மையே-பொய்யுரையே---விழுமிதாம் - மேன்மையுடையதாம்---என்பார்-என்றுசொல்லுவார்கள்---(எ-று) (கருத்து) அநே

சனே நீகாட்டிற்போகில் நாட்டில் மெய்யினும் பொய் பிரகாசிக்கும் என்றார்கள் எ-ம். (கூய)

இன்னுயிருய்யுமீங்கென்றபோழ்தினும் ... .. *
பொன்னவிர்முலையினர்புலர்ந்தகாலையும்... ...*
முன்னருஞ்சூதினும்பொய்மைமூரிவேற்... ...*
கன்னவிற்றோளினாய்கழறலாமென்பார்...... ...*

(இ-ள்) இங்கு-இவ்விடத்தில்---இன்னுயிர்- இனியவுயிரானது---உய்யும்-பிழைக்கும்---என்றபோழ்தினும்-என்றுசொல்லிய காலத்திலும்--பொன்-தேமல்---அவிர் - பிரகாசிக்கின்ற---முலையினர்-முலையையுடையமடவார்---புலர்ந்தகாலையும்- பிணங்கினகாலத்திலும்---முன்னரும்-நினைக்கப்படாத--சூதினும் - சூதாட்டத்திலும்---பொய்மை-பொய்யுரையை---மூரி-பலம்பொருந்திய---வேல்- வேலாயுதத்தையேந்திய--கன்னவில்-மலைபோன்ற--தோளினாய்-தோளையுடைய அரசனே---கழறலாம்-சொல்லலாம்---என்பார்- என்று சொல்லுவார்கள்-- எ-று) (கருத்து) உயிர்தப்புவிக்கவும் பெண்களிற்பிணக்கிலும் சூதாட்டத்திலும் பொய்சொல்லலாம் என்பார்கள்-என்பதாம் (கூக)

எண்டிசைத்தலைவருமெழில்கண்டேமுறத்...!...*
தொண்டை வாய்மடமயின்மாலைசூட்டுநாள் ... *
புண்டருகோட்டுவெங்களிற்றிற்போதரல்... ...*
கண்டகணிவற்றையுங்காணுமோவென்பார் ... *

(இ-ள்) எண்டிசைத்தலைவரும் - அஷ்டதிக்குப்பாலகரும்--எழில்கண்டு-இந்தநளனழகைப்பார்த்து--எமுற- (இவ்வளவு அழகு நமக்கில்லையென்று) மயக்கமுறுநிற்க--தொண்டைவாய்- கோவைக்கனியையொத்த அதரத்தையுடைய---மடமயில் - தமயந்தியானவள்--மாலைசூட்டுநாள்-சுயம்வரமாலையைச் சூட்டியதினத்தில்--புண்டரு-மாமிசம்பொருந்திய--கோட்டு - தந்தங்களையுடைய--வெம்-குரூரமான--களிற்று-யானையின்மீது--போதரல - (நீவிதிருவரும்) கோலம்வருதலை---கண்டகண்-பார்த்தகண்கள்--- இவற்றையும்-இக்கொடியசெய்கையையும்---காணுமோவென்பார்-பார்க்குமோவென்றுசொல்வார்கள்.--(எ-று) (கருத்து) நளன் சிறப்பைக்கண்டகண்கள் சிறப்பில்லாமையுங் காணலாமோ வென்பார்கள்-எ-ம்.

மன்னவனேகுதற்கிரங்கிமாழ்குநர்... ..........*
துன்னருங்கானிடைத்தொடர்ந்துசெல்குந ... *
ரின்னுயிர்செகுப்பலென்றிசையில்புன்மையோ *
னந்நகரிடைமுரசறைவித்தானரோ.......... ...*

(இ-ள்) மன்னவன் நளமஹாராஜன்--எதற்கு - காட்டிற் போவதற்கு---இரங்க-அழுது--மாழ்குநர் - துன்பப்படுகின்றவர்களையும்--துன்னரும்-போகக்கூடாத--கானிடை - காட்டினிடத்தில்---தொடர்ந்து-பின்னேதொடர்ந்து--செல்குநர் - போகின்றவர்களையும்--இன்னுயிர்- இனியவுயிர்களை--செகுப்பலென்று - கொல்லுவேனென்று -இசையில்--புகழில்லாத -புன்மையோன்-அற்பனாகியபுஷ்கரன்--அந்நகரிடை - அந்தநகரத்தினிடத்தில்- முரசு-பேரிகையை--அறைவித்தான் - அடிப்பித்தான்---(எ-று) (கருத்து புட்கரன் நளனுக்கிரங்கினவரையும் அவன்பின் சென்றவரையுங்கொல்வேனென்று பறையறைவித்தான் என்பதாம். (௫௫)

வசைபடுமன்னவன்வாய்மையாலறை ........ *
விசிமுழவொலிசெவிவெதுப்பக்கேட்டலும்... ...*
இசைபடுமன்னவற்கிரங்கினோரெலா ..... .. *
மசுணமென்புள்ளெனவலமந்தேங்கினார் ...... *

(இ-ள்) வசைபடு-அபகீர்த்தியையுடைய---மன்னவன் -புஷ்கரராஜனது--வாய்மையால்--ஆக்கினையால்---அறை-அடிக்கப்பெற்ற--விசி-வாரினாலிறுக்கிய--முரசொலி - முரசினுடைய சத்தத்தை--செவிவெதுப்ப-காதுகள்வெப்பமுற--கேட்டலும் - கேட்டவளவில்--இசைபடுமன்னவற்கு - புகழையுடைய நளமஹாராஜனுக்கு---இரங்கினோராய்-அழுதவர்களெல்லாரும்---அசுணமென்புள்ளென-அசுணமென்னும்பக்ஷியைப்போல---அலமந்து- மனஞ்சுழன்று--ஏங்கினார்- துன்பப்பட்டார்கள்---(எ-று) கொடிய ஒலிகேட்கில இறப்பது அசுணப்பறவைக்கியல்பாதலின் அதுபற்றி அவை இவர்க்கு உவமானமாய்க்கூறப்பட்டது-(கருத்து) பறையறைவிப்பைக்கேட்டவர்கள் எல்லாரும் விசனமடைந்தார்கள் என்பதாம்.

வருந்திமுன்போதருமமைச்சர்வாண்முகம்... *
புரிந்தனனோக்கியபொருவில்வாய்மையான் ... *
விரிந்தநூற்கேள்வியீரறத்தைவேரொடு ........*
மரிந்தனிரெற்பிரிந்தாற்றலாமையால் ...... ... *

(இ-ள்) வருந்தி- வருத்தமுற்று--முன்போதரும் - முன்னே போகும்---அமைச்சர்-மந்திரிகளுடைய--வாண்முகம் - ஒளிபொருந்தியமுகத்தை---புரிந்தனன்-விரும்பினவனாய்--நோக்கிய -பார்த்த--பொருவில்-ஒப்பில்லாத---வாய்மையான் - சத்தியத்தையுடைய நளமஹாராஜன--விரிந்த-பரந்த-- நூற்கேள்வியீர் - சாஸ்திரவிசாரணையுடையவர்களே---எற்பிரிந்து-என்னைப்பிரிந்து --- ஆற்றலாமையால்-பொறுக்கமாட்டாமையினால்--அறத்தை- தருமத்தை---

வேரொடும்-வேருடனே--அரிந்தனிர்-அறுத்துவிட்டீர்கள்--(எ-று) வாய்மையானெனுமெழுவாய் மேல்வரும்பாட்டில் ஏன்றனென் னு ம்பயனிலைகொண்டது (கருத்து) நளன் மந்திரிகளைப்பார்த்துப் பிரிவாற்றுமலறத்தைவிட்டீர்கள் என்றான் என்பதாம். (ருஙி)

மேவருஞ்சூதினிற்றோற்றமேதினி ........ ... *
யாவதும்வென்றலதாளவெண்ணுதல்........... ※
கோவியல்பன்றவனாணைமேற்கொடு....- ...... ※
நீவிரென்வாய்மையைநிறுத்துவீரென்றான் ... *

(இ-ள்) மேவரும் - பொருந்துதற்கரிய--சூதினில் - சூதாட்டத்திலே--தோற்ற-தோற்றுப்போன--மேதினியாவதும் - உலக மெல்லாவற்றையும்--வென்றலது-(நான்) வெற்றிகொண்டல்லாம ல்--ஆள - ஆளுகிறதற்கு -- எண்ணுதல்-நினைத்தல்--கோ - அரசர்க ளுக்கு---இயலபன்று-தருமமன்று(ஆகலால்)---அவன் - அந்தப்பு ஷ்கரனுடைய---ஆணை-ஆஞ்ஞையை--மேற்கொடு - ஏற்றுக்கொண் டு---நீவீர்-நீங்கள்--என்-என்னுடைய—வாய்மையை -சத்தியத்தை --நிறுத்துவீர் - நிலைநிறுத்துங்கள்--என்றான் - என்று சொல்லினன் (எ-று) (கருத்து) நளன் மந்திரிகளைப்புட்கரன்சொற்படி கேளுங் கள் என்றான் என்பதாம். (ருசா)

மூளரியால்வெந்தவெங்கானின்மொய்துகள் .... *
ளளியொடுபுலம்பினரழுதகட்கடைத் ....... *
துளியினிலவித்தனர்தொடரவெந்திறற் ........ *
களிமதக்களிற்றினன்கானினேகினன்... ....... *

(இ-ள்) மூளரியால் - அக்கினியினால்--வெந்த-நீறுபட்ட--வெ ங்கானில் - வெவ்வியகாட்டினிடத்து---மொய் - நிறைந்த---துகள்-தூட்களை--அளியொடு-இரக்கத்துடன்---புலம்பினர் - புலம்பினவ ராய்--அழுத-அழுத--கட்கடை- கண்ணின்கடையிலிருந்து வாரா நின்ற--துளியினின்-நீர்த்துளியினால்--அவித்தனர் - அவித்தவர்களா யி--தொடர-பின்றொடர--வெந்திறல்-குரூரமானவலியையும்-களி செருக்கையும்--மதம்-மும்மதத்தையுமுடைய--களிற்றினன் - யா னையைநிகர்த்தநளமஹாராஜன்--கானில்-காட்டினிடத்தில்--ஏகினா ன் -சென்றான்---(எ-று) (கருத்து) நளன் அழுவார்கண்ணீர்வெம் புழுதியை நனைக்கக்காட்டில்நடந்தான் என்பதாம். (ருஎ)

திருகுவெஞ்சினக்கலிசெல்வன்பின்றொடர் ... ※
பரிசனம்யாவுமெய்பதைத்துமீடர.......... ...*
முருகுறழ்பொற்பினன்முன்னமேகிய...... ... *
வருநெறிதெரிவுறவஞ்சமாற்றினன்......... ...※

(இ-ள்) திருத-மாறுபாட்டையும்--வெம்- வெவ்விய--சினம்-கோபத்தையுமுடைய--கலி-கலிபுருஷனானவன்--செல்வன்- நளனுடைய- பின்றொடர்-பின்னேபோகின்ற, பரிசனம்யாவும்-ஏவல்செய்வோரெல்லோரும்--மெய்பதைத்து-சரீரந்துடித்து--மீடர- திரும்பும்படி--முருகுறழ்-சுப்பிரமணியனையொத்த -- பொற்பினான்-அழகையுடைய நளமஹாராஜன்--முன்னரேகிய- முன்னேபோன -- அருநெறி-அரியவழியானது--தெரியுறா-தெரியாத-- வஞ்சம்-மாயையை--ஆற்றினான்-செய்தான்--(எ-று) (கருத்து) சனியன்சனங்களுக்கு வழிதெரியாமற்செய்தான் என்பதாம். (௫௮)

ஆற்றுவஞ்சனையினாலழுதுவாய்ந்தபொற்... ... *
கோற்றொடிதன்னொடுங்கொற்றமன்னவன் ... *
றோற்றுதல்காண்கிலார்துயரமெய்திநின்... ... *
றூற்றெழுகண்ணினருள்ளமாழ்கினார்......... ..*

(இ-ள்) ஆற்று-கலிசெய்த--வஞ்சனையினால்-மாயையினால்-அழுதுவாய்ந்த- அழுதபொருந்திய-- பொற்கோற்றொடிதன்னொடு-தமயந்தியோடும்--கொற்றமன்னவன்- வெற்றிபொருந்தியநளமஹாராஜன்--தோற்றுதல்-தெரிதலை--காண்கிலார்-பார்க்காதவர்களாய்--துயரம்-துக்கத்தை--எய்தி- அடைந்து--நின்று-நின்று- ஊற்று-சுரப்பானது--எழு-தோன்றுகின்ற--கண்ணினர்- கண்களையுடையபரிசனங்கள்--உள்ளமாழ்கினார் - உள்ளத்தில்மயங்கினார்கள்--(எ-று) (கருத்து) சனிபகவான்மாயத்தால் சனங்கள் நளனையுந் தமயந்தியையுங் காணாதவர்களாய்ப் புலம்பினார்கள் என்பதாம். (௫௯)

ஆயினுமினிதருள்புரியுமெம்பிரான்...... ... ...*
றூயமென்மலரடிச்சுவடுகாண்கிலேம்...... .....*
போயினன்யாண்டெவர்புணர்ப்பினாயதிம் ... *
மாயமென்றருநெறிமருங்கிற்றேடுவார்.........*

(இ-ள்) ஆயினும்-தாயைக்காட்டிலும்--இனிது- இனிதாக--அருள்-கிருபையை--புரியும்-செய்கின்ற--எம்பிரான்-எங்களரசனாகிய நளமஹாராஜனது--தூய-பரிசுத்தமாகிய--மென் - மெல்லிய--மலர்-தாமரைமலர்போன்ற--அடிச்சுவடு-அடிக்குறியை;--காண்கிலேம்-நாங்கள்காணவில்லை--யாண்டு-எவ்விடத்தில்-- போயினன்-போயினான்--இம்மாயம்-இந்தவஞ்சனையானது--எவர்புணர்ப்பினாயது-யார்சம்பந்தத்தினாலுண்டாகியது--என்று-என்றுபேசிக்கொண்டு--அருநெறி-அரியவழியை--மருங்கில்-பக்கங்களில்-- தேடுவார்-தேடுவார்கள்(எ-று) (கருத்து) சனங்கள்நளனைத்தேடுவார்களெம்

தேடினர்புகுமிடந்தெரிகிலாமையில்... ... ...*
வாடினரருநெறிமருங்கினோர்வழி... ... ......*
கூடினரின்னுயிர்கூற்றங்கைக்கொள ........*
வீடினராமெனவீழ்ந்துவிம்மினார்...... ... . *

(இ-ள்) தேடினர்-தேடினவர்கள்--புகுமிடம்-அரசன்போனவிடம்--தெரிகிலாமையில்-அறியாதபடியால்--வாடினர்-வாடினோர்கள்--அருநெறி-அரியவழி பினது -மருங்கில்-பக்கத்தில் -- ஓர்வழி-ஒருவழியை--கூடினர் அடைந்தார்கள்--இன்னுயிர்-இனியவுயிரை--கூற்றங்கைக்கொள-இயமன்கொண்டுபோக- வீடினராமென-இறந்தவர்போல--வீழ்ந்து-நிலத்திலேவீழ்ந்து--விம்மினார்-அழுதார்கள்---(எ-று) (கருத்து) சனங்கள் நளனைத்தேடிக்காணாது நிலத்திலேவீழ்ந்தழுதார்கள் என்பதாம். (௪௧)

கொன்னுனையலங்கல்வேற்குவவுத்தோளினான்...*
சென்னெறிகண்களிற்றெரியக்காண்கில... ... *
ரின்னலுற்றழுதழுதேங்கியேங்கியத்... .......*
தொன்னகரடைந்தனர்தொடர்ந்துளோரெலாம்.

(இ-ள்) கொல்-கொல்லாநின்ற - நுனை-கூர்மையுடைய—அலங்கல்-வெற்றிமாலையணிந்த—வேல்-வேலையுடைய—குவவுத்தோளினான்-திரண்ட தோளையுடைய நளமஹாராஜன் — சென்னெறி-போனவழியை—கண்களில் நேத்திரங்களில்--தெரிய-அறிய—காண்கிலார்-காணாதவர்களாய் — இன்னலுற்று-துன்பமுற்று—அழுதழுது-புலம்பிப்புலம்பி—ஏங்கியேங்கி மிகவுமேக்கமுற்று--தொடர்ந்துளோரெலாம்-பின்றொடர்ந்து போனவர்களெல்லாரும்—அத்தொன்னகர்-தங்கள்பழையநகரை—அடைந்தனர்-சேர்ந்தார்கள் (எ-று) (கருத்து)சனங்கள்நளனைக்காணமலநகரத்திலவந்தார்கள் என்பதாம். (௪௨)

பறவைகள்குடம்பையுட்பார்ப்பருத்தில.........*
கறவைகள்புனிற்றிளங்கன்றுகூட்டில ..........*
நறவுயிர்த்தலர்கிலமலர்களுமவேற்... ... .. .. *
இறைவனேகினன்வனத்தென்றபின்னரோ ... ...*

(இ-ள்) நாமம்-அச்சத்தைத்தருகின்ற—வேல்- வேலையுடைய—இறைவன்-நளமஹாராஜன் —வனத்து காட்டினிடத்தில்--ஏகினனென்றபின்னர்-போயினனென்றபின்பு -பறவைகள்-பக்ஷிகள்—குடம்பையுள்-கூண்டிக்குள்ளே—பார்ப்பு-குஞ்சுகளை— அருத்தில இரையூட்டவில்லை—கறவைகள்-பசுக்கள் — புனிற்றிளங்கன்று கு-மிகுந்தவிளங்கன்றுகளுக்கு—ஊட்டில் - பாலூட்டக்கொடு

ந்தில--மலர்கள்-புஷ்பங்கள்--நறவுயிர்த்து - தேனைத்தந்து--அலர் கில-மலரவில்லை—(எ-று) (கருத்து) நளன் காட்டிற்போனானென் றபின் பறவைகள் குஞ்சுகளுக்கிரைதரவில்லை பசுக்கள் கன்றுகளுக் கூட்டவில்லை மலர்கள் மலரவில்லை என்பதாம். (௪௩)

வான்மறந்தனதுளிவழங்கலின்னிசைத்.......... ...*
தேன்மறந்தனமடமகளிர்தேங்குழல்...........*
பான்மறந்தனபசுங்குழவிபாய்கவுட்..... ... *
கான்மதமறந்தனகளிநல்யானையே...... ... ...*

(இ-ள்) வான்-மேகங்கள்--துளிவழங்கல் - மழைபெய்தலை--மறந்தன-மறந்துவிட்டன---இன்னிசை-இனிய இசையையுடைய--தேன்-வண்டுகள்--மடமகளிர்-இளமைபொருந்திய ஸ்திரீகளுடைய--தேங்குழல்-வாசனைபொருந்திய அளகத்தை---மறந்தன- மறந்துவிட்டன--பசுங்குழவி - இளங்குழந்தைகள்--பால- பாலுண்ணலை--மறந்தன-மறந்துவிட்டன--களி - செருக்கையுடைய--நல்- நல்ல--யானை - யானைகள்---பாய் - பெருகாநின்ற---கவுள்-கன்னத்திலுண்டாகிய--கான்மதம்-வாசனைபொருந்திய மதவர்ஷித்தை--மறந்தன-மறந்துவிட்டன —(எ-று) ஏ-அசை- (கருத்து) மழைபெய்யவில்லை வண்டுகள்பெண்கள் கூந்தலைமறந்தன-குழந்தைகள்பாலமறந்தன யானைகள்மதம்பொழிதலொழிந்தன என்பதாம். (௪௪)

மலர்ப்பசுந்தார்க்குழன்மகளிர்கேள்வர்பாற்... *
புலத்தலுங்கலத்தலும்பொருந்தாமையா ... *
லலத்தகமிழந்தனகுஞ்சியந்நலார்... ... ... ...*
முலைச்சுவடிழந்தனமுழவுத்தோள்களே.........*

(இ-ள்) மலர்-புட்பங்களையணிந்த---பசும்- பசுமையாகிய---தார்-நீண்ட---குழல்-கூந்தலையுடைய---மகளிர்-மாதர்கள்--கேள்வர்பால்-கணவரிடத்தில்---புலத்தலும்-பிணக்கத்தையும்-- கலத்தலும் புணர்ச்சியையும்---பொருந்தாமையால- அடையாமையால்--குஞ்சி-குடுமிகள்---அலத்தகம்-செம்பஞ்சுக்குழம்பை-- இழந்தன-நீக்கிவிட்டன---அந்நலார்-அந்தமாதருடைய--முலைச்சுவடு-ஸ்தனத்தின்குறியை--முழவு-மத்தளம்போன்ற—தோள்கள்-புயங்கள்-இழந்தன-நீங்கின— (எ-று) (கருத்து) ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் புலவியுங்கலவியுமற்றன என்பதாம். (௪௫)

அள்ளிலைவேற்கணாரங்கைமீதுவைத் ............*
தெள்ளருமின்மொழிபயிற்றலின்மையால......*
வள்ளவாயாரமுதுண்ணும்வண்சிறைக் .......*
கிள்ளையுந்தேன்மொழியளக்கலற்றவே.........*

(இ-ள்) அள்-கூர்மைபொருந்திய—இலை-இலைபோன்ற--வேல்-வேலாயுதத்தையொத்த—கணார்-கண்களையுடையபெண்கள்--அங்கைமீது-அழகியகையின்மீது--வைத்து-வைத்துக்கொண்டு---எள்ளரும்-இகழ்ச்சியில்லாத--மென்-மிருதுவான--மொழி-சொற்களை—பயிற்றலின்மையால்-கற்பிக்காதபடியால்--வள்ளைவாய்-கின்னத்தினிடத்தில்--ஆர்-நிறைந்த--அமுது-பாலை--உண்ணும்-குடிக்கும்—வண்-வளப்பம்பொருந்திய--சிறை-இறகையுடைய--கிள்ளையுங்-கிளிப்பிள்ளையும்--தேன்-மதுரமாகிய—மொழி-சொற்களை—கிளக்கலற்ற-பேசுதலொழிந்தன—(எ-று) (கருத்து) கிளிகள் பெண்கள்கற்பிக்காமையால் பேசுதலற்றன என்பதாம். (௬௬)

வாய்பரியிழந்தனவாவுமைங்கதி.... ........... *
யேப்பலின்விழவணியிழந்தகோமறு............*
காம்பல்வாயிழந்தனமுறுவலாரகிற்......... ...*
றீம்புகையிழந்தனசெம்பொன்மாடமே..... *

(இ-ள்) வாம்-தாவுகின்ற--பரி-குதிரைகள்---வாவும்-தாவாநின்ற—ஐங்கதி-ஐவகைநடையினையும--இழந்தன-நீக்கிவிட்டன-- எம்பலின்-வருத்தத்துடன்--விழவணி-உச்சவாலங்காரத்தை-- கோமறுகு-இராஜவீதிகள்—இழந்த-நீங்கிவிட்டன--ஆம்பல் - செவ்வல்லிமலர்போன்ற—வாய்-பெண்களுடையவாய்கள்---முறுவல் புன்சிரிப்பை—இழந்தன-நீக்கிவிட்டன—ஆர்-நிறைந்த— அகில்- அகிற்கட்டையினது—தீம்-இனிமையாகிய—புகை-புகையை— செம்பொன்-சிவந்தபொன்னாற்செய்த--மாடம் உபரிகைகள்—இழந்தன- நீங்கின—(எ-று) ஏ-அசை. (கருத்து) குதிரைகள்கதியிழந்தன-ராஜவீதிதிருவிழா விழந்தன-மாதர்வாய்நகையிழந்தன - மாடங்கள் புகையிழந்தன என்பதாம். (௬௭)

பாவலரிழந்தனர்பரிசிலுண்பலி.................. *
தேவருமிழந்தனர்கலியின்றீமையாற் ... .......*
காவலனெடிபடுகானிலேகலால்....... .. .......*
யாவருமிழந்தனரின்பமென்பவே... ... ...... *

(இ-ள்) பாவலர்-புலவர்கள்--பரிசில்-தியாகத்தை--இழந்தனர் நீங்கினார்கள்--உண்-உண்ணப்பட்ட--பலி-அவியை--தேவரும்- தேவர்களும்—இழந்தனர்-இழந்துவிட்டார்கள்--கலியின் - கலிபுருஷனுடைய--தீமையால்-பொல்லாங்கினால்--காவலன் - நளமஹாராஜன்—நெடிபடு-சில்வண்டையுடைய—கானில்-காட்டில—ஏகலால் போதலினால்--யாவரும்-எல்லோரும்--இன்பமென்ப- இன்பமென்பனவற்றை—இழந்தனர்-நீங்கினார்கள்—(எ-று) (கருத்து)பாவல

ர் நியாகமிழந்தார்கள் தேவர்களவியிழந்தார்கள் யாவருமின்பமி ழந்தார்கள் என்பதாம். (சஅ)

அறந்தலை மயங்கின பொய்ம்மை யார்ந்தன.........*
மறந்தலை யெடுத்தன தீமை மல்கின..............*
திறம்பின மநுநெறி தவங்கள் தீர்ந்தன.........*
நிறைந்தன வஞ்சனை நேமியங்குமே..............*

(இ-ள்) நேமியெங்கும் உலகமெங்கும்—அறம்-தருமம்—தலைமயங்கின-தலைகுமோறின—பொய்மை-அசத்தியம்—ஆர்ந்தன-நிறைந்தன—மறம் பாபங்கள்—தலையெடுத்தன - வளர்ந்தன—தீமை-துர்நடத்தைகள்—மல்கின-நெருங்கின—மநுநெறி-இராஜதருமம்—திறம்பின-கெட்டன—தவங்கள்-தவசுகள்—தீர்ந்தன- நீங்கின—வஞ்சனை-வஞ்சனைகள்—நிறைந்தன - நிறைம்பின—(எ-று) (கருத்து) தருமநீங்கின பொய்நிறைந்தன - பாவங்கள் வளர்ந்தன-துன்மார்க்கம் நிறைந்தன-இராஜதருமங்கெட்டன-தவங்கள் நீங்கின-வஞ்சனை நிறைந்தன என்பதாம். (சக)

நகர்நீங்குபடலம்-முற்றிற்று.

# கான்புகுபடலம்.

இப்படலத்தால் தன்னகரைவிட்டு நீங்கிய நளமஹாராஜன் பிறர்நகரில் தன்னிலைதப்பிச்செல்வதில் விருப்பமின்றிக் கானகம்புகுதல் சொல்லப்படுகின்றது... ... *

(கலிவிருத்தம்.)

களிமயில் குனித்திடக் காலமன்றியுந்..........*
துளிமுகில் பிலிற்றின துணர்த்த பூங்கொடி .....*
முளிசினை தளிர்த்தன முகைத்தன தரு..........*
நளிகடற் றானையா னடந்த கானமே..............*

(இ-ள்) நளிர்-குளிர்ச்சிபொருந்திய—கடல் - சமுத்திரத்தை யொத்த—தானையான்-சேனையையுடைய நளமஹாராஜன்— நடந்த-சென்ற—கானம்-காட்டினில்—களி-களிப்பையுடைய—மயில்-மயில்கள்—குனித்திட-கூத்தாட—காலமன்றியும்-கார்கால மல்லாமலும்—துளி-நீர்த்துளிகளை—முகில்-மேகங்கள்—பிலிற்றின-பெ

ய்தன—பூ-பொலிவுபொருந்திய—கொடி-கொடிகள்—துணர்த்த பூங்கொத்துக்களைச்செய்தன—முளிசினை-உலர்ந்தகிளைகள்—தளிர்த்தன-துளிர்த்தன—பைம்-பசுமையாகிய—தரு-விருக்ஷங்கள்—முகைத்த-அரும்பின—(எ-று) (கருத்து) நளனடந்தகாட்டில்மழைபெய்தன-கொடிகள்தளிர்த்தன-பட்டமரம் வளர்ந்தன -எ-ம்.

விள்ளருமதரிடைவெதும்பும்வெம்பரல்... ... *
கள்ளவிழ்மலரெனக்குழைந்துகாட்டின ... ...*
யொள்ளழற்கதிர்சுடவுலரும்வெஞ்சுரம்.. ......*
வள்ளவாய்மலர்விரிமருதம்போன்றதே........*

(இ-ள்) விள்ளரும்-சொல்லுதற்கரிய—அதரிடை-வழியிலே—வெதும்பு-சுடாநின்ற—வெம்-வெப்பமான—பரல்-மணியாம் பருக்கைகள்—கள் தேனுடனே—அவிழ்-விரியாநின்ற, மலரென புஷ்பம்போல—குழைந்து-மிருதுவாய்—காட்டின-காண்பித்தன—ஒள்-பிரகாசம்பொருந்திய—அழல்-அழற்றுநின்ற—கதிர்-சூரியகிரணங்கள்—சுட-தகிக்க—உலர்-காய்ந்த—வெம்-வெப்பமாகிய—சுரம்-பாலைநிலமானது—வள்ளம்-கிண்ணம்போல—வாய்-முகத்தையுடைய—மலர்-புட்பங்கள்—அவிழ்-விரியாநின்ற—மருதம்-மருதநிலத்தை—போன்றது-ஒத்திருந்தது--(எ-று) ஏ-அசை-(கருத்து) பருக்கைக்கற்கள் மலரெனவிருந்தன-பாலைநிலம் வயலினிலம்போலிருந்தன என்பதாம். (உ)

ஊறுசெய்தூன்சுவைத்துடம்புவீக்கிய........*
வாறலைகள்வருமளியராயினோர் ....... ... ......*
வேறினியுரைப்பதென்வெருவுமாவொடு... ... *
மாறுகொளுழுவையுமாற்றந்தீர்ந்தவே ... ... *

(இ-ள்) ஊறுசெய்து-கொலைசெய்து—ஊன்-மாமிசத்தை—சுவைத்து-புசித்து—உடம்பு-சரீரத்தை—வீக்கிய-பருக்கச்செய்த—ஆறலை-வழியினிடத்திற்பறிக்கின்ற—கள்வரும்-திருடரும்—அளியராயினோர்-கிருபையுடையவராயினார்கள்—வேறு-வேறாக—இனி-இனிமேல்—உரைப்பதென்-சொல்லுவதென்னை—வெருவும்-அஞ்சாநின்ற—ஆவொடு-பசுக்களுடனே—மாறுகொள்-பகைகொண்ட—உழுவையும் புலியும்—மாற்றம்-பகையை—தீர்ந்த-நீங்கின—(எ-று) ஏ-அசை-(கருத்து) திருடர்கள் கிருபையுள்ளவர்களானார்கள்-புலியும்பசுவும் பகைநீங்கின என்பதாம். (௩)

ஆயிடையுயிர்திகரணங்களொடு... ... ... ...*
மேயதன்னகர்வயின்விசும்புபோழ்ந்துலாங் ...*

காய்கதிர் நுழைகலாக் காவினாடல்போற் ... ... *
போயினனழலுமிழ் புலவு வேலினான் ......... ...*

(இ-ள்) ஆயிடை - அந்தப்பாலைநிலத்தில் — உயிர்நிகர் - தன்னுயிரையொத்த — அணங்கனொடும் - தெய்வப்பெண்ணையொத்த தமயந்தியுடன் — மேய பொருந்திய — தன் தன்னுடைய — நகர்வயின் - பட்டணத்தின்கண் — விசும்பு - மேகங்களை — போழ்ந்து - பிளந்துகொண்டு — உலாம் - உலாவுகின்ற — காய் - காயாநின்ற — கதிர் - சூரியகிரணமானது — நுழைகலா - நுழையக்கூடாத — காவில் - சோலையில் — ஆடல்போல் விளையாடல்போல் — அழல் - அக்கினியை — உமிழ் - கக்காநின்ற — புலவு - புலால்நாற்றம்பொருந்திய — வேலினான் - வேலையுடைய நளமஹாராஜன் — போயினன் - நடந்தான் — (எ-று) (கருத்து) நளன் மனைவியுடனே சோலையில்விளையாடல்போலப் பாலையிற்போனான் என்பதாம். (ச)

அள்ளிலைப் பூணினானேகுமாற்றிடைக் .......... *
கொள்ளைவண்டினமிழி நறவுகூட்டுணும்... ... *
வள்ளவாய்மலரவிழ் வாவியங்கணைப்... ........ *
புள்ளுருக்கொடு கலிபோயினானரோ.... ... ...*

(இ-ள்) அள் - நெருங்கிய — இலை - இலைபோன்ற — பூணினான் - ஆபரணங்களையணிந்த நளமஹாராஜன் — ஏகும் - போகாநின்ற — ஆற்றிடை - காட்டுவழியிலே — கொள்ளை - மிகுதியாகிய — வண்டினம் - சுரும்புக்கூட்டங்கள் — இழி - பெருகாநின்ற — நறவு - தேனை — கூட்டுணும் - கொள்ளைகொள்ளும்படியிருக்கின்ற — வள்ளம் - கிண்ணம் போன்ற — வாய் - முகத்தையுடைய — மலர் - புஷ்பங்கள் — அவிழ் - விரியாநின்ற — வாவி - தடாகத்தினது — அம் - அழகிய — கணை - கணையினிடத்து — புள்ளுருக்கொடு - அன்னத்தினுருவைக்கொண்டு — கலி - கலியன் — போயினான் - சென்றான் — (எ-று) (கருத்து) சனியகவான் அன்னத்தின் வடிவுகொண்டு போனான் என்பதாம். (ரு)

வாவியின்மருங்கு நன்மணிகள்கோத்தெனத் ... *
தூவியம்பொற்சிறைமென்புட்டோன்றலும்... *
ஓவியரெழுதருமுருவப்பைங்கொடி ... .. *
காவியங்கண்ணிணைகளிப்பநோக்கினாள்... ... *

(இ-ள்) வாவியின் - தடாகத்தினது — மருங்கு - பக்கத்தில் — நல் - நல்ல — மணிகள் - முத்துக்களை — கோத்தென - கோவையிட்டது போல — தூவி - தூவியென்னப்பட்ட — அம் - அழகிய — பொன் - பிரகாசம்பொருந்திய — சிறை - இறகையுடைய — மென் - மிருதுவாகிய — புள் - அன்னப்புள்ளானது — தோன்றலும் - காணலும் — ஓவியர் - சித்திரகாரர்கள் — எழுதரும் - எழுதுதற்கரிய — உருவம் - வடிவத்

தையுடைய—பைம்-பசுமையாகிய—கொடி-கொடிபோன்ற தம யந்தியானவள்—காவி-நீலோற்பலத்தைமொத்த—அம்-அழகிய—கண்ணிணை-இரண்டு நேத்திரமும்—களிப்ப-சந்தோஷிக்கும்படி—நோக்கினுள்-பார்த்தாள் (எ-று) (கருத்து) தமயந்தி அன்னத்தைக்கண்டாள் எ-பு. (௭)

பன்மலர்கருவியபணிகொள்வாவியிற்............*
பொன்னவிர்கொடுஞ்சிறைப்புள்ளைநோக்குரு *
மன்னநம்மனநிலைமுடித்தவண்சிறை......... *
யன்னமென்புள்ளின்தழகுவாய்ந்ததே.........*

(இ-ள்) பல்-நானுவிதமான—மலர்-புஷ்பங்கள்—கருவிய-நெருங்கிய—பனிகொள்-குளிர்ச்சியைக்கொண்ட—வாவியில-தடாகத்தில்—பொன்-பொன்போல—அவிர்-பிரகாசியாநின்ற—கொடுஞ்சிறை-கொடுமையான இறகையுடைய—புள்ளை-அன்னத்தை—நோக்குறு-பார்த்து—மன்ன-அரசனே—நம்-நம்முடைய—மணநிலை-விவாகத்தைத—முடித்த-நிறைவேற்றின—வண்சிறை- வளப்பமாகிய இறகையுடைய—அன்னமென்புள்ளின் - தெய்வ அன்னத்தைக்காட்டிலும்—ஈது-இப்பறவை—அழகு- அழகை—வாய்ந்தது-பொருந்தியது—(எ-று) (கருத்து) தமயந்தி இருவரையுங்கூட்டிய அன்னத்தைப்பார்க்கிலும் அழகுள்ளதென்றுள் என்பதாம்.

மற்றுமோருயிரெனவளர்த்தபூவையுஞ்........ *
சொற்றருகிள்ளையுமறப்பத்தூமணிப்........ *
பொற்றடந்தோளிறையப்பொன்னம்புள்ளினைப்...*
பற்றிநீதருகெனப்பணிந்துகூறினுள்............*

(இ-ள்) மற்றுமோர்-மற்றொரு—உயிரென-உயிர்போல—வளர்த்த-வளர்த்த—பூவையும் - நாகணவாய்ப்புள்ளையும்— சொல்-மொழிகளை—தரு-சொல்லாநின்ற—கிள்ளையும்-கிளிப்பிள்ளைகளையும்—மறப்ப-மறக்கும்படி—தூ-பரிசுத்தமாகிய—மணி- இரத்நவடமணிந்த—பொன்-அழகிய—தடம்-விசாலமாகிய— தோளிறைய்-புயத்தையுடையஅரசனே—பொன் - பொன்போன்ற—அம்-அழகிய—புள்ளினை-அன்னத்தை—பற்றி-பிடித்து — நீதருகென-நீகொடுப்பாயாகவென்று—பணிந்து-வணங்கி—கூறினுள்- சொல்லினுள்—(எ-று) (கருத்து) தமயந்தி நளனை அன்னத்தைப்பிடித்துத்தரச்சொன்னுள் என்பதாம். (௮)

ஓர்துகிலிருவருமுடுத்துமற்றையோர்... ... ... *
காரகிற்றீம்புகைகமழுநீவிகொண்.......... ... *

இதுவென-ஈதென்று--மெலிவு-துன்பத்தை--நீக்கினான் - போக்கினான்—(எ-று) (கருத்து) நளன் விதிவசமிதுவென்று எண்ணினான்.

கல்லதர்நடந்துபூங்கமலம்வாட்டிய........ ..*
மெல்லடிசிவப்புறல்வீழிவாய்மயிற்... .....*
கொல்லுமேயெனமனமுருகியுந்தையூர்... ... *
செல்லுநீணெறியிதுவென்று * செப்பினான்...*

(இ-ள்) கல்லதர்-மலைவழியில்—நடந்து-நடந்து—பூ-அழகிய--கமலம்-தாமரைமலரை--வாட்டிய-கெடுக்க--மெல்லடி-மிருதுவானபாதமானது--சிவப்புறல்-சிவத்தல்—வீழி - வீழிப்பழம்போன்ற—வாய்-அதரத்தையுடைய---மயிற்கு-மயில்போன்றதமயந்திக்கு--ஒல்லுமேயென-கூடுமோவென்று--மனம்-மனது --- உருகி-இளகி—உந்தை-உன்தகப்பனது--ஊர் - குண்டினபுரத்துக்கு—செல்லும்-போகாநின்ற--நீள்-நீண்ட--நெறி-மார்க்கம்--இதுவென்று-இதுவென்று--செப்பினான்-சொன்னான்—(எ-று) * இலக்கணக்கொத்து வினையியல் ௰௭-சூ-அவைதா- மனமொழிமெய்யறிவாகிய நான்கின்-வகைசேவையாகியுமவ்வகையின்றியு-நல்வினை- தீவினைவேறு வினையெனநடந்-தறிந்துசெயவினையறியாதுசெய்வினை - யசேதனஞ்செய்வினையெனவேயமர்ந்து-தீவினைநல்வினை சிலமுறைதிறம்பிச் செய்யாவிருவினைசெய்வினையாகிச் - செய்யிருவினையேசெய்யாவினையா-யின்னும்பலவாமிலக்கணம்பெறுமே- இவ்விதியால் செப்பினான் என்பது-அசைந்தவினை- (கருத்து)நளன் தமயந்திக்கு உன்தகப்பனூருக்குப்போகும்வழி இதுவென்றான்என்பதாம். (௰௨)

ஆங்கதுகேட்டலுமழுதுமாழ்கிநொந்... ......*
தீங்குநின்னடியனேன்பிழைத்ததியாதுகொல்.. *
பூங்கழற்குரிசிலோய்பொறியிலேன்றனை .. ....*
நீங்கவோவிவ்வுரைநிகழ்த்தினாயென்றாள்... ..*

(இ-ள்) ஆங்கு-அவ்விடத்தில்—அது-அந்தச்சொல்லை—கேட்டலும்-கேட்டவளவில்—அழுது-புலம்பி —மாழ்கி-வருந்தி—நொந்து-மனநொந்து—ஈங்கு-இவ்விடத்தில்—நின்-உனக்கு— அடியனேன்-அடிமைத்திறம்பூண்டயான்- பிழைத்தது - குற்றஞ்செய்தது--யாதுகொல்-எது--பூ-அழகிய--கழல்- வீரக்கழலையணிந்த--குரிசிலோய்-அரசனே, பொறியிலேன்றனை-அறிவில்லாதஎன்னை, நீங்கவோ-பிரியவோ, இவ்வுரை-இந்தவசனத்தை,நிகழ்த்தினாய்-சொன்னாய், என்றாள்-என்று(தமயந்தி)சொல்லினாள்—(எ-று) (கருத்து) தமயந்திஎன்னைவிட்டுநீங்கவோஇப்படிச்சொன்னீரென்றாள்,எ-ம்.

செயிரறுமதிமுகம்பசப்பச்சிந்தைநொந்......
தயர்வொடுகண்பனித்தவலங்கோடலே...... ... *
மயிலியற்பேதைநிற்பிரிந்துவாழ்வெனே .. ... *
யுயிர்பிரிந்தாலுடலுய்யுமோவென்ருன்........

(இ-ள்) செயிரறு-குற்றமற்ற—மதி-சந்திரன்போன்ற—முக ம்-வதனமானது—பசப்ப-பசந்துபோக—சிந்தைநொந்து-மன நொந்து—அயர்வொடு-சோர்வுடனே—கண்பனித்து-கண்ணீர்வி ட்டு—அவலங்கோடலே-துன்பத்தைக்கொள்ளாதே—மயில்-மயில் போலும்—இயல்-சாயலையுடைய--பேதை-தமயந்தியே-- நிற்பிரி ந்து உன்னைப்பிரிந்து—வாழ்வெனே-வாழ்வேனு--உயிர்பிரிந்தால்- உயிர்நீங்கிஞல் - உடல்-தேகம்--உய்யுமோ-பிழைக்குமோ— என் ருன் என்று (நளமஹாராஜன்) சொன்ஞன்---(எ-று) (கருத்து) ந ளன் தமயந்தியே உன்னைப்பிரிந்து வாழேனென்ருன் என்பதாம்.

முருகுயிர்த்தளிபினமுசுபூங்குழற்......... *
கருதருபெருந்துயர்காண்கிலேனெனுப்... ... *
பரிநெடுந்தேரொடும்பரிதிவானவ.......... ....
ஞரவுநீர்க்கருங்கடலொளித்திட்டானரோ... ...*

(இ-ள்) முருகு-தேனை--உயிர்த்து-பெற்று --- அளியினம்-வ ண்டுக்கூட்டங்கள்—மூசு-மொய்க்காநின்ற—பூ-பூவையணிந்த— குழல்-கூந்தலையுடையதமயந்தியினது—கருதரும்-நினைத்தற்கரிய —பெருந்துயர்-பெரிதாகிய துன்பத்தை—காண்கிலேனெனு-பார் க்கமாட்டேனென்று—பரி-குதிரைகட்டிய—நெடும் - நெடிய— தேரொடும்-இரதத்துடனே—பரிதிவானவன்-சூரியதேவன் — உர வுநீர்-உவர்நீரையுடைய—கருங்கடல்-கறுத்தசமுத்திரத்தில்— ஒளி த்திட்டான்-மறைந்தான்---(எ-று) (கருத்து) சூரியன் அஸ்தமான மாகிஞன் என்பதாம். (௰௫)

மாயிருஞாலமும்வானுநுங்கிய................ . . *
பாயிருட்கங்குலிற்பாலவதன்ஞெடும்... ... ... *
போயரின்முற்றியபொலிவின்மண்டப...... ...*
மேயினனரசர்கோன்விதியின்கொட்பிஞல் ... *

(இ-ள்) மா-மகத்தாகிய—இரு-பெரிய---ஞாலம் - பூமியையு ம்—வானும்-ஆகாயத்தையும்--நுங்கிய-விழுங்கிய---பாய் - பரவி ய---இருள்-இருளையுடைய—கங்குலில்-இராத்திரியில்— பாலவதன் ஞெடும்-தமயந்தியுடனே---போய்-சென்று---அரில் - தூறுகள்— முற்றிய-நிலறந்த---பொலிவில்-சிறப்பற்ற---மண்டபம்-ஓர்மண்ட பத்தை--அரசர்கோன்-இராஜாதிராஜஞகியநளமஹாராஜன்---விதி

யின்-வினையினது—கொட்பினால்-திரிபினால்---மேயினன்-அடைந்தான்—(எ-று) (கருத்து) நளன்தமயந்தியுடன் ஓர்மண்டபத்தைச்சார்ந்தான் என்பதாம். (௰௬)

இன்னகிற்புகைதவழ்ந்தினிதின்மென்மைய ... *
பன்மலரமளிமேற்பள்ளிகொள்பவர் . ... .....*
புன்னுனைபரந்தவெம்பொடிகொள்பார்மிசை. *
மன்னினரூழினும்வலிதியாவதே...... ....... *

(இ-ள்) இன் இனிதாகிய---அகிற்புகை-அகிற்றூமம்— தவழ்ந்து-ஊர்ந்து--இனிதின்-இன்பமாய்---மென்மைய - மிருதுவாகிய--பல்-நானாவிதமான---மலர் - புஷ்பம்பரப்பிய---அமளிமேல்-படுக்கையின்மீது---பள்ளிகொள்பவர்-சயனிப்பவராகிய(தமயந்திநளனிருவரும்)---புல் புல்லினது—நுனி நுனிகள்---பரந்த- பரவிய--வெம்-வெவ்விய--பொடிகொள்- புழுதியைக்கொண்ட---பார்மிசை-பூமியின்மேல்--மன்னினர் - படுத்தார்கள்---(ஆதலால்) ஊழினும் ஊழ்வினைக்காட்டிலும்---வலிது-வன்மையையுடையது--யாவது-யாது--(எ-று) (கருத்து) மெல்லணையிற்படுத்த நளனுந் தமயந்தியும் புல்லணையிற்படுத்தார்கள் எ-ம். (௰௭)

அனிச்சமென்புதுமலரமளிமேயினும் ........*
பனித்திடுமெய்யெனப்பதைத்துவாடுவேன் ... *
கனிப்படுகிளவிவெம்பொடியிற்கண்படில்..... *
வினித்தமியேனுயிரெங்ஙனுய்யுமே.......... ... *

(இ-ள்) அனிச்சம்-அனிச்சவிருக்ஷத்தினது-மென் - மிருதுவாகிய-- புதுமலர்-புதியமலரையுடைய--அமளி - மெத்தையின்மேல்--மேயினும் - படுத்தாலும்---மெய்-சரீரமானது---பனித்திடுமென-வருந்துமென்று---பதைத்து-துடித்து---வாடுவேன்- சோர்வேன்---கனிப்படு-பழச்சுவைபொருந்திய--கிளவி - வசனத்தையுடையதமயந்தி---வெம்பொடியில்-வெவ்வியபுழுதியில்---கண்படில்- நித்திரைசெய்யில்--இனி-இனிமேல்--தமியேனுயிர்- தனியாகிய என்னுயிர்--எங்ஙன்-எப்படி---உய்யும் பிழைக்கும்.--(எ-று) (கருத்து) நளன் தமயந்தி புற்புழுதியிலே நித்திரைசெய்ய என்னுயிரெப்படிப்பிழைக்கும் என்றான் என்பதாம். (௰௮)

கண்ணகன்புவிக்கெலாங்களைகணாகிய... ... ... *
தண்மதிநெடுங்குடைவிதர்ப்பன்றார்க்குழ... ...*
ளெண்ணருமித்துயருழந்துநண்ணுமே......... *
லெண்ணினின்மற்றியார்துயரெய்திடாரென்றான்..,*

(இ-ள்) கண்ணகல்-இடமகன்ற---புவிக்கெலாம்-பூமிக்கெல்

லாம்--களைகளுடைய-ஆதாரமாகிய--தண்-குளிர்ந்த--மதி-சந்திரன் போன்ற--முகம்-நீண்ட--குடை-குடையையுடைய--விதர்ப்பன்-விதர்ப்பதேசத்தையாளும்வீமராஜனீன்ற--தார்க்குழல் - தமயந்தியானவள்--நன்னெறும்-பொருந்துதற்கரிய---இத்துயர் - இந்தத்துன்பத்தை--உழந்து-வருந்தி--நள்ளிருண்மேல்-அடையுமாகில்-- என்னின்-திசைக்குயிடத்தில---யார்-எவர்கள்--துயர்-துன்பத்தை--எய்திடார் அடையார்கள்--என்றான் என்றுசொன்னான்--(எ-று) (கருத்து) நளன் துன்பமடையாதவர்யார் என்றான் என்பதாம். (யக)

வளைகடலுலகின்மன்னர்தாடொழ ......... *
உளையரிப்பூந்தவிசுறையுமெம்பிரான்......... *
முளரியாலெங்கணுமுற்றுமண்டபத்... ......*
தெளியர்போலிருத்தியென்றுவிம்மினாள்.. *

(இ-ள்) வளைகடல்-சமுத்திரஞ்சூழ்ந்த--உலகினில்-உலகத்தில்--மன்னர்-அரசர்கள்--தாடொழ-பாதத்திவணங்க--உளை-பிடரிமயிரையுடைய--அரி-சிங்கந்தாங்கிய--பைம்-பசுமைபொருந்திய---தவிசு-ஆசனத்தில்--உறையும்-இருக்கும்- எம்பிரான் - என்கருத்தன்--முளரியால்-முட்செடிகளால்--எங்கணும்-எவ்விடத்தும்-- முற்றும் நிறையப்பெற்ற--மண்டபத்து-மண்டபத்தில்---எளியர்போல் வறியோர்போல்--இருத்தி-இருக்கிறாய்--என்று-என்றுசொல்லி--விம்மினாள்-அழுதாள்--(எ-று) கொல்-அசை- (கருத்து) தமயந்திநளனைப்பார்த்துஏழைகளைப்போலிருக்கிறாயென்றழுதாள்-எ-ம்(உய)

தடங்கணீர்துடைத்துமெய்தைவந்தாயிழை... *
நடுக்கமென்றாற்றிடநள்ளியாமத்து... ........ *
மடங்கல்போன்மொய்ம்புடைமன்னர்மன்னவன்,
கொடுங்கைமேற்றுயின்றனள்பொன்னங்கொம்பனாள்

(இ-ள்) தடம்-விசாலமாகிய--கண்-கண்ணினின்றுவரும்-- நீர்-சலத்தை--துடைத்து-மாற்றி--மெய்-தேகத்தை -தைவந்து-தடவிக்கொடுத்து--ஆயிழை-பெண்ணே--நடுக்கமென்று- அஞ்சாதேயென்று--ஆற்றிட-தேற்ற- நள்ளியாமத்து-அர்த்தராத்திரியில்--மடங்கல்போல்-சிங்கம்போல--மொய்ம்புடை-பலத்தையுடைய-- மன்னர்மன்னவன்-அரசர்க்கரசனான நளமஹாராஜனுடைய-- கொடுங்கைமேல்-வளைந்தகைமீது--பொன்னங்கொம்பனாள் - அழகிய பொற்கொம்பையொத்ததமயந்தி---துயின்றனள் - நித்திரைசெய்தாள்--(எ-று) (கருத்து) தமயந்தி நளன்கைமேல் சிரசைவைத்து நித்திரைசெய்தாள் என்பதாம். (உக)

காண்புறுபடலம்- முற்றிற்று.

# பிரிவுறுபடலம்.

இப்படலத்தால் கானிடத்துச்சென்ற நளமஹாராஜன் அவ்விடத்தில் தமயந்திபடும் பெருந்துன்பத்தைக்கண்டு சகிக்காதவனாய் அதற்குக்காரணந் தானாகையால் தான்பிரிந்தால் அவள்சிறுதயருடன் அருகிலுள்ள தன்தாய்வீட்டை யடைவாளென் றெண்ணிப் பிரிவுறல் சொல்லப்படுகின்றது.

(கலிவிருத்தம்.)

விண்படுமின்னெனமிளிருமாகமு...............✻
மண்டபத்துயரொருவடிவுகொண்டெனக்......✻
கண்படுகோதையைநோக்கிக்காவலன்..... ...✻
புண்படுநெஞ்சொடும்புலம்பியெண்ணினான் ...✻

(இ-ள்) விண்படு-மேகத்திலுண்டாகிய--மின்னென - மின்னல்போல்--மிளிரும்-பிரகாசிக்கும்--ஆகமும்-சரீரமும்-- மண்பட-படிறியடைய--துயர்-துன்பமும்---ஒருவடிவம்-ஒருவடிவத்தை---கொண்டென-கொண்டதுபோல--கண்படு-நித்திரைசெய்யாநின்ற--கோதையை-தமயந்தியை---நோக்கி-பார்த்து--காவலன் - நளமஹாராஜன்--புண்படு-புண்பட்ட--நெஞ்சொடும்- மனதுடனே---புலம்பி-அரற்றி--எண்ணினான்-ஆலோசித்தான்---(எ-று)(கருத்து) நளன்தமயந்தியைப்பார்த்து அழுது எண்ணினான் -எ-ம். (க)

நண்ணருங்கானெலாந்தொடர்ந்துநண்ணுமேற்✻
கண்ணினாலிவடுயர்காணலாவதே........ ......✻
பெண்ணருங்கலத்தினைப்பிரியிற்றந்தையூ... .. ✻
ரண்ணியதவ்வுழியடைந்துவைகுமால்......, ... ✻

(இ-ள்) நண்ணரும்-பொருந்தற்கரிய---கானெலாம்- காடுமுழுதும்--தொடர்ந்து-பின்றொடர்ந்து--நண்ணுமேல்- அடையுமாறால்--கண்ணினால்-கண்களினால்---இவள்-இத்தமயந்தியினது--துயர்-துன்பத்தை--காணலாவதே-பார்க்கக்கூடுமோ -- பெண்ணருங்கலத்தினை-பெண்களுக்கரிய ஆபரணம்போன்ற இவளை--பிரியில்-நீங்கில்---தந்தை-பிதாவினுடைய--ஊர்-நகரமானது-- அண்ணியது சமீபமாயது--அவ்வுழி-அந்நகரத்தினிடத்து--அடைந்து - சேர்ந்

று--வைகும்-இருப்பாள்--(எ-று) ஆல்-அசை-(கருத்து) இவளைப் பிரிந்தால் தாய்வீட்டுக்குப்போவாள்-என்பதாம். (௨)

விரிமலர்ப்பூங்குழல்விழிக்கிலீங்கிவட்...... ...... *
பிரிகுவதரிதினிப்பிரியவெண்ணிலோ............. *
வொருதுகிலாயதித்துகிலையூறுசெய்............. *
கருவியிங்கேதெனக்கருத்தினெண்ணினான்..... *

(இ-ள்) விரி-மலர்ந்த—மலர்-புட்பத்தையணிந்த—பூ-பொலிவுபெற்ற—குழல்-கூந்தலையுடையதமயந்தி--விழிக்கில்-கண்விழித்துக்கொண்டால்--ஈங்கு-இவ்விடத்தில்--இவள் - இவளை--பிரிகுவது-நீங்குவது--அரிது-கூடாது--இனி-இனிமேல்--பிரிய-இவளைநீங்க--எண்ணிலோ-ஆலோசிக்கிலோ--ஒருதுகிலாயது-(இருவர்களும்) ஓராடையாயிருக்கின்றது--இத்துகிலை-இவ்வஸ்திரத்தை--ஊறுசெய்-துணிக்கின்ற--கருவி-ஆயுதம்--இங்கு - இவ்விடத்தில்--ஏதென-யாதென்று--கருத்தின்-மனதில்--எண்ணினான் - ஆலோசித்தான்--(எ-று) (கருத்து) தமயந்தி விழித்தால் பிரிதலரிது வஸ்திரமொன்று இதையறுக்கக் கருவியில்லையென்றெண்ணினான் என்பதாம்.

எண்ணியதுணர்ந்திவர்ப்பிரிப்பமுன்னமே..... *
கண்ணியவஞ்சகக்கலியும்வாளதாய் ........... *
நண்ணிமுன்கிடத்தலுமெடுத்துநாமவே...... *
வண்ணலுந்துகிலையரிந்திட்டானரோ...... ...*

(இ-ள்) எண்ணியது-ஆலோசித்ததை--உணர்ந்து - அறிந்து-- இவர்-இவ்விருவரையும், பிரிப்ப-பிரிக்க, முன்னமே-முன்னமே, கண்ணிய-கருதிய, வஞ்சக-கபடத்தையுடைய, கலியும்-கலிபுருஷனும், வாளதாய்-வாளாகி, நண்ணி-பொருந்தி, முன் எதிரில், கிடத்தலும்-இருந்த அளவில், எடுத்து-கையிலெடுத்து, நாமம்-அச்சத்தைத் தரும், வேல்-வேலையுடைய, அண்ணலும் நளனும், துகில்-வஸ்திரத்தை, நடு-மத்தியில், அரிந்திட்டான்-அரிந்தான் (எ-று) (கருத்து) கலி வாள்போலெதிரிற்கிடக்க நளன் அதையெடுத்துவஸ்திரத்தை யரிந்தான் என்பதாம். (௩)

சில்லரிநெடுங்கணாடெருளுறுவகை...... ... . ... *
மெல்லெனக்கொடுங்கையினீக்கிவெய்துயிர்த்.. *
தொல்லையிலுயிர்விடுமுடம்புபோன்மென...... *
வல்லலங்கடலிடையழுந்தினானரோ... ... ...... *

(இ-ள்) சில் - சிலவாகிய, அரி -அரிபரந்த, நெடும் - நீண்ட கணாள்-கண்களையுடைய தமயந்தி, தெருளுறுவகை - விழிக்காவி தமைக்கு, மெல்லென - மிருதுவாக, கொடுங்கையின்-வளைந்த கையி

னின்றும்---நீக்கி-அகற்றி---வெய்துயிர்த்து- பெருமூச்சுவிட்டு---ஒல்லையில்-சீக்கிரத்தில்---உயிர்-பிராணனை---விடும்-நீக்கும்--- உடம்புபோன்மென-தேகத்தைப்போல---அல்லலங்கடலிடை- துக்கசமுத்திரத்தில்---அழுந்தினன்-முழுகினன்---(எ-று) அரோ-அசை. (கருத்து) நளன் தமயந்தியைக்கையைவிட்டுநீக்கியழுதான், எ-ம்.

எழுமகன்றினியென்கொலாமென..........*
அழுமுயிர்துறந்தெனவவசமேற்கொளா ... ...*
விழுமிவட்காக்கெனமெலிந்துதெய்வதந் ... ...*
தொழுமினையனபலதுன்பமெய்துமால்... ...*

(இ-ள்) எழும்-எழுந்திருப்பான்---அகன்றால்-நீங்கினால்---இனி-இனிமேல்---என்கொலாமென-என்னவாகுமோவென்று---அழும்-புலம்புவான்---உயிர்துறந்தன-உயிர்நீங்கினவன்போல--- அவசமேற்கொளா-பரவசத்தைமேற்கொண்டு---விழும்- விழுவான்---இவள்-இவளை---காக்கென-இரக்ஷிக்கவென்று---மெலிந்து- வாடி---தெய்வதம்-வனதேவதைகளை---தொழும்-வணங்குவான்,--- இனையன-இவைபோன்ற---பல-அனேகமான---துன்பம்-துயரங்களை---எய்தும்-அடைவான்---(எ-று) (கருத்து)நளன் எழுவான் அழுவான் விழுவான் தமயந்தியைக்காக்க வனதெய்வங்களைத்தொழுவான் என்பதாம். (௬)

செல்லும்வெந்துயரொடுஞ்செல்லக்காலெழா...*
ஒல்லையின்மீளும்வெய்துயிர்க்குமொண்ணுதல்
கல்லதரிடைத்தனியேகிற்பேய்க்கணங்... ......*
கொல்லுமென்றாருயிர்குழைந்துசாம்புமால்...*

(இ-ள்) செல்லும்-நடப்பான்---வெந்துயரொடும் - வெவ்விய துக்கத்துடன்---செல்ல நடக்க---காலெழாது-அடியெழும்பாமல்---ஒல்லையில்-சீக்கிரத்தில்---மீளும்-திரும்புவான்--- வெய்துயிர்க்கும்-பெருமூச்சுவிடுவான்---ஒண்ணுதல்- ஒள்ளியநெற்றியையுடைய தமயந்தி---கல்லதரிடை-மலைவழியில்---தனி-தனியே--- ஏகில்-செல்வாளானால்---பேய்க்கணம்-பிசாசுக்கூட்டங்கள்---கொல்லுமென்று-கொன்றுவிடுமென்று---ஆருயிர்-நிறைந்தவுயிர்--- குழைந்து-குழைவுற்று---சாம்பும்-வாடுவான்---(எ-று) ஆல்- அசை - இது தன்மைநவிற்சியணி. (கருத்து) நளன் நடப்பான் திரும்புவான் பெருமூச்செறிவான் தமயந்தியைப் பேய் கொல்லுமென்று தளர்வான் என்பதாம். (௭)

ஆயிடையின்னணம்வருந்தியன்புகூர்... .. ...*
வேயுறழ்தோளியைப்பிரிந்துவெஞ்சின... ......*

மாயவெங்கொடுங்கலிவயத்தனாதலிற்...... *
போயினன்பித்தரிற்பொருவில்வாய்மையான.. *

(இ-ள்) ஆயிடை- அவ்விடத்தில்---இன்னணம்-இப்படியாக--- வருந்தி-துன்பமுற்று--- அன்புகூர் ஆசைமிகுந்த---வேயுரம்- மூங்கிலையொத்த---தோளினை- தோளையுடைய தமயந்தியை---பிரிந்து-நீக்கி---வெஞ்சினம்-வெவ்வியகோபத்தையும்---மாயம் - வஞ்சனையும்---வெம்-குரூரமான---கொடும்-கொடுமையையுமுடைய--கலி- கலிபனுக்கு---வயத்தனாதலின்-வசப்பட்டவனாதலால்--- பொருவில்- ஒப்பற்ற---வாய்மையான்-சத்தியத்தையுடைய நளன் --- பித்தரின்- பித்தரைப்போல் போயினன் (எ-று) (கருத்து) நளன் பித்தனைப் போல போனான் என்பதாம். (௮)

நள்ளிருட்போதுவெங்கானினாமவே...... .... *
லள்ளிலைப்பூணினானகன்றுபோதலும்...... *
விள்ளருந்துயரொடுமெலிந்துகண்படும்... ... *
பிள்ளைமானோக்கிதன்செய்கைபேசுவாம்... .... *

(இ-ள்) நள்ளிருட்போது-நடுராத்திரியில்---வெங்கானில்-வெவ்வியகாட்டில்- -நாமவேல்-அச்சத்தைச்செய்யும்வேலையும்---அள்-கூர்மைபொருந்திய---இலை தொங்கலையுடைய---பூணினான் - ஆபரணத்தையுடைய நளமகாராஜன்---அகன்று நீங்கி--- போதலும்-போனவளவில்---விள்ளரும்-நீங்குதற்கரிய---துயரொடு- துன்பத்துடனே---மெலிந்து-இளைந்து---கண்படு- நித்திரைசெய்கின்ற---பிள்ளைமான்-மான்கன்றுபோன்ற---நோக்கி-தன் கண்களையுடைய தமயந்தியினது--செய்கை-நடக்கையை---பேசுவாம் - சொல்லுவாம்---(எ-று) (கருத்து) புராணிகர் தமயந்திசெய்கையைச்சொல்லுவாமென்றார் என்பதாம். (௯)

நீடியதுயில்சிறிதுணர்ந்துநேரிழை ......... *
யாடகத்தொடிக்கையாலணைக்கக்காண்கிலா *
ளூடினள்பதைத்தனளுயிர்ப்புவீங்கின...... *
டேடினள்காந்தளஞ்செங்கைநீட்டியே ..... *

(இ-ள் நீடிய துயில்---மிகுந்தநித்திரையை---சிறிதுணர்ந்து-கொஞ்சந்தெளிந்து---நேரிழை-தமயந்தி---ஆடகத்தொடி- பொன்னாற்செய்தவளையலணிந்த---கையால்-கைகளால்---அணைக்க- தழுவ--- காண்கிலள் காணாதவளாய்--- ஊடினள்-பிணங்கினாள்--- பதைத்தனள்-துடித்தாள்---உயிர்ப்புவீங்கினள்-பெருமூச்சுவிட்டாள்---காந்தள்-காந்தள்மலரையொத்த---அம்-அழகிய---செங்கை - சிவந்த கையை---நீட்டி-நீட்டி---தேடினள்-தேடினாள்---(எ-று) இதுதன்

மைநவிற்சியணி. (கருத்து) தமயந்தி தன்கைகளால் நளனைடனைக் காணுதவளாய்ப் பிணங்கினாள் துடித்தாள் பெருமூச்சுவிட்டாள் கையாற்றடவினாள் என்பதாம். (௰)

ஆயிடைக்காண்கிலாதழுங்கிச்செங்கடை...... *
பாயரிநெடுங்கணீரருவிபாய்தரத்...... ... ...*
தூயமென்மலர்க்கரநெரித்துத்துண்ணென ...*
வாய்வெரீஇயால்வயிறதுக்கிமாழ்கினாள்........*

(இ-ள்) ஆயிடை--அவ்விடத்தில்---காண்கிலாது-(நளனைக்)காணுமல்---அழுங்கி-வருந்தி---செங்கடை- சிவந்தகடையையுடைய--பாய்-பரவிய---அரி-அரிகளையுடைய-. நெடும்-நீண்ட---கண்-கண்ணிலின்றும்--நீரருவி-நீர்வெள்ளம்--பாய்தர-ஒழுக, தூய.பரிசுத்தமாகிய, மென்.மிருதுபொருந்திய, மலர்க்கரம்.தாமலாமலர்போன்றகைகளை, நெரித்து.நெரித்து, துண்ணென.திடுக்கென்று, வாய்வெரீஇ.கூச்சலிட்டு, ஆல்.ஆலிலைபோன்ற, வயிறு.வயிற்றை, அதுக்கி.பிசைந்து, மாழ்கினாள்.மயங்கினாள்--(எ-று) * எகரவினாமுச்சுட்டின்முன்னருயிரும்பகரமுமெய்தின்வவ்வும் பிறவரினவையுந் தூக்கிற்சுட்டு நீளின்யகரமுந் தோன்றுதனெறியே இவ்விதியால்சுட்டுநீண்டது. (கருத்து) தமயந்தி நளனைக்காணுதுகண்ணீரொழுகக் கைகளைநெரித்துக் கூச்சலிட்டு வயிற்றைப்பிசைந்தழுதாள் என்பதாம். (௰௧)

தெளித்தபூம்பள்ளியிற்சிறிதுநீங்கினு... ... ...*
அளப்பருந்துயரொடுமவலமெய்துவேன்.. ...*
றளிப்பெயர்கங்குலிற்றமியண்மாழ்குற... ...*
வொளித்துநீதனிவிளையாடலுய்வனோ... ... ...*

(இ-ள்) தெளித்தபூ- புஷ்பங்களைப்பரப்பிய, பள்ளியில்.சயனத்தில், சிறிது.கொஞ்சம், நீங்கினும்.விலகினாலும், அளப்பரும்.அளவிடுதற்கரிய, துயரொடும்.துன்பத்துடன். அவலம்.வருத்தத்தை, எய்துவேன் அடைகின்றயான், தளிப்பெயல்.பனித்துளி துளிக்காநின்ற, கங்குலில்.இராத்திரியில், தமியள்.தனித்தவளாய், மாழ்குற.வருந்த, ஒளித்துநீ. நீமறைந்து, தனி.தனியாய், விளையாடல் விளையாடுதல், உய்வனோ. யான்பிழைப்பனோ--(எ-று) (கருத்து) மலரணையிற் பிரியிற் சகியாதநான் நீயொளித்துவிளையாடினுற் பிழைப்பனோஎன்றாள் என்பதாம். (௰௨)

(கொச்சகக்கலிப்பா)

கான்றருயிரொழுகக்கண்ணீர்கவுளலைப்ப...... ......*
ஆன்றேய்கணைபட்டுழலும்பிணையொத்தேன்... ...*

மான்றேரரசர் முடியுழுதவார்கழற்காற்,றோன்றலென்
கண்களிப்பவின்னமுமென்றோன்றிலையே...........*

(இ-ள்) கான்று-வெளிப்பட்டு—ஆருயிர்-பொருந்தியவுயிர்--சோர-நீங்க--கண்ணீர்-கண்ணீரானது—கவுள்-கன்னத்தலத—அலைப்ப-அலைக்க--ஊன்றேய்-தசைபடிந்த—கணைபட்டு- அம்புபட்டு—உழலும்-சுழலாநின்ற—பிணையொத்தேன்-மானுக்கொட்பானேன்—மான்றேர்-குதிரைகட்டியதேரையுடைய--அரசர்-அரசருடைய--முடி-கிரீடங்கள்--உழுத-படிந்த--வார்-நெடிய--கழல்-வீரக்கழலைத்தரித்த--கால்-பாதத்தையுடைய-தோன்றல்-அரசனே- என்-என்னுடைய--கண்களிப்ப-கண்மகிழ்ச்சியடைய--இன்னமும்-இந்நேரமட்டும்--என்-என்னகாரணத்தினால்--தோன்றிலை- காணப்படவில்லை—(எ-று) (கருத்து) தமயந்தி அரசனை என்கண்களுக்கின்னமுந்தோற்றவில்லை என்னகாரணமென்றாள் என்பதாம். (யரு)

நேரலார்போரேறேநிடதத்தார்கோமானே... ... ...*
யாரவரைமார்பாவளியேனுயிர்க்குயிரே .........*
காரிருள்வாயான்புலம்பக்கானகத்துவிட்டகன்றுஞ்..*
சாரலையாகவின்னுமிதுவோநின்றண்ணளியே......., ...※

(இ-ள்) நேரலார்-பகைவர்க்கு--போரேறே-போர்செய்கின்றசிங்கமே--நிடதத்தார்-நிடதேசத்தார்க்கு—கோமானே-அரசனே--ஆர-முத்துமாலையணிந்த--வரைமார்பா - மலைபோன்ற மார்பையுடையவனே--அளியேனுயிர்க்கு-ஏழையாகிய என்னுயிர்க்கு-- உயிரோ-உயிர்போன்றநளமஹாராஜனே—காரிருள்வாய் - கரியவிருளிடத்தில்—யான்-நான்--புலம்ப-புலம்பும்படி--கானகத்து- காட்டினிடத்தில்--விட்டகன்றும்-என்னைநீங்கியும்--இன்னும்-இவ்வளவு காலஞ்சென்றபின்பு—சாரலை-சேர்ந்தாயில்லை— (ஆகலால்) இதுவோ-இதுதானோ--நின்-உன்னுடைய—தண்ணளி-பெரிர்ந்கவருள்---(எ-று) ஆல்-ஏ-அசைகள்-(கருத்து) தமயந்தி நளனைக்குறித்து இதுதானோதயையென்றாள் என்பதாம். (யசு)

நெஞ்சமெலிவேனினதுகடந்தோளுங்...... .. ......*
கஞ்சமலர்முகமுங்காணா துகண்பனிப்ப... .. ..... ※
மஞ்சுதவழ்வெற்பெறிந்தயச்சிரத்தோனன்றளித்த... *
விஞ்சைபயின்றவிளையாட்டயருதியோ...... . ...*

(இ-ள்) நெஞ்சமெலிவேன்-மனம்வாடுகின்றயான்--நினது உன்னுடைய —கடந்தோளும்-விசாலமாகியதோள்களையும்—கஞ்சம்-தாமரைமலர்போன்ற—முகமும்-வதனத்தையும்--காணாது-பாராமல்--கண்பனிப்ப-கண்ணீர்விடும்படி—மஞ்சுதவழ்-மேகங்கள்தவ

ழ்கின்ற—வெற்பு-மலைகளின் (சிறகை)— எறிந்த-அறுத்த—வச்சிரத்தோன்-வச்சிராயுதத்தையேந்திய இந்திரன்—அன்று- தூதுசென்றவன்று—அளித்த-கொடுத்த—விஞ்சை - வித்தையை—பயின்று-பழகி—விளையாட்டயருதியோ-விளையாட்டுகின்றாயோ-(எ-று) (கருத்து) தமயந்தி நளனைக்குறித்து இந்திரன்கொடுத்தவித்தையால் விளையாட்டுகின்றாயோ என்றாள் என்பதாம். (௰௫)

ஞாலத்திருணடப்பநாட்கமலம்வாய்நெகிழ........*
வேலைத்திரைமுகட்டில்வெய்யோனெழுந்தனனால் ... *
மாலைக்கதிர்வடிவேன்மன்னர்பெருமானே............*
காலைக்கடவகடன்கழிக்கவாராயே... ........... ... ...*

(இ-ள்) ஞாலத்து-பூமியிலுள்ள— இருள் - அந்தகாரமானது—நடப்ப-செல்லவும்— நாள்-புதிய—கமலம்- தாமரைப்பூக்கள்—வாய்நெகிழ-மலரவும்--வேலை-கடலினது—திரை-அலைகளினது--முகட்டில்-உச்சியில்—வெய்யோன்-சூரியன்--எழுந்தனன் - உதித்தான்—(ஆதலால்) மாலை-வெற்றிமாலையணிந்த—கதிர்-ஒளிபொருந்திய—வடி-கூரிய—வேல்-வேலாயுதத்தையேந்திய—மன்னர்பெருமானே-அரசர்க்கரசனாகிய நளமஹாராஜனே—காலை- உதயத்தில்—கடவ-செய்யத்தக்க—கடன்-நித்தியகருமத்தை—கழிக்க-செய்துமுடிக்க—வாராயே-வாராயா—(எ-று) ஏ-அசை -(கருத்து) சூரியனுதயமாகினான் - காலக்கருமஞ் செய்யவாராயோ வென்றாள். என்பதாம். (௰௬)

மன்னவனேயிப்பிறப்பிற்கண்டுமணந்திலனேல்... ...*
இன்னமொருபிறப்பிலானுமேழையேன்... ... ...*
றன்னந்தனியேயிருந்துதவமாற்றியுமுன்......... ...*
பொன்னகலமுள்ளுருகப்புல்லாதொழிவேனோ .. ...*

(இ-ள்) ஏழையேன்-ஏழையாகியயான்—மன்னவனே-நளமஹாராஜனே—இப்பிறப்பில்-இந்தச்சனனத்தில்—கண்டு - (உன்னைக)கண்டு—மணந்திலனேல்- சேராமற்போவேனானால்—இன்னம்- இனிமேல்(வருஞ்செனனங்களுள்)— ஒருபிறப்பிலானும்-ஒருசனனத்திலாவது—தன்னந்தனியேயிருந்து-தனித்திருந்து— தவமாற்றியும்-தவத்தைச்செய்தாவது—உன்-உன்னுடைய— பொன்னகலம்-அழகுபொருந்தியமார்பை—உள்ளுருக-உள்ளமுருகும்படி— புல்லாது-தழுவாமல்—ஒழிவேனோ-நீங்குவேனோ—(எ-று) (கருத்து) இப்பிறப்பிற் புணராவிடினும் வருபிறப்பிற் புணருவேனென்றாள் என்பதாம். (௰௭)

வாவுமிளமான்காண்மயில்காண்மடப்பிடிகாள்... ...*
கூவுங்கரியகுயில்காண்மென்புள்ளினங்கா... .......*
ளாவியெனமேவியகலேமெனவகன்ற........ ......*
காவலன்றான்போனவழியெனக்குக்காட்டீரோ........*

(இ-ள்) வாவும் தாவாநின்ற—இளமான்காள் - இளமைதங்கிய மான்களே—மயில்காள்-மஞ்ஞைகளே—மடப்பிடிகாள் -அழகிய பெட்டையானைகளே—கூவும்-கூவுகின்ற—கரியகுயில்காள்-கருங் குயில்களே— மென்-மென்மையாகிய—புள்ளினங்காள்- பறவைக் கூட்டங்களே—ஆவியென-உயிரைப்போல—மேவி-பொருந்தி— அகலேமென-பிரியோமென்றுசொல்லி—அகன்ற-(இப்பொழுது நீங்கிய—காவலன்றான்-நளமஹாராஜன்—போனவழி-சென்றவழி யை—எனக்கு-என்றனக்கு--காட்டீரோ-நீங்கள்காட்டீரா—(எ-று) (கருத்து) மான்களே,மயில்களே,யானைகளே,குயில்களே, பறவை க்கூட்டங்களே நளமஹாராஜன்போனவழியைக்காட்டீர்களா என் றாள் என்பதாம். (யஅ)

என்றுருகியிருகண்ணீராலியுகத்.......................*
தன்றுத்தழும்பப்புலம்பித்தமியளாய்......... ... ...*
மின்றாரிடைநுடங்கச்செலவாள்விறல்வேந்தன்... .. *
பொன்றாரடிநோக்கிப்பூங்கொடிபோல்வீழ்ந்தழுதாள்

(இ-ள்) என்று-இப்படியென்று—உருகி-மனமுருகி—இருகண் இரண்டுகண்களினின்றும்—நீராலி-நீர்த்துளிகள்—உக- உதிர—த ன்று-தன்னுடையநாவானது—தழும்ப-தடிப்புறும்படி— புலம் பி-அரற்றி—தமியளாய்-தனித்தவளாய்—மின்-மின்னலின்றன்மை —ஆர்-நிறைந்த—இடை-இடையானது — நுடங்க-துவள—செல் வாள்-நடக்கின்றதமயந்தியானவள்—விறல்-வெற்றிபொருந்திய— வேந்தன்-நளமஹாராஜனது—பொன்றார்- அழகுபொருந்திய— அடி-பாதக்குறியை--நோக்கி-பார்த்து--பூங்கொடிபோல்- புஷ்பக் கொடிபோல--வீழ்ந்து-அதில்வீழ்ந்து--அழுதாள்-புலம்பினாள்— (எ-று) (கருத்து) தமயந்தி நளனடியைககண்டு வீழ்ந்தழுதாள்.

ஐயன்கமலவடிச்சுவடுகாண்டலுமே.................*
வெய்யதுயரவிடமீதூரவாய்புலராச்..............*
செய்யகமலமலரிற்றிருவனையாள்.............. ......*
கையறவாநெஞ்சங்கலுழாவுயிர்சோர்ந்தாள் ... .....*

(இ-ள்) ஐயன்-நளமஹாராஜனுடைய—கமலவடிச்சுவடு - தாம ரைமலர்போன்றபாதக்குறியை—காண்டலும் - கண்டவளவில்— வெய்ய-கொடிய--துயரவிடம்-துன்பமாகியவிஷம்,மீதூர-அதிக ரிக்க--வாய்புலரா-வாயுலர்ந்து—செய்ய-சிவந்த--கமலமலரில்-தாம

ளைப்புஷ்பத்திலிருக்கின்ற--திருவனையாள்-இலக்குமியையொத்தத மயந்தியானவள்—கையறவா-செயலற்று--நெஞ்சகலுழா- மனங் கலங்கி—உயிர்சோர்ந்தாள்-மூர்ச்சித்தாள்(எ-று) (கருத்து) தமய ந்தி மூர்ச்சையடைந்தாள் என்பதாம். (௨0)

இவ்வாறு துன்பக்கடலினிடைமூழ்கும்.................. *
மைவார்தடங்கண்மடமாதின்செவ்விமுகஞ்............ *
செவ்வான்மதியமெனச்செங்கட்டுளையெயிற்று........ *
வெவ்வாயரவமுருத்துவிழுங்கியதே................. *

(இ-ள்) இவ்வாறு-இந்தவிதமாய்--துன்பக்கடலினிடை- துன்பக் கடலில்--மூழ்கும்-அழுந்திய -மை-அஞ்சனமெழுதிய--வார் - நெ டிய—தடம்-விசாலமாகிய--கண்-நேத்திரங்களையும்--மடம் - அறி யாமையையுமுடைய—மாதின்-தமயந்தியினது--செவ்வி - அழகு பொருந்திய—முகம்-வதனத்தை--செவ்-செவ்வையாகிய -- வால் வெளுத்த--மதியமென-சந்திரனென்று(எண்ணி)--செங்கண்-சிவந் தகண்களையும், துளையெயிற்று-துவாரம்பொருந்தியபற்களையுடை ய—வெவ்வாய்-வெவ்விடவாயையுமுடைய-- அரவம்-மலைப்பாம்பு-- உருத்து-கோபித்து--விழுங்கியது-விழுங்கிற்று (எ-று) கண்டுமதி க்குச் செவ்வை நிறைவெனக்கொள்க-ஏ-அசை. (கருத்து) தமயந் தியை மலைப்பாம்பு விழுங்கியது என்பதாம். (௨௧)

நெய்த்தோரின்மூழ்கிநிணம்பருகும்வைவேலோய்... *
பைத்தோர்கொடுந்தறுகட்பாந்தள்விழுங்கியதா ...... *
லெய்த்தேனுயிர்காத்தற்கெய்தாயெனவழுதாள் ... *
மைத்தோய்குவளைமதர்நெடுங்கண்வாணுதலே... ... *

(இ-ள்) நெய்த்தோரில்-உதிரத்தில்—மூழ்கி-குளித்து--நிணம் மாமிசத்தை -- பருகும்-புசிக்காநின்ற--வை-கூர்மைபொருந்திய-- வேலோய்-வேலாயுதத்தையுடையநளமஹாராஜனே—பைத்து- ப டத்தையுடையதாகிய--ஓர்-ஒரு--கொடுந்தறுகண் - கொடியகோப த்தையுடைய—பாந்தள்-மலைப்பாம்பானது -- விழுங்கியது- (என் னை)விழுங்கியது—எய்த்தேன்-இளைத்தஎன்னுடைய-- உயிர்காத்த ற்கு-உயிரைக்காப்பதற்கு--எய்தாய்-வாராயோ--என-என்று, மை த்தோய்-அஞ்சனந்தோய்ந்து—குவளை-கருநெய்தல்போன்ற---ம தர்நெடுங்கண் - குளிர்ச்சிபொருந்திய நெடியகண்களையுடைய— வாணுதல்-தமயந்தியானவள்--அழுதாள்-புலம்பினாள்—(எ-று) (க ருத்து) தமயந்தி நளனைக்குறித்துப்புலம்பினாள் என்பதாம். (௨௨)

பொங்கழல்வெங்கானகத்துப்பூவையழுகுரல்கேட்... *
டங்கோர்சிலைக்கையடல்வேடன்வந்தணுகி............ *

வெங்கணரவெறிந்துவெவ்வாயிடைநின்றுங் .... ......*
கொங்கவிழுமென்கூந்தற்கோதைதனைநீக்கினனால்...*

(இ-ள்) பொங்கழல்-மிகுந்தவக்கினியையுடைய--வெம்-வெப்பமாகிய—கானத்து-காட்டிலில்—பூவை-தமயந்தியானவள்—அழும்-புலம்புகின்ற—குரல்கேட்டு-சத்தத்தைக்கேட்டு—அங்கு-அவிடத்தில்—ஓர்-ஒரு—சிலைக்கை-வில்லைக்கையிலேந்திய—அடல்-பலம்பொருந்திய--வேடன்-வேடனானவன்--வந்தணுகி-வந்துசேர்ந்து—வெங்கண்-வெவ்வியகண்களையுடைய—அரவு-மலைப்பாம்பை—எறிந்து-பிளந்து—வெவ்வாயிடைநின்றும்-வாயிலிருந்தும்—கொங்கவிழ் வாசனைவீசாநின்ற—மென்கூந்தல்-மென்மையாகியகூந்தலையுடைய—கோதைதனை-தமயந்தியை—நீக்கினன்-விடுத்தான்-(எ-று) ஆல்-அசை (கருத்து) வேடன், தமயந்தியைப்பாம்பிலிருந்துவிடுவித்தான் என்பதாம்.　　(௨௫)

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

வெய்யவராவின்பகுவாயின்விடுத்தமடமானெழினோக்கி ....*
மையல்கூர்ந்தநெஞ்சினனாய்வரிவிற்றடக்கைவயவேடன் ...*
றொய்யின்முலைமேற்புல்லுதற்குத்தொடரத்துஞ்சா வருங்கற்.
பின்னையன்முனிந்துநோக்குதலுஞ்சாம்பராயிற்றவனுடலே.*

(இ-ள்) வெய்ய-கொடியதாகிய—அரவின்-மலைப்பாம்பினது—பகுவாயின்-பிளப்பாகியவாயினின்றும்--விடுத்த-விடுக்கப்பட்ட—மடமான்-தமயந்தியினது—எழில்-அழகை—நோக்கி-பார்த்து—மையல்கூர்ந்த-மோகித்த--நெஞ்சினனாய்-மனமுள்ளவனாய்---வரிவில்-நீண்டவில்லையேந்திய--தடக்கை-விசாலமாகியகையையுடைய—வயம்-வெற்றிபொருந்திய--வேடன்-வேடனானவன்-- தொய்யில்-சந்தனக்கோலமணிந்த—முலைமேல்-ஸ்தனத்தின்மேல், புல்லுதற்கு-அணைதற்கு—தொடர-பின்றொடர—துஞ்சா-கெடாத--அரும்-அருமையாகிய— கற்பின்-கற்பினையுடைய—தையல் - தமயந்தியானவள்--முனிந்து-கோபித்து—நோக்குதலும்- பார்த்தமாத்திரத்தில்—அவனுடல்-அவ்வேடனுடலம்—சாம்பராயிற்று-நீறாயிற்று (எ-று ஏ-அசை. (கருத்து) வேடன்தமயந்தியைப்புணரத்தொடர்ந்தவளவில் தமயந்தி பார்க்க வேடன்எரிந்துபோனான் என்பதாம்.

கற்பினழலாற்கொடுஞ்சிலைக்கைவேடனுடலங்கரியாக்கிப் ...*
பொற்பின்றுணைபோய் நலங்கனிந்தபொன்னம்பாவைபுலம்
பெய்தி, வெற்பினுயர்தோள்வேந்துசெலும் வெங்கான்றுருவி
யேகுதலு. மற்பின்முனிவர்தவமியற்றுஞ்சாலைநோக்கியருகணைந்தாள்........................................ ..........*

(இ-ள்) கற்பினழலால்-பதிவிரதத்தியாக்கினியால்— கொடுஞ் சிலைக்கை-கொடியவில்லைக்கையிலேந்திய--வேடனுடலும் வேடன் சரீரத்தை--கரியாக்கி-சாம்பராக்கி--பொற்பின்றுறைபோய்- அழகிற்சிறந்து--நலங்கனிந்த - நன்மைமிகுந்த--பொன்னம்பாவை - தமயந்தியானவள்--புலம்பெய்தி-அழுதுகொண்டு--வெற்பின் - மலைபோல்- உயர் உயர்ந்த--தோள்-புயத்தையுடைய —வேந்து-நளமஹாராஜன்- செல்லும்-செல்லாநின்ற--வெங்கான்-வெவ்வியகாட்டினில்--துருவி தேடிக்கொண்டு--ஏகுதலும்-போகுமளவில்--அற்பின்-அன்பினையுடைய--முனிவர்-முனிவர்கள்--தவமியற்றும்- தவஞ்செய்யாநின்ற--சாலை-பர்ணசாலையை--நோக்கி-பார்த்து-- அருகு-அதனருகில்--அணைந்தாள்-சேர்ந்தாள்—(எ-று) (கருத்து) தமயந்தி முனிவர்கள் தவச்சாலையிற்சார்ந்தாள்- எ-ம். (௨௫)

அடைந்தமானின்முகநோக்கியாரைநீவெவ்வழற்கானி, னடந்துதனியேயித்தலையிற்போந்ததென்னைநளினமலர்த், தடங்கண்
கலுழ்ந்துபுலம்பெய்துந்தன்மையெவன்கொல்சாற்றுகென-
மடந்தைபுகுந்தவாறனைத்துமுனிவர்கேட்பவகுத்துரைத்தாள்

(இ-ள்) அடைந்த - தம்மிடத்துவந்த--மடமான் - தமயந்தியினது- முகம்-வதனத்தை--நோக்கி-பார்த்து--யாரைநீ-நீயார் - வெவ்வழல்-வெவ்விய அழல்பொருந்திய--கானில்-காட்டினில்-- நடந்து-காலானடந்து--தனியே-தனிமையாகிய--இத்தலையில்- இவ்விடத்தில்--போந்ததென்னை-வந்ததென்னகாரணம்--நளினமலர்- தாமரைமலர்போன்ற--தடங்கண் - விசாலமாகியகண்கள்--கலுழ்ந்து - கலங்கி--புலம்பெய்துந்தன்மை- துன்பப்படுதல்--எவன்கொல்- என்னகாரணம்--சாற்றுகென-சொல்லென்று--முனிவர்கேட்ப - முனிவர்கள்கேட்க--மடந்தை-தமயந்தியானவள்--புகுந்தவாறனைத்தும்- நடந்தவையெல்லாம்--வகுத்து-பிரித்து--உரைத்தாள்- (அவர்க்குச்) சொல்லினாள்—(எ-று) (கருத்து) முனிவர்கள்கேட்கத்தமயந்தி நடந்தவையெல்லாஞ்சொன்னாள் என்பதாம். (௨௬)

கேட்டவளவிலுளமுருகிக்கிள்ளைமருட்டும்பனிமொழியாய் *
வாட்டமொழிதிதிற்பிரிந்தவடிவேலனைனைச்சின்னாளி, னாட்டங்
களிப்பக்கண்டுமுன்போனலம்பெற்றிருத்தியெனநவிலா- வி
ட்டிருந்தவத்தோர்மறைக்கிழவரிருக்கைநோக்கியேகினரால். *

(இ-ள்) கேட்டவளவில்- (இச்செய்தியைக்) கேள்வியுற்ற மாத்திரத்தில் -உளமுருகி-மனமுருகி--கிள்ளை - கிளிப்பிள்ளைகளை--மருட்டும்-வெருட்டாநின்ற--பனிமொழியாய்-குளிர்ந்த சொற்களையுடையதமயந்தியே---வாட்டம்-சோர்வை--ஒழிதி - ஒழித்துவிடு--திற்பி

ரிந்த-உன்னைப்பிரிந்த--வடிவேல்-கூர்மையுடையவேலேந்திய--நளனை-நளமஹாராஜனை--சின்றாளில்-சிலநாளிலே-- நாட்டங்களிப்ப-கண்கள்களிப்ப--கண்டு-பார்த்து--முன்போல்-முன்னம்போல--நலம்பெற்ற நன்மையையடைந்து,இருத்தியென-இருப்பாயாகவென்று--நவிலா-ஆசீர்வதித்து--ஈட்டுந்தவத்து-தவஞ்செய்கின்ற--ஓர் ஒப்பற்ற--மறைக்கிழவர்-அந்தணர்கள்--இருக்கைநோக்கி- (தாங்கள்) இருக்குமாச்சிரமத்தைக்குறித்து- ஏகினார்-சென்றார்கள்- (எ-று) ஆல்-அசை.(கருத்து) முனிவர்கள் ஆசீர்வதித்துப்போனார்களெம்

பிசிர்ந்தபசும்பொற்றிதலைமுலைப்பெய்பூங்கோதைபிணைபோ
ல்வா,ளெதிர்ந்தவணிகர்வழித்துணையாயேகிக்கதிர்மாமணிவா
ரி,யதிர்ந்துபுனல்பாய்பேராற்றங்கரையிலுறையுமரையிரு
ளின், முதிர்ந்தசினத்துப்பிறைக்கோட்டுமூரிக்களிறொன்ற
ணுகியதால்.............................................. *

(இ-ள்) பிதிர்ந்த-உதிர்ந்த--பசும்பொன்-பசியபொன்போன்ற--திதலை-தேமலையுடைய--முலை-ஸ்தனங்களையும்--பெய்பூங்கோதை-மலர்மாலையணிந்தகூந்தலையுமுடைய-பிணைபோல்வாள்-மான்போன்றதமயந்தியானவள்--எதிர்ந்த-எதிர்ப்பட்ட--வணிகர் - வர்த்தகர்--வழித்துணையா - வழித்துணையாக--ஏகி - போய்-- கதிர்மாமணி-ஒளிபொருந்தியசிறந்தமணிகளை--உரன்றி - வாரிக்கொண்டு--அதிர்ந்து-இரைந்து -புனல்-சலமானது--பாய் - பெருகாநின்ற--பேராற்றங்கரையில-பெரியஆற்றங்கரையினிடத்தில்,உறையும்-வாசஞ்செய்கின்ற--அரையிருளின்-அர்த்தராத்திரியில்- முதிர்ந்த-மிகுந்த, சினத்த-கோபத்தையுடையதும், பிறைக்கோட்டு-பிறைபோன்றகொம்புகளையுடையதுமாகிய, மூரி-வலிமையுடைய, களிறொன்று-ஒருயானையானது, அணுகியது. வந்துநெருங்கிற்று—(எ-று) ஆல்-அசை.(கருத்து)தமயந்தியினிடத்துயானைவந்ததென்பதாம்.

அணுகியாங்குப்புலம்பெய்துமலர்பூங்கோதைமயிலொழிய *
வணிகமாக்களியாவரையுமதமால்யானைகொன்றேகத்... .. *
துணைவந்தடைந்தோர்யாவரையுங்கொலைத்துநடந்தபருஉத்
தடக்கை, யிணைவெண்கோட்டுக்களிறென்னை யென்கொலலா
ததெனக்கலுழ்ந்தாள்........................................ *

(இ-ள்) ஆங்கு.அவ்விடத்தில், அணுகி.வந்தடைந்து, புலம்பெய்தும்-புலம்பாநின்ற, அலர்பூங்கோதை. மலர்ந்த பூமாலையணிந்த அளகபாரத்தையுடைய, மயில். தமயந்தியானவள், ஒழிய . நீங்கலாக, வணிகமாக்களியாவரையும் . வர்த்தகரனைவரையும், மதம். மும்மதம்பொருந்திய, மால்யானை . பெரியயானையானது, கொன்

று-கொலைசெய்து—ஏக-போகாநிற்க—துணை-துணையாக—வந்தடைந்தோர்-வந்தடையப்பட்ட—யாவரையும் - அனைவரையும்—தொலைத்து-கொன்று—நடந்த-சென்ற—பருஉத்தடக்கை- பருத்து நின்ற துதிக்கையையும்—இணை.இரண்டாகிய——வெண்.வெளுமைபொருந்திய—கோட்டு-கொம்புகளையுமுடைய—களிறு - யானையானது—என்னை-(துன்பப்படுகின்ற என்னை—என் - என்னகாரணத்தால்—கொல்லாது-கொல்லாமற்போயிற்று—என-என்று—கலுழ்ந்தாள்-புலம்பினாள்—(எ-று) (கருத்து) வியாபாரிகளைக் கொன்ற யானை தன்னைக்கொல்லவில்லை என்றரற்றினாள் என்பதாம்.

சாதலொழிந்தவழிச்செல்வோர் துணையாவுள்ளந்தளர்வெய்திப்
பாதமலர்கொப்புளமெய்திப்பனிக்கப்பரல்வெங்கானிறந்து*
கோதைவடிவேல்வலனேந்துகுவவுத்திணிதோட்சுவாகுவெனுஞ்,சேதிபதிதன்வளநகரிற்சென்றாள்விதர்ப்பன்சேயிழையே

(இ-ள்) சாதலொழிந்த—இறக்காமல்சேடித்துநின்ற—வழிச்செல்வோர்-வழியிற்செல்லுகின்ற பிராமணர்கள்—துணையா - சகாயமாகக்கொண்டு—உள்ளந்தளர்வெய்தி-மனங்கலங்கி—பாதமலர்-மலர்போன்றபாதங்கள்—கொப்புளமெய்தி - கொப்புளித்து—பனிக்க-நீரொழுக—பரல் - பருக்கைகளையுடைய—வெங்கான்-வெவ்வியவனத்தை—இறந்து-விட்டுநீங்கி—கோதை - வெற்றிமாலையணிந்த—வடிவேல்-கூர்மைபொருந்தியவேலாயுதத்தை--வலன் - வலதுபுறத்தில்—ஏந்து-தாங்காநின்ற—குவவு-திரட்சியையும்— திணி-வலிமையையுமுடைய—தோள்-புயத்லதயுடைய— சுவாகுவெனும்-சுவாகுவென்னும்பெயரையுடைய—சேதிபதிதன்- சேதிதேயத்தரசனது—வளநகரில்-வளப்பம்பொருந்தியபட்டினத்தில்—விதர்ப்பன்சேயிழை-தமயந்தியானவள்—சென்றாள் - சேர்ந்தனள்—(எ-று) (கருத்து) தமயந்தி சேதிபதிநகரத்தைச் சார்ந்தாள்-எ-ம்.

துணிபட்டொழிந்தமென்றுகிலுஞ்சுடர்விட்டொளிரமண்ணுத-மணியிற்றோன்றிமாசடைந்தவடிவும்விரிந்தவார்குழலும்,
பிணியுற்றுழலுநெஞ்சமுமாய்ப்பித்தேறினர்போற்,கோமறுகி-லணுகச்சேதிபதிதாய்கண்டார்கொலிவ ளென்றையுற்றாள்.

(இ-ள்) துணிபட்டொழிந்த-துண்டிடப்பட்ட— மென்றுகிலும்-மெலலிய ஆடையும்—சுடர்விட்டொளிர - ஒளிவிட்டுவிளங்கும்படி—மண்ணுத-கழுவாத—மணியில்-இரத்நம்போல—தோன்றிகாணப்பட்டு—மாசடைந்த-அழுக்கடைந்த—வடிவம் - உடம்பும்—விரிந்த-அவிழ்ந்த—வார்குழலும்-நீண்டகூந்தலும் — பிணியுற்று-துன்பப்பட்டு—உழலும்-கலங்காநின்ற--நெஞ்சமும்-மனமும்

ஆய்-(ஆகிய இவைகளை யுடையவ) ளாய்--பித்தேறினர்போல்- பித்தர்போல--கோமறுகில்-இராசவீதியில்--அணுக-(தமயந்தி) வர--சேதிபதி-சுவாகுவாசனது--தாய்-தாயானவள்--கண்டு - (தமயந்தியைக்) கண்டு--ஆர்கொலிவள்-இந்தப்பெண்யாரோ--என்று-என்று--ஐயுற்றாள்-சந்தேகித்தாள்--(எ-று) (கருத்து) சேதிபதிதாயார் தமயந்தியைக்கண்டு ஐயமுற்றாள் எ-ம். (௩௧)

பொன்னம்பாவையுடன்முழுதும்புகையுண்டென்னச் சவிமழுங்கு-மின்னுண்மருங்குற்சிலோதியணங்கோவரசர் மடமகளோ-வென்னத்தெருளேனீங்கிவளையீண்டுக்கொணர்திரென்
மருங்கின்-மன்னுமகளிர்தமைப்பணிப்பவிடைகொண்டவருமருகணைந்தார்................................................... ஜ

(இ-ள்) பொன்னம்பாவை-பொற்பதுமையானது — உடன் முழுதும்-உடம்புமுழுமையும்—புகையுண்டென்ன- புகையுண்டதுபோல—சவிமழுங்கும்-ஒளிமழுங்கிய — மின் - மின்னலையொத்த — நுண்-நுட்பமாகிய—மருங்குல்-இடையையுடைய— சிலோதி-இப்பெண் — அணங்கோ-தெய்வப்பெண்ணோ — அரசர் மடமகளோ-இராஜகுமாரத்தியோ — என்ன-என்று — தெருளேன் - தெளியேன்-ஈங்கு-இவ்விடத்தில் — இவளை-இப்பெண்ணை — ஈண்டு - சீக்கிரத்தில் — கொணர்திர்-கொண்டுவாருங்கள் — என-என்று — மருங்கின்மன்னும்-அருகிலுள்ள — மகளிர்தமை-ஸ்திரீகளை — பணிப்ப-(அவ்வாசனதாயானவள்)சொல்ல--விடைகொண்டு உத்தரவுபெற்றுக்கொண்டு—அவரும்-அம்மாதர்களும்—அருகு - தமயந்தி சமீபத்திலே—அணைந்தார் - வந்தார்கள்---(எ-று) (கருத்து) சேதிபதிதாய் இவளையழையென்றுசொல்லப் பெண்களழைக்கப்போனார்கள் என்பதாம். (௩௨)

அடைந்தமாதர்தனிப்போந்தவணங்கின்கமலமுகநோக்கிகடைந்தமணிச்செப்பெனப்புடைத்துக்கதித்துவீங்குவனமுலைபாய்-படங்கொளரவின்முடிகிடந்தபார்தாங்கிறைவன் றனையீன்ற-மடந்தைவருகென்றனளென் னவான்றேய்மாடத்தினிதணைந்தாள்................................................... *

(இ-ள்) அடைந்தமாதர்-வந்தஸ்திரீகள் — தனிப்போந்த-தனித்துவந்த--அணங்கின்-தமயந்தியினது--கமலமுகநோக்கி - தாமரைமலர்போன்றமுகத்தைப்பார்த்து--கடைந்த - கடைதலிடப்பட்ட--மணிச்செப்பென-இரத்தினகும்பங்கள்போல — புடைத்து-அடிபாந்து--கதித்து - பருத்து--வீங்கும்-வளாநின்ற-- வனமுலையாய்-அழகிய ஸ்தனங்களையுடையபெண்ணே--படங்கொள்-படத்தைக்கொண்ட—அரவின்-ஆதிசேடனுடைய--முடி - முடியின்

மேல்—கிடந்த-இருந்த--யார்-பூமியை-தாங்கு - தரிக்கா நின்ற--இறைவன்றனை-சுவாகுராஜனை--ஈன்ற பெற்ற---மடந்தை - அவளது தாயானவள்--வருகென்றனள்-(உன்னை)வாச்சொல்லினள்— என்ன-என்றுசொல்லாநிற்க —வான்றோய் - ஆகாயமளாவிய--மாடத்து-உபரிகையில்--இனிது-இன்பத்தோடு--அடைந்தாள்- (தமயந்தியானவள்)சேர்ந்தாள்--(எ-று) (கருத்து) பெண்கள் அழைக்கத்தமயந்திவந்தாள் என்பதாம். (௬௩)

வந்தமடமான்முகநோக்கிவரிவண்டூதப்பொதியவிழ்ந்த ... *
வந்தண்கமலமலர்கவற்றியழகுவாய்ந்தமுகம்பசப்பச் .... *
சிந்தைதளர்ந்துதனிப்போதற்குற்றதெவன்கொல் சேயிழை
யா - யுந்தையா * ருன்றலைவனெவனுன்பேர்யாதிங்குரையெ
ன்றாள் .................................................. *

(இ-ள்) வந்த-தன்னிடத்துவந்த--மடமான்- தமயந்தியினது--முகநோக்கி - முகத்தைப்பார்த்து- சேயிழையாய் - பெண்ணே—வரிவண்டு-இசைப்பாட்டினையுடையவண்டுகள்--ஊத-ஒலிக்க--பொதியவிழ்ந்த-கட்டவிழ்ந்த--அந்தண்கமலமலர் - அழகியகுளிர்ந்ததாமரைமலர்களை--கவற்றி-கவலச்செய்து--அழகுவாய்ந்த - அழகுபொருந்திய--முகம்-வதனமானது--பசப்ப - பசலைநிறமடைய--சிந்தைதளர்ந்து-மனந்தளர்ந்து--தனிப்போதற்கு- தனித்துவருதற்கு—உற்றது-பொருந்தியது- எவன்- யாது--உந்தை - உன்றகப்பன்--யார்-எவன்--உன்றலைவன் - உன்கணவன்--எவன்-யார்--உன்பேர்-உன்னுடையநாமதேயம்--யாது-ஏது--இங்கு - இவ்விடத்தில்--உரையென்றாள் - (அரசன்றாய்) சொல்லென்றாள்--(எ-று) * இலக்கணக்கொத்து-வினையியல்-உக-கூ-வேறில்லையுண்டியார் வேண்டுந்தகும்படும்-வினைபெயரெச்சம்வியங்கோள்பத்துந்- திணைபாலிடமெலாஞ்செல்லுமென்ப-இவ்விதியால்-யாரென்பதுதிணைபாலிடங்களிலுயர்திணைக்குரித்து(கருத்து) சேடியதிதாய் தனியேபோவதென்ன உன்தகப்பனார் உன்கணவனார் உன்பேரென்னசொல்லென்றாள் என்பதாம். (௬௪)

வீமன்புதல்விபுகழ்நிடதவேந்தர்கோமான்மனைக்கிழத்தி ... *
நாமம்பகரிற்றமயந்தியென்பாடன்கொண்ணலற்குக் .. *
காமர்நிதியும்வளநாடுஞ்சூதிலிழந்துகானிடைப்போ...... *
யாமந்தனின்மற்றவட்பிரியவவளைத்தேடியண்டனைந்தேன் *

(இ-ள்) வீமன்புதல்வி-வீமராஜன்மகள்--புகழ் - புகழப்பட்ட--நிடதவேந்தர்கோமான் - நளமஹாராஜனது -- மனைக்கிழத்தி-மனையாள்--நாமம்பகரில் - பேர்கூறுமிடத்து-- தமயந்தியென்பா

ள்-தமயந்தியென்று சொல்லப்படுவாள்--தன்கோன்- அவளதுகண
வனானவன்--நண்ணலர்க்கு-பகைவருக்கு--காமர்திறியும் - விரும்ப
ப்படுகின்ற தனங்களையும் -வாநாடும் - செழித்தநாட்டையும்--சூ
திற்-சூதினில்--இழந்து-தோற்றுவிட்டு--கானிடைப்போய் - வன
த்திற்சென்று--யாமத்தினில்-இராத்திரியில்--அகட்பிரிய - அவளைப்
பிரிய--அவளை-அத்தமயந்தியை--தேடி-தேடிக்கொண்டு-- ஈண்டு-
இந்நகரில்--அணைந்தேன்-வந்தேன்.--(எ-று) (கருத்து) நளன்சூதி
லே நாடிழந்து தமயந்தியைக்காட்டில்விட்டுப்பிரிய அவளைத்தே
டி நான்வந்தேன் என்றான் என்பதாம். (௫௫)

அனையமடமானுயிர்த்தோழியானென்றுரைப்பவகமகிழ்ந்து
தனியளாகிக்கொடுங்கானிற்றலைவன்பிரியத்தளர்ந்தேங்கும் *
கனைவண்டிமிருங்கருங்குழலைக்காணுமளவுமிந்நகரி .. ... *
வினையல்வாழியிருத்தியெனவிசைந்தாங்கவளுமிருந்தனளால்.

(இ-ள்) அனையமடமான் - அத்தமயந்தியினுடைய-- உயிர்த்
தோழி-உயிரையொத்ததோழி--யான்-நான்--என்றுரைப்ப - என்
று(தமயந்தி)சொல்ல--அகமகிழ்ந்து - சந்தோஷித்து-- கொடுங்
கானில்-கொடியகாட்டிலில்--தலைவன்-கணவன்--பிரிய - பிரிந்தேக
--தனியளாகி-தனித்தவளாகி--தளர்ந்து-தளர்ச்சியடைந்து-- ஏங்கு
ம்-துன்பப்படாநின்ற--கனை-கனைக்கின்ற--வண்டு- வண்டுகள்-- இ
மிரும்-சத்தியாநின்ற--கருங்குழலை-கரியகூந்தலையுடைய தமயந்தி
யை--காணுமளவும்-பார்க்குமளவும்--இந்நகரில்-இந்நகரத்தில்--இ
ருத்தி-இருப்பாயாக--இனையல்-வருத்தப்படாதே--வாழி - வாழக்க
டவை--என-என்று (அரசன்றாய்)சொல்ல--இசைந்து-(அவள்சொ
ல்லுக்கு)இசைந்து--ஆங்கு-அந்நகரத்தில்--அவளும்- அத்தமயந்தியு
ம்--இருந்தனள்-இருந்தாள்--(எ-று) (கருத்து) தமயந்தி தோழி
தானென்றுசொல்லச் சேதிபதிதாய் அவளைக்காணுமளவு மிங்கிரு
வென விருந்தாள் என்பதாம். (௫௬)

காதல்கூர்ந்துதன்மகளாஞ்சுனந்தைக்கதிர்வாண்முகநோக்கி
மாதர்நோக்கிம்மடவரலைவருந்தாதளித்தியெனவேவி .....*
பேதமின்றியவள்காப்பவிருந்தாண்மற்றிங்கிதுநிற்க .... *
கோதைவடிவேளைாற்சூற்றசெய்தியனைத்துங்கூறுவாம் ... ௨

(இ-ள்) காதல்கூர்ந்து - அன்புசெய்து--தன்மகளாஞ்சுனந்
தை-தன்னுடையமகளாகியசுனந்தையினது--கதிர்வாள் - மிகுந்த
ஒளிபொருந்திய--முகம்- முகத்தை--நோக்கி - பார்த்து--மாதர்
நோக்கு-அழகியபார்வையையுடைய--இம்மடவரலை - இப்பெண்
ணை--வருந்தாது-துன்பப்படாமலிருக்கும்படி--அளித்தி- காப்பா

ய்-எனவேலோடும்-என்று அரசன்றாய்) சொல்லியவளவில்--ஏதமின்றி-பழுதின்றி--அவள்-அச்சுனந்தையானவள்--காப்ப - இரக்ஷிக்க--இருந்தாள்- (தமயந்தி) இருந்தனள்--ஈங்கு - இவ்விடத்தில்-- இது-இச்செய்தி--நிற்க-இருக்க--கோலதவடிவேல்- வெற்றிமாலையணிந்த கூரியவேலையேந்திய--நளற்கு-நளமஹாராஜனுக்கு--உற்ற- பொருந்திய--செய்தியனைத்தும் - செய்கையனைத்தையும் -- கூறுவாம்-சொல்லுவாம்---(எ-று) மற்று - அசை - (கருத்து) நூலாசிரியர் தமயந்தி இவ்வாறிருக்க நளன்செய்தியைச் சொல்லுவோமென்றார் என்பதாம்.. (௬௭)

பிரிவுறுபடலம்- முற்றிற்று.

---

# வேற்றுருவமைந்தபடலம்.

இப்படலத்தால் நளமஹாராஜனுக்கு நாட்டிற்செல்லினும் பிறரறியாதிருக்கும்படி வேற்றுருவமைந்தமை சொல்லப்படுகின்றது.

(கலிநிலைத்துறை)

கள்ளுயிர்க்குமென்மலர்க்குழற்காமர்பூங்கொடியை.. *
நள்ளிருட்பொழுதகன்றனனண்ணருங்கானிற்.. ... ※
றள்ளுதற்கருந்துயரொடுபோதலுந்தழலு... ... ...*
மொள்ளழற்புகைக்கொழுந்தெழக்கண்டனனுரவோன்

(இ-ள்) உரவோன்-நளமஹாராஜன்--கள்ளுயிர்க்கும் - தேனைத்தருகின்ற--மென்மலர்-மெல்லியமலர்களையணிந்த---குழல் - கூந்தலையுடைய--காமர்-அழகுபொருந்திய---பூங்கொடியை - தமயந்தியை--நண்ணரும்-அடைதற்கரிய-- கானில-வனத்தில் -- நள்ளிருட்பொழுது-நடுராத்திரியில்--அகன்றனன்-விட்டுப்பிரிந்தவனாய்--தள்ளுதற்கரும்-ஒழித்தற்கரிய--துயரொடும் - துன்பத்துடனே--போதலும் - செல்லுமளவில்--தழலும் - தகிக்காநின்ற--ஒள்ளழல்-ஒளிபொருந்தியதீயினது--புகைக்கொழுந்து-தூமக்கொழுந்து---எழ-எழும்பாநிற்க--கண்டனன்-அதைப்பார்த்தான்---(எ-று) (கருத்து) நளன் அக்கினிவளர்ந்தெழக்கண்டான் என்பதாம். (௧)

செஞ்சுடர்ச்சிகைவளைதலிற்றெருமரலெய்தி... ... ...※
நஞ்சுயிர்க்கும்வாளரவொன்றழாமவேலிறைவ... ...*

நஞ்சநீயெனையளித்தியென் றனாத்தனுந்தாழா..... *
நஞ்சலஞ்சலென்றடைந்தனன்மடக்கலேறனையான்..*

(இ-ள்) செஞ்சுடர்ச்சிகை-அக்கினிச்சுவாலையானது-- வளைத்தலின்-சுற்றிக்கொண்டமையால்--தெருமரலெய்தி - மனங்கலங்கி-- நஞ்சுயிர்க்கும்-விஷத்தைத்தருகின்ற--வாளரவொன்று - ஒளிபொருந்திய ஒருகார்க்கோடகனென்னு நாகமானது—நாமவேல்- அச்சத்தைத்தருகின்றவேலையேந்திய — இறைவ- நளமஹாராஜனே, நீ-நீயே — தஞ்சம்-இரக்ஷகன் — எனை-என்னை —அளித்தி- காக்கவேண்டும்—என்றனாத்தனும்-என்றுசொல்லியபடியால் — தாழாது-தாமதியாது--அஞ்சலஞ்சல-பயப்படாதே பயப்படாதே-- என்றுரைத்தனன்-என்றுசொல்லுவாய்--மடங்கலேறனையான் - நளமஹாராஜன், அடைந்தனன்- அருகிலடைந்தான்--(எ-று) (கருத்து) பாம்புதன்னைக்காப்பாற்றென்ன நளன்பயப்படாதேயென்றான் எ-ம்.

கனைசெழுஞ்சுடர்க்கொழுங்கனல்படர்தலிற்கரிந்து...*
பனைமறிந்தெனக்கிடந்ததோர்பாந்தளைநோக்க.....*
வனைபொலன்கழற்குரிசிலோர்மறையவன்முனிவா ...*
னினைவிறுந்தனிப்பெயர்ந்திடுநிலைமையொன்றிலனால்.

(இ-ள்) கனை.சத்தியாநின்ற—செழுஞ்சுடர். செழித்த சுவாலைகளையுடைய—கொழுங்கனல்- மிகுந்தகாட்டுத்தீயானது— படர்தலில். சுற்றிக்கொள்வதினால்—கரிந்து.கருகி —பனை. பனைமரமானது, மறிந்தென.விழுந்துகிடந்ததுபோல—கிடந்தது. கிடந்ததாகிய, ஓர்பாந்தளை (கார்க்கோடகனென்னும்)ஒருபாம்பினை— நோக்க. (நளமஹாராஜன்) பார்க்க, வனைபொலன்கழல் கட்டப்பட்ட பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த, குரிசில். நளமஹாராஜனே, ஓர்மறையவன். அநாகனென்னும் ஒருபிரமரிஷியினது முனிவால்.சாபத்தினால், நினைவினும். நினைப்பினாலும், தனி தனியாக, பெயர்ந்திடுநிலைமை. நடக்கலாம் என்னும் நிச்சயத்தை, ஒன்றிலன். அடைந்திலேன் (எ-று) ஆல்.அசை. (கருத்து) பாம்பானது நளனை அநாகரிஷி சாபத்தால் நடைபெற்றிலேனென்றது.எ-ம்.

அழலினின்றெடுத்தையிரண்டடிப்புறத்தகற்றின் ... *
முழுவலன்பொடுநன்கிழைக்குவலெனமொழிந்து ... *
தழற்கட்பாய்படல்சுருக்கலுந்தழலருள்வரத்தா ..... *
லெழுவிநீள்கரத்தாலெடுத்தழற்புறத்திட்டான்... ... *

(இ-ள்) அழலினின்றெடுத்து. அக்கினியினின்றெடுத்து, ஐயிரண்டடிப்புறத்து. பத்தடிக்குப் புறத்தில், அகற்றில். நீக்கிவிடுவையானால், முழுவலன்பொடு. நிறைந்தவலியஅன்புடனே, நன்கிழை

க்குவல்-உனக்குநன்மையைச்செய்வேன்--எனமொழிந்து - என்று சொல்லி--தழற்கண்-அக்கினிபொருந்தியகண்களையுடைய--பாம்பு-கார்க்கோடகநாகமானது—உடலசுருக்கலும்-உடம்பைச்சுருக்கிக்கொண்டவளவில்—(நளமஹாராஜனானவன்) தழலருள்வரத்தால் அக்கினிதேவன்கொடுத்தவரத்தினால்--எழுவில்-தூண்போன்ற--நீள்கரத்தால்-நீண்டகரத்தினால்—எடுத்து-எடுத்து—அழற்புறத்து தீயினுக்குவெளியில்—இட்டான்-விடுத்தான்---(எ-று) (கருத்து) நளன்பாம்பையெடுத்துத்தீக்கப்புறயவிடுத்தான் என்பதாம். (சு)

கதிழெரிக்கணின்றகற்றலுங்கதிரொளிவிரிக்கு... ...*
மதிர்பொலன்கழலரசர்கோன்மெய்புறத்தீண்டி... ...*
முதிர்சினத்தவாளரவுதன்முன்னுருவெடுப்ப..... ......*
விதுகுலத்துயர்வேந்தனும்வேற்றுருவமைந்தான் .. *

(இ-ள்) கதிழெரிக்கணின்று-சொலிக்கின்றதீயினின்றும்—அகற்றலும்-நீக்கிவிட்டவளவில்—கதிரொளிவிரிக்கும் - கிரணவொளிவீசாநின்ற—அதிர்-சத்திக்கின்ற---பொலன்கழல் - பொன்னாற்செய்யப்பட்டவீரக்கழலையணிந்த--அரசர்கோன்- நளமஹாராஜனது - மெய்-சரீரத்தில்---உற-பொருந்தும்படி---தீண்டி-கடித்து---முதிர்சினத்த-மிகுந்தகோபத்தையுடைய---வாளரவு - ஒளிபொருந்திய கார்க்கோடகநாகமானது---தன்-தன்னுடைய---முன்னுரு-பழையவுருவத்தை---எடுப்ப-எடுக்க---விதுகுலத்து- சந்திரவமிசத்தில்---உயர்-உயர்ந்த---வேந்தனும்-நளமஹாராஜனும்---வேற்றுருவமைந்தான்-வேற்றுருவடைந்தான்---(எ-று) (கருத்து)பாம்புகடிக்க, நளன்வேற்றுருவானான் என்பதாம். (ரு)

கருணைசெய்தெனைப்புரந்தனிற்கடித்ததுமுன்னை ... *
யுருவுகண்ணுறிலொன்னலர்செகுப்பரென்பதனாற் ...*
பொருவிலோயினிவாகுவனெனும்பெயர்புனையா ...*
விருதுபன்னன்வாழயோத்திமாநகரினைகுறியால் ...*

(இ-ள்) கருணைசெய்து-கிருபைசெய்து--எனை-என்னை--புரந்த-இரக்ஷித்த---நிற்கடித்தது-உன்னைக்கடித்தது---(எனெனில்) முன்னையுருவு-பழயவுருவமானது--கண்ணுறில்-காணப்படுமானால்---ஒன்னலர்-சத்துருக்கள்---செகுப்பர்-கொல்லுவார்கள்---என்பதனால்-என்றுநினைவினால்---பொருவிலோய் - ஒப்பற்றநளமஹாராஜனே---இனி-இனிமேல்---வாகுவனெனும்- வாகுவனென்றுசொல்லப்பட்ட---பெயர்புனையா-பெயரைத்தரித்துக்கொண்டு --- இருதுபன்னன்-இருதுபன்னமஹாராஜன்---வாழ்- அரசாட்சிசெய்யாநின்ற---அயோத்திமாநகரில்-அயோத்தியெனப்பட்ட பெருமையோ

ருத்தியபட்டினத்தில்---எதுதி-போவாயாக---(எ-று) ஆல்-அசை. (கருத்து) பாம்பு, நளனை, அயோத்தியில் இருதுபன்னனிடத்திற் போகும்படி சொல்லிற்று என்பதாம். (௭)

எக்கலிங்கமன்னவன்சூதனாயியைந்து..............*
கூந்தன்மாவுரந்தெரிதருவிச்சைநீகொடுப்பின்... ... *
ஆர்ந்தசூதுவெல்விச்சைநின்பாலவனளிக்கும் ......*
சாந்தவெம்முலைத்தமயந்திதன்னொடுஞ்சார்வாய்......*

(இ-ள்) எக்கல் நளமஹாராஜனே---எங்கு-அந்நகரத்திற்சென்று---அம்மன்னவன்-அந்தஇருதுபன்னனுக்கு---சூதற்கு-தேர்ப்பாகனாக---இயைந்து-பொருந்தி---கூந்தல் புரமயிரினையுடைய---மா-குதிரைகளினது---உரம்-மனத்தை---தெரிதரும்-அறிகின்ற---விச்சை-வித்தையை---நீகொடுப்பின்-நீ (அவ்வரசனுக்கு) உபதேசிப்பையானால்---ஆர்ந்த பரிசோதிக்கப்பட்ட---சூது-சூதினில்---வெல்-வெற்றியைத்தராநின்ற---விச்சை-வித்தையை--நின்பால்-உன்னிடத்தில---அவன்-அவ்வரசன்---அளிக்கும்-கொடுப்பான்---(அதன்பிறகு) சாந்தம்-சந்தனக்கோலமணிந்த---மென்முலை மிருதுவாகிய ஸ்தனங்களையுடைய---தமயந்திதன்னொடும்-தமயந்தியோடும்---சார்வாய்-கூடுவாய்---(எ-று) (கருத்து) பாம்பு நளனே, குதிரைகளுள் ளமறியும்வித்தையை நீ இருதுபன்னனுக்குக்கொடுத்தால் அவன் சூதுவெல்வித்தையை உனக்குக்கொடுப்பான் என்றது, எ-ம்.

பின்னர்மன்னநின்பெருநிலக்கிழமையும்பெறுதி ... *
முன்னைமாணுருவெளிதினிற்பெற்றிடமுன்னி ... ...*
இன்னபூந்துகில்புனைதியென்றிருதுகிலளித்துத்... ...*
தன்னுருக்கொடுபோயது கழல்விழிப்பாந்தள்... ...*

(இ-ள்) பின்னர்-பின்பு---மன்ன-நளமஹாராஜனே---நின்-உன்னுடைய---பெருநிலக்கிழமையும்-அரசாட்சியையும்---பெறுதி-அடைவாய்---முன்னை முற்பட்ட---மாணுரு-மாட்சிமைபொருந்தியவுருவத்தை--எளிதினில்-வருத்தமின்றி--பெற்றிட-முன்னில்-பெறநினைப்பையாகில்--(இன்னபூந்துகில்) இந்த அழகியவஸ்திரத்தை---புனைதியென்று-தரித்துக்கொள்ளென்றுசொல்லி---இருதுகில்- இரண்டுவஸ்திரங்களை---அளித்து-கொடுத்து---தன்னுருக்கொடு- தன் பழையவுருவத்தையெடுத்துக்கொண்டு--கழல்விழி - அக்கினிபொருந்தியகண்களையுடைய---பாந்தள்- கார்க்கோடகநாகமானது---போயது-மறைந்துபோயது--(எ-று) (கருத்து) பாம்பு, நளனே-உன்வடிவுகொள்ளவேண்டில இந்தவஸ்திரத்தைத்தரியென்று இரண்டுவஸ்திரங்கொடுத்துப்போயிற்று என்பதாம். (௮)

அதிர்பொலன்கழலரசர்கோனவ்வயினீங்கிப்...... ...*
பிதிர்சுணங்கணிவெம்முலைப்பெய்வளைத்தடந்தோள்.*
மதர்வைநோக்கிதன்வாணகையெனவுயிர்வருத்தும். *
கதிர்செய்நித்திலம்வான்றெறிதிரைக்கடல்கண்டான்.. *

(இ-ள்) அதிர்-சத்தியாநின்ற---பொலன்கழல்- பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த---அரசர்கோன்-நளமஹாராஜனானவன்---அவ்வயினீங்கி-அவ்விடம்விட்டுப்புறப்பட்டு--பிதிர் பிதிர்ந்த--சுணங்கணி-தேமலையணிந்த---வெம்முலை-விருப்பத்தைச்செய்கின்ற ஸ்தனங்களையும்---பெய்வளை-வளையலையணிந்த---தடந்தோள் - பருத்ததோள்களையுமுடைய----மதர்வை நோக்கிதன்-தமயந்தியினது---வாணகையென-ஒளிபொருந்தியதந்தங்கள்போல---உயிர்- உயிரை---வருத்தும் வருத்துகின்ற--கதிர்செய்-ஒளிவிடுகின்ற--- நித்திலம்-முத்துக்களை---வான்று-வாரிக்கொண்டு---எறி-வீசாநின்ற- -திரை-அலைகள்பொருந்திய---கடல்-சமுத்திரத்தை---கண்டான்- (நளமஹாராஜன்)பார்த்தான்--(எ-று) (கருத்து) நளன் சமுத்திரத்தைக்கண்டான் எம்பதாம். (௧)

வஞ்சர்நெஞ்சினாழ்கழியினோர்மடநடையன்ன... ..*
மஞ்சிறைப்புறத்தாருயிர்ப்பெடையினையணைத்துக்.. *
கஞ்சநாண்மலர்ச்சேக்கையிற்கண்படநோக்கி........*
நெஞ்சமாழ்குறநெடிதுயிர்த்தயர்வொடுநின்றான் .. *

(இ-ள்) வஞ்சர்-வஞ்சகருடைய---நெஞ்சின்-மனம்போல---ஆழ்- ஆழ்ந்த---கழியினில்-கழிநிலத்தில்--- ஓர்மடவன்னம் ஒரு இளவன்னமானது---அம்-அழகிய---சிறைப்புறத்து - சிறகின்புறத்திலே---ஆருயிர்-நிறைந்தவுயிரையொத்த---பெடையினை-பெட்டையன்னத்தை---அணைதரு-தழுவிக்கொண்டு---கஞ்சம்-தாமரையினது---நாண்மலர்-புதியமலராகிய-சேக்கையில்-படுக்கையில்--- கண்படல்-நித்திரைசெய்வதை---நோக்கி-பார்த்து---நெஞ்சம் - மனமானது---மாழ்குற-வருத்தமடைய---நெடிதுயிர்த்து-பெருமூச்சுவிட்டு---அயர்வொடும்-சோர்வுடனே---நின்றான்- (நளமஹாராஜன்) நின்றவன்---(எ-று) (கருத்து) நளன் அன்னம் புணர்தலைக்கண்டு சோர்வுடனின்றான் எம்பதாம். (௨)

சுடர்செய்முத்தமுநேமியம்புள்ளுமென்றுகிரு... ...*
நெடிதுநோக்கிநந்நேரிழைமுறுவலுமுலையும்...... ...*
வடிவமைநதமென்விரலுமங்கெய்தியவாற்றாற் ..... *
கடலில்வீழ்ந்துயிர்துறந்தனளெனமனங்கலுழ்ந்தான்....*

(இ-ள்) சுடர்செய் ஒளிவிடுகின்ற--- முத்தமும்- முத்துக்களையும்

—நேமியம்புள்ளும்-சக்கிரவாகபக்ஷிகளையும்--மென் - மிருதுவாகிய--துகிரும் - பவளங்களையும்--நெடிது - நெடுங்காலம்---நோக்கி-பார்த்து--நம்- நம்முடைய--தேரிழை - தமயந்தியினது--மூரலும்-தந்தவரிசைகளும்--முலையும் - ஸ்தனங்களும்--வடிவமைந்த-அழகுபொருந்திய--மென்விரலும்-மெல்லிய விரல்களும் -- ஈங்கு-இக்கழிநிலத்தில்--எய்தியவாற்றால்-பொருந்தியபடியால்-- கடலிக்-சமுத்திரத்தில் -வீழ்ந்து (தமயந்தியானவள்) விழுந்து-- உயிர்துறந்தனள்- இறந்தாள்--என-என்றெண்ணி--மனங்கழிந்தான்-(நளமகாராஜன்) மனங்கலங்கிறான்--(எ-று) அக்கழிநிலத்தில் காணப்பட்ட முத்துமுதலிய உவமானவஸ்துக்களை உவமேயமாக மயங்கினமையால் மயக்கவணி. (கருத்து) நளன் தமயந்தி அவயவங்களுக்குவமானப்பொருள்களைக் கடலிற்கண்டான் என்பதாம்(௰௧)

ஆவியன்னதோரணங்கினையரையிருணீத்த... ........*
பாவியேன்முகநோக்குறிற்பழிவருமென்றோ... ..*
மேவுசெக்கையிற் குருகிளம்பேட்டினம்வெருவிச் ...*
சேவலோடகன்றேகுவதெனமனந்திகைத்தான்.....-*

(இ-ள்) ஆவியன்ன-உயிரையொத்த--ஓரணங்கினை-ஒப்பற்றதமயந்தியை—அரையிருள்-அர்த்தராத்திரியில்—நீத்த -(தனியாக)விடுத்த—பாவியேன்-பாவியாகியவென்னுடைய—முகம்- முகத்தை—நோக்குறில்-பார்த்தால்—பழிவரும்-பாவம்வரும்—என்றோ- என்றுநினைத்தோ—மேவு-பொருந்திய—செக்கையில் - படுகையிலுள்ள—குருகு-பறவைகளினுடைய--இளம - இளமைதங்கிய —பேட்டினம் பெட்டைகளினமானது--வெருவி-பயந்து--சேவலோடு-ஆண்பறவைகளோடும்--அகன்று-(அவ்விடத்தைவிட்டு) நீங்கி —ஏகுவது-போவது—என-என்று—மனந்திகைத்தான்- மதிமயங்கினான்—(எ-று) பறவைகள் இயல்பான் மனிதரைக்கண்டெழும் அதற்கு நளன் தன்குற்றத்தை ஏதுவாக்கினனென்க-இது தற்குறிப்பணி-(கருத்து) பறவைகள் நீங்குதலை நளன்கண்டு தன்குற்றத்தையெண்ணினான் என்பதாம். (௰௨)

நவ்விநோக்கிதன்கைமதிமுகமெனச்சிறந்த ......*
தெய்வநாண்மலர்ப்போதவிழ்த்துகடியிர்ந்து.....*
கைவைவெண்டிரைத்துளிபெறிதென்றலங்கன்று. ... *
தைவருந்தொறுமெய்ப்பதைத்தாருயிர்தளர்ந்தான் ... *

(இ-ள்) நவ்வி-மான்போன்ற—நோக்கிதன்- கண்களையுடையதமயந்தியினது—நகை-பிரகாசியாநின்ற—மதி - சந்திரனையொத்த—முகமென-முகம்போல்—சிறந்த-சிறப்பையடைந்த — தெய்வ

ம்-தெய்வத்தன்மையுள்ள—நாண்மலர்-புதிதாகமலர்கின்ற---போது புஷ்பத்தில்—அவிழ்-விரிந்த—பூந்துகள் - மகரந்தப்பொடிகளை— திமிர்ந்து-பூசிக்கொண்டு—கவ்வை-ஒலிபொருந்திய--வெண்டிரை-வெளிர்த்தசமுத்திரவலைகளினுடைய—துளி-திவலைகளை—எறி-வீசுகின்ற---தென்றலங்கன்று-இளந்தென்றலானது — தைவருந்தொறும்-மேல்வீசுந்தோறும்—மெய்-சரீரமானது— பதைத்துதுடித்து— ஆர்-நிறைந்த—உயிர்-உயிரானது—தளர்ந்தான்-தளரப்பெற்றான்—(எ-று) (கருத்து) நளன்தென்றல்வீசலால் தளர்ச்சியடைந்தான் என்பதாம். (௰௩)

இன்னதன்மையன்வைகலீரைந்துபோயிறப்பக்...... *
கன்னல்வேலியங்கழனியிற்களிச்சுரும்பரற்றும்... .. ※
பொன்னந்தாமரைப்பொகுட்டின்மேன் மடப்பெடை
புல்லி-யன்னங்கண்படுவெள்ளநீரயோத்திநாடடைந்தான்.

(இ-ள்) இன்னதன்மையன்-இத்தன்மையனாகிய நளமஹாராஜன்—வைகலீரைந்து பத்துநாள்—போயிறப்ப- நீங்கிப்போக—கன்னல்வேலி-கருப்பம்வேலியிடப்பட்ட—அங்கழனியில்-அழகிய வயல்களில்—களிச்சுரும்பு-களிப்பினையுடையவண்டுகள் — அரற்றும்-சத்தியாநின்ற—பொன்னம் - பொன்போலழகிய— தாமரைப்பொகுட்டின்மேல்-தாமரைப்பூங்கொட்டையில்— மடப்பெடை- இளமைதங்கியபெட்டையன்னங்களை — புல்லி- தழுவிக்கொண்டு--அன்னம் அன்னப்பறவைகள்—கண்படு-நித்திரைசெய்கின்ற-- வெள்ளநீர்-மிகுந்தநீர்வளமுள்ள—அயோத்திநாடு - அயோத்திநகரத்தை— அடைந்தான்-சேர்ந்தான்—(எ-று) (கருத்து) நளன்அயோத்தியைச்சார்ந்தான் என்பதாம். (௰௪)

இருதுபன்னனைக்காண்டலுமெத்தொழில்வல்லை ... *
மருவநாமமென்கூறெனவாகுவனென்பே ........*
ருருவவாம்பரித்தேரினிதூர்குவனும்ப.............. ※
ரருமருந்தெனவடுதொழில்புரிவனென்றறைந்தான் . .※

(இ-ள்) இருதுபன்னனை-இருதுபன்னவரசனை — காண்டலும்- (நளன்)கண்டவளவில்—எத்தொழில்-எச்செய்கையில்—வல்லை - நீ திறமையுள்ளவன்—மருவும்-பொருந்திய—நாமமென்-உன் பெயரியாது--கூறென-சொல்லென்று(இருதுபன்னன்கேட்க) -- வாகுவன்-வாகுவனென்பது—என்பேர்-எனதுபெயராம்—உருவ - நிறத்தையுடைய—வாம்-தாவாநின்ற— பரி-குதிரைகட்டிய—தேர்- இரதத்தை—இனிது- நன்றாக—ஊர்குவன்-நடத்துவேன்— (அன்றியும்) உம்பர்-தேவர்களினது—அருமருந்தென-அரியஅமுதப்போ

ல—அடுதொழில்-சமடலை—புரியன்-செய்வேன் — என்றறைந்தான்-என்று (நளமஹாராஜன்) சொன்னான்--(எ-று) (கருத்து) நளன் இருதுபன்னனைக்கண்டு தன்னைச்சாரதி என்றான் என்பதாம்.

வேந்தனவ்வுலாகேட்டலும்வியன்மணிநெடுந்தேர் ...*
கூந்தன்மாவுளமறிந்தனைகுறிப்பினூர்குதியே........ *
வாய்ந்தசெம்பொனோராயிரம்வைகலுமளிப்ப ...... *
லேய்ந்தவெனிருபாகரோடிருத்தியென்றிசைத்தான் *

(இ-ள்) வேந்தன்-இருதுபன்னராஜன்—அவ்வுலா - அந்நளன் சொல்லை—கேட்டலும்-கேட்டமாத்திரத்தில்—வியன் பருத்த—மணி-நவரத்தினங்கள்பதித்த—நெடும்-நீண்ட—தேர்-தேரிற்கட்டப்பட்ட—கூந்தல-புறமயிரினையுடைய—மா - குதிரையினது—உளமறிந்தனை-மனதையறிந்தவனாகி—குறிப்பின்-குறிப்பினால் — ஊர்குதியேல்-நடத்துகிறவனானால—ஆய்ந்த-குற்றமற்ற—செம்பொனோராயிரம் ஓராயிரம்பொன்--வைகலும்-நாள்தோறும்--அளிப்பல்-கொடுப்பேன்—ஏந்தல்-வீரனே--என்-என்னுடைய —இருபாகரோடு இரண்டுசாரதிகளோடுங்கூட--இருத்தி-இரு--என்றிசைத்தான்-என்றுசொன்னான்—(எ-று) பொன்னென்பது-இருபதுசின்னப்பணத்தினுக்குத்தொகைப்பேர்-இது சேர சோழ பாண்டியர் நாட்டுவழக்கு-(கருத்து) இருதுபன்னன் நளனை நாளொன்றுக்கு ஆயிரம்பொன் சம்பளத்தில்வைத்தான் என்பதாம். (௰௬)

அன்னவாறுநேர்ந்தலங்குளைப்புரவிமான்றேர்க்கு *
மன்னனாகியநிடதர்கோன்வைகலும்புலம்பித்........*
துன்னுகானிடைநீத்தவடுயரமீக்கூர... ....... ... ...*
யென்னளாயினளோவெனவிரங்கிவெய்துயிர்ப்பான் *

(இ-ள்) அன்னவாறு-அப்படியே—நேர்ந்து-சம்மதித்து--அலங்கு-அசைகின்ற--உளை-புறமயிரினையுடைய--புரவிமான்- குதிரைகட்டிய--தேர்க்கு-இரதங்கட்கு--மன்னனாகிய-அதிபனாகிய--நிடதர்கோன்-நளமஹாராஜனானவன்--வைகலும்-நாள்தோறும்--புலம்பி-மனமிரங்கி--துன்னுகானிடை-நெருங்கியகாட்டினில்-- நீத்தனள்-விடப்பட்டதமயந்தியானவள்--துயரம்-துன்பம்--மீக்கூர - அதிகரிக்க--என்னளாயினளோ-எத்தன்மையானாளோ—என - என்று—இரங்கி-புலம்பி--வெய்து-கொடியதாக--உயிர்ப்பான்- பெருமூச்சுவிடுவான்--(எ-று) (கருத்து) நளன் தமயந்தியைநினைத்து விசனப்படுவான் என்பதாம். (௰௭)

உயிர்த்துமெய்தளர்ந்துருகியவேந்தனையுளத்தி...... *
லயிர்த்தொர்சாரதியுற்றதையெவன்கொலென்றறைய *

வெயிற்கொடுங்கதிர்மறைந்தபின்வெவ்வழற்கானிற் .. *
பயிற்பில்கோதையைத்தீர்த்தனன் பரிவிலேனென்றான்

(இ-ள்) உயிர்த்து-பெருமூச்சுவிட்டு—மெய்தளர்ந்து - சரீரம் வாடி-- உருகிய-மனமுருகிய---வேந்தனை-நளமஹாராஜனை--உளத்தில்-மனத்தில்--அயிர்த்து-சந்தேகித்து--ஓர்சாரதி - சீவலனென்னு மொருதேர்ப்பாகனானவன்--உற்றதை-(நாள்தோறும்) அடைந்த துன்பத்தை--எவன்கொலென்றதைய-என்னவென்றுகேட்க-- வெயில்-வெய்யிலைச்செய்கின்ற- கொடுங்கதிர்-சூரியன்-- மறைந்தபின்-அஸ்தமித்தபின்பு--வெவ்வழல் கொடிய அழல்பொருந்திய--கானில் காட்டினில்- பயிர்ப்பில-பரிசுத்தையாகிய--கோதையை- பெண்ணை- பரிவிலன்-அன்பில்லாதநான்--தீர்த்தனன் - விடுத்தேன்--என்றான் என்றுநளன்சொன்னான்—(எ-று) (கருத்து) ஓர்சாரதிநளனை என்விசாரப்படுகிறாயெனநளன்தன்மனைவியைக்காட்டில்விட்டே னென்றான் என்பதாம். (யஅ)

வேற்றுருவமைந்தபடலம்-முற்றிற்று.

---

# வீமன்தேடவிட்டபடலம்.

---

இப்படலத்தால் வீமராஜன் தமயந்தி நளன் இருவரையு ந்தேடுதற்கு அதற்கு உரியோரைவிடுத்தல் சொல்லப்படுகின்றது.

(கலித்துறை.)

இனையனாகியமன்னவனவ்வழியிருப்ப............ ...*
வினைவருங்கழல்விதர்ப்பர்கோன்மறையவர்க்கூய்யென் *
றனையதன்னொடுநளனையுந்தேடிநீர்தந்தா ..........*
னினைவயாவையுந்தருதுமெனவவர்நேர்ந்தார்..... ... ※

(இ-ள்) இனையனாகிய-இத்தன்மையனாகிய—மன்னவன் - நளமஹாராஜன்--அவ்வழி-அவ்வயோத்தியில்---இருப்ப-இருக்க-- வினைவருங்கழல்-சிறந்தவீரக்கழலையணிந்த--விதர்ப்பர்கோன்-வீமராஜன்--மறையவர் பிராமணர்களை--கூய் - அழைத்து-- என்றனையதன்னொடும்-என்துபெண்ணாகிய தமயந்தியோடும்--நளனையும்- நளமஹாராஜனையும்--தேடி- தேசங்களிற்றேடி--நீர் - நீவிர்--தந்தால்-கொடுப்பீராயின்--நினைவயாவையும்- நீர் நினைத்தவையனைத்தையும்

—தருதுவன்-கொடுப்பேன்--என-என்றுசொல்ல--அவர் - அம்மறையவர்கள்--நேர்ந்தார்-அதற்குச் சம்மதித்தார். (எ-று) (கருத்து) வீமன் தன்மகளையும்மருமகனையுங் கண்டுபிடித்துக் கொடுத்தவர்களுக்கு நினைத்தயாவையுங் கொடுப்பேனென்றான் என்பதாம். (௧)

தரங்கவாரிதிசூழ்தருதகைமைசாலுலக.............. *
மொருங்குதேடியுங்காண்கிலருலப்பிலார்திரிய,வரங்கொ
ள்கேள்வியன்சுதேவனென்றுரைக்குமோர்மறையோன்
கருங்கட்பேதையைச்சேதிபனமனையிற்கண்டான். .*

(இ-ள்) தரங்கவாரிதி - அலைகளையுடையசமுத்திரமானது--சூழ்தரு-சூழ்ந்த--தகைமைசால்-மேன்மைபொருந்திய--உலகம் - பூவுலகம்--ஒருங்கு-ஒருங்குபட--தேடியும் தேடியும்--காண்கிலார் - காணாதவராய்--உலப்பிலர்-அளவற்றபேர்கள்--திரிய - திரியாநிற்க--வரங்கொள்-வரத்தைக்கொண்ட--கேள்வியன்--(சாஸ்திரக்) கேள்வியையுடைய--சுதேவனென்றுரைக்கும்-சுதேவனென்றுசொல்லப்பட்ட- ஓர்மறையோன்-ஒருபிராமணன்--கருங்கட்பேதையை- கரிய கண்களையுடையதமயந்தியை--சேதிபன்மனையின்-சேதிபதியைத் தாசனாகிய சுவாகுவின்வீட்டில்--கண்டான்- பார்த்தான் —(எ-று) (கருத்து) சுதேவனென்னும் ஓர்பிராமணன் தமயந்தியைச்சேதிபதியரண்மனையிற்கண்டான் என்பதாம். (௨)

மாசுபூத்தொளிமழுங்குபுமண்ணுறுமணியிற்..........*
றேசழிந்திடுதெரிவைதன்றிருமுகநோக்கி.......... ...*
யேசலில்லிவட்கோவிவையெய்துமற்றென்று..... ...*
வாசில்கேள்வியோன்கலுழ்ந்தனன்றுயர்க்கடலாழ்ந்தான

(இ-ள்) மாசுபூத்து-அழுக்கடைந்து--ஒளிமழுங்குபு - ஒளிமழுங்கி--மண்ணுறுமணியில்-சாணைபிடாதமணிபோல—தேசழிந்திடும்-அழகழிந்த--தெரிவைதன - தமயந்தியினது--திருமுகம் - அழகிய முகத்தை--நோக்கி-பார்த்து—ஏசலில்-பழிப்பில்லாத—இவட்கோ-இப்பெண்ணுக்கோ--இவையெய்தும்-இவ்வவத்தைகள்பொருந்தும்--எனறு-என்று—ஆசில்-குறைவற்ற---கேள்வியோன-கேள்வியையுடையசுதேவன—கலுழ்ந்தனன-கலங்கினவனாகி—துயர்க்கடல்-துன்பக்கடலில்—ஆழ்ந்தான-முழுகினான—(எ-று) மற்று அசை. (கருத்து) சுதேவன தமயந்தியைக்கண்டான என்பதாம். (௩)

அழுவனென்கொலென்றுயிலழிவினவநின்றனை.... *
முழுவலனைபுடைத்தோழனையானமொய்த்தநிறைமருங்-
குழுவுநின்னிருகுரவருந்தீங்கிலரெனைத்..............*
தொழுதுமைக்கணீர்முலைத்தடம்பெருகமெய்சோர்ந்தாள்*

(இ-ள்) அழுவதென்கொல்- அழப்படுவதென்னகாரணம் — என்று-என்றுசொல்லி--ஆயிழை-தமயந்தியானவள்--வினவ-கேட்க--நின்றன்றதை-உன்றந்தைக்கு--புழுவலன்புடை - நிறைந்த அன்புடைய — தோழன்-தோழமையுள்ளவன்--யான்-நான்--மொய்த்த-நெருங்கிய--நின்-உன்னுடைய--தமரும்-உறவினரும் -- குழுவும்-கூட்டத்தவரும்--நின் உன்னுடைய--இருதரவரும்- தாய்தகப்பன்மாரிருவரும்--தீங்கிலர் கேடிலராயுளர்--என்ன - என்றுசொல்ல — தொழுது (அவனைத்) தொழுது--மைக்கணீர் - மைபொருந்தியகண்ணீர்--புனைதடம்-முலையினிடத்தில்--பெருக- ஒழுக--மெய்-உடம்பு--சோர்ந்தாள்-மெலிந்தாள் — (எ-று) (கருத்து) தமயந்தி சுதேவதனை எனழுகிறாயென சுதேவன் நான் உன்தகப்பனுடைய தோழனென்றான் தமயந்தியுமழுதாள் என்பதாம். (௪)

கந்தவார்குழற்காரிகையழுதல்கேட்டிவட்கு... ... *
தந்தையாரெவற்குரியளித்தனிபறந்து.......... *
வந்தவாறிவளை நீயுணர்ந்ததெவ்வாறென்... .... *
றந்தணாளனைவினவினள்சுவாதையளித்தாள்....... *

(இ-ள்) கந்தம் வாசனைபொருந்திய--வார் நீண்ட--குழல்- கூந்தலையுடைய--காரிகை-தமயந்தியானவள், அழுதல்-அழப்படுதலை கேட்டு-(தந்தையால்) கேள்விப்பட்டு--(வந்து) இவட்கு-இப்பெண்ணினுக்கு--தந்தையார்-தகப்பனார்--இத்தனி-இயல்-இப்பெண்ணவள்--எவற்குரியள்-எவனுக்குரியவளாள்-- தனித்துவந்தவாறு-தனித்துவந்தகிரமம்--எவன்-யாது--இவளை-இப்பெண்ணை-- நீயுணர்ந்தது-நீஅறிந்தது--எவ்வாறென்று-எப்படியென்று--- அந்தணாளனை-சுதேவனை--சுவாதுலவையளித்தாள்-சேதிதேயத்தரசனைப்பெற்ற தாயானவள்--வினவினள்-கேட்டாள் — (எ-று) (கருத்து) சேதியர் தாய், தமயந்தி அழுதலைக்கேட்டு இவட்குத்தகப்பனார், கணவனார், என்றுபிராமணனைக்கேட்டாள் என்பதாம். (௫)

மாதுகேட்டியிம்மடவரல்விதர்ப்பர்கோன்புதல்வி.. *
காதனாயகனிடதர்கோன்காசினிமுழுதுஞ் ..... .....*
சூதினாலிழந்திவளையுங்கானிடைத்துறந்தா-.........*
னோதலாவியட்டேடெனவிதர்ப்பர்கோனறைந்தான்...*

(இ-ள்) மாது-அரசனதுதாயே--கேட்டி-கேள்--இம்மடவரல்-இப்பெண்--விதர்ப்பர்கோன்-வீமராஜனது--புதல்வி-குமாரத்தி — காதல்-அன்பினையுடைய--நாயகன்-(இவட்குக)கணவன் — நிடதர்கோன்-நளமஹாராஜன்--(அவன்) காசினிமுழுதும்-பூமிமுழுவதும்--சூதினால்-சூதாட்டத்தால்--இழந்து-தோற்றுவிட்டு--இவளையும்-

இத்தமயந்தியையும்—கானிடை-காட்டினில்--துறந்தான் விடுத்தான்--ஆதலால்-ஆகையால்--இவள் இவளை--தேடென-தேடுவாயென்று--விதர்ப்பர்கோன்-வீமராஜன்--அறைந்தான் - உத்தரவுகொடுத்தான்—(எ-று) (கருத்து) பிராமணன் அரசியிடம், இப்பெண் வீமராஜன்மகள், இவள்கணவன் நளன், அவன் சூதாட்டத்தால் நாடிழந்து மனைவியைக்காட்டில் விடுத்தான், இவளைத்தேடெனவீமனுத்தரவு கொடுத்தான் என்பதாம். (௬)

தேன்டியெங்கணுங்கண்டிலன் திருவைநின்மனையிற்..*
காண்டல்செய்தனன் கன்னலிற்பழுத்தமென்மொழியா
ள், மாண்டபேரொளிவாணுதல்வயங்கியமறுவா ...*
லீண்டுணர்ந்தனன்யானெனமறையவனிசைத்தான்...*

(இ-ள்) எங்கணும்-எவ்விடத்திலும்--தேன்டி-தேடி--திருவை லக்ஷ்மியையொத்த தமயந்தியை—கண்டிலன்-காணாதவனாய்--நின்மனையில்-உன்மாளிகையில்--காண்டல்செய்தனன் - கண்டேன்---கன்னலில-கருப்பினும்--பழுத்த-முதிர்ந்த--மென்மொழியாள்- இனிய வசனத்தையுடைய இத்தமயந்தியினது--மாண்ட-மாட்சிமைப்பட்ட--பேரொளி மிகுந்தஅழகு தங்கிய--வாணுதல்- ஒளிபொருந்திய நெற்றியில்—வயங்கிய-விளங்கிய--மறுவால மச்சையினால்--ஈண்டு இவ்விடத்தில்--யான்-நான்--உணர்ந்தனன்-(இவளென்று) அறிந்தேன்-என-என்று--மறையவன் சுதேவனென்பவன் -- இசைத்தான்-சொன்னான்—(எ-று) (கருத்து) சுதேவன் தமயந்தியைநெற்றிமச்சையினாலறிந்தேனென்றான் என்பதாம் (௭)

அதுகிளத்தலுமணிநுதன்மாசினையகற்றக்... .......*
கதிரொளித்தலிற்கண்வழுக்குற்றனகூச...... . ... ..*
மதிநுதற்புறத்திலகியமறுவினைநோக்கித்...... .....*
ததைமலர்க்குழற்றமயந்தியெனவுணர்ந்தாள் ...*

(இ-ள்) அது-அச்செய்தியை--கிளத்தலும்- சொன்னவளவில்----அணிநுதல்-அழகியநெற்றியினுள்ள--மாசினை-அழுக்கை-- அகற்ற போக்க--கதிரொளித்தலில-ஒளிவிடுகின்றமையால்--கண்-நேத்திரங்கள்--வழுக்கற்றன-சிதறினவைகளாகி--கூச-அஞ்ச--மதிநுதற்புறத்து-பிறைபோனறநெற்றியினிடத்து--இலங்கிய- பிரகாசித்த---மறுவினை-மறுவை--நோக்கி பார்த்து--இவள்-இப்பெண்-- ததைமலர்க்குழல்-நெருங்கியமலர்களையணிந்தகூந்தலையுடைய--தமயந்தி தமயந்தியே— என-என்று--உணர்ந்தாள்-(அரசன்னை) அறிந்தாள்— எ-று) (கருத்து) அரசன்தாய் மறுவினாலேதமயந்தியெனறறிந்தாள் என்பதாம். (௮)

வணைமலர்க்குழன்மங்கைநின்னனையும்யானும் ...... *
புனைகருங்கழற்சுதர்மனறன்புதல்வியராவே........ *
மெனலுமனைதனிணைமலர்ச்சீறடியிறைஞ்சிக்...... *
கனைகருங்கடல்கலாபுரண்டாலெனக்கலுழ்ந்தாள் ...ஃ

(இ-ள்) வணைமலர்க்குழல்-பூமாலையணிந்தகூந்தலையுடைய—மங்கை-தமயந்தியே—நின்னனையும்-உனதுதாயும்—யானும்-நானும்--புனை-தரிக்கப்பட்ட—கரும்-பெருமைதங்கிய—கழல்-வீரக்கழலையணிந்த—சுதர்மனறன-சுதர்மராஜனுடைய — புதல்வியராவேம்-புத்திரிகளாவோம்—எனலும்-என்று(அரசனனை) சொன்னவளவில்—அனைதனை-அப்பெரியதாயினது—இணை-இணைந்த--மலர்-தாமரைமலரையொத்த--சீறடி-சிற்றடிகளில்--இறைஞ்சி-நமஸ்கரித்து—கனை-சத்தியாநின்ற--கருங்கடல்-கறுத்தகடலானது கலாபுரண்டாலென-கலாபுரண்டாலதுபோல.•கலுழ்ந்தாள். (தமயந்தி) அழுதாள்—(எ-று) (கருத்து) சேதிபதிதாய் தமயந்தியே,உனதாயும்நானும் சுதர்மனபுத்திரிகள்,என்றழுதாள் எனபதாம் (௯)

இன்னனென்றெனையுணர்வதன்முன்னருமீன்ற ... ...*
வன்னையாமெனவளித்தனையன்புமீதூர ............*
மன்னுமென்னுயிர்மக்களைக்காண்பதற்கெந்தை ....*
பொன்னகர்க்கெனைவிடுத்தியென்றின்னுரைபகன்றாள்.

(இ-ள்) என்னை-என்னை—இன்னனென்று-இத்தன்மையனென்று—உணர்வதன்முன்னரும்.அறியதற்குமுன்னும் ஈன்ற.பெற்ற.அன்னையாமென.தாயாவளென்னும்படி—அன்புமீதூர.ஆசைமிக.• அளித்தனை• இரக்ஷித்தாய்—மன்னும்: அவ்விடத்திற்பொருந்தியிருக்கிற—என்னுயிர்மக்களை•என்னுடையஉயிர்போன்றபிள்ளைகளை — காண்பதற்கு•பார்ப்பதற்கு••எந்தை•எனபிதாவினது— பொன்னகர்க்கு,அழகியகுண்டினபுரத்துக்கு—எனைவிடுத்தி.என்னையனுப்பு என்று என்று, இன்னுரை.இனியசொற்களை, பகன்றாள். (தமயந்தி) சொன்னாள்—(எ-று) (கருத்து)என்னை இன்னாளென்றறியுமுன்னமே அன்னையைப்போலுங் காப்பாற்றினாய் எனமக்களைக்காணவேண்டும்,எனபிதாவிடத்துக்கனுப்பு'யென்றாள் என்பதாம். (௰)

உரைசெய்மாற்றமோர்ந்துள்ளுயிருருகுறத்தழுவிக்•*
கரைசெய்வேலையிற்கருந்தடங்கண்கணீருகுப்ப.....*
வெரிமணிப்பொலன்சிவிகையினிருள்கனிந்தொழுகும்
விரைசெய்கோதையைவிதர்ப்பர்கோனகர்வயின் விடுத்தாள்•

(இ-ள்) உரைசெய்மாற்றம் (தமயந்தி) சொல்லியவசனத்தை—ஓர்ந்து-அறிந்து—உள் உள்ளில்—உயிர்.பிராணன—உருகுற• உரு

கும்படி--தழுவி - அணைத்துக்கொண்டு--கனாசெய் - கனாவைச்செய்யாநின்ற--வேலையில்-சமுத்திரம்போல--கரும் - கறுத்த--வடம்-விசாலமாகிய--கண்கள் நேத்திரங்கள்---நீர் - நீரை--உகுப்ப-சொரிய--எரி-பிரகாசிக்கின்ற--மணி - இரத்தினங்கள்பதித்த---பொலஞ்சிவிகையில்-பொற்பல்லக்கின்மீது- இருள்கனிந்து - இருள்முதிர்ந்து--ஒழுகும்- ஒழுகாநின்ற--விகாசிசய் - வாசனைபொருந்திய--கோதையை-அளகபாரத்தையுடைய தமயந்தியை -- விதர்ப்பர்கோன்-வீமராஜனது--நகர்வயின் - குண்டினபுரத்தில்--விடுத்தாள் அனுப்பினாள்---(எ-று) (கருத்து) பெரியதாயானவள் தமயந்தியை பூத்துச்சிவிகையிலேற்றிக் குண்டினபுரத்துக்கு அனுப்பினாள் என்பதாம். (யக)

கொள்ளைவண்டினங்கூட்டுண்ணுநறுமலர்க்கோதை ... *
யள்ளலங்கருஞ்சேற்றிடையரக்கசெழுவிரிந்த .. ... . *
வள்ளவாய்ச்செழுங்கமலமேலன்னமடையணைந்துயில்கூர் .. *
வெள்ளநீர்வயல்விதர்ப்பர்கோனகர்மேயினளால் ... *

(இ-ள்) கொள்ளை-மிகுந்த--வண்டினம் - வண்டுக்கூட்டங்கள்—கூட்டுணும்-(தேனைக்)கொள்ளையிடப்படியாகிய--நறுமலர் - வாசனைபொருந்திய மலர்களையணிந்த—கோதை-கூந்தலையுடைய தமயந்தியானவள்--அள்ளல்-குழைந்த—அம்-அழகிய--கரு - கரிய—சேற்றிடை-சேற்றினிடமாகிய---அரக்கிதழ்-செவ்விதழ்கள் —விரிந்த-மலர்ந்த—வள்ளவாய்-கிண்ணம்போற வாயையுடைய--செழுப்-செழித்த-- கமலமேல தாமரைமலரின்மேல் -மடவனம்- இளவன்னங்கள் — துயில்கூர்-நித்திரைசெய்கின்ற--வெள்ளநீர்- நீர்ப்பெருக்கையுடைய--வயல் - கழனிகளையுடைய--விதர்ப்பர்கோன்-விதர்ப்பதேயத்தரசனாகிய வீமராஜனது---நகரம்-குண்டினபுரத்தை—மேயினள்-அடைந்தாள்--(எ-று)- (கருத்து) தமயந்திகுண்டினபுரத்தைச்சார்ந்தாள் என்பதாம். (யஉ)

அழுதவுண்கணுமற்றமெல்லாடையுமலங்கற்...... ...*
கழுமச்சூட்டுபுகைசெயாக்கருங்குழற்காடும் ...... . *
விழியிமைக்குநககலும்விதர்ப்பர்கோன்வெய்துயிர்த்தயர்ந்
தாய்-தழுவியன்னையருறுதுயர்சாற்றலாந்தகைத்தே..*

(இ-ள்) அழுத-அழுகையுற்ற--உண்கணும் - (தமயந்தியினது) மையுண்டகண்களையும்--அற்ற-அறுபட்ட--மெல்லாடையும் - மென்மைபொருந்தியபுடவையும்--அலங்கல்-மலர்மாலைகளை-- கழும-நிறைய--சூட்டு-சூட்டி---கைசெயா - முடிக்காத---கருங்குழற்காடும்-கரியகூந்தற்காட்டையும்--விதர்ப்பர்கோன் - வீமராஜனு

னவன்—விழியிணைக்களும் - கண்களாற்கண்டமாத்திரத்தில்--வெய்துயிர்த்து-பெருமூச்சுவிட்டு--அயர்ந்தான் - சோர்ந்தான்—அன்னையர்-தாய்மார்கள்—தழுவி-(தமயந்தியைத்) தழுவிக்கொண்டு—உறு துயர்-அடைந்ததுன்பமானது—சாற்றலாம் - (நம்மாற்) சொல்லும்படியான--தகைத்தே - தன்மையையுடையதா--(எ-று) (கருத்து) தமயந்தியை வீமராசன்கண்டு சோர்ந்தான்-தாய்மார்கள் தழுவியழுதார்கள் என்பதாம்.. (௰௩)

காட்டிடைவள்ளிருட்காலையிற்காவலனீத்த............ ...*
தீட்டொணாவெழிற்றெரிவையைத்தேடினன் கொணர்ந்
த-மூட்டுமுத்தழன்முறைமையின்வளர்த்திடுசுதேவன் *
வேட்டயாவையுங்கொள்கெனவளித்தனன் வீமன் ... *

(இ-ள்) காட்டில்-வனத்தில்--நள்ளிருட்காலையில்- நடுராத்திரிகாலத்தில்--காவலன்-நளமஹாராஜன்--நீத்த - விடுத்த -தீட்டொணா எழுதக்கூடாத--எழில்-அழகுபொருந்திய--தெரிவையை - தமயந்தியை--தேடினன்-தேடி--கொணர்ந்த - கொண்டுவந்த--மூட்டு-மூட்டப்பட்ட--முத்தழல்-மூன்றக்கினிகளை--முறைமையில - கிரமத்தினால்—வளர்த்திடும்-வளர்க்கின்ற—சுதேவன்- சுதேவனென்னும்மறையவன்--வேட்ட-விரும்பிய---யாவையும்- எல்லாவற்றையும்--கொள்கென-பெற்றுக்கொள்ளென்று--வீமன் - வீமராஜன்--அளித்தனன்-கொடுத்தான்—(எ-று) முத்தழலாவன-தக்ஷிணாக்கினி காருகபத்தியம், ஆகவனீயம்-என்பதாம்-(கருத்து) வீமராஜன் சுதேவனுக்கு வேண்டியனகொடுத்தான் எ-ம். (௰௪)

மக்கள்வாண்முகநோக்கியமடவரனெஞ்ச.........*
நெக்குவாடுதல்கண்டநற்றாயுளநெகிழ்ந்து.......... *
கக்குசெந்தழற்காலயிற்காதலற்குறுகி.......... ஐ
நக்கபூங்கழனளனையுநாடுகென்றுரைத்தாள்..... ...ஐ

(இ-ள்) மக்கள்-பிள்ளைகளினது--வாண்முகம்-ஒளிபொருந்திய முகத்தை--நோக்கியும்-பார்த்தபின்பும்---மடவரல்- தமயந்தியினது--நெஞ்சம்- மனமானது--நெக்குவாடுதல் - நெகிழ்ந்துவாடுதலை--கண்ட-பார்த்த --நற்றாய்-ஈன்றதாயானவள் -- உளநெகிழ்ந்து-மனமுருகி--கக்கு-கக்கப்பட்ட--செந்தழல்- சிவந்த அக்கினிபொருந்திய—கால-இயமனையொத்த--வேல்- வேலாயுதத்தையேந்திய—காதலன்-தன்னுடைய கணவனாகிய வீமராஜனை—குறுகி- கிட்டிநின்று—நக்கபூங்கழல்-விளங்குகின்ற அழகியவீரக்கழலையணிந்த— நளனையும்-நளமஹாராஜனையும்—நாடுகென்று-தேடுகவென்று—உரைத்தாள்-சொல்லினாள்--(எ-று) (கருத்து) சாருகாசினி நளனையுந்தேடும்படி வீமனுக்குச்சொன்னாள், எ-ம். (௰௫)

ஓடரிக்கணுநுரைத்தலுமொற்றரைக்கூவி.........*
யாடகப்பசும்பொலன்கழனளனைநீராய்ந்து........*
தேடிவம்மினென்றரசர்கோன்றிசைதொறுஞ்செலுத்த
நாடினாரவர்நளிகடல்வரைப்பெலாநடந்தே... ...... ஜ

(இ-ள்) ஓடரிக்கணுள்-நீண்ட அரிபரந்தகண்களையுடைய காஞ்சனமாலையானவள்—உரைத்தலும் - சொன்னமாத்திரத்தில் -- ஒற்றரை-வேவுகாரரை--கூவி-அழைத்து--ஆடக-பொன்னாலாகிய--பசும்-பசுமையாகிய--பொலன்-அழகிய--கழல்- வீரக்கழலையணிந்த—நளனை-நளமஹாராஜனை--நீர்-நீங்கள்---ஆய்ந்து-ஆராய்ந்து---தேடி-திரிந்துபார்த்து—வம்மின்-வாருங்கள்—என்று- என்றுசொல்லி—அரசர்கோன்-வீமராஜன்--திசைதொறும் - எட்டுதிக்கிலும்—செலுத்த-(அவர்களை) அனுப்ப—அவர்-அவ்வேவுகாரர்— நளி-குளிர்ச்சிபொருந்திய--கடல்வரைப்பெலாம் - சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலமுழுமையும்--நடந்து-திரிந்து---தேடினார்- தேடினார்கள். (எ-று) (கருத்து) வீமராஜன் நளனைத்தேடும்படி வேவுகாரர்களுக்குக்கட்டளையிட்டான் என்பதாம். (௰௬)

துருவுமொற்றரிலொருவன்மீண்டணுகின்றான்றோன்
றி-யரிவைமுதெயிலயோத்திமாநகரினிலடைந்தேன் *
புரிகருங்குழன்மனைவியைப்போக்கினன்புலம்பு......*
மொருவனிவ்வுழியுண்டுகொலெனவினவினனால்......*

(இ-ள்) துருவும்-தேடுகிற--ஒற்றரில்-வேவுகாரருள்-- ஒருவன்-பருணதனென்னுமொருவேவுகாரன்---மீண்டு - திரும்பிவந்து--அணுகின்றான-தமயந்தியின்முன்னிலையில்--தோன்றி- நின்று---அரிவை-இராஜகுமாரத்தியே--முது-பழைய--எயில் - மதில்சூழ்ந்த—அயோத்திமாநகரில்-அயோத்தியாபுரியில்---அடைந்தேன் -சென்றேன்--புரி - விரும்பப்பட்ட--கருங்குழல் - கரியகூந்தலையுடைய--மனைவியை - மனையாட்டியை--போக்கினன்-விடுத்தவனாகி—புலம்பும்-துன்பப்படுகின்ற--ஒருவன் - யாவனாயினுமொருவன்—இவ்வுழி- இந்தப்பட்டணத்தில்—உண்டுகொல்-உளனோ--என-என்று—வினவினன் - விசாரித்தேன்---(எ-று) ஆல்-அசை-(கருத்து) பருணதனென்னும் வேவுகாரன் தமயந்திமுன்வந்து அயோத்தியில் மனைவியை நீக்கினவனுண்டாவெனக்கேட்டேன்- இதுமுதல் மூன்றுபாடலுக்குளகம் என்பதாம். (௰௭)

ஓலைகபோடெனக்கொருவனாய்த்துளங்கனிற்றருகி ... *
வாலைகவெஞ்சிலையிருதுபன்னற்குயர்மான்றேர்ப் ... *

பாகன்கொய்யுளைப்பரியுளத்தேர்பவனொருவன்......*
றோகையைப்பிரிந்தாரஞருழப்பவன்சோர்வான்.....*

(இ-ள்) ஓகையோடு-அன்புடனே---எனக்கு-எனக்கே--- ஒருவன்-ஞாயனிதனை- ஆங்கு-அவ்வயோத்திநகரில்- உளங்கனிந்து- மனங்கனிந்து--உருக-கனிந்து—வாகை - வெற்றிமாலையணிந்த- வெஞ்சிலை வெவ்வியவில்லையேந்திய--இருதுபன்னற்கு - இருதுபன்னரசனுக்கு--உயர்மான்றேர் உயர்ந்த குதிரைகட்டியதேரை நடத்துகின்ற -பாகன்-சாரதியும்--கொய்யுளை- கொய்துகட்டிய பிடரிமயிரையுடைய--பரி-குதிரைகளினது---உளம் - மனதை--தேர்பவன்-அறியவனும்— ஒருவன் - தனித்தவனும்--தோகையை - மனையாளை -பிரிந்து - பிரிவுற்று--ஆரஞருழப்பவன் - மிகுந்த துன்பப்படுகின்றவனும்--சோர்வான்-சோர்வையடைகின்றவனும்.--(எ-று) (கருத்து அங்கொருவன் இருதுபன்னனுக்குத் தேர்ப்பாகன் மனைவியைப்பிரிந்து சோர்பவன் என்பதாம். (௰அ)

அழலிலாதுணவமிர்தெனவடுந்தொழில்புரிவோன் ..*
மழகளிற்றினன்னடையினன்வாகுவனென்போ.. ...*
னெழுவுலாந்திணிதோளினனீங்குளனென்ன........*
வொழுகுபூங்கொடிமருங்குலாயுணர்ந்தனன்வந்தேன்*

(இ-ள்) அழலிலாது-நெருப்பில்லாமல்—உணவு - உண்டியை—அமிர்தென அமுதமென்னும்படி—அடுந்தொழில்- சமைத்தலை - புரிவோன்-செய்வானும்- மழகளிற்றின் - இளமைதங்கிய யானைபோல—நன்னடையினன் - நல்லநடையையுடையவனும்—வாகுவனென்போன் - வாகுகனென்னும்பெயரையுடையவனும்-- எழுவுலாம்-தூண்போலுலாவுகிற—திணி-வலிமைபொருந்திய— தோளினன்-தோள்களையுடையவனுமாகிய ஒருவன் — ஈங்கு - இந்நகரத்தில்—உளன் - இருக்கின்றான் — என்ன-என்றுசொல்ல--ஒழுகு - தேனொழுகின்ற— பூங்கொடி-பச்சைக்கொடியையொத்த--மருங்குலாய்-இடையையுடைய தமயந்தியே--உணர்ந்தனன்-இச்செய்தியறிந்தவனாகி— வந்தேன்-இவ்விடம்வந்தேன் (என்றான்)-(எ-று) (கருத்து) அக்கினியில்லாது சமைப்பவன் இருக்கிறானென்றுகேட்டு வந்தேன் என்றான் என்பதாம். (௰௯)

---

வீமன்தேடவிட்டபடலம்-முற்றிற்று.





# கலிநீங்குபடலம்.



இப்படலத்தால் நளனிடத்தில் பொருந்தியிருந்த கலி, யிந்நளன் அக்ஷஹிருதயத்தை யறிந்தபின் னவனிடத்தினின்று மொழிவிட்டு நீங்குதல் சொல்லப்படுகின்றது..... *

(கலிநிலைத்துறை)

என்றுகூறியவந்தணற்கிருநிதிவழங்கி........... **
நன்றுநின்னுரையின்னுமயோத்தியினண்ணி *
மன்றன்மாலைவேலிருதுபன்னற்குளபகிர்வ ... *
தொன்றுகூறுவதுளதெனவுரைத்தனன்மெய்யினளால்

(இ-ள்) என்றுகூறிய-இப்படியென்றுசொல்லிய — அந்தணற்கு-ஒற்றனாய்ச்சென்றபருணாதனென்னும்பிராமணனுக்கு -- இருநிதி-மிகுந்தநிதிகளை---வழங்கி-கொடுத்து — நின்னுரை - உன்சொற்கள் — நன்று-நல்லது — இன்னமும் - மறுபடியும்---அயோத்தியினண்ணி-அயோத்திநகரத்திற்பொருந்தி--மன்றல் - வாசனைபொருந்திய--மாலை-பூமாலையணிந்த-- வேல் - வேலாயுதமேந்திய -- இருதுபன்னற்கு-இருதுபன்னமஹாராஜனுக்கு- உளபகிர்வது - மனங்களிப்பதாகிய--ஒன்றுகூறுவது-ஒருசொல்லத்தக்கது -- உளது-உண்டு---என-என்று-- உரைத்தனன்மெய்யினள் - சொல்லினாள் -- (எ-று) (கருத்து) தமயந்தி பிராமணனுக்குப் பொருள்கொடுத்து இருதுபன்னனுக்குச் சொல்லவேண்டுவதொன்றுண்டென்று சொலத்தொடங்கினள் என்பதாம். (க)

நாட்டமூன்றுடைநாயகன்வரத்தினானங்கை... *
மீட்டுங்கன்னிகையாயினள்சுயம்வரம்விழைந்தாள்
கேட்டுமாநிலக்கிழவருமவ்வுழியிறுத்தார்...... *
பூட்டுவார்சிலைமன்னநீபோதியேற்போவாய் ... *

(இ-ள்) நாட்டமூன்றுடை - திரிநேத்திரந்தரித்த---நாயகன- பரமசிவனது--வரத்தினால்-அனுக்கிரகத்தினால்--நங்கை - தமயந்தியானவள்---மீட்டும்-மறுபடியும்---கன்னிகையாய் - கன்னிகாப்பெண்ணாகி--சுயம்வரம்-சுயவரத்தை--விழைந்தாள்-விரும்பினாள்--கேட்டு-அச்செய்திகேட்டு--மாநிலக்கிழவரும் - அரசர்களும்---அவ்வுழி-அவ்விடத்தில்--இறுத்தார் - வந்தடைந்தார்கள்--பூட்டு - நாணேறிடப்பட்ட--வார்சிலை - நீண்டவில்லையேந்திய--மன்ன - இருதுபன்னவரசனே--நீபோதியேல் - நீபோவையானால்---போவாய்-

(விரவிற்)போவாய்--(எ-று) (கருத்து) இருதுபன்னனே தமயந்தி இரண்டாவதுசுயம்வரத்தை யிச்சித்தாள் நீபோவையாகிறபோ-இதுமுதலிரண்டுங் குளகம் என்பதாம். (௨)

நாளைநன்மணம்புணர்வது நிடதநாடளிக்கும் ........ ...*
காளையாருயிருளன்கொலோ கழிந்தனன் கொல்லோ .. .. *
வாளிமொய்ப்பிறுயென்று நீயறைகெனவறைந்தாள் ... ...*
வாளைவென்றரிபரந்து மைதோய்ந்தகண்மடவாள்... ......*

(இ-ள்) நாளை-நாளைத்தினத்தில்—நல்-நல்ல—மணம்-விவாகமானது—புணர்வது-செய்யப்படுவதாம்—நிடதநாடு-நிடததேயத்தை—அளிக்கும்-இரக்ஷிக்காநின்ற—காளை-நளமஹாராஜனானவன்—ஆர்-நிறைந்த—உயிர்-பிராணனானது—உளன்கொலோ-இருக்கப்பெற்றானோ—கழிந்தனன்கொல்லோ-நீங்கப்பெற்றானோ—வாளி-சிங்கத்தையொத்த—மொய்ப்பிறுய்-பலத்தையுடைய இருதுபன்னனே—என்று-என்றுசொல்லி—நீயறைகென-நீசொல்லென்று—வாளை-வாளாயுதத்தை—வென்று-சயித்து—அரிபரந்து-செவ்வரிபரந்து—மைதோய்ந்த-அஞ்சனம்பொருந்திய—கண்-கண்களையுடைய—மடவாள்-தமயந்தியானவள்—அறைந்தாள்-சொன்னாள்—(எ-று) (கருத்து) நாளை விவாகமெனச் சொல்லென்று சொன்னாள் என்பதாம். (௩)

கருதிநூற்றுறைபோயவன் றுனைவினிலெய்தி .. *
யிருதுபன்னனையடைந்திவையாவையுமியம்ப ..*
மருமலர்க்குழன்மன்றல்கேட்டலுமுளமகிழ்வுற் *
றுருவவாம்பரித்தேர்விடுவாகுவற்குரைப்பான்..*

(இ-ள்) கருதிநூல்-வேதசாஸ்திரங்களினது—துறை-மார்க்கத்தில்—போயவன்-சிறந்தவனுகியவேதியன்—றுனைவினில்-சீக்கிரத்தில்—எய்தி-(அயோத்தியை)அடைந்து—இருதுபன்னனை-இருதுபன்னமஹாராஜனை—அடைந்து-நெருங்கி—இவையாவையும்-இவையனைத்தையும்—இயம்ப-சொல்ல—மருமலர்-வாசனைபொருந்தியமலரையணிந்த—குழல்-கூந்தலையுடைய தமயந்தியினது—மன்றல்-விவாகவார்த்தையானது—கேட்டலும்-கேள்வியுற்றமாத்திரத்தில்--உளம்-மனமானது--மகிழ்வுற்று-களிப்புற்று--உருவவாம்-தேராகத்தாவாநின்ற--பரி-குதிரைகட்டிய--தேர்விடு-தேரைச்செலுத்தாநின்ற--வாகுவற்கு-பாகுகன் என்னுஞ்சாரதிக்கு--உரைப்பான்-சொல்லுவான்--(எ-று) (கருத்து) இருதுபன்னன் தேர்ப்பாகனுக்குச் சொல்லுவான் என்பதாம். (௪)

தளருநுண்ணிடைத்தமயந்திசுயம்வரநாளை,யுளவ
யப்பசும்புரவியினுள்ளமோர்ந்தனையேற்,றெளியுங்

கேள்வியாய்விரைவினிற்செலுத்துகதேரொன் ..*
றளிமுரன்றுபைந்தேனுகர்தாரிருதுபனறைந்தான் *

(இ-ள்) தளரும்-தளர்ச்சியடையாநின்ற-- நுண்ணிடை-நுட்பமானஇடையையுடைய — தமயந்தி-தமயந்தியினது--- சுயம்வரம்-சுயம்வரமானது —நாளை-நாளைத்தினத்தில்(நடக்கின்றது) —உளை-புறமயிரினையும்--வயம்-வெற்றியையுடைய — பசும் - பசுமையாகிய—புரவியின்-குதிரையினது--உளம்-மனதை-- ஓர்ந்தனையேல்-அறிவாயாதலால்--தெளியுங்கேள்வியாய் - தெளிவுபெறுங்கேள்வியையுடையபாகனே—விரைவினில-சீக்கிரத்தில்--தேர்-இரதத்தை செலுத்துக-நடத்துக--என்று-என்றுசொல்லி--அளி-வண்டுகள்—முரன்று-சத்தித்து--பைந்தேன்-பசியதேனை--நுகர்-உண்ணும்படியான--தாரினன்-மாலையணிந்தஇருதுபன்னமஹாராஜன்---அறைந்தான்-சொன்னான்---(எ-று) (கருத்து) இருதுபன்னன், தேர்ப்பாகனே நாளை தமயந்திக்குச்சுயம்வரம்சீக்கிரந்தேரைச் செலுத்தென்றான் என்பதாம். (௫)

கேட்டவாகுவன்கிளியெனமிழற்றுதீங்கிளவி... .....*
காட்டுணீத்ததுநினைத்தனளாயினுங்கற்பு...... .... ...*
நாட்டுகின்றவளித்திறம்புரியுமோநம்மைக்............*
கூட்டுதற்கிஃதிழைத்தனளாமெனக்குறித்தான்... ...*

(இ-ள்) கேட்ட-அச்சொல்லைக்கேட்ட--வாகுவன் - வாகுவனென்னும்பெயரினையுடைய நளன்—கிளியென-கிளிபோல— மிழற்று-சொல்லப்பட்ட--தீங்கிளவி-மதுரமானசொற்களையுடையதமயந்தியானவள்—காட்டுள்-காட்டினுள்--நீத்தது - விடுத்ததை -- நினைத்தனளாயினும்-(விசாரமாக)நினைத்தாளாயினும்--கற்பு- பதிவிருத்தியத்தை--நாட்டுகின்றவள்-நிலைநிறுத்துகின்ற அவள்— இத்திறம்-இவ்வண்ணமாக—புரியுமோ-செய்வாளோ (செய்யாள்--ஆயினும்) நம்மை-எம்மை—கூட்டுதற்கு-(தன்னுடன்) கூட்டுதற்கு— இஃதிழைத்தனளாம்-இதைச்செய்தவளாவாள்—என-என்று--- குறித்தான்-கருதினான்---(எ-று) (கருத்து) நளன், தன்னைவரவழைக்க இவ்வாறுசெய்தாளென்று நினைத்தான் என்பதாம். (௬)

நொறில்வயப்பரித்தேர்பண்ணிநொய்தினிற்கொணரா*
வெறுழ்வலித்தடந்தோளினாய்தேர்மிசையிவரி... ...*
னறுமலர்ப்பசும்பூந்தொடைவிதர்ப்பர்கோனாட்டி ..*
லுறுவலிப்பகல்கழிவதன்முன்னெனவுரைத்தான் ... *

(இ-ள்) நொறில்-வேகமும்--வயம்-வெற்றியும்பொருந்திய--பரி

குதிரைகட்டிய—தேர்-இரதத்தை—பண்ணி-அலங்கரித்து—நொ
ய்தினில்-சீக்கிரத்தில்—கொணரா-(வாகுகன்) கொண்டுவந்து--எ
ழும்பரி மிகுந்தவலிமைபொருந்திய-கடந்தாவிஞய் - டருத்த
தோட்களையுடைய இருதுபன்னவரசனே--தேர்மிசை-தேரினில்--
இவரின் ஏறிகொள்வையாகில்---நறுமலர்-வாசனைபொருந்தியமல
ர்களொடோபித்த--பசும்-குளிர்ந்த -பூந்தொடை--அழகியமாலைகளையு
ணிந்த--விதர்ப்பர்கோன்-வீமராஜனது--நாட்டில-தேயத்தில்-- இ
ப்பகல்-இன்றையதினம்--கதிரவன்சூழன்- நீங்குவதற்குமுன்னமே--
உறுவல்-அடையேன்--என-என்று-- உரைத்தான் - சொன்னான்---
(எ-று) (கருத்து) தேர்ப்பாகனுகியநளன், தேரைக்கொண்டுவந்து
அரசனே,நீயேறினுல் பொழுதுபோமுன் விதர்ப்பதேயத்தில் கொ
ண்டுபோய் விடுவேனென்றான் என்பதாம். (எ)

என்றுகூறலுமிளங்கதிர்ப்பரிதிபோலிறைவன்.........*
குன்றுபோலுயர்கொடுஞ்சியந்தேர்மிசைகொள்ள..*
நின்றயாவரும்வியப்புறநினைவருங்கடுப்பின்........*
மன்றலந்தொடைவாகுகன்வாம்பரிவிடுத்தான்... ..*

(இ-ள்) என்றுகூறலும்-இப்படிச்சொன்னமாத்திரத்தில்--இளங்
கதிர்ப்பரிதிபோல்-பாலசூரியன்போல-- இறைவன் - இருதுபன்ன
வரசன்--குன்றுபோல்-மலைபோல..-உயர் உயர்ந்த --கொடுஞ்சி-
மேற்பாய்வையுடைய--அந்தேர்மிசை-அழகியதேரினில் -- கொள்
ள-ஏறிக்கொள்ள--நின்றயாவரும் பார்த்திருந்தஅனைவரும் --- விய
ப்புற-ஆச்சரியப்பட--நினைவரும் எண்ணுதற்கரிய--கடுப்பின்-வே
கத்தினுல்- மன்றல்-வாசனைபொருந்திய--அந்தொடை- அழகியமா
லையணிந்த-வாகுகன்-பாகனுனவன்--வாம்பரி - தாவாநின்றகுதி
ரைகளை--விடுத்தான்-நடத்தினுன்—(எ-று) (கருத்து) இருதுபன்
னன் தேரிலேற நளனுகியபாகன் தேரைவிடுத்தான் என்பதாம்.

விடுத்தவாம்பரிவருந்தலுமெய்த்தவர்தனக்குக்... ...*
கொடுத்தவிஞ்சையைக்கொய்யுளைப்பரியொடுங்கூறக்..
கடுப்பையாவருமுணர்ந்திலர்காலவிசைத்தேடி......*
யடுத்தவார்கழல்விதர்ப்பர்கோனணிசெழுநாட்டில் ..*

(இ-ள்) விடுத்த-செலுத்தப்பட்ட--வாம்பரி-தாவாநின்றகுதிரை
கள்--வருந்தலும்-வருந்துமளவில்--மெய்த்தவர் - முனிவர்கள்---த
னக்குகொடுத்த-தனக்குதவிசெய்த---விஞ்சையை-மந்திரத்தை---
கொய்-கொய்துகட்டிய--உளை பறமயிரையுடைய --- பரியொடு
ம்-குதிரையோடு---கூற-உபதேசிக்க - கடுப்பை-(தங்கள்) வேகத்
தை---யாவரும்-எவரும்---உணர்ந்திலர்-அறிந்திலர்--(அப்படி) கால

விசைத்து-கால்களைவீசி—ஓடி-சென்று—வார்கழல்-நீண்ட வீரக்க ழலையணிந்த-விதர்ப்பர்கோன்-வீமராஜனது — அணிகெழும் - அ ழகுபொருந்திய—நாட்டில் தேயத்தில்—அடுத்த - சேர்ந்தான்— (எ-று) (கருத்து)குதிரைகள்விதர்ப்பதேயத்தைச்சார்ந்தன - எ-ம்

கூர்ந்தன்மாவுளமறிதலிற்சாலிகோத்திரனோ... .. ... *
வாய்ந்தகேள்வியின்மாதலியோவன்றிநளனோ ... ...*
மேந்தல்வேற்றுருவெடுத்தனனோவெனவெண்ணி.. ...*
வேந்தர்வேந்தனுமணிமுடிதுளக்கினன்வியந்தான் ...*

(இ-ள்) கூர்ந்தன்மா-புறமயிரையுடையகுதிரைகளினது—உளம்—மனதை—அறிதலில்-உணர்வதில்—சாலிகோத்திரனோ- சாலிகோத் திரமுனிவனோ—(அன்றி) வாய்ந்தகேள்வியின்-பொருந்திய கேள்வி யையுடைய—மாதலிபோ-இந்திரசாரதியோ—அன்றி - அல்லாமல் —நளனும் - நளமஹாராஜனாகிய—ஏந்தல்- அரசன்—வேற்று ருவெடுத்தனனோ-வேறுருவெடுத்துவந்தவனோ—எனவெண்ணி என் று சிந்தித்து—வேந்தர்வேந்தனும்-இருதுபன்னராஜனும்—மணிமு டி-நவரத்தினகிரீடந்தரித்தசிரத்தை—துளக்கினன் - அசைத்தவனா ய்—வியந்தான்-சந்தோஷித்தான்.(எ-று) (கருத்து இருதுபன்ன ன் சாலிகோத்திரனோ இந்திரசாரதியோ நளனோ என்றெண்ணி யதிசயித்தான் என்பதாம். (ம)

முத்தவெண்குடைவேந்தர்கோன்முழவுறழ்தடர்தோ *
ளுத்தரீயமந்நெறியிடைவீழ்தலுமுணர்ந்து ... .. *
தத்துவாம்பரிநிறுவியத்துகிறருகென்னப்...... .....*
பத்தியோசனைகடந்ததுதேரெனப்பகர்ந்தான்...... . ❊

(இ-ள்) முத்தவெண்குடை - முத்தினாற்செய்த வெள்ளைக்குடை யைத்தரித்த—வேந்தர்கோன்-இருதுபன்னவரசனுடைய—முழவு றழ்-மத்தளத்தையொத்த—தடந்தோள்-பருத்த தன்தோள்களினி ன்றும்—உத்தரீகம்-அங்கவஸ்திரமானது—அந்நெறியிடை-அந்த மார்க்கத்தில்—வீழ்தலும்-விழுந்தமாத்திரத்தில்—உணர்ந்து-தெரி ந்துகொண்டு—தத்துவாம்-தாவியோடுகின்ற— பரி-குதிரைகளை— நிறுவி-நிறுத்தி—அத்துகில்-அந்த அங்கவஸ்திரத்தை— தருகென் ன-தாவென்றுகேட்க—தேர்-இரதமானது — பத்தியோசனை- பத் தியோசனைதூரம் —கடந்தது கடந்துவந்தது—என-என்று— பக ர்ந்தான்-(பாகுகன்)சொன்னான்—(எ-று) (கருத்து) இருதுபன்ன ன் அங்கவஸ்திரம்விழுந்தது எடுவென சாரதி பத்துயோசனைசெ ன்றது என்றான் என்பதாம். (மக)

இன்னவாய்மைகேட்டரசனும்வியப்புடனேகப்....❊
பின்னுமையிருகாவதமகன்றதற்பின்னர்.......... ... ❊

முன்னர்த்தோன்றியதளியினம்பெடையொடுமூசப். *
பொன்னந்தாதுகுபூந்துணர்ப்பொரியலைத்தான்றி. *

(இ-ள்) இன்னவாய்மை-இத்தன்மையானவசனத்தை-- கேட்டு-கேள்வியுற்று—அரசனும்-இருதுபன்னவரசனும்— வியப்புடன்-ஆச்சரியத்துடனே--ஏக-போக—பின்னும் பின்பும் — ஐயிருகாவதம்-பத்துக்காவதவழி—அகன்றதற்பின்னர்-சென்றபின்பு— அளியினம்-வண்டுக்கூட்டங்கள்—பெடையொடும் - பெட்டைவண்டுகளுடனே—மூச-மொய்க்கப்பெற்ற—பொன்னம்-பொன்போலாகிய—தாது-மகரந்தப்பொடிகள்—உகும்-உதிரப்பெற்ற— பூந்துணர்-புஷ்பக்கொத்துக்களையும்—பொரியலை-பொருக்கெடுத்த அரையையுமுடைய—தான்றி-தான்றிமரமானது--முன்னர்- எதிரில்--தோன்றியது-காணப்பட்டது—(எ-று) (கருத்து) தான்றிமரம் எதிரில்காணப்பட்டது என்பதாம். (௰௨)

தான்றியாமரந்தோன்றலுந்தேரினைத்தகைத்துத் ... *
தோன்றுமிம்மரத்திலைகளுந்தொக்கமென்பழனு... *
மூன்றுகோடியேமுப்பதிற்றிரண்டெனமொழிய ... *
வான்றகேள்வியோனெண்ணியற்றுமெனவியந்தான் *

(இ-ள்) தான்றிமாமரம் - பெரியதான்றிமரமானது-- தோன்றலும்-காணப்பட்டவளவில்—தேரினை - இரதத்தை--தகைத்து - இருதுபன்னவரசனிறுத்தி—தோன்றும்-காணப்படுகின்ற -- இம்மரத்து-இந்தமரத்தில்--இலைகளும்-இலைகளும்- தொக்கமென்பழனும்-நெருங்கியமென்மையான பழங்களும்--மூன்றுகோடியேமுப்பதிற்றிரண்டென-இரண்டுதலையிட்ட முப்பதை மேற்கொண்ட மூன்றுகோடியென--மொழிய-சொல்ல--ஆன்றகேள்வியோன்-நிறைந்தகல்வியையுடைய நளமஹாராஜன்--எண்ணி - அம்மரத்திலிலைமுதலியவற்றைக்கணக்கிட்டு—அற்றும்-நீசொல்லியதன்மைத்தாம்—என-என்றுகூறி— வியந்தான்-(அக்கணக்கறிவினி)லாச்சரியப்பட்டான்--(எ-று) (கருத்து) இருதுபன்னன் தான்றிமரத்திலைகளுங் கனிகளும் ஆறுகோடியறுபத்துநாலும் எனச்சொல்ல சாரதியெண்ணி யதிசயித்தான் என்பதாம். (௰௩)

இனையவிஞ்சைமற்றெனக்குநீயளித்தனையென்னிற் ... *
றனைவயப்பரியுளமுணர்விஞ்சையான்சொல்வன் ... *
வனைபொலங்கழல்மணிமுடிமன்னவென்றுரைப்ப *
இனையவிஞ்சையையவாகுகற்களித்தனனன்றே ........ *

(இ-ள்) இனையவிஞ்சை-இத்தன்மையாகியவித்தையை— எனக்

கு-என்றனுக்கு—நீயளித்தனையெனில் - நீகொடுப்பாயானால்—துனை-வேகம்பொருந்திய—வயம்-வெற்றியுடைய—பரி-குதிரைகளின்--உளம்-மனதை---உணர்விச்சை - அறியும்வித்தையை—வனை-கட்டப்பட்ட--பொலன்கழல-பொன்னாற்செய்த வீரக்கழலையும்---மணிமுடி-நவரத்தினம்பதித்தகிரீடத்தையுந்தரித்த--- மன்ன-இருதுபன்னவரசனே—யான்-நான்--சொல்வன்-(உனக்குச்) சொல்லுவேன்--என்றுரைப்ப-என்றுவாகுகன்சொல்ல--- அனையவிச்சையை-அந்தவித்தையை--வாகுகற்கு-பாகுகனுக்கு-- அளித்தனன்-(இருதுபன்னவரசன்) கொடுத்தான்—(எ-று) அந்தவித்தையாவது கணக்குவித்தை-அதுவேஅக்ஷவித்தையாம்-(கருத்து) சாரதி இந்தவித்தையை எனக்குக்கொடும் குதிரைகளுளத்தையறியும் வித்தையை உனக்குக்கொடுப்பேனென்றான் இருதுபன்னன் சாரதிக்குக்கொடுத்தான் என்பதாம். (௰௪)

இருதுபன்னனவ்விச்சையைவாகுகற்கீய....... ...*
மருவிநின்றவன்கலிதணந்தேகிவாளரவி...... ... ...*
னெரிசெய்வெவ்விடங்கான்றவினிதயநெக்குருகி... *
வெருவிவாய்விடாவிடத்தினையுமிழ்ந்தனனன்றே. ... *

(இ-ள்) இருதுபன்னன்-இருதுபன்னவரசன்---அவ்விச்சையை அக்கணக்குவித்தையை--வாகுகற்கு-வாகுகனாகிய நளனுக்கு—இயம்ப கொடுக்க--மருவிநின்ற-(நளனை)மருவியிருந்த--வன்கலி-வலிமையுள்ளகலியனானவன்--தணந்தேகி-(நளமஹாராஜனை)விட்டுநீங்கிப்போய்--வாளரவு-ஒளிபொருந்தியகார்க்கோடகநாகமானது--எரிசெய்-தகிக்காநின்ற--வெவ்விடம்-கொடியவிடத்தை--கான்றவில்- (தானிருந்த நளனிடத்திற்) கக்கினமையால்--இதயம் - மனமானது--நெக்குருகி-கரைந்துருகப்பெற்று--வெருவி - பயந்து--வாய்விடா-வாய்விட்டு--விடத்தினை-(கார்க்கோடகனது)விஷத்தை--உமிழ்ந்தனன்-கக்கினான்--(எ-று) அன்று-ஏ-அசைகள்- (கருத்து) இருதுபன்னன் வித்தையைப்பாகுகனுக்குக்கொடுக்க-கலிநளனை விட்டுநீங்கி விஷத்தைக்கக்கினான் என்பதாம். இன்-சாரிலய. (௰௫)

தணந்தவெந்திறற்கலியனைச்சபிக்குவனென்றுக்... ... *
கணங்கொள்வண்டிமிர்தாரினனுலத்திடைக்கருத ... *
வுணர்ந்தவெங்கலிதமயந்தியாலாத்தசாபத்தா... ... *
லணங்கராவுமிழ்விடத்தினாலின்றளவயர்ந்தேன் ......*

(இ-ள்) தணந்த-தன்னைப்பிரிந்துநின்ற--வெந்திறல்- வெவ்விய பலத்தையுடைய--கலியனை-கலிபுருஷனை--சபிக்குவனென்று - சபிப்பேனென்று---கணங்கொள்-கூட்டங்கொண்ட---வண்டு- வண்டுக

ன் — இயிர்-சத்தியாநின்ற--தாரினன்-மாலையணிந்த நளமஹாராஜன்--உளத்திடை-மனத்தினில் — கருதல்-நினைத்தலை--உணர்ந்த-அறிந்த--வெங்கலி-கொடியகலியானவன்---தமயந்தியுரைத்த-தமயந்திகொடுத்த--சாபத்தால் - சாபத்தினால்--அணங்கு-அச்சத்தைத்தருகின்ற--அரா-கார்க்கோடகநாகமானது--உமிழ்-உமிழ்ந்த-- விடத்தினால்-விஷத்தால்---இன்றளவு-இன்றையமட்டும்-- அயர்ந்தேன்-சோர்வையடைந்தேன் — (எ-று) (கருத்து) தன்னைச்சபிக்க நினைந்த நளன்கருத்தையறிந்தசனி தமயந்திசாபத்தால் நாகம் உமிழ்ந்த விஷத்தால் சோர்வையடைந்தேன்- [இது முதலிரண்டுங் குளகம்] என்பதாம். (௰௬)

இழைத்ததீவினைதணந்தனனின்றுதொட்டுன்பேர் .. *
வழுத்தினரையுமருவலன்மன்னவென்றேத்த........*
வழற்கொடுஞ்சினந்தணிந்தனனாடல்வேலரசன் ... ...*
குழைத்ததான்றியிலேறினன்கொடியவெங்கலியே ...*

(இ-ள்) இழைத்த-செய்யப்பட்ட— தீவினை- கொடுஞ்செய்கைகளை—தணந்தனன்-விடுநீக்கினேன்—இன்றுதொட்டு - இன்றையதினமுதற்கொண்டு--உன்பேர்-உன்னுடையநாமத்தை--வழுத்தினரையும்-துதித்தவரையும், மருவலன்-சேரேன்--மன்ன-நளமஹாராஜனே—எனவேத்த-என்றுஸ்துதிக்க--ஆடல்-போர்செய்கின்ற--வேல்-வேலையேந்திய--அரசன் - நளமஹாராஜனானவன் -- அழற்கொடும்-அக்கினிபோற்கொடிய--சினம் - கோபத்தை--தணிந்தனன-விடுத்தான்--குழைத்த-தளிர்த்த--தான்றியில்-தான்றிமரத்தில்--கொடிய-குரூரனாகிய--வெங்கலி-வெவ்வியகலியானவன்--ஏறினன் ஏறிக்கொண்டான்—(எ-று) ஏ-அசை-(கருத்து) இன்றுதொடங்கி உயதுபேரைச்சொன்னவரையும் பிடித்திலன் என்றுதுதிக்க அரசன்கோபம் நீங்கினன் சனிதான்றிமரத்திமேலேறினன் என்பதாம் (௰௭)

கலிநீங்குபடலம்-முற்றிற்று.



# தேவியைக்கண்ணுற்றபடலம்

இப்படலத்தால் கலிநீங்கியபின்பு நளமஹாராஜன் வீமனது குண்டினபுரத்தில்வந்து மூன்றுவருடம்பிரிவுற்ற தனது தர்மபத்தினியாகிய தமயந்தியைக் கண்டமைசொல்லப்படுகின்றது ... *

(கலிநிலைத்துறை.)

விண்டமென்மலர்நறவினைவிளரியஞ்சுரும்ப...... .. *
ருண்டுதுஞ்சுதார்நிடதர்கோன்றேர்கடிதோட்டி ..... *
மண்டுதீம்புனலகழிசூழ்மாமதிற்குடுமிக்... ... ...... *
கொண்டல்கண்படுகுண்டினபுரத்தில்வந்தடைந்தான் *

(இ-ள்) விண்ட-மலர்ந்த — மென்மலர் - மெல்லிய புஷ்பங்களினது—நறவினை-தேனை—விளரி-விளரியென்னும்பண்ணைப் பாடுகின்ற—அஞ்சுரும்பர்-அழகிய வண்டுகள்—உண்டு - குடித்து— துஞ்சும்-நித்திரைசெய்யும்படியுள்ள— தார்-மாலையையணிந்த — நிடதர்கோன்-நளமஹாராஜன்—தேர்-இரதத்தை—கடிது- விரைவினில்—ஓட்டி-செலுத்தி—மண்டு-நிறைந்த—தீம்புனல் - மதுரமானநீரையுடைய— அகழி-அகழியானது— சூழ் சூழப்பெற்ற—மாமதில்-பெரியமதில்களையுடைய— குடுமி-சிகரத்தில்—கொண்டல்- மேகங்கள்—கண்படு-நித்திரைசெய்யப்படியுள்ள— குண்டினபுரத்தில்-வீமராஜன்பட்டினத்தில்—வந்தடைந்தான் - வந்துசேர்ந்தான்—(எ-று) (கருத்து) நளன்தேரோட்டிக் குண்டினபுரத்தில்வந்தான்.

சில்லியந்தடந்தேர்வருகம்பலைகேளா...... .........*
வொல்லையித்திறந்தேர்விடநளனலாதொருவர்.. - ... *
வல்லரோவெனமனத்திடையெண்ணிமற்றனையோ ... *
னல்லனேலுயிர்துறப்பனென்றுன்னினளணங்கே ... *

(இ-ள்) சில்லி வண்டிலையுடைய—அந்தடந்தேர் - அழகிய விசாலமாகியதேரானது— வரும்-வருகின்ற—கம்பலை-சத்தத்தை— கேளா-கேட்டு—ஒல்லை-சீக்கிரத்தில—இத்திறம்-இவ்வண்ணமாக--தேர்விட-தேரைச்செலுத்த— நளனலாது-நளனையல்லாமல் ---ஒருவர்-மற்றொருவர்--வல்லரோ-திறமையுள்ளவரோ--என - என்று--மனத்திடை-மனத்தில்---எண்ணி-சிந்தித்து--அனையோன் - இவன்--அல்லனேல்-நளனல்லனாகில்--உயிர் துறப்பல்-உயிரைவிடுவேன் -- என்று-என்று---அணங்கு-தமயந்தியானவள்---உன்னினள்- எண்ணினாள்—(எ-று) (கருத்து) தமயந்தி தேர்வருஞ்சத்தங்கேட்டு நளனல்லாவிடில் உயிர்விடுவேனென்றாள் என்பதாம். (உ)

மருவுபாகனைத்தேரொடும்வாயிலினிறுவி... ......... *
யிருதுபன்னனவ்வீமன்மாட்டேகலுமெதிராப்... .. *
புரிவயாவையும்புரிந்துபல்காவதம்போக்கி... ......*
யுருவப்பூணினாய்வந்ததமையெவன்கொலென்றுரைத்தான்

(இ-ள்) மருவுபாகனை-பொருந்தியசாரதியை—தேரொடும்-இரதத்தோடும்—வாயலில்-அரண்மனைவாசலில்—நிறுவி-நிறுத்தி—இருதுபன்னன்-இருதுபன்னவரசனானவன்,அவ்வீமன்மாட்டு-அந்தவீமராஜனிடத்து —ஏகலும்-சென்றபொழுதில்-- எதிராப்புரிவயாவையும்-எதிர்வந்துசெய்யத்தக்கமரியாதையனைத்தையும் — புரிந்து-செய்து—பல்காவதம்போக்கி-பலகாவதவழியைக்கடந்து—உருவப்பூணினாய்-அழகிய ஆபரணத்தையுடையஇருதுபன்னவரசனே--வந்ததமை-(நீ) இவ்விடம்வந்ததன்மை--எவன்கொல்- என்னகாரணமோ--என்று-என்று--உரைத்தான்- வீமராஜன்சொன்னான் (எ-று) (கருத்து) இருதுபன்னன் வீமனிடத்திற்சென்றவளவில வீமனெதிர்வந்து உபசாரஞ்செய்து வந்தகாரியமென்னவென்று கேட்டான் என்பதாம். (௩)

ஈங்கடைந்ததுமன்னநிற்காணியவெனலும் .. ... ...*
வீங்குதோளினனினியநன்மொழிபலவிளம்பிப்... . *
பாங்குளார்தமையுறையுளொன்றமைக்கெனப்பணிப்ப
வாங்குவிண்ணவர்நகரினும்விழுமியதொன்றமைத்தார்..*

(இ-ள்) மன்ன-வீமராஜனே--ஈங்கு-இந்நகரத்தில்— அடைந்தது-வந்தது—நிற்காணிய -உன்னைக்காண்பதற்கு—எனலும்- என்றுசொல்லியமாத்திரத்தில்,வீங்குதோளினன்-பருத்தபுயத்தையுடையவீமராஜனானவன்--இனிய-இனிமையான--நன்மொழி-நல்லசொற்களை--பலவிளம்பி-பலவாகச்சொல்லி---பாங்குளார்தமை- அருகிலுள்ள ஏவலாளரை(பார்த்து)--உறையுளொன்று- ஒருவிடுதிவீட்டை—அமைக்கென-செய்யுங்களென்று—பணிப்ப- உத்தரவுகொடுப்ப--ஆங்கு-அவ்விடத்தில்--விண்ணவர்நகரினும் - சொர்க்கத்தைக்காட்டிலும்--விழுமியது-மேன்மையதாகிய--ஒன்று - ஒருவிடுதிவீட்டை--அமைத்தார்-ஏவலாளர்)திட்டஞ்செய்தார்கள்--(எ-று)(கருத்து) வீமராஜனை உம்மைக்காணவந்தேனென்றவளவில் வீமனேவலாளரை ஓர்வீடொன்று அமைக்கச்சொன்னான் அவர்களமைத்தார்கள் எப்பதாம். (௪)

இருதுபன்னன்வேந்தருளினாலவ்வயினெய்தி........*
யரசர்யாவருந்தொக்கிலராய்வளப்பணைத்தோள் ...*

விரைசெய்கோதைதன்சுயம்வரமென்னவேதியன்றான்.
உரைசெய்மாற்றமற்றென்கொலென்றயிர்த்தனனுறைந்தான

(இ-ள்) இருதுபன்னன்-இருதுபன்னவரசன்--வேந்தருளிறல்-வீமனுத்தரவினால்--அவ்வயின்-அந்தவிடத்தில்--எய்தி - வந்து --அரசர்யாவரும்-அரசர்களெவரும்--தொக்கிலர்-வந்துசேர்ந்தன ரில்லை--ஆய்வளை-சிறந்தவளையலையணிந்த--பணைத்தோள்- மூங்கிலை யொத்ததோள்களையும்--விரைசெய் பரிமளிக்கின்ற--கோதை-தலை கூந்தலையுமுடையதமயந்தியினது--சுயம்வரமென்ன-சுயம்வரமெ ன்று--வேதியன்-பருணகனென்னும்பிராமணனை--முன்- முந்தியதி னத்தில்--உரைசெய்-சொல்லப்பட்ட--மாற்றம் - வார்த்தை --என் கொல்-எப்படிப்பட்டதோ--எனறு-என்று--அயிர்த்தனன் - சந்தே கித்தவனாகி--உறைந்தான்-வாசஞ்செய்தான--(எ-று) மற்று - அ சை-(கருத்து) இருதுபன்னன் பருணகனென்னும் பிராமணன்சு யம்வரமென்று சொன்னதைக்குறித்துச் சந்தேகித்தான-எ-ம். (௫)

சாந்தமென்முலைத்தமயந்திதோழியைநோக்கிப் ... *
போந்தமன்னவன்பொற்றடந்தேரினைப்பிணித்த .. *
கூந்தல்மாவிரிசாரதிகொற்றவேலனளனும் ........*
வேந்தனேயெனவுணர்ந்திவண்வருகெனவிடுத்தாள் ...*

(இ-ள்) சாந்தம்-சந்தனக்கோலமணிந்த---மென்முலை - மெல்லி யமுலைகளையுடைய--தமயந்தி-தமயந்தியானவள்--தோழியை- சே டியென்னுந்தனதுபாங்கியை--நோக்கி-பார்த்து-- போந்தமன் னவன்-வந்தவிருதுபன்னவரசனது, பொன்-அழகிய--தடம் விசா லமாகிய--தேரினில்-இரதத்தில்--பிணித்த-கட்டிய-- கூந்தல்மா-பு றமயிரினையுடைய குதிரைகளை--விரி-நடத்துகின்ற--சாரதி- தேர்ப் பாகனானவன்--கொற்றம்-வெற்றிபொருந்திய---வேல் - வேலாயு தந்தரித்த--நளனும்-நளனாகிய--வேந்தனே-அரசனே--(அல்லனோ)என -என்று--உணர்ந்து-அறிந்துகொண்டு--இவண் - இவ்விடத்தில்--- வருகென-வாவென்றுசொல்லி--விடுத்தாள்- அனுப்பினாள்---(எ-று) (கருத்து) தமயந்தி சேடியாகியபாங்கியைச் சாரதிநளனேயெ ன்றறிந்து வாவென்றாள் என்பதாம். (௬)

கொங்குவாய்மடுத்தினவண்டுகூட்டுணுங்கூந்தற் .......*
திங்கள்வாண்முகத்தெரிவைதன்னேவலிற்றிறப்பா ...*
மங்கையெய்திமற்றியாவனீயெத்தொழில்வல்லை... .. *
பங்குவந்தவாறெனனென்னவாகுசனிசைப்பான... ...*

(இ-ள்) கொங்கு-தேனை---வாய்மடுத்து-வாயைவைத்து--- இனவ ண்டு-கூட்டமாகியவண்டுகள்---கூட்டுணும் - கொள்ளைகொண்டுண ணப்பெற்ற--கூந்தல்-அளகத்தையும்--திங்கள்-சந்திரனைப்போன்ற--

வாண்முகம்-ஒளிபொருந்தியமுகத்தையுமுடைய--தெரிவைதன்- தமந்திரினது--எவலின்-உத்தரவின்னாலும்--திறம்பா-தவறாத -- மங்கை-கேசினியானவள் — எய்தி-அவ்விடத்திற்சென்று—யாவனீ - நீயார் — எத்தொழில்-எந்தத்தொழில்களில—வல்லே- வல்லமையுள்ளவன — ஈங்கு-இவ்விடத்தில்—வந்தவாறு-வந்ததன்மை— என்னென்ன எப்படிப்பட்டதென்றுகேட்ப—வாகுகன்-வாகுகனென்னப்பட்டநளன்--இசைப்பான்-சொல்லுவான — (எ-று) (கருத்து தோழிசென்று நீயாவன நீ எத்தொழிலில்வல்லவன நீ,இங்குவந்தவகையென்ன என வாகுவனசொல்வான என்பதாம். (எ)

விரிமலர்க்குழற்றமயந்திசுயம்வரம்வேட்ட.... ..*
விருதுபனனனமானறேர்விடும்வாகுகனெனபேர்
புரிவல்வெந்தழலின்றியுமடைத்தொழில்புனலற்.*
றுருகுபாலேயிற்றீம்புனறருவலென்றுரைத்தான்*

(இ-ள்) விரி-மலர்ந்த—மலர் மலர்களையணிந்த—குழல்-கூந்தலேயுடைய—தமயந்தி-தமயந்தியினது— சுயம்வரம்-சுயம்வரத்தினில்—வேட்ட-விருப்பமுற்ற—இருதுபனனன- இருதுபனனராஜனது—மானறேர்-குதிரைகட்டியதேரை—விடும்- நடத்துகின்ற—வாகுகன-பாகுகன எனபது—எனபேர்-என்பெயராம்— வெந்தழல்-வெவ்விய அக்கினி—இன்றியும்-இல்லாமலும் — மடைத்தொழில்-சமயலே —புரிவல்-செய்வேன --புனலற்று-நீரில்லாமல்--- உருகு உருகுகின்ற--பாலேயில்-பாலேநிலத்தில்--தீம்புனல் - மதுரமானசலத்தை--தருவல்-(உண்டுபண்ணிக்) கொடுப்பேன --- என்றுரைத்தான-என்றுசொன்னான---(எ-று) (கருத்து) தமயந்தி சுயம்வரத்தையிச்சித்த இருதுபனனன தேர்விடுஞ்சாரதி அக்கினியில்லாமற் சமைப்பேன நீரில்லாதபாலேயில்நீர்உண்டாக்குவேனஎனறுன.எ ம்

இனனவிஞ்சைகளெனலாதறிகுநரில்லே... ...*
யனனவனரறக்கொண்டனேபோலுமவ்வரசன.,*
மனனிவாழ்வதெந்நகர்வயினவகுததுரைமயனறு*
ள்-பொன்னவாஞ்சுணங்கரும்பியபுணர்முலேபூவை.

(இ-ள்) பொன்னவாம்-பொனபோலாகிய ---சுணங்கு- தேமல்---அரும்பிய-உண்டாகிய---புணர்முலே-நெருங்கிய ஸ்தனங்களேயுடைய---பூவை-கேசினியானவள்---இனனவிஞ்சைகள்- இத்தனைமயவித்தைகள்--நளனலாது-நளனலலாமல்---அறிகுநர் - அறிந்தவர்கள்---இல்லே (ஒருவரு)மிலே-•-அனனவன - அந்நளமஹாராஜன--தர-கொடுக்க---கொண்டனேபோலும் - பெற்றுகொண்டாய்போலும்---அவ்வரசன-அந்நளமஹாராஜன --- எந்நகர்வயின-

எந்தப்பட்டினத்தில்—மன்னி-பொருந்தி—வாழ்வது-சுகித்திருப்பது—வகுத்து-பகுத்து—உரை-அதைசொல்லு—என்றாள்-என்றுவினவினாள்—(எ-று) (கருத்து) கேசினியானவள் நீ இவ்வித்தையை நளனிடத்துக்கற்றுக்கொண்டாய்போலும் நளன் எங்கேயிருக்கிறான் சொல்லென்றாள் என்பதாம். (௯)

மேவியவிஞ்சையோர்நளனொடுங்கற்றிலன்விறல்வேற் *
சேயனன்னினிதுறைவதிவ்விடமெனத்தெருளேன் *
தூயகற்பினர்காதலர்துறப்பினுமற்றோர் ........*
நாயகற்பெறநினைவர்கொலோவெனநவின்றான் ... ...*

(இ-ள்) மேய பொருந்திய—விஞ்சை வித்தையை—ஓர்-ஒப்பற்ற—நளனொடும்-நளமஹாராஜனிடத்தில்—கற்றிலன்- நான்கற்கவில்லை—விறல்வேல்-வெற்றிபொருந்தியவேலேந்திய—சேயனை-சுப்பிரமணியனையொத்த நளமஹாராஜன்— இனிதுறைவது - இனிமையோடிருப்பது—இவ்விடம்-இவ்விடம்—என- என்று—தெருளேன்-அறியேன்—தூய-பரிசுத்தமாகிய—கற்பினர் - கற்பினையுடையமாதர்கள்—காதலர்-கணவர்கள்—துறப்பினும் - துறந்துவிட்டாலும்—மற்றோர்-வேறொரு—நாயகற்பெற- கணவனையடைய—நினைவர்கொலோ - நினைப்பரோ—என-என்று - நவின்றான்-(நளமஹாராஜன்)சொன்னான்—(எ-று) (கருத்து) நான் நளனிடத்தில்வித்தைகற்றிலன்-கற்புள்ளமாதர்நாயகர்நீக்கினும்வேறுநாயகனை இச்சிப்பார்களோ என்றான் என்பதாம். (௰)

இன்னகூறலுமடவரல்சதுமெனவேகி ....... ........ ...*
மின்னனாளுடன்கேட்டனயாவையும்விளம்பி ..... ...*
யன்னவன்றனதுருவலான்மொழிதனைத்தும் .....*
முன்னினம்பிறைமொழிவதேபோன்மெனமொழிந்தாள்.

(இ-ள்) இன்ன-இத்தன்மையாக—கூறலும் - சொன்னவளவில்—மடவரல்-கேசினியானவள்—சதுமென-சலேலென்று—ஏகி-சென்று—மின்னனாளுடன்-தமயந்தியுடன் - கேட்டனயாவையும்-கேள்வியுற்ற சங்கதிகளையெல்லாம்—விளம்பி-சொல்லி--அன்னவன்றனது-அந்நளமஹாராஜனது-- உருவலான்-வடிவமில்லாததிப்பாகன்--மொழிதனைத்தும் - சொல்லுமவைகளெல்லாம் — முன்னின்-யோசிக்குமிடத்தில---நம்பிறை-நமதுநளமஹாராஜன் -- மொழிவதேபோன்ம் சொல்வதைப்போலிருக்கின்றதென்று — மொழிந்தாள் - சொன்னாள்-- எ-று) (கருத்து) கேட்டவைகளெல்லாந் தமயந்திக்குச்சொல்லி நம்முடையஅரசனைப்போலவே பேசுகிறானென்றாள் என்பதாம். (௰௧)

மொழிதல்கேட்டலுமொய்குழல்வாலரியுதவி... ... *
யழலிலாதிவையடுவதுகாண்டியென்றறையக் .. ... ...*
குழைகொள்வாண்முகக்கொம்பனாளவனுழைக்குறுகி
யிழைகொள்பூண்முலைசொற்றவாறிசைத்தனளீந்தாள்

(இ-ள்) மொழிதல் - கேசினிசொல்லியவைகளை-- கேட்டலும்- கேள்வியுற்றமாத்திரத்தில்--மொய்குழல்-தமயந்தியானவள்-- வால் வெள்ளிய--அரி-அரிசியை--உதவி-கொடுத்து--அழலிலாது-நெருப்பின்றி--இவையடுவது - இவ்வரிசிகளைச்சமைப்பதை--காண்டியென்று-பார்த்துவாவென்று--அறைய-கூற---குழைகொள் - குண்டலமணிந்த--வாண்முகம்-ஒளிபொருந்திய முகத்தையுடைய--கொம்பனாள்-பூங்கொம்பையொத்தகேசினியானவள்--அவனுழை அப்பாகனிடத்து--குறுகி-சென்று--இழைகொள் - நூலிழைகொண்ட--பூண்-ஆரங்களையணிந்த--முலை-ஸ்தனங்களையுடைய தமயந்தி--சொற்றவாறு-சொல்லியபடி--இசைத்தனள் - சொல்லி -- ஈந்தாள் - அவ்வரிசியைக்கொடுத்தாள்--(எ-று)- (கருத்து) தமயந்தி தோழிக்கு அரிசிகொடுத்துத் தீயில்லாமற்சமைப்பதைக்காணென்றுசொல்ல அவள் அவனிடத்துச்சென்று அரிசியைக்கொடுத்தாள்.

ஈந்தவாலரிபெய்தபொற்குழிசிதீயின்றி..... ... ...*
யாய்ந்தகேள்வியான்றொடுதலுமடிசிலாயமைய.... *
வேய்ந்தபூங்குழல்கண்டுபோய்வெம்முலைப்பொறையாச்
சாய்ந்தநுண்ணிடைத்தமயந்திதன்றொடுமொழிந்தாள்.

(இ-ள்) ஈந்த - கொடுத்த--வாலரி - வெள்ளிய அரிசியானவை---பெய்த-போடப்பட்ட---பொற்குழிசி-பொன்குடத்தை -- ஆய்ந்த கேள்வியான்-நளமஹாராஜன்--தொடுதலும்- (கையால்) தொட்ட மாத்திரத்தில்--தீயின்றி-நெருப்பில்லாமல்--அடிசிலாயமைய - சாதமாயமைய--வேய்ந்த-தரிக்கப்பட்ட--பூங்குழல் - பூமாலையணிந்தகூந்தலையுடையகேசினியானவள்--கண்டு-அதைப்பார்த்து-- போய்-சென்று--வெம்முலை- விருப்பத்தைத்தருகின்ற ஸ்தனங்களினுடைய--பொறையால்-பாரத்தினால்--சாய்ந்த வணங்கிய-- நுண்ணிடை - நுட்பமான இடையையுடைய---தமயந்திதன்றொடும் - தமயந்தியுடனே--மொழிந்தாள் - (இவ்விஷயத்தைச்)சொன்னாள்-- (எ-று) (கருத்து) அரிசிபோட்டபொற்பாத்திரத்தைநளன்தொட்டவளவில் சாதமாகத்தோழிகண்டு தமயந்திக்குச்சொன்னாள்-எ-ம்.

அழலுநீருமின்றமிழ்தெனவடுதொழில்கேட்டு... ... *
குழையுநெஞ்சினளின்னுயிர்க்கொழுநனென்றெண்ணி

விழைவினோடுதன்மக்களையவனுழைவிடுத்தாள்......*
மழலைமென்மொழி மக்களுமன்னவன்மாட்டடைந்தார் *

(இ-ள்) குழையுநெஞ்சினள்-குழைந்தநெஞ்சத்தளாகிய தமயந்தியானவள்---அழலும்-நெருப்பும்---நீரும்-தண்ணீரும்-- இன்று- இல்லாமல்--அமிழ்தென- அமிர்தம்போல---அடுதொழில்-சமைத்தலை--கேட்டு - (கேள்வியுற்று---(இவன்) இன்றுயிர்க்கொழுநன்-- இனிய உயிரையொத்த (நமது)கணவன்---என்றெண்ணி - பெறுகருதி--விழைவினோடு-ஆசையோடு---தன்மக்களை-தன்புதல்வரை--- அவனுழை-அவனிடத்து--விடுத்தாள்- அனுப்பினாள் ---மழலைமென்மொழி மெல்லியமழலைமொழிகளையுடைய--மக்களும்- பிள்ளைகளும்--மன்னன்மாட்டு - நளமஹாராஜனிடத்தில்--அடைந்தார்- சேர்ந்தார்கள்—(எ-று) (கருத்து) தமயந்திநாயகனென்றெண்ணி மக்களையனுப்பினாள் அவர்கள் அரசனிடத்திற்சேர்ந்தார்கள்-எ-ம்.

அடைந்தமக்களைக்காண்டலுமழலிடுமெழுகி........*
னுடைந்ததுள்ளநீருற்றிருந்தொழுகினநெடுங்கண்...*
தொடர்ந்தமும்மலமுருக்கிவெம்பவக்கடறொலையக்.. *
கடந்துளோர்களுங்கடப்பரோமக்கண்மேற்காதல்...*

(இ-ள்) அடைந்த-தன்னிடத்துவந்த--மக்களை - புதல்வரை-- காண்டலும்-பார்த்தமாத்திரத்தில்--அழலிடும் - தீயிலிட்ட--மெழுகில்-மெழுகுபோல--உள்ளம் - (நளமஹாராஜன்) மனமானது--- உடைந்தது-நெகிழ்ந்தது--நெடுங்கண்-நெடியகண்கள்---நீருற்றிருந்து-நீர்சுரந்து--ஒழுகின-சொரிந்தன---தொடர்ந்த - சனனங்கடோறுமனுசரித்த--மும்மலம்-ஆணவ மாயை காமியமென்னு மூன்றுமலத்தையும்---முருக்கி-கெடுத்து--வெம்-கொடிய--பவக்கடல் சனனசாகரத்தை---தொலைய-நீங்க---கடந்துளோர்களும் • நீத்தோரும்--மக்கண்மேல்-பிள்ளைகண்மேல்வைத்த--காதல - ஆசையை-- கடப்பரோ - ஒழிப்பரோ-- (ஒழியார்) --(எ-று) (கருத்து) மக்களை நளன்கண்டு அழுதானென்பதாம். (௰௫)

மழலைமென்மொழிமக்களைக்காண்டலுமன்ன......*
னழுதுதுன்புறலாய்வளைத்தோழிகண்டேகித் ......*
தொழுதுசொற்றலுங்கொழுநனென்பதுதுணிந்து-
முழுவலன்புடைத்தாயொடுதந்தையான்மொழிந்தாள்-

(இ-ள்) மழலைமென்மொழி-மெல்லிய மழலைச்சொற்களையுடைய--மக்களை-பிள்ளைகளை--காண்டலும்-கண்டவளவில்— மன்னன்- நளமஹாராஜன்--அழுது - புலம்பி--துன்புறல்-துன்பப்படுதலை- ஆய்வளை-சிறந்தவளையலையணிந்த--தோழி-சேடியானவள்---கண்டு-பார்த்து--ஏகி-தமயந்தியிடத்துச்சென்று--தொழுது - வணங்

கி--சொற்றலும் - இச்செய்கையைச்சொன்னவளவில் -- கொழுந ன்-(இவன்) நமதுகணவன்--ஆம்-ஆவன்--என்பது-எனப்படுவதை --துணிந்து-தமயந்தி நிச்சயித்து--முழுவலன்புடை - நிறைந்த அ ன்பையுடைய--தாயொடு-தாயினுடன்--தந்தைபால்- தகப்பனிடத்தி ல்--மொழிந்தாள் - சொன்னாள்---(எ-று) (கருத்து) அரசன் மக்க ளைக்கண்டழுதலைத் தோழி தமயந்திக்குச்சொன்னவளவில் நாயக னென்றெண்ணித் தமயந்தி தாய்தகப்பனுக்குச்சொன்னாள் - எ-ம்.

மழைத்தடங்கணுண்மன்னவன்பணியினுல்வேந்தை..
யழைத்துவம்மெனவாய்வளைத்தோழியைவிடுப்ப...
குழைத்தபூங்கொடியன்னவள்வாகுகற்குறுகித்.. ...*
தழைத்தகாதலால்வருகெனமன்னனுஞ்சார்ந்தான்...*

(இ-ள்) மழை குளிர்ச்சியும்---தடம்-விசாலமும்பொருந்திய--- கணுள்-கண்களையுடையதமயந்தியானவள்--மன்னவன் - வீமராஜ னது---பணியினுல்-உத்தரவினுல்--அழைத்துவம்மென - (சாரதி யை யழைத்துவாவென்று--ஆய்வளை-சிறந்தவளையல்களையுடைய-- தோழியை-கேசினியை --விடுப்ப-அனுப்ப--குழைத்த-தளிர்த்த--- பூங்கொடியன்னவள்-புஷ்பக்கொடியையொத்தகேசினியானவள்-- வாகுகற்குறுகி-வாகுகனையடைந்து--தழைத்தகாதலால் - மிகுந்த அன்போடும்---வருகென - (அரசனுத்தரவின்படி) வாவென்றழை க்க--மன்னனும் - நளமஹாராஜனும்--சார்ந்தான் - (அரண்மனை யை யடைந்தான்(எ-று) (கருத்து) தமயந்திவீமனுத்தரவால்சார தியை யழைத்துவாவென்று கேசினியைவிடுக்க அவளழைக்க அர சன்வந்தான் என்பதாம். (௰௭)

மறுவில்கற்பினண்மானவேன்மன்னவன்வரலும்.....*
குறைவிலன்பினள்பிழையிலள்கண்படைகொள்வா...
ளிறையுநீப்பருமனைவியையிருள்படுகானி...........*
லறனிழுக்குறநளனலாதியாவரோயகல்வார்... ......*

(இ-ள்) மறுவில்-களங்கமில்லாத--கற்பினள்- தமயந்தியானவள் --மானவேல்-வலியவேற்படையேந்திய---மன்னவன்- நளமஹாரா ஜன்---வரலும் - வந்தமாத்திரத்தில்---குறைவில்- குறைவில்லாத--- அன்பினள் அன்பையுடையவளும்--பிழையிலள் - குற்றமில்லாதவ ளும்--கண்படைகொள்வாள் - நித்திரைசெய்கின்றவளுமாகிய-- இ றையும் இறைப்பொழுதும்--நீப்பரும்-நீத்தற்கரிய-- மனைவியை- தமயந்தியை---இருள்படு இருளுண்டாயிருக்கிற---கானில் - வனத் தில்--அறன்-தருமமானது---இழுக்குற - தவறுத--நளனலாது- ந ளனையல்லாமல--யாவரோ-மற்றவர்யாவர்தாம்--- அகல்வார்- பிரிந்து

விடுவார்கள்--(எ-று) அறனிழுக்குறு நளனென்றது வஞ்சகப்புகழ்ச்சி இதனால் வெளிப்படத்தோற்றுகின்றது-(கருத்து) தமயந்தி நளன்வந்தமாத்திரத்தில் மனைவியை நீக்குபவர் நளனல்லாமல் யார் [இது முதலிரண்டுங் குளகம்] என்பதாம். (௰௮)

என்றுகண்கணீரிடையறாதொழுகிடமாசு........ *
துன்றுமேனியந்துணிபடுமாடையுமாகி..... ... ...*
நின்றமாதினைநோக்கினெடுயிர்ப்பெறிந்து.. ...*
குன்றிரண்டெனவீங்குதோட்கொற்றவன்கூறும் ... *

(இ-ள்) என்று-இப்படியாகச்சொல்லி---கண்கள்- கண்களினின்றும்--நீர்-நீரானது--இடையறாது-இடைவிடாமல்---ஒழுகிட- பெருக--மாசு துன்று-அழுக்கடைந்த--மேனியும் - வடிவுதனையும்---துணிபடு-அறுபட்ட---ஆடையும் - ஆடையையுடையவளும்--ஆகி-ஆய்--நின்ற-(தன்னெதிரில்) நின்ற---மாதினை - தமயந்தியை---நோக்கினன் - பார்த்தவனாய்---நெட்டுயிர்ப்பெறிந்து-பெருமூச்சுவிட்டு---குன்றிரண்டென-இரண்டுமலைகள்போல---வீங்கு-பூரித்த---தோள்-தோட்களையுடைய---கொற்றவன் - நளமகாராஜனானவன்--கூறும்-(இவ்வாறு) சொல்லுவான்--(எ-று) (கருத்து) என்றுகண்ணீர்சொரிய நின்ற தமயந்தியை நளன்கண்டு சொல்வான் என்பதாம்.

அலர்முலைப்பசுங்கொடியனையாயிருட்போதிற்......*
கலிவயத்தனாய்க்காட்டிடை நீத்தனனின்னை.. ... ... *
நலியும்வெங்கலிதணந்தபின்னண்ணினனின்பால் ... *
மெலியன்மீட்டுமோர்சுயம்வரம்வேட்டதெனென்றான்

(இ-ள்) அலர்-பருத்த---முலை-ஸ்தனங்களையுடைய--பசும் - பசுமையாகிய--கொடியனாய் - கொடியையொத்த தமயந்தியே---அராயிருட்போதில்-அர்த்தராத்திரியில்--கலி - கலியனுக்கு-- வயத்தனாய்-வசப்பட்டவனாகி---காட்டிடை-வனத்தில்--நின்னை - உன்னை--நீத்தனன் -விடுத்தேன்--நலியும்-வருத்துகின்ற---வெங்கலி- வெவ்வியகலியன்--தணந்தபின் -பிரிந்துசென்றபின்பு--நின்பால்- உன்னிடத்தில்--நண்ணினன்-வந்தடைந்தேன்---மெலியல-வருந்தாதே -- மீட்டும்-மறுபடியும்--ஓர்சுயம்வரம்- ஒருசுயம்வரத்தை---வேட்டது-விரும்பியது---என்-யாதுபற்றி---என்றான் - என்றுசொன்னான்---(எ-று) (கருத்து) தமயந்தியே கலியனுலுனைக்காட்டில் நீக்கினேன் மறுபடிசுயம்வரம் விரும்பியதென்ன என்றான் என்பதாம். ௨௰

திடதர்கோவினையயோத்தியினேடினனளகன்றேடன... *
படருறேலெனவந்தொருமறையவனுபகரச்.......... *

கடிதினெய்துவானமணவினையிழைத்தனனகருத்தி ...*
லடியனென்றனையையுறலெனமொழிந்தழுதாள் ...*

(இ-ள்) நிடதர்கோவினை-நளமஹாராஜனை — தேடினன-தேடி — அயோத்தியில்-அயோத்திநகரத்தில் — கண்டேன்.பார்த்தேன்-- படருறேல்-வருத்தப்படாதே--என-என்று--ஒருமறையவன் - ஒரு பிராமணன்--வந்து-இவ்விடத்தில்வந்து--பகர-சொல்ல--கடிதின-சீக்கிரத்தில்--எய்துவான்-உன்னைச்சேரும்பொருட்டு--மணவினை-சுயம்வரமென்பதை--இழைத்தனன்-செய்தேன்--கருத்தில்-மனதில்-- அடியனென்றனை-அடியாளாகியவென்னை -- ஐயுறலென - சந்தேகப்படாதேயென்று--மொழிந்து-சொல்லி--அழுதாள்-(தமயந்தி)புலம்பினாள்--(எ-று)(கருத்து) தமயந்தி உம்மைக்காணும்பொருட்டிவ்வாறு செய்தேன் சந்தேகப்படாதே என்றாள் என்பதாம்.

முன்னைநல்லுருக்காட்டெனமுற்றிழைமொழியப் ...*
பன்னகத்திறையுதவியபூந்துகில்பரிவான் ... ...... ...*
மன்னரேறனும்புனைதலுமானுருவெய்திக் .........*
கன்னல்வேளினுங்கவினலங்கனிந்திடநின்றான் ... ...*

(இ-ள்) முன்னை-பழைய--நல்லுரு-நல்லஉருவத்தை---காட்டென-காட்டுவாயென்று--முற்றிழை-தமயந்தியானவள் -- மொழிய-சொல்ல--பன்னகத்திறை-நாகராஜனாகியகார்க்கோடகன்--உதவிய கொடுத்த--பூந்துகில-அழகியவஸ்திரங்களை--பரிவால்- ஆசையோடு--மன்னரேறனும்-இராசசிங்கமாகிய நளமஹாராஜன்--புனைதலும்-தரித்தமாத்திரத்தில்--மானுரு- மாட்சிமைப்பட்டவுருவத்தை— எய்தி-அடைந்து--கன்னல்-கருப்புவில்லைத்தரித்த--வேளினும்,மன்மதனைக்காட்டிலும்--கவின்-அழகினது-- நலம்-நன்மையானது— கனிந்திட-முதிர, நின்றான் (நளமஹாராஜ) னிருந்தான்—(எ-று) (கருத்து) தமயந்திமுன்னுருவைககாட்டென நளன்காட்டினான்-என்பதாம். (உஉ)

நின்றமன்னனைநிரைவளைக்கைம்மலர்கூப்பி .... ...*
மன்றலங்குழன்மடவரல்வணங்கினணிற்ப,,, ... ......*
வென்றிவேலுடைவிதர்ப்பர்கோன்விளைந்ததமைகேட்டு,
துன்றுதன்கிளைமன்னவர்சூழ்வரப்புகுந்தான் ... ...*

(இ-ள்) நின்ற-எதிரில்நின்ற — மன்னனை-நளமஹாராஜனை — நிரை-வரிசையாயணிந்த — வளை-வளையலையுடைய — கைம்மலர்- மலர்போன்றகைகளை — கூப்பி-குவித்து — மன்றல்-வாசனைபொருந்திய — அம்-அழகிய — குழல்-கூந்தலையுடைய — மடவரல்- தமயந்தியானவள் — வணங்கினள்-வணங்கி — நிற்ப-இருக்க — வென்றி- வெற்றிபொருந்திய — வேலுடை-வேலையுடைய — விதர்ப்பர்கோன்- வீம

ராஜனுனவன் — விளைந்தமை - நடந்தசெய்திகளை — கேட்டு - கேள்வியுற்று — துன்று - நெருங்கிய — தன் - தன்னுடைய — கிளை - பந்துகளாகிய — மன்னவர் - அரசர்கள் — சூழ்வர - சூழ — புகுந்தான் - அவ்விடம்வந்துசேர்ந்தான் — (எ-று) (கருத்து) நளனை தமயந்தி மணங்கிறிக்க வீமராஜன்வந்தான் என்பதாம். (௨௩)

அன்னகாலையிலகலிருவிசும்பிலோர்வாணி ...... ......*
மன்னகேட்டியிம்மடவரலைமூவாண்டு .. ... ..*
மின்னலின்றியாமளித்தனஞ்சுயம்வரமென்று... ...*
வுன்னையிவ்வுழிக்கூட்டுதற்கொண்டொடியிழைத்தாள்.

(இ-ள்) அன்னகாலையில் - அந்தச்சமயத்தில் — அகல் - அகன்ற — இரும் - பெருமைபொருந்திய — விசும்பில - ஆகாயத்தில — ஓர்வாணி ஒரு அசரீரிவாக்கு — மன்ன - நளமஹாராஜனே — கேட்டி - கேள் — இம்மடவரலை - இத்தமயந்தியை — மூவாண்டும் - மூன்றுவருஷமளவும் — இன்னலின்றி - தீங்கில்லாமல் — யாம் - நாம் — அளித்தனம் இரக்ஷித்தோம் — சுயம்வரமென்று - சுயம்வரமென்றுசொல்லப்பட்டதை - உன்னை உன்னை — இவ்வுழி - இவ்விடத்தில் — கூட்டுதற்கு - சேர்த்தற்கு — ஒண்டொடி - தமயந்தியானவள் — இழைத்தாள் - செய்தாள் — (எ-று) (கருத்து) அப்பொழுது ஆகாயவாணி அரசனே சந்தேகப்படாதே தமயந்தி உன்னைக்காணுதற்குச்சுயம்வரஞ்செய்தாள் இதுமுதலிரண்டுசுளகம் என்பதாம். (௨௪)

வடபுலத்தினினோக்குநர்மாசறவிளங்கு... ... ......*
கடவுண்மீனினுந்தொழுதகுகற்பினர்க்கரசாங்... ...*
கொடிமருங்குலையையுறுதருளெனக்கூர்வே... ..... *
னிடதர்கோமகன்மகிழ்வுறநிகழ்ந்ததையன்றே.. ..*

(இ-ள்) வடபுலத்தினில் - வடதிசையில் — நோக்குநர் - காண்கின்றவரது — மாசற - குற்றமற — விளங்கும் - பிரகாசியாநின்ற — கடவுண்மீனினும் - தெய்வத்தன்மையுள்ள அருந்ததியைக்காட்டிலும் — தொழுதகு - மேன்மையாகிய — கற்பினர்க்கு - பதிவிரதைகட்கு — அரசாம் - அரசாகிய — கொடிமருங்குலை - தமயந்தியை — ஐயுறது - சந்தேகியாமல் — அருளென - கிருபைசெய்யென்று — கூர்வேல் - கூர்மைபொருந்தியவேலேந்திய — நிடதர்கோமகன் - நளமஹாராஜன், மகிழ்வுற - மனங்களிக்க — நிகழ்ந்தது - (ஆகாசவாணி) உண்டாயிற்று (எ-று) ஐ - அன்று - ஏ - அசைகள், (கருத்து) அருந்ததிக்குமேலான கற்புள்ளவள் - சந்தேகப்படாமல் கிருபைசெய்யென, அவ்வசரீரிவாக்குப்பிறந்தது என்பதாம். (௨௫)

தமரவேலையினந்தரதுந்துபிதழங்க ..... .......... *
வமரர்யாவரும்பூமழைபொழிந்துநின்றார்த்தா... ...*
ருமிழ்செழுங்கதிர்மணிமுடிவீமனுமுவந்தான்... ...*
குமரனன்னவன்கோல்வளைத்தோளியையடைந்தான்..*

(இ-ள்) தமரம்-பேரொலியையுடைய — வேலையின்-சமுத்திரம்போல--அந்தரம்-ஆகாயத்தில் — துந்துபி- துந்துபிவாத்தியமானது—தழங்க-சத்திக்க — அமரர்யாவரும்-தேவர்களனைவரும்—பூமழை புஷ்பவருஷத்தை—பொழிந்து-சொரிந்து—நின்று-நிலைபெற்று—ஆர்த்தார்-துதித்தார்கள்—உமிழ்-கக்கப்பட்ட — செழும்-செழுமையாகிய—கதிர்-கிரணங்களையுடைய—மணிமுடி-இரத்தினகிரீடத்தையுடைய—வீமனும்-வீமராஜனும்—உவந்தான்-சந்தோஷித்தான்—குமரனன்னவன்-முருகனையொத்தநளமஹாராஜன்—கோல்வளை-அழகியவளையலையணிந்த--தோளியை- புயத்தையுடையதமயந்தியை--அடைந்தான்-சேர்ந்தான்--(எ-று) (கருத்து) அந்தரதுந்துபிசத்திக்கத் தேவர்கள்பூமாரிபெய்து துதித்தார்கள் வீமன்மகிழ்ந்தான் தமயந்தியை நளனடைந்தான் என்பதாம். (௨௬)

மண்களித்ததுமாதிரங்களித்தனமலர்மேற்............*
பெண்களித்தனள்பேரறங்களித்தனகண்டோர் .. ....*
கண்களித்தனகளித்தனகலைவலோர்நெஞ்சம் . .......*
விண்களித்தனகளித்ததுவீமனமாநகரம்.......... *

(இ-ள்) மண்-பூமியானது--களித்தது-களிப்புற்றது-- மாதிரம்-மலைகள்--களித்தன-களிப்புற்றன--மலர்மேற்பெண்-இலட்சுமி--களித்தனள்-களிப்புற்றனள்--பேரறம்-மகத்தானதருமங்கள் --களித்தன-களிப்புற்றன--கண்டோர்-பார்த்தவர்களது--கண்-நேத்திரங்கள்--களித்தன-களிப்புற்றன--கலைவலோர்-வித்துவான்களுடைய--நெஞ்சம்-மனங்கள்--களித்தன-களிப்புற்றன--விண்-விண்ணுலகங்கள்--களித்தன-களிப்புற்றன--வீமன்-வீமராஜனது--மா-பெரிய, நகரம் பட்டினமானது--களித்தது-களிப்புற்றது--(எ-று) (கருத்து) சராசரங்களெல்லா மகிழ்ந்தன என்பதாம். (௨௭)

உருவவொண்கழனிடதர்கோனவெளிப்படலோரா ...*
விருதுபன்னனுங்கறிந்தபினவனுழையெய்தி.... ....*
யரசநின்னையானறிந்திடாதியற்றியவனைத்துந் ... ...*
திருவுளங்கொளாதருளெனச்சேவடிதொழுதான ...*

(இ-ள்) உருவம்-அழகையுடைய--ஒண்கழல்-ஒளிபொருந்தியவீரக்கழலையணிந்த--நிடதர்கோன நளமஹாராஜன---வெளிப்படல்-(மறைவின்றியும்) வெளிப்பட்டதை- ஓரா ஆராய்ந்து-- இருதுப

ன்னன்-இருதுபன்னவரசன்--ஆங்கு-அந்நகரத்தில்--அறிந்தபின்-தெரிந்துகொண்டபின்பு--அவனுழையெய்தி-அந்நளனிடத்து வந்து--அரச-நளமஹாராஜனே--நின்னை-உன்னை--யான்-நான்-அறிந்திடாது-அறியாமல்--இயற்றியவனைத்தும் செய்தகுற்றங்களனைத்தையும்--திருவுளங்கொளாது-மனத்திற்கொள்ளாமல்--அருளென-கிருபைசெய்யவேண்டுமென்று--சேவடி-சிவந்த பாதங்களில்--தொழுதான்-வணங்கினன்--(எ-று) (கருத்து இருதுபன்னன் நளனிடத்திற்சேர்ந்து யானசெய்தகுற்றத்தைப் பொறுத்தருளுமெனா றான் என்பதாம். (௨௮)

செய்யதாடொழுமன்னனைச்செங்கையாற்றழீஇக் . *
கொய்யுளைப்பரியுளமறிவிஞ்சையுங்கொடுத்து... . *
மையின்மாமதிமுகமலர்ந்தினியனவழங்க ... .. *
ஐயனேவவவ்வரசனுமயோத்திநாடடைந்தான் ... *

(இ-ள்) செய்யதாடொழும்-சிவந்தபாதத்தில்வணங்கிய—மன்னனை-இருதுபன்னராஜனை—செங்கையால்-சிவந்தகைகளால்—தழீஇ-அணைத்துக்கொண்டு—கொய்யுளை-கொய்துகட்டிய பிடரிமயிரினையுடைய—பரி-குதிரைகளினது—உளம்-மனத்தை—அறி-அறிவிக்கின்ற—விஞ்சையும்-வித்தையையும்—கொடுத்து-உபதேசித்து—மையில்-களங்கமில்லாத—மா-பெருமைதங்கிய—மதி-சந்திரன்போன்ற—முகமலர்ந்து-முகமலர்ச்சியடைந்து—இனியன-இனியசொற்களை—வழங்கி-சொல்லி—ஐயன்-நளமஹாராஜன்—ஏவ-விடைகொடுக்க—அவ்வரசனும்-அவ்விருதுபன்னராஜனும்—அயோத்திநாடு-அயோத்திதேயத்தை—அடைந்தான்-சேர்ந்தான். (எ-று) (கருத்து) இருதுபன்னனை நளன்தழுவிக் குதிரையுளமறியும்வித்தையையுங்கொடுத்து அரசன்விடைகொடுக்க அவ்விருதுபன்னன் அயோத்திநகரத்தைச்சேர்ந்தான் என்பதாம். (௨௯)

---

தேவியைக்கண்ணுற்றபடலம்-முற்றிற்று.



# அரசாட்சிப்படலம்.

இப்படலத்தால் நளன்தமயந்தியை யடைந்தபின்பு அவ
ளோடு தனது நிடததேயத்திற்சென்று புட்கர
னையென்று அரசாட்சிசெய்தல் சொல்
லப் படுகின்றது...............*

(கலிநிலைத்துறை.)

கொங்குண்வார்குழற்கொம்மைவெம்முலைநலம் பருகித்
திங்களொன்றவணிருந்தபின்றெண்டிரையுடுத்த......*
வங்கண்மாநிலம்புரந்திடுமாமனோடாய்ந்து......... *
பொங்குதானையோடெழுந்தனன்புலவுவேற்குரிசில்..*

(இ-ள்) புலவு-புலால்நாற்றம்நாறுகின்ற— வேல்-வேலையுடைய-குரிசில்-நளமஹாராஜனானவன்—கொங்குண்-வாசனைபொருந்திய வார்-நீண்ட— குழல்-கூந்தலையும்—கொம்மை-திரட்சிபொருந்திய—வெம்-விருப்பத்தைத்தருகின்ற—முலை- ஸ்தனங்களையுமுடைய தமயந்தியினது—நலம்- இன்பத்தை—பருகி-அநுபவித்து— திங்களொன்று-ஒருமாதம்—அவண்-அக்குண்டினபுரத்தில்—இருந்த பின்-வாசஞ்செய்தபின்பு— தெண்டிரை-கடலை--உடுத்த-ஆடையாகவுடுத்த —அங்கண்-அழகியவிடத்தைபுடைய—மா-பெரிய— நிலம்-பூமியை—புரந்திடும்-இரட்சியாநின்ற—மாமனோடு- மாமனாகியவீமராஜனோடு—ஆய்ந்து-ஆலோசித்து—பொங்கு-பிரகாசியாநின்ற—தானையோடு-சேனையோடு—எழுந்தனன்-பிரயாணப்பட்டான்—(எ-று) (கருத்து) நளன் ஒருமாதம் குண்டினபுரத்திலிருந்து சேனையோடுபுறப்பட்டான் என்பதாம். (க)

மழைமதக்களியானையுங்கலினவாம்பரியுஞ் ........*
செழுமணித்தடந்தேர்களும்வயவருஞ்செறிய ......*
வெழுகடற்புவிமன்னருமிறைஞ்சினர்செல்ல......... *
வழலுயிர்க்கும்வேலரசனுநிடதநாடடைந்தான். ...*

(இ-ள்) மழை-மழைபோன்ற—மதம் - மதசலத்தையும்--களி-களிப்பையுமுடைய--யானையும்-யானைகளும்—கலினம்- கடிவாளத்தையுடைய— வாம்-தாவுகின்ற—பரியும் - குதிரைகளும்—செழும்-செழித்த—மணி-இரத்தினங்களிழைத்த—தடம்- விசாலமாகிய

—தேர்களும்-இரதங்களும்—வயவரும்-படைவீரர்களும்—செறிய-நெருங்கவும்—எழுகடல்-ஏழுசமுத்திரங்கள்சூழ்ந்த—புவி-சப்ததீவுகளிலுள்ள—மன்னரும்-அரசர்களும்—இறைஞ்சினர்-வணங்கினவராகி—செல்ல நடக்கவும்—அழலுயிர்க்கும்- அக்கினியைக்கக்காநின்ற—வேல்-வேலையுடைய—அரசனும்-நளனும்—நிடதநாடு நிடததேசத்தை—அடைந்தான்-சேர்ந்தான்—(எ-று) (கருத்து) நளமஹாராஜன் நிடததேயத்தைச்சேர்ந்தான் எ-ம். (௨)

மூதெயிற்புறத்திருத்தபின்மொய்யமர்தொடங்கப் ...*
போதல்செய்கவெம்போர்த்தொழிற்கஞ்சினையாகிற்...*
காதலிற்கவறுவான்வருகெனக்கழறித் ..............*
தூதுபோக்கினன்புட்கரன்றனக்குவேற்றோன்றல் ...*

(இ-ள்) மூது-பழைய--எயிற்புறத்து-மதிலினதுபுறத்திலே---இருத்தபின்-இறங்கியபின்பு--மொய்- நெருங்கிய--அமர்-போரை--தொடங்க-ஆரம்பிக்க--போதல்செய்க-வருவாயாக—வெம் - வெவ்விய--போர்த்தொழிற்கு-யுத்தச்செய்கைக்கு--அஞ்சினையாகில்-பயப்படுவையேயானால்—காதலின்-ஆசையோடு--கவறுவான்- சூதாடுதற்கு--வருக-வருவாயாக—என-என்று--கழறி-சொல்லி— புட்கரன்றனக்கு--புட்கராஜனுக்கு—வேல்-வேலையுடைய--தோன்றல் நளன்—தூது-தூதனை—போக்கினன்-விடுத்தான்—(எ-று) (கருத்து) நளமஹாராஜன் போர்செய்ய வருவாயாகிற் போருக்குவா-போர்செய்யவஞ்சுவையாகிற் சூதாடவா என்று புட்கரனுக்குத்தூதுவிட்டான் என்பதாம். (௩)

போயதூதுவர்புட்கரற்கித்திறம்புகல........ ... ... *
வாயுங்கேள்விநூலமைச்சொடும்வேறிருந்தாய்ந்து ...*
காயும்போரினில்வேறன்மற்றரிதெனக்கருதி.........*
மாயவெங்கவறுவான்வருகெனவிடுத்தான்..... ...*

(இ-ள்) போயதூதுவர்-நளனிடத்தினின்றும்போனதூதுவர்—புட்கரற்கு-புட்கரனுக்கு—இத்திறம்-இவ்விதங்களை--புகல-சொல்ல—ஆயும்-ஆராய்ச்சிசெய்யத்தகுந்த--கேள்வி- கேள்வியையும்—நூல்-தருமசாஸ்திரத்தையுமுடைய--அமைச்சொடும்-மந்திரியோடும்--வேறிருந்து-தனியேயிருந்து--ஆய்ந்து-ஆலோசித்து--காயும் கொல்லும்--போரினில்-யுத்தத்தில்--வேறல்- வெல்லுதல்--அரிதென-அரியதென்று--கருதி-நினைத்து--மாயம்- வஞ்சனையோடுங்கூடிய--வெம்-வெவ்விய--கவறுவான்-சூதாடுதற்கு--வருகென- வருவாயாகவென்றுசொல்லி—விடுத்தான்-அனுப்பினான் (எ-று)(கருத்து) தூதுவர் புட்கரனுக்கு இச்செய்தியைச்சொல்ல புட்கரன் நளனைச் சூதாடவாச்சொன்னான்-என்பதாம். (௪)

விட்டதூதுவருரைத்தசொற்கேட்டலும்விரிந்து ... *
மட்டலர்தொடைமார்பினன்மாநகரெய்திக் ........*
கட்டுவார்கழற்புட்கரகவறுநாமாடற் ........... *
கொட்டம்யாதெனவுரைத்தனனுலங்கெழுதோளான்.*

(இ-ள்) விட்டதூதுவர் - அனுப்பப்பட்டதூதர்கள் — உரைத்த சொல - சொல்லியசொற்களை — கேட்டலும் - கேட்டமாத்திரத்திலே — விரிந்து மலர்ந்து — மட்டலர் - தேனொழுகுகின்ற — தொடை - மாலையையணிந்த — மார்பினன் - மார்பையுடையநளன் — மா - பெரிய — நகர் - பட்டினத்தில் — எய்தி அடைந்து — கட்டு - கட்டப்பட்ட — வார் - நடை - கழல - வீரக்கழலையுடைய — புட்கர - புட்கரனே — கவறு - சூதை - நாமாடற்கு - நாமாடுவதற்கு - ஒட்டம் யாதென - பந்தயம்யாதென்றுகேட்க உலங்கெழுதோளான் திரள்கல்லையொத்ததோள்களையுடையவரசன் - உரைத்தனன் - சொன்னான் — (எ-று) (கருத்து) நளன் பட்டினத்தில்வந்து புட்கரனை சூதாடுதற்குப்பந்தயம் யாதென்று சொன்னான் என்பதாம். (௫)

வைரவாட்படைமன்னவர்மன்னநீதோற்பின் ........*
முயலிலாமதிபூத்திடுமுழுநெறிக்குவளை ..............*
யயரநீண்டகண்டேவியையளித்தியான்றோற்பி ... ....*
னுயிரொடுநின்னுலகெலாந்தருவனென்றுரைத்தான்.*

(இ-ள்) வைரம்-கூர்மைபொருந்திய--வாட்படை - வாளாயுதத்தையுடைய--மன்னவர்மன்ன - அரசர்க்கரசனாகிய நளமஹாராஜனே--நீதோற்பின்-நீதோற்றால்--முயலிலா-முயற்கறையில்லாத--மதி சந்திரனிடத்தில் - பூத்திடும்-புஷ்பித்த--முழுநெறி- முழுநெறியையுடைய--குவளை-நீலோற்பலங்கள்--அயர-சோர்வையடைய--நீண்டகண் நீண்டகண்களையுடைய--தேவியை-தமயந்தியை--அளித்து கொடு--யான்தோற்பின்-நான்தோற்றால் உயிரொடு-என்னுயிரோடு--நின்னுலகெலாம்-உனதுஉலகமுழுவதையும்--தருவனென்று-கொடுப்பேனென்று--உரைத்தான்-சொன்னான்-(எ-று) (கருத்து) புட்கரன் நளனை நீதோற்றால் உன்பெண்சாதியைக்கொடு நான்தோற்றால் என்னுயிரோடு உன்னுலகமெல்லாங் கொடுப்பேனென்றான் எ-ம். (௬)

அன்னவாறிவைநாடலும்புட்கரன்றோற்ப ... .......*
மன்னர்முன்னநீவென்றதுங்கொடுங்கலிவபத்தா ..... *
லின்னதாருயிர்நேர்ந்தனனெம்பியாதலினா,,,.... ... *
றென்னகர்க்கினிச்செல்கெனப்பணித்தனன்றோன்றல்...*

ர்-சோதிஷர்கள், சொற்ற-சொல்லிய, ஓரையில்-சமயத்தில், தோன்றல்-வீமராஜன், மா-பெரிய, நகரில்-நளனதுபட்டினத்தில், விடுத்தனன்-விட்டான்---(எ-று) (கருத்து) வீமராஜன், தன்மகளை, நளமஹாராஜன் மாவிந்தமாநகருக்கனுப்பினன் என்பதாம். (கூ)

வெள்ளத்தானையுமகளிருஞ்சூழ்வரவேந்த........ ...*
னுள்ளத்தாமரைமலருறைபேடரிக்கண்ணாள் . ...*
வள்ளத்தாமரைப்பொகுட்டின்மேல்வண்டுகண்படுக்கு,
மள்ளற்றீம்புனற்கழனிசூழ்நிடதநாடடைந்தாள் ... *

(இ-ள்) வெள்ளத்தானையும்-பிரவாகம்போன்றசேனையும்— மகளிரும-மாதர்களும்—சூழ்வர-சூழ்ந்துவரும்படி--வேந்தன்- நளமஹாராஜனது — உள்ளம்-மனமாகிய--தாமரைமலர்-தாமரைப்பூவில்—உறை-வாசஞ்செய்கின்ற—ஏடரி-செவ்வரியாந்த— கண்ணாள்-கண்களையுடையதமயந்தியானவள்—வள்ளம்-கிண்ணம்போன்ற—தாமரைப்பொகுட்டின்மேல்-தாமரைமலரின்கர்ணிகையில்--வண்டு வண்டுகள்—கண்படுக்கும்-நித்திரைசெய்யாநின்ற— அள்ளல்-சேற்றையும்—தீம்புனல்-மதுரமானசலத்தையுமுடைய—கழனி- வயல்களால்—சூழ் சூழப்பட்ட— நிடதநாடு-நிடததேயத்தை— அடைந்தாள்-சேர்ந்தாள்—(எ-று) (கருத்து) தமயந்தி நிடதநாட்டைச் சேர்ந்தாள் என்பதாம். (ய)

நவ்விநோக்கியர்சூழ்வரநகைநிலாவெறிக்குங்........*
கொவ்வைவாய்மலர்ப்பூங்குழற்குவிமுலைமடந்தை-...*
தெய்வநாண்மலர்த்தவிசிழிதிருமகளென்ன........*
வெவ்வமில்லதோரெரிமணிச்சிவிகைநின்றிழிந்தாள்..*

(இ-ள்) நவ்வி-மான்போன்ற—நோக்கியர்-பார்வையையுடைய மங்கையர்— சூழ்வர-சூழ்ந்துவர—நகை-பற்கள்— நிலா-நிலவைப்போல—எறிக்கும்-பிரகாசிக்கின்ற—கொவ்வை- விம்பம்போன்ற, வாய்-அதரத்தையும்—மலர் -புஷ்பத்தையுடைய—பூம்- அழகிய --குழல்-கூந்தலையும் — குவி-குவிந்த—முலை- ஸ்தனங்களையுமுடைய--மடந்தை-தமயந்தியானவள்—தெய்வம்-தெய்வத்தன்மைபொருந்திய—நாள்-அன்றலர்ந்த--மலர்த்தவிசு-புஷ்பாசனத்தினின்றும் — இழி-இழிகின்ற—திருமகளென்ன- இலக்குமிபோல்— எவ்வமில்லது-குற்றமில்லாததாகிய— ஓர்-ஒரு—எரி-பிரகாசிக்கின்ற— மணிச்சிவிகைநின்று-இரத்நதண்டிகையினின்றும் — இழிந்தாள்- இறங்கினாள்(எ-று)(கருத்து)தமயந்திஇரத்நச்சிவிகையிலிருந்திழிந்தாள்

பரிதிவானவனெதிர்தலும்பனியிதழ்விரிந்த... ... ...*
முருகுலாநறுந்தாமரைபோன்முகமலரா......... ...*

வாருகுநுண்ணிடையின்னுயிர்க்காதலனம்பொற்......*
றிருவநாண்மலர்ச்சேவடிசென்னியிற்றொழுதாள் ....*

(இ-ள்) பரிதிவானவன்-சூரியனானவன் — எதிர்தரும்-தோன்றினவளவில் — பனியிதழ்-குளிர்ச்சிபொருந்தியவிதழ்கள் — விரிந்த- மலர்ந்த — முருகுலாம்-வாசனைவீசுகின்ற — நறும்-நல்ல — தாமரைபோல்-தாமரைமலர்போல — முகமலரா-முகமலர்ச்சியடைந்து — அருகு-சிறுத்த — நுண்ணிடை- நுட்பமானவிடையையுடையதமயந்தி — இன்னுயிர்-இனியவுயிர்போன்ற — காதலன் - கணவனாகிய நளனது — அம்-அழகிய--பொன் -பொன்போன்ற-- திரு-செல்வத்தையுடைய--நாள்-புதிய, மலர்ச்சேவடி-தாமரைமலர்போன்றபாதங்களை--சென்னியின்-சிரசினால், தொழுதாள்-வணங்கினாள் (எ-று) (கருத்து) தமயந்தி நளன்பாதத்தைவணங்கினாள் என்பதாம். (௰௨)

தொழுதமங்கையைச்சுடர்மணித்தடக்கையாலெடுத்து
கொழுதிவண்டினங்கூட்டுணுந்தெரியலாழ்மார்பி... [க்
னுழுதுவெம்முலைக்குங்குமச்சேற்றிடைபொளிப்பத். .*
தழுவினானவட்டேம்பியவின்னுயிர்தளிர்த்தாள்.........*

(இ-ள்) தொழுத-வணங்கிய--மங்கையை-தமயந்தியை--சுடர்மணி-பிரகாசம்பொருந்திய ஆபரணத்தையுடைய--தடம்- நீண்ட---கையால்-கரங்களால்--எடுத்து-எடுத்து--கொழுதி-கோதி---வண்டினம்-வண்டுக்கூட்டங்கள்--கூட்டுணும்-கொள்ளைகொள்கின்ற, தெரியல்-மாலையானது---தாழ்-தொங்குகின்ற--மார்பின் - மார்பினிடத்திலே--உழுது-உழுது --வெம்-விருப்பத்தைத்தருகின்ற--முலை-ஸ்தனங்கள்--குங்குமச்சேற்றிடை-குங்குமச்சேற்றில்--ஒளிப்ப- ஒளிக்கும்படி--தழுவினான்-ஆலிங்கனஞ்செய்தான் --அவள்- அந்தமயந்தி--தேம்பிய-மெலிந்த--இன்னுயிர்-இனியவுயிர்--தளிர்த்தாள்-துளிர்த்தாள் —(எ-று) (கருத்து) நளன் தமயந்தியைக் கையாலெடுத்துமார்பிலணைத்துத்தழுவினான் என்பதாம். (௰௩)

திருந்துமாமணிச்செய்குன்றுந்தெளிபுனற்றடமும்...*
விருந்துவேனிலாற்கெதிரியவிரைமலர்க்காவும்......*
முருந்துவாணகைமுகிழ்முலைமடந்தையோடாடிப்...*
பொருந்தவின்னிடைப்போகமுண்டுவந்தனர்போன்றான்

(இ-ள்) திருந்து-திருத்தமாகிய--மா-பெரிய--மணி- இரத்நங்கள்பதித்த--செய்குன்றும்-விளையாட்டுமலைகளிடத்தும்--தெளி-தெளிந்த--புனல்-சலத்தையுடைய--தடமும்- வாவிகளிடத்தும்--விருந்து-விருந்தாக--வேனிலாற்கு-மன்மதனுக்கு- -எதிரிய-தோன்றிய, விரை-வாசனையையுடைய--மலர்-புஷ்பங்களையுடைய, காவும்- சோலைகளிடத்தும்--முருந்து-மயிலிறகினடியையொத்த--வாள் - ஒளி

பொருந்திய--நகை-பற்களையும்--மூங்கிற்- றோங்கரும்பையொத்த, மூலை-தனங்களையுமுடைய--மடந்தையோடு-தமயந்தியுடனே---கூடி-விளையாடி--பொருந்த-அமைய--விண்ணிடை- தெய்வலோகத்தில்---போகம்-இன்பத்தை--உண்டு அநுபவித்து---உவந்தனர் மகிழ்ந்தவர்களை--போன்றான்-ஒத்திருந்தான்--(எ-று) (கருத்து) நளன் தமயந்தியோடுபுணர்ந்து இந்திரபோகமநுபவித்தவனை ஒப்பானான் எனபதாம். (௰௪)

ஆழிசூழ்புவிமுழுவதுமாழியொன்றுருட்டி...... ...*
வாழிநல்லறம்புரிந்தருமகம்பலவாற்றிச்...... ......*
சூழிமால்வரைப்பிடருறுசுமையொழித்தறப் ... .. *
பாழியம்புயத்துலகெலாம்பரித்தினிதிருந்தான்... ...*

(இ-ள்) ஆழிசூழ்-சமுத்திரஞ்சூழ்ந்த--புவி முழுவதும் பூமிமுழுமையும்--ஆழியொன்று-ஏகசக்கரத்தை--உருட்டி-நடத்தி- நல்லறம்- நல்லதருமத்தை--புரிந்து-செய்து--அரும்-செய்தற்கரிய-- மகம்பல பலயாகங்களை--ஆற்றி செய்து--சூழி-முகபடாமணிந்த---மால்-பெரிய--வரை-மலையையொத்த வெட்டித்திக்குயானைகளும்---பிடர்-பிடரியிற்றங்கிய--உறு-மிகுந்த--சுமை- பூமிபாரத்தை--ஒழித்து-நீக்கி--அற இளைப்பாறும்படி--பாழி-வலிபொருந்திய---அம்-அழகிய--புயத்து-தோளினிடத்தில்---உலகெலாம்-உலகமுழுவதையும்--பரித்து-தாங்கி--இனிது-இனிதாக--இருந்தான்- நளமஹாராஜனிருந்தான்---(எ-று) வாழி-(அசை) (கருத்து) நளச்சக்கரவர்த்திமஹாராஜன், நற்றருமங்களையும், யாகாதிகருமங்களையுஞ்செய்து, உலகமெல்லாம் ஒருகுடையிலாண்டு இன்பமடைந்திருந்தான் என்பதாம். [நளமஹாராஜன்-தோன்று-எழுவாய்-இருந்தான்-பயனிலை. சக்கரம்- அறம்- மகம்- சுமை- எலாம்- இவை செயப்படுபொருள்.] (௰௫)

அரசாட்சிப்படலம்- முற்றிற்று.

ஆ படலம் ௨௮-க்கு- விருத்தம்- ௲௱௭௨.

# நைடதம்.

